II

## நூலியற்றிய முறை

ஒரு குறிப்பு.

1. ஸம்ஸ்க்ருத மூலக் கிரந்தத்திலுள்ள விஷயங்கள் யாவற்றை யும் ஆதியோடந்தமாக வியாகம் செய்ததும், பிறகு "கடவுள் வாழ்த்து," "நூலின் தன்மை," "ரோக பரீக்ஷையும் சிகித் ஸையும்" என்றவாறு முற்றிலும் விஷயங்களுக்கெல்லாம் தலையங்கங் கள் இட்டதும் தமிழில் மொழி பெயர்த்த ஆசிரியரே.

2. சாஸ்த்ரீய பிரமாணங்களை அனுஸரித்துத் தமிழ் மொழி பெயர்ப்பாசிரியரே **சார்ங்கதர தீபிகை** என்கிற டிப்பணியையும் எழுதிச் சேர்த்திருக்கிறார்.

3. ஒவ்வொரு விஷயத்தின் இறுதியிலும் போடப்பட்டுள்ள இலக்கங்கள், ஸம்ஸ்கிருத மூலக் கிரந்தத்தின் அந்தந்த அத்திபாயத்தி னுடைய அவ்வவ்விஷயங்களின் மொழிபெயர்ப்புக்கு ஆதாரமான ச்லோகங்களின் எண்ணிக்கைகளை முறையே குறிப்பிடுகின்றன.

4. கிரந்தத்தின் இறுதியிலுள்ள **பிராசீந-நவீந மாநங்கள்** என் கிற விஷயமும், முதல் இரண்டாவது **அநுபந்தங்களும்** (ரோகங்களும் சிகித்ஸைகளும், முக்கியமான சில ஔஷத வகுப்புகளும் அவற்றின் குண விசேஷங்களும்), **விஷய அகராதியும்** தமிழில் மொழி பெயர் த்த ஆசிரியராலேயே இயற்றி இணைக்கப் பெற்றன.

5. நூலின் மற்ற அம்சம் மூலக் கிரந்தத்தின் மொழி பெயர்ப் பாகும். மேலே குறிக்கப்பட்டவாறு மொழி பெயர்ப்பாசிரியரால் அமை க்கப் பட்டுள்ள அம்சங்கள் இந் நூலைப் படிப்பவருக்குப் பல வகையி லும் ஸௌகரிய மளிக்கும் எனக் கருதுகிறோம்.

மே. நு.

# SARNGADHARA SAMHITA

## A Complete Manual of Ayurvedic System of Practical Medicine

2254

Translated from Sanskrit Original into Tamil

BY

AYURVEDA BHUSHAN

Pandit M. DURAISWAMI AIYANGAR, A.V.S.

Diplomed Ayurvedic Medical Practitioner, Translator of "Ashtangahridayam, "Madhava Nidanam," "Kadambari," Megha Sandesa &c. into Tamil, Author of "Kiratarjuniya Gadya Sangraha," "Tri-Dosha Tattwa", "Nidana Sara" &c. in Sanskrit; Vice President, the All-India Ayurveda Vidya Pitha, Examiner, Vidvad Examinations of The All-India Ayurveda Vidya Pitha, Gwaliar State, The Lanka Ayurvedic College, &c. &c.

WITH

A GLOSSARY

"SARNGADHARA DIPIKA"

3rd Edition—Thoroughly Revised



MADRAS:

THE VAIDYA KALANIDHI OFFICE

PUBLISHERS

VEPERY

1927

# சார்ங்கதர ஸம்ஹிதை

ஸ்ரீ சார்ங்கதரனுடைய
பிராசீன ஸம்ஸ்க்ருத ஆயுர்வேத நூலின்
தமிழ் மொழி பெயர்ப்பு.

---

*டிப்ளோமா என்னும் அதிகாரப் பத்திரம் பெற்ற ஆயுர்வேத
சிகித்ஸகரும், "அஷ்டாங்க ஹ்ருதயம்" "மாதவ நிதானம்" "காதம்பரீ",
"மேக ஸந்தேசம்" முதலிய ஸம்ஸ்க்ருதக் கிரந்தங்களைத்
தமிழில் மொழி பெயர்த்தவரும், "த்ரிதோஷ தத்
துவம்," "நிதானஸாரம்" "கிராதார்ஜுனீய கத்ய ஸங்கிர
ஹம்" முதலிய ஸம்ஸ்க்ருத நூல்களுக்கு ஆசிரியரும்,
எல்லா இந்திய ஆயுர்வேத வித்யாபீட உபாக்ரா
ஸநாதிபதியும், டில்லி டிப்பி ஆயுர்வேத காலேஜ், ஆயுர்வேத
வித்யாபீடம், க்வாலியர் ஸம்ஸ்தான ஆயுர்வேத வித்வத்
பரீக்ஷை, லங்கா ஆயுர்வேத காலேஜ் முதலிய
வற்றின் ஆயுர்வேத
வித்வத் பரீக்ஷகருமான*

ஆயுர்வேத பூஷணம்

**பண்டித மே. துரைஸ்வாமி ஐயங்கார், எ. வி. எஸ்.**
*அவர்களால் மொழி பெயர்க்கப்பெற்றது.*

---

*மேற்படியார் இயற்றிய*
**சார்ங்கதர தீபிகை**
*என்னும் விரிவான டிப்பணி,
அனுபந்தங்கள் முதலியவற்றுடன் கூடியது.
முற்றிலும் பரிசோதிக்கப்பெற்ற*
மூன்றாம் பதிப்பு

---

*சென்னை :*
"வைத்திய கலாநிதி" ஆபீஸ், வேப்பேரி.
1927

# பொருளடக்கம்.

## உத்தர கண்டம்.

பக்கம் 238 முதல் 346 வரையில்



## அனுபந்தம்-1.

பக்கம் 347-முதல் 378-வரையில்



## அனுபந்தம்-2.

பக்கம் 379-முதல் 383-வரையில்.

# மூன்றும் பதிப்பின் குறிப்புரை.

ஆயுர்வேத வைத்திய சாஸ்திரம் கற்க முயல்பவருக்கு முற்றிலும் உபயோகமானதும் அவசியமாயுள்ளதும் இச் சார்ங்கதரஸம்ஹிதை. ஆயுர் வேத சாஸ்திராம்சங்கள் அனைத்தும் ஸாங்கோபாங்கமாகவும் மிக்க ஒழுங் காகவும் சுருங்கவும் விளங்கவும் விவரிக்கப்பட்டிருப்பதால், கற்றுத்தேர்ந்த வைத்தியர்களுக்கும் தொழில் முறையில் இன்றியமையாத் தோழனெ னக்கூடியதும் இச்சம்ஹிதையே. ஆகவே நான் இதை மூன்றுமுறை இப்பொழுது மீண்டும் பதிப்பிக்கும் பாக்கியம் பெற்றேன்.

எவ்விஷயமும் ஒரு முறைக்குப் பன்முறை பரிசீலனம் செய்யப் பட்டால் பெரிதும் சீர்மை பெறுமென்பது அனைவரும் அறிந்த தத்து வம். இரண்டாம் பதிப்பு வெளியான இவ்வெட்டு வருட காலத்தில் சிற் சில அம்சங்கள் திருத்தப்படவேண்டியவைபாய் எனக்குத் தெரிய வரவே, அவைகளையெல்லாம் குறித்துக்கொண்டு இப்பதிப்பில் திருத்தியமைக்க ஸௌகரியம் நேர்ந்தது. மொழி பெயர்ப்பு பாகங்களில் சில சீர்திருத்தம் செய்யப்பட்டதோடு, வேறு சில முக் கியமான உபயோகமுள்ள அம்சங்களும் இப்பதிப்பில் விருத்தி செய் யப்பட்டும் விசேஷமாய் ஒழுங்குபடுத்தப்பட்டுமிருக்கின்றன. அவற்றுள் முதலில் இரண்டு அனுபந்தங்களைக் குறிப்பிடலாம். பிறகு குறிப்பிடக் கூடியவை விஷய அகராதி முதலியன.

சார்ங்கதர ஸம்ஹிதையின் மத்யம கண்டத்தில் விவரித்துள்ள ஒவ்வொரு ஔஷதமுறையும், உத்தர கண்டத்தில் விளக்கியுள்ள ஒவ் வொரு சிகித்ஸாமுறையும் பற்பல ரோகங்களில் உபயோகிக்கக் கூடியவையென்று நூலில் கூறப்பட்டிருக்கின்றன. அவ்வௌஷதங் கள் யாவும், அச்சிகித்ஸாமுறைகள் அனைத்தும் எந்தெந்த வியாதி களுக்கு உபயோகமாகின்றனவோ அவ்வியாதிகள் யாவும் அகராதி முறையில் பகுக்கப்பட்டு, அவ்வியாதிகளின் பெயர்களின் கீழ் அவ் வௌஷதங்களும் சிகித்ஸாமுறைகளும் வகுப்பு வகுப்பாக முதல் அனுபந்தத்தில் குறிக்கப்பட்டிருக்கின்றன. சார்ங்கதர ஸம்ஹிதை யின் முதற்பதிப்பில் இவ்விஷயமே சேர்க்கப்படவில்லை. " ரோகங்

களும் ஔஷதங்களும்" என்கிற பெயருடன் இரண்டாம் பதிப்பில் ஒருவாறு இவ்விஷயம் சேர்க்கப்பட்டது. அப்பதிப்பில் இவ்விஷயம் 18½ பக்கங்களில் அச்சிடப்பட்டது. இந்த மூன்றாவது பதிப்பில் "ரோகங்களும் சிகத்ஸைகளும்" என்கிற முதல் அனுபந்தமாக இது சேர்க்கப்பட்டு, பெரும்பாலும் ஸம்பூர்ணமாகச் செய்யப்பட்டிருக்கிறது. இவ்விஷயம் 32 பக்கங்கள் கொண்டதாய் இப்பொழுது அச்சாயிருப்பதைக்கொண்டே இது எவ்விதம் விருத்தி செய்யப்பட்டிருக்கிறதென்னும் உண்மை விளங்கும்.

இரண்டாம் பதிப்பில் இல்லாத புதிய அம்சம் மற்றொன்று இரண்டாவது அனுபந்தமாக இப்பதிப்பில் சேர்க்கப்பட்டிருக்கிறது. ஔஷதங்களுக்குள்ள குணவிசேஷங்களை (Specific actions) அனுஸரித்து, சார்ங்கதரன் கூறியுள்ளபடியே ஔஷத-சிகித்ஸா முறைகளைக் கூறுபாடு செய்து இந்த பாகம் அமைக்கப்பட்டது. இது வைத்தியர்களுக்கும் இனிது உபயோகமாயிருக்கும். மேலும் புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ள "பிராசீந-நவீநமானங்கள்" முதலிய சில சில்லரை விஷயங்களும் படிப்பவருடைய உபயோகத்திற்கு இன்றியமையாதன வென்று இப்பதிப்பை உற்றுப்படிப்பவருக்குப் புலப்படும்.

மற்றொரு முக்கியமான அம்சம் இதில் இறுதியில் இணைக்கப்பெற்றுள்ள விஷய அகராதியாம். முதல் இரண்டாம் பதிப்புகளின் விஷய அகராதிக்கும் இப்பதிப்பிலுள்ள விஷயஅகராதிக்கும் ஒழுங்கிலும் அளவிலும் மிக வித்தியாஸத்தைக் காணலாம். இப்பதிப்பிலுள்ள இவ்விஷய அகராதியை, வைத்தியர்களும் கற்றறிந்த ஏனையோரும் தனியான ஒரு "வைத்திய அகராதி" யென்றே கருதக்கூடும்.

மேற் கூறிய சீர்பாடுகளையும் அபிவிருத்திகளையும் செய்ய நான் ஏற்றுக்கொண்ட சிரமம் எத்தகையதென்பது இப்பதிப்பை சிரத்தையுடன் உற்று நோக்குபவருக்கு விளங்காமற்போகாது. அவ்வித சிரமங்கள் ஒரு புறமிருக்க, இந்நூலை மீண்டும் அச்சிடுவதற்குக் கைப்பொருளை விசேஷமாகச் செலவு செய்யும் சிரமமோ மிகப் பெரிது. இதில் பிரபுக்களின் தயவையோ, நண்பர்களின் உதவியையோ நாம் சிறிதும் நாடவில்லை. இப்புத்தகத்தைப் படிக்கும் விவேகிகளே நமது எல்லா சிரமத்திற்கும் ஈடுசெய்பவரென்பது எமது துணிபு.

வேப்பேரி.
15—2—1927.

மே. து.

# இரண்டாம் பதிப்பின்

# முகவுரை

வடமொழியில் ஆதிகாலத்தில் இயற்றிய ஆயுர்வேத நூல்கள் நூற்றுக் கணக்காயுண்டு. அவற்றில் எதுவும் இதுகாறும் தமிழில் மொழிபெயர்க்கப்பட வில்லை. ஆகவே அக்குறையை நீக்குவதற்கு முதன் முதல் இச் சார்ங்கதர ஸம்ஹிதையை நான் மொழி பெயர்த்து முடிக்க முன் வந்தேன். இதன் முதற் பதிப்பு வைத்திய கலாநிதி பத்திரிகையோடு சிறுகச் சிறுக அச்சிட்டு வெளியிடப்பட்டு நான்கு வருஷங்களுக்கு முன் முடிவு பெற்றதென்பது பலருக்கும் தெரிந்த விஷயம். ஸம்ஸ்கிருத ஆயுர்வேத நூல்களிலுள்ள பெரும்பான்மையான சாஸ்த்ரீய விஷயங்களெல்லாம் இச் சார்ங்கதர ஸம்ஹிதையில் சுருக்கி விவரிக்கப்பட்டிருப்பதாலும், விஷயவிபாகங்களைச் செய்து ஒழுங்காகத் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டு டிப்பணி முதலியவற்றோடு வெளியிடப் பட்டதாலும், வைத்திய சாஸ்திர வல்லோரும் மற்றும் அறிஞர்களும் இக் கிரந்தத்தை மிகவும் மதிப்புடன் ஏற்றுச் சிறப்பிக்கலாயினர். ஆகவே முதலிற் பதிப்பித்த பிரதிகள் முற்றிலும் செலவழிந்து இங்ஙனம் இரண்டாம் பதிப்பும் இப்பொழுது வெளியிட வேண்டியதாயிற்று. மூலிகை முதலியவற்றைக் குறிப்பிடும் சில அபூர்வமான வடமொழிச் சொற்களுக்குப் பொருள் எழுதுவதிலும், மொழி பெயர்ப்பின் முறையிலும், விஷயங்களை விபாகிப்பதிலும் இப் பதிப்பில் மேலான சீர் திருத்தம் செய்வதற்கு அதிக சிரமமும் ஊக்கமும் எடுத்துக்கொள்ளப் பட்டுள்ளது. அட்டவணையும், "ரோகங்களும் ஔஷதங்களும்" என்கிற தலையங்கத்துடன் கூடிய பாகமும் இப்பதிப்பிற் புதிதாகச் சேர்க்கப்பட்டன. முதற் பதிப்பின் முகவுரையிலேயே இக்கிரந்தத்தின் சிறப்பையும் உபயோகத்தையும் மற்றுமுள்ள வரலாறுகளையும் விளங்க விவரித்திருப்பதால் இனி இங்கு மொழியக்கூடிய விசேஷமேது மிலது.

வேப்பேரி,
8—4—1919.

மே. து.

# முதற்பதிப்பின்

# முகவுரை.

---

**சார்ங்கதர ஸம்ஹிதையானது** வடமொழியில் வைத்திய விஷயங்களைப் பொதுவாக விவரிக்கும் சரகஸம்ஹிதை, ஸுச்ருத ஸம்ஹிதை, அஷ்டாங்க ஸங்கிரஹம், அஷ்டாங்க ஹ்ருதயம் முதலியவைகளைப் போன்றதோர் காய சிகித்ஸா பிரதானமான ஆயுர்வேத நூலாகும். பிராசீன வடமொழி வைத்திய நூல்களிலுள்ள பரிபாஷைகளும், பலவாறான பிணிகளின் பிரிவுகளும், ஔஷத முறைகளும், சிகித்ஸாகிரமங்களும் கூடமான வரையில் இதன் ஆசிரியரால் அங்கோபாங்கங்களோடு சுருக்கி விளக்கப்பட்டிருக்கின்றன. ஆகையால் இது மற்றக் கிரந்தங்களைவிட சுருக்கமானதும், வைத்தியர்களுக்குத் தொழில் முறையில் அதிக உபயோகமுள்ளதுமான வைத்திய நூலாகும். ஆகவே மிகப் பிரஸித்திபெற்ற ஆயுர்வேத நூல்களுள் சார்ங்கதரஸம்ஹிதையே வைத்தியக் கிரந்தம் படிக்க ஆரம்பிப்பவருக்கும் முதலிற் பலவகையிலும் உபயோகப்படக் கூடியதாம். தமிழில் எழுதிய இந்நூலைப்பற்றி சில விஷயங்களை விவரிப்பதற்கு முன், ஆயுர்வேதம் என்னும் விஷயத்தை இதனடியிற் சிறிது குறிப்பிடுவது இச்சந்தர்ப்பத்திற்கு அவசியமெனக் கருதுகின்றேன்; ஸம்ஸ்கிருதத்திலிருந்து மொழிபெயர்த்த இப்புஸ்தகத்தைப் படிப்பவருக்கு ஆயுர்வேதம் இவ்விவ்விஷயங்கள் அடங்கியதென்றும், வடமொழியில் அபூர்வமான இவ்வளவு வைத்திய நூல்கள் இருக்கின்றன வெனவும் ஒருவாறு அறிய விருப்பமிருக்குமென்பதில் ஐயமில்லை.

அகில ஜீவராசிகளுடைய பிணிகளைப் போக்கவும், ஆரோக்கியத்தைக் காக்கவும், ஆயுளைப் பெருக்கவும் ஆதாரமாக ஆயுர்வேதம் என்னும் சாஸ்திரம் ஆதியில் பிரம்மதேவனால் உணரப்பட்டதென்றும், அப்பால் அது இலக்ஷம் ச்லோகங்கள் அடங்கிய மிகப் பெரியதோர் கிரந்தமாக அவரால் இயற்றப்பட்டு தக்ஷப்பிரஜாபதிக்கு உபதேசிக்கப்பட்டதென்றும் ஸுச்ருத ஸம்ஹிதை முதலிய பண்டைக்காலத்திய வைத்திய நூல்கள் கூறுகின்றன. தக்ஷரிடமிருந்து அச்வினீதேவதை.

களும், அவர்களிடமிருந்து இந்திரனும் அக்கலையைக் கற்றறிந்தன ராம். ஆதியில் தேவர்களிடம் இங்ஙனம் உபதேச பரம்பரையிற்பரவிய தும், உலகத்திற்கெல்லாம் மிகவும் உபயோககரமாயமைந்ததுமான அளவிறந்த அச்சாஸ்திரத்தை, மஹேந்திரன், மனிதரையும் பிணிகளிடமிருந்து காக்கவெண்ணி, இவ்வுலகத்தோரால் எளிதில் உணரக்கூடிய வாறு எட்டுப் பகுதிகளாகப் பிரித்து,[1] பரத்வாஜர் முதலிய முனிவர்களுக்கு உபதேசித்து, இவ்வுலகிலும் பரவச்செய்ததாக ஆயுர்வேத நூல்களில் சரித்திரத்திற்கு ஸம்பந்தப்பட்ட பாகங்கள் அறிவிக்கின்றன. மேலும் ஆயுர்வேதம் அனைத்தையும் சாரீரம் என்றும், நிதானம் என்றும், ஒஷதி விபாகம் என்றும், ஔஷதகல்பம் என்றும், சிகித்ஸாவிதியென்றும் வேறுவித பல வகுப்புகளாகப் பிரித்து, இவ்வுலகில் இதைப் படிப்பவருடைய புத்திக்கு அதிக ஆயாஸமுண்டாகாதபடி அமைத்ததும் அவ்விந்திரனேயாம். அல்லாமலும் இச்சாஸ்திரமனைத்தையும் ஒரு மனிதன் குறுகிய ஒரு புருஷாயஸ்ஸில் கற்றுணர்வது கடினமெனக் கருதி, மானிடருக்கேற்ற மிக விரிவான சிகித்ஸாக்ரமத்தை அவ்விந்திரன் காயசிகித்ஸை யெனவும்[2] சல்யசிகித்ஸை யெனவும்[3] இரண்டு பெரிய பாகங்களாகப் பகுத்து, அவற்றுள் முதலாவதை பரத்வாஜர் முதலியவர்களது பரம்பரையைக்கொண்டும், இரண்டாவதை தன்வந்தரியின் பரம்பரையைக்கொண்டும் இவ்வுலகிற் பிரசுரம் செய்ததாகவும் கூறப்படுகிறது. இவ்விரு விஷயங்களுக்கே சாரீரம் முதலிய மற்ற எல்லா அம்சங்களும் அங்கங்களாய் அமைந்துள்ளன.

---

1. காயசிகித்ஸை, பாலசிகித்ஸை, கிரஹசிகித்ஸை, ஊர்த்வாங்க சிகித்ஸை, சல்யசிகித்ஸை, விஷசிகித்ஸை, இரஸாயனசிகித்ஸை, வாஜீகரணம் என்னும் இவை எண் வகையான ஆயுர்வேதாங்கங்கள் எனப்படுகின்றன.

2. ஔஷதப் பிரயோகங்களால் செய்யப்படும் சிகித்ஸை காய சிகித்ஸையாகும்.

3. யந்திரசஸ்திரங்களைக்கொண்டு செய்யப்படுவது சல்ய சிகித்ஸையாகும்.

பிரம்மருஷியான பரத்வாஜரானவர் மஹேந்திரனிடம் சென்று காயசிகித்ஸையைப் பிரதானமாகக்கொண்ட சாஸ்திரத்தை உபதேசிக்கப்பெற்று, மேதினியில் வந்து மேன்மைதங்கிய அத்ரிபுத்ரரான புநர்வஸு என்பவருக்கு அதை ஆதிபோடந்தமாய் உபதேசித்ததாக இதிஹாஸம் கூறுகிறது. அப்புநர்வஸுவும் பாஞ்சால க்ஷேத்திரத்திலுள்ள காம்பில்ய ராஜதானியில் நிவாஸம் செய்துகொண்டு பிரஹ்மவித்துக்களான அக்னிவேசர், பேளர், ஜதூகர்ணர், பராசரர், ஹாரீதர், க்ஷாரபாணி என்னும் ஆறு சிஷ்யர்களுக்கு அக்காயசிகித்ஸா ப்ரதானமான வைத்திய சாஸ்திரத்தை முற்றிலும் மொழிந்தருளினார். க்ஷத்ரியவம்சத்திற் பிறந்து தன்வந்தரியென்றும் திவோதாஸன் என்றும் பிரஸித்தி பெற்ற இராஜ ருஷியானவர், கலைகளைத்துக்கும் கல்லூரி யெனத் தகும் காசிமாநகரில் வஸித்துவருகையில், ஸுச்ருதர், ஔபதேநவர், ஔரப்ரர், பௌஷ்கலவதர், கரவீர்யர், கோபுரரக்ஷிதர் முதலிய க்ஷத்ரிய குலத்தினரான சிஷ்யர்களுக்குத் தமது விருப்பத்திற்கு ஏற்றவாறு சல்யசிகித்ஸையை ஆதாரமாகக்கொண்ட ஆயுர்வேதத்தை உபதேசித்தனர். இவ்விருவிதமான ஸம்பிரதாயங்களுள், முதலிற் கூறப்பட்டது **பாரத்வாஜஸம்பிரதாயம்** என்று அல்லது **ஆத்ரேயஸம்பிரதாயம்** என்று வழங்கப்படும்; மற்றொன்று **தன்வந்தரி ஸம்பிரதாயம்** அல்லது **ஸுச்ருதஸம்பிரதாயம்** என்று மொழியப்படுவது வழக்கம்.

அப்பால் இவ்விரு ஸம்பிரதாயத்தைச் சேர்ந்தவர்களும் தனித்தனியே அநேகம் கிரந்தங்களை இயற்றலாயினர். "காயசிகித்ஸா ப்ரதானமான வைத்திய நூல் முதன் முதல் அக்னிவேச முனிவரால் தமது மதிவிசேஷத்தைக்கொண்டு இயற்றப்பட்டது. எனினும் ஆத்ரேயர் என்னும் முனிச்ரேஷ்டரால் உபதேசிக்கப்பெற்ற விஷயங்களை எவ்வகையிலும் அது மீறியதல்ல. அதன் பிறகு பேளர் முதலியவர்களும் தனித்தனியே காயசிகித்ஸா ப்ரதானமான நூல்களியற்றி புத்தியிற் சிறப்புற்ற தமது மாணாக்கர்களுக்கும் உபதேசித்தனர்" என்று சரகஸம்ஹிதையின் ஸூத்திரஸ்தாநத்தினுடைய முதல் அத்தியாயத்தில் மொழியப்பட்டிருக்கிறது. அவ்விதமே "ஔபதேநவதந்திரம், ஔரப்ரதந்திரம், ஸுச்ருததந்திரம், புஷ்கலாவததந்திரம் என்னும் இக்கிரந்தங்களே, பிற்காலத்தில் ஏற்பட்ட சல்யசிகித்ஸா ப்ரதான

மான மற்றெல்லா நூல்களுக்கும் மூலகாரணங்களாயின" என்றும் ஆயுர்வேத நூல்களில் கூறப்படுகிறது.

ஆனால் தன்வந்தரி ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த ஸுச்ருத ஔபதேநவ-ஔரப்ர-பௌஷ்கலாவத - போஜாதிகளால் [1] இயற்றப்பட்ட சல்யதந்திரங்களும், ஆத்ரேய ஸம்பிரதாயத்தைச் சேர்ந்த அக்னிவேச-பேள-ஜதூகர்ண-ஹாரீத-க்ஷாரபாணயாதிகளால் இயற்றப்பட்ட காயசிகித்ஸையை முக்கியமாயுடைய கிரந்தங்களும் இப்பொழுது லுப்தமாய் விட்டனவென்று வரைந்திட வருந்துகின்றேன். அவற்றுள் பல நூல்கள் அநேக வைத்தியக் கிரந்தங்களுக்கு வியாக்யானங்கள் இயற்றிய சக்ரபாணி, விஜயரக்ஷிதன், சிவதாஸன் முதலானோரின் காலத்திலும் இருந்துவந்ததாக அவர்களால் ஆங்காங்கு எடுத்து உதஹரிக்கப்பட்ட அநேகம் பாடங்களைக் கொண்டு அநுமானிக்க வேண்டியிருக்கின்றன. "ஸுச்ருத ஸம்ஹிதை" என்னும் வைத்திய நூல் இப்பொழுது எங்கும் கிடைக்கக் கூடியதென்றும், ஆகவே லுப்தமாகப் போன ஔபதேநவ-ஔரப்ராதி தந்திரங்களுடன் அதையும் சேர்த்துப் படிப்பது சரியல்லவென்றும் சிலர் நினைக்கக்கூடும். ஸுச்ருதர் என்னும் ராஜருஷியினால் ஆதியில் "வ்ருத்த ஸுச்ருதம்" என்னும் சல்ய தந்திரம் ஒன்று இயற்றப்பட்டு அக்காலத்தில் அது பிரஸித்தமாகவும், அச்சிகித்ஸையைச் செய்தவருக்குச் சிறந்ததோர் பிரமாண நூலாகவும் இருந்துவந்தது. அப்பால் எவரோ அம்மஹா-க் கிரந்தத்தைச் சுருக்கி ஸங்கிரஹ நூல் ஒன்று எழுத, அதையும் வேறு எவரோ சீர்திருத்துவதாகப் பாவித்து, சாஸ்திரத்திற்கும் பிரத்தியக்ஷாநுபவத்திற்கும் இணங்காத அநேக வகையில் அதை சீர்குலைத்துவிட்டனர்; அந்த ஸங்கிரஹநூலே இப்பொழுதுள்ள ஸுச்ருத ஸம்ஹிதையாகும் என்று பலர் அபிப்பிராயப் படுகின்றனர். ஆங்காங்கு வைத்திய நூல்களின் வியாக்யாதாக்கள் "வ்ருத்த ஸுச்ருதம்" என்னும் பெயரைக் குறிப்பிடுவதைக் கொண்டும், அவர்கள் அவ்வவ் வியாக்யானங்களில் தாம் எழுதும் சில விஷயங்களுக்குப் பிரமா

1. போஜன் முதலானவர் சல்யதந்திரம் இயற்றியிருக்கின்றனர் என்று டல்லணாசாரியார் இயற்றிய நிபந்த ஸங்கிரஹம் என்னும் ஸுச்ருத வியாக்கியானம் முதலியவற்றால் பிரஸித்தம்.

ணமாக 'வ்ருத்தஸுச்ருதத்திலிருந்து எடுத்துக் கூறும் ச்லோகங்
களும் வாக்யங்களும் இப்பொழுதுள்ள ஸுச்ருதத்தில் எங்கும்
காணப்படவில்லை யென்பதைக்கொண்டும், ஆதியில் "வ்ருத்தஸுச்
ருதம்" என்று ஒரு கிரந்தம் இருந்ததுண்டென்றும் இப்பொழுதுள்ளது
அதன் ஸங்கிரஹமாயிருப்பதுடன் பல விதத்தில் வைத்திய சாஸ்திர
தத்துவங்களை மாறுபாட்டுடன் விளக்கும் வேறு போலிக் கிரந்தமென்
றும் வியக்தமாகக் கூறலாம். அக்னிவேசர் இயற்றிய விரிவான ஸம்ஹி
தையைச் சுருக்கி, சரகர், இப்பொழுது பிரஸித்தமாயுள்ள சரகஸம்
ஹிதையை வரைந்தது போலவே, வ்ருத்தஸுச்ருதமும் ஸங்கிரஹிக்கப்
பட்டதாகத் தெரியவருகிறது. இவ்விஷயத்தை இத்துடன் நிறுத்திக்
கொண்டு ஸந்தர்ப்பத்தை அநுஸரிப்போம்.

காயசிகித்ஸையையும், சல்யசிகித்ஸையையும் பிரதானமாகப்பெற்ற
இவ்வைத்திய சாஸ்திரம், காலக்ரமத்தில் உலகில் வேரூன்றி நன்றாகச்
செழித்து வருங்கால், எண் வகையான வைத்தியாங்கங்களில் ஒவ்
வொன்றிலும் அநேகம் பெயர் தனித்தனியே மிகவும் பிரவீணர்க
ளென்று பிரஸித்திபெற்று வரலாயினர். அவர்களுள் சல்யசிகித்ஸை
யில் ஸுச்ருதர் முதலிய குருபரம்பரையைச் சேர்ந்தவர்களும், கழுத்
திற்கு மேற்பட்ட ஊர்த்வாங்கங்களிலுண்டாகும் கோளாறுகளுக் கேற்ற
சாலாக்ய சிகித்ஸையில் ஜநகர், நிமி, காங்காயநர் முதலியவர்களும்,
காயசிகித்ஸையில் அக்னிவேசர், பேளர் முதலியவர்களது பரம்பரையில்
வந்த சரகர் முதலியவர்களும், பூதவித்யையில் அதர்வருஷி முதலான
வர்களும், கௌமாரப்ருத்யம் என்னும் பாலசிகித்ஸையில் ஜீவகன் முத
லானோரும், அகதமென்னும் விஷசிகித்ஸையில் காச்யபர் முதலியவர்
களும் மேலான அறிவும் அநுபவமுமுள்ளவர்களா யிருந்து வந்தனராம்.

இவ்வாறு ஆயுர்வேதத்தி லடங்கிய ஆறு அங்கங்கள் முதலில்
அநேகவித சீர்பாடுகளையும் பெற்று அபிவிருத்தி யடைந்து வருகையில்,
அப்பால் ஔஷதப் பிரயோகங்களில் சில புதிய முறைகளும் அறிவிற்
சிறப்புற்ற ஆர்ய வைத்தியர்களுடைய அநுபவத்தில் வரத்தொடங்கின.
அவைகளே இரஸௌஷத முறைகள் அல்லது இரஸாயநங்கள் என
மொழியப் படுகின்றன. ஓஷதிகள் முதலிய ஸ்தாவர ஜங்கம ஜீவ
ராசிகளைச் சேர்ந்த சரக்குகளே, மனிதர் முதலியவர்களுடைய ஜீவ ஸம்

பந்தமுள்ள தாதுக்களில் ஸம்பவிக்கும் கோளாறுகளை அகற்றுவதற்கு அபாயம் நேரிடாவண்ணம் உபயோகிக்கக் கூடியவை யென்று கருதி, முற்காலத்திய வைத்தியர்கள் ஆதியில் தாம் இயற்றிய ஆயுர்வேத சிகித்ஸாக் கிரந்தங்களில் ஓஷதிவகைகளை அல்லது மூலிகைகளைக் கொண்டே பெரும்பாலும் ஔஷத முறைகளைக் கூறலாயினர். பிறகு காலம் செல்லச் செல்ல, வைத்தியசாஸ்திரவல்லோரால் பதார்த்த குணங்களும் பலவித உபாயங்களைக் கொண்டு பரிசீலிக்கப்பட்டு வரவே, ஜீவராசிகளைச் சேராத அயம் முதலிய லோஹவர்க்கங்களும், கந்தகம் முதலிய தாதுவர்க்கங்களும், பாரதம் என்னும் பாதரஸம் முதலிய இரஸவர்க்கங்களும் தகுந்தவாறு பக்குவம் செய்யப்படுமானால், அவற்றையும் ஔஷதமாகப் பிராணிகளின் தேஹத்தில் பிணிகளைப் போக்கப் பிரயோகிக்கலாமென்று நிச்சயித்தார்கள். மேலும் மூலிகை முதலிய வற்றால் பக்குவம் செய்யப்படும் ஔஷதங்கள் அளவில் அதிகமாய் உபயோகிக்க வேண்டியவைகளா யிருப்பதுடன், அநேக விதத்தில் அருசியைக் கொடுத்து, வியாதிகளை நீடித்த காலத்தில் போக்கக் கூடியவையாயிருக்க, அதற்கு நேர் மாறாக, இரஸௌஷதங்கள் அளவில் மிகச் சொற்பமாகப் பிரயோகிக்கத் தகுந்தவையாகவும், ஆகவே உட்கொள்வதற்கு அருவருப்பைத் தராதனவாகவும், சீக்கிரத்தில் ஆரோக்கிய மளிக்கவல்ல வீர்யமுள்ளனவாயும் இருப்பதால், மூலிகைகளாலான ஔஷதங்களைக் காட்டிலும் இரஸௌஷதங்கள் மேன்மை பொருந்தியவையெனக் கருதப்பட்டன. ஆயுர்வேதத்தைப் படித்தறிந்தவர் இதே பொருளைக் கூறுவதான ஒரு பத்தியமும் படிப்பதுண்டு: அதாவது:— “ஸ்வல்பமாத்ரோபயோகித்வாத் அருசேரப்ரஸங்கத:, க்ஷிப்ரமாரோக்யதாயித்வாத் பேஷஜேப்யோதிகோ ரஸ:” என்பதேயாம். ஆதிமன், நித்யநாதன், சந்திரஸேனன், ஸோமதேவன், கோவிந்தன், நாகார்ஜுனன் முதலியவர்கள் அவ்வித இரஸாயனக் கிரந்தங்களை இயற்றி, அவ்விஷயமான அறிவுக்கு அக்காலத்தில் அதிகாரிகளாகவும் அனைவராலும் கருதப்பட்டிருந்தனர். வாஜீகரணம் என்னும் தந்திரம் ஒருவாறு காமகலையிற் பற்றுள்ள போகிகளுக்கே ஏற்றதென்று கருதி, முற்காலத்திய ஆர்ய வைத்தியர்கள் அதைத் தகுந்தவாறு கௌரவிக்காமல், அதில் விசேஷப் பிரவ்ருத்தி யில்லாதவரா யிருந்தனரென்றும், இவ்வுலகத்து இன்பங்களிலேயே விசேஷ விருப்பமுள்ளவரா யிருந்த

யவனர்கள் அரசாண்ட காலத்தில் தமக்கு விருப்பமான இச் சாஸ்திரங் கற்றவரை அதிகமாக ஆதரித்து வந்தனர் என்றும், அதுமுதல் வாஜீகரணம் என்னும் விஷயத்தையே பிரதானமாகப் பெற்றதும், சிறிது காய சிகித்ஸையின் விஷய மடங்கியதுமான இப்பி வைத்தியம் அல்லது யூனானி வைத்தியமென்று ஒருவாறு திரிபடைந்த யவன வைத்தியம் என்பதோர் பிரத்தியேகமான முறையும் ஏற்பட்டதென்று, முகம்மதியர் அரசாண்ட காலத்து சரித்திரங்களைக் கொண்டு அனுமானிக்கப் படுகிறது. ஆகவே யவன வைத்தியர்கள் வாஜீகரணம் எனப்படும் வ்ருஷ்ய சிகித்ஸா ப்ரதானமான அங்கத்தில் தேற்சியுடையவர் என்று ஒருவாறு புகழ் பெறலாயினர்.

இங்ஙனம் அக்னிவேசர் ஸுச்ருதர் முதலிய முனிவர்கள் பிரத்தியேகமான ஒவ்வொரு விஷயத்தில் மிகவும் நிபுணர்களாயிருந்து, தாம் அறிந்த அரிய விஷயங்களை லோகோபகாரத்தின் பொருட்டு நூல்களாயியற்றியிருக்க, அவ்வளவு விரிவான ஒவ்வொரு கிரந்தத்திலுமடங்கிய விஷயங்களைக் கிரஹித்து சரகர், வாக்படர், பாவமிச்ரர், சக்ரதத்தர் முதலியவர்கள் பொதுவாக அகில வைத்திய விஷயங்களும் அடங்கிய ஸங்கிரஹக்கிரந்தங்களை வரைந்தனர். இக்கிரந்தங்களில் வைத்தியத்திற்கு அவசியமான காயசிகித்ஸை, சல்யசிகித்ஸை, சாலாக்யசிகித்ஸை முதலான அம்சங்கள் அனைத்தும் அந்தந்த விஷயத்திற் பிரதானமானவையென்று பிரமாணமாகக் கொள்ளப்படும் உத்கிரந்தங்களிலிருந்து போதுமானவளவு ஸங்கிரஹித்து எடுத்துச் சேர்க்கப்பட்டிருப்பதைக் கருதியே, இவை ஸங்கிரஹக்கிரந்தங்கள் என வழங்கப்படுகின்றன; ஆனால் ஸங்கிரஹம் என்னும் பெயரால் இவை சுருக்கமான சிறிய நூல்கள் என்று சிறிதும் பிரமங்கொள்ளலாகாது. ஆகவே அனுபவத்தில் ஸாதாரணமாய் உபயோகிக்கப்படும் ஔஷதங்களைப் யக்குவம் செய்கையிலும், பிணியாளிகளிடம் நின்று சிகித்ஸாக்ரமங்களை நிறைவேற்றுகையிலும் வைத்தியருக்குக் கலக்கமின்றி விஷயங்களைச் சுருங்கவும் விளங்கவும் இவை உபதேசிக்கக்கூடியவையாயில்லை; காரியம் செய்யப்புகும்போது வைத்தியர்களுக்கு அவ்வித கலக்கங்கள் எவ்வகையிலும் ஏற்படாவண்ணம் எல்லாப் பிணிகளுக்கும் ஏற்ற ஔஷத முறைகளையும், சிகித்ஸாக்கிரமங்களையும், வைத்திய பரிபாஷைகளையும்

சுருக்கமாக—ஆனால் வேண்டிய வளவு—விவரித்துச் சார்ங்கதரன் என்னும் வைத்தியச்ரேஷ்டர் இந்த ஸம்ஹிதையை இயற்றலானார்.

ஆயுர்வேதத்திலடங்கிய அகில அங்கங்களேயும் அதனதன் பரிபாஷைகளுடன் வெகு சுருக்கமாகத் தெளிவாய் அறிவதற்கு எவரேனும் விருப்பங்கொண்டால், அவர்களுக்கு இச்சார்ங்கதர ஸம்ஹிதை ஒன்றே அனுகூலமானதென்பதற்கு ஐயமில்லை. இச்சார்ங்கதரன் சாஸ்த்ரீயமான விஷயங்களை விவரிப்பதில் பிராசீன முனிவர் முதலான மஹான்கள் மொழிந்துள்ள தத்துவமார்க்கங்களினின்றும் சிறிதும் தவறினரல்லர். என்றாலும் சரகர் - ஸுச்ருதர் - வாக்படர் முதலான ஆதிகாலத்திய ஆசாரியர்களைப்போல் ஸூத்ர - சாரீர - நிதாந-சிகித்ஸாதி ஸ்தாநங்கள் என்னும் பிரிவுகளை இவர் இந்த ஸம்ஹிதையில் ஏற்படுத்தாமல், (1) பரிபாஷைகள், சரீரதத்துவம், நாடீபரீக்ஷை, ரோகநிதாநம் என்னும் முதலில் அறியவேண்டிய விஷயங்களை ஒரு பாகமாகச் சேர்த்து அதைப் பூர்வகண்டம் என்றும், (2) இதற்கு அடுத்தாற்போல் அறியவேண்டியவையான ஸ்வரஸம், க்வாதம், பாண்டம், லேஹ்யம், ஸ்நேஹம் முதலிய பற்பல வகையான ஔஷதமுறைகளைப் பக்குவம் செய்யு முறைகளுடையவும் அவற்றின் உபயோகங்களுடையவும் விஷயங்களை மற்றொரு பகுதியாகச் செய்து அதை மத்யமகண்டம் என்றும், (3) அவ்வித ஔஷதங்களைக்கொண்டு பூர்வகண்டத்திற் குறிப்பிட்ட ரோகங்களுக்குச் செய்யவேண்டிய ஸ்நேஹநம், இரத்த மோக்ஷணம் முதலான சிகித்ஸாக்ரமங்களைச் சேர்த்து உத்தரகண்டம் என்றும் ஆக மூன்று கண்டங்களை யமைத்தார். இவ்வாறு தமது நூலில் நூதனமாக விஷய விபாகம் செய்து, படிப்பவரின் மனதிற் சிறிதும் கலக்கமுண்டாகாவண்ணம் இக்கிரந்தத்தை இயற்றியதும் ஒருவித சீர்திருத்தமெனத் தகுந்ததே. ஆகவே இப்புஸ்தகமானது கற்றறிந்த வைத்தியர்களுக்கு ஔஷதநிர்மாணங்களிலும், சிகித்ஸாகிரமங்களிலும் உடனுக்குடன் உதவுமாறு சிறந்ததோர் கைச்சுவடியா யமைந்துள்ளது. இதில் சரீரதத்துவம் மிகச் சொற்பமாகவே கூறப்பட்டிருப்பதற்கும், வியாதிகளின் ஸங்க்யைகளையெல்லாம் முற்றிலும் மொழிந்து அவற்றின் பூர்வரூப-ரூப-ஸம்ப்ராதி-உபசயங்களின்[1] தன்மைகளைச் சிறிதும் விவரிக்கா

1. பூர்வ-ரூபாதிகளைப் பற்றிய விவரங்களை இப்புஸ்தகத்தின் ஆரம்பத்தில் (1-ம் பக்கம் டிப்பணியில்) பார்க்க.

மல் விட்டதற்கும் காரணம், வைத்தியர்கள் சிகித்சை செய்யும்பொ ழுது அத்தருணத்திற்கு அவசியமான ஔஷதாதிகளிலும், கார்யக்ர மங்களிலும் மட்டும் கலக்கமுறாவண்ணம் வெகு சுருக்கமாக அவர் களுக்கு விஷயங்களை யுபதேசிக்கக் கூடியவாறு இந்நூல் உபயோகப் படவேண்டுமென்று இந்நூலாசிரியர் கருதினார் என்பதேயாம்.

சார்ங்கதரஸம்ஹிதையானது, சரக-ஸுச்ருதாதி ஸம்ஹிதைக ளுக்குப் பிற்காலத்தில் ஏற்பட்டதெனத் தெரிய வருகிறது. இதன் ஆசி ரியரான சார்ங்கதரன் என்பவர் கி. பி. பதினான்காவது நூற்றாண்டின் ஆரம்பத்தில் ஜீவித்திருந்ததாகவும், இவருடைய பிதாவின் பெயர் "தாமோதரன்" என்று வழங்கப்பட்டதாகவும் இதே கவியினால் இயற்றப்பட்டதோர் ஸம்ஸ்கிருதக்கலம்பக நூலான "சார்ங்கதர பத்ததி" என்னும் புஸ்தகத்திலுள்ள சில வர்ணனைகளைக்கொண்டு அறியப்படுகிறது. இச் சார்ங்கதர பத்ததிக்கு பீடர்ஸன் என்பவரால் ஆங்கிலத்தில் வரையப்பட்ட முகவுரையிலும் இவ்வாறே சார்ங்கதர னுடைய காலம் குறிக்கப்பட்டிருக்கின்றது. "ஸாளக்ராம நிகண்டு" என்று கூறப்படும் "ப்ருஹந்நிகண்டு ரத்நாகரம்" என்னும் வைத் திய நூலில் அதன் ஆசிரியரால் மொழியப்பட்டுள்ள சில விவரங்களைக் கொண்டு, இச்சார்ங்கதரன், "விச்வப்ரகாசம்" என்கிற வெகு பிர ஸித்தமான ஸம்ஸ்கிருத நிகண்டுவின் ஆசிரியர் ஜீவித்திருந்த காலத் திற்கு முன்னமே இருந்தாரென நிச்சயிக்கவேண்டி வருகிறது. விஜய நகர ராஜ்யத்தை ஆண்டுவந்த வீரபுக்கன் என்னும் அரசனுடைய ஆஸ்தானத்தில், அகில அதிகாரங்களையும் பெற்று, வேதங்களுக் கெல்லாம் பாஷ்யமியற்றியவரென்று பெயர் பெற்ற ஸாயனமாதவா சாரியருக்கு ஸமகாலத்தில் இச் சார்ங்கதரனும் அவ்விடங்களில் ஸம் பந்தம் பெற்றிருந்ததாகவும் கூறப்படுகிறது. சார்ங்கதர ஸம் ஹிதை, சார்ங்கதர பத்ததி என்னும் இவ்விரண்டு நூல்களைத் தவிர்

---

1. சார்ங்கதரபத்ததி யென்னும் வடமொழியிலுள்ள கலம்பக நூல், பீடர்ஸன் என்கிற ஆங்கில வித்வானால் பரிசோதிக்கப்பட்டு, பம்பாய் ஸம்ஸ்கிருதக் கோவையில் (Bombay Sanskrit Series) 1880-ம் வருஷம் அச்சிற்பதிப்பிக்கப்பட்டு வெளியாயிருக்கிறது.

த்து இவரால் இயற்றப்பட்ட நூல்கள் வேறு ஏதேனும் உண்டென்பதும் இல்லையென்பதும் தெரியவில்லை. பலவிதமான ஜ்வரங்களுக்கு ஔஷதங்களையும், சிகித்ஸாக்கிரமங்களையும் விவரிப்பதற்கென்று மூன்னூறு ச்லோகங்கள் கொண்டதாய் இயற்றப்பட்ட “ த்ரிசதீ ” என்னும் வைத்திய நூலுக்கும் சார்ங்கதரன் என்பவர் ஆசிரியர் என்று கூறப்பட்டிருக்கிறது. ஆனால் அச் சார்ங்கதரன், நாகரவம்சத்திற் பிறந்த தேவராஜன் என்னும் அந்தணருடைய புத்திரரென்றும், வைகுண்டாச்ரமரென்னும் யதியினுடைய சிஷ்யரென்றும், கூர்ஜர தேசத்தில் வஸித்தவரென்றும் அந்நூலிலுள்ள சில பத்தியங்களால் அறியப்படுவதால், த்ரிசதியின் ஆசிரியரான சார்ங்கதரன் இந்த ஸம்ஹிதை இயற்றிய சார்ங்கதரனினும் வேறு பட்டவர் என்பது நன்கு விளங்குகின்றது.

அகஸ்தியர், தேரையர், புலிப்பாணி முதலியவர்களும், மற்றும் ஸித்தமுனிகள் எனக்கூறப்படும் சில இரஸசாஸ்திரவல்லோரும் தமிழில் வரைந்துள்ள வெவ்வேறு வைத்தியநூல்கள்கூட ஆயுர்வேத நூல்கள் என்று வழங்கப்படுவதை நாம் கவனித்து வருகின்றோம். ஆயுர்வேதம் ருக்வேதத்திற்கும் அதர்வவேதத்திற்கும் உபவேதமென்னும் விஷயம் இச்சாஸ்திரத்திற் பிரவ்ருத்தியுள்ள அனைவரும் அறிந்ததேயாம். வேதம் அநாதியென்று நாம் நம்பியிருக்கின்றோம்; அவ்விதமின்றி மேனாட்டார் சொல்லும் விதமாய் வேதமும் பண்டைக் காலத்தில் ஒருவரால் இயற்றப்பட்டதேயென்று சிலர் நினைத்த போதிலும், உலகில் இப்பொழுதுள்ள வித்யைகளெல்லாம் ஏற்படுவதற்கு அநேகமாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஸகல சாஸ்திரக் களஞ்சியமான வேதமென்னும் இந்துக்களின் மஹாவித்யை புவியிற் பிரசாரத்திலிருந்ததென்று எவரும் அங்கீகரிக்காமலிருப்பதற்கில்லை. அக்காலம் முதல் தேவர்களும், முனிவர்களும், ஸித்தர்களும், மற்றும் ஆசார்யர்களென்று ஆதரிக்கப்பட்டு வந்த மஹான்களும் வேதங்களிலடங்கிய வைத்திய ஸம்பந்தமான அம்சங்களைக் கிரஹித்து ஸம்ஹிதைகளையும் ஸங்கிரஹக் கிரந்தங்களையும் நூற்றுக் கணக்காயியற்றலாயினர். அவற்றுள் பிரஜாபதி ஸம்ஹிதை, அச்விஸம்ஹிதை, வஸிஷ்டஸம்ஹிதை, பாஸ்கரஸம்ஹிதை, வைத்யஸர்வஸ்வம், வியாதிஸிந்து விமர்தநம், ஜீவநார்நவம், ஜீவதானம், வைத்யஸந்தேஹபஞ்ஜநம், த்வைதநிர்ணய

தந்திரம் என்னும் இக்கிரந்தங்கள் முறையே பிரம்மதேவன், இந்திரன், அச்வினீ தேவதைகள், சூரியன், நகுலன், ஸஹதேவன், யமதர்ம ராஜன், ச்யவனமுனி, ஜனகமஹாராஜன், அகஸ்தியர் இவர்களால் இயற்றப்பட்டவை யென்றும், இந்தக் கிரந்தங்களே உலகில் ஸகல சிகித்ஸாசாஸ்திரங்களுக்கும் ஆதாரங்களாய் ஏற்பட்டவை யென்றும் பிரஹ்மவைவர்த்தபுராணத்தில் பிரஹ்மகண்டத்தின் பதினாறாவது அத்தியாயத்தில் பதினாறு பத்தியங்களில் நிரூபிக்கப்பட்டிருக்கிறது. ஆகவே முற்காலத்தில் கிரேக்கர்களும், அரேபியர்களும் யூனானி யெனப்படும் யவனர்களும், சீன தேசத்தவர்களும் வைத்திய சாஸ்திரத்திற் பரிசயம் பெற்றதற்கும், இது ஸம்பந்தமான நூல்கள் இயற்றியதற்கும் ஆயுர்வேதமே ஆதாரமா யிருந்ததென்பதற்கு ஆக்ஷேபமில்லை. இவ்வாறு உலகில் ஸகல தேசத்து வைத்திய முறைகளுக்கும் ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஆயுர்வேதக் கிரந்தங்களே ஆதாரமானதுபோல், தமிழில் இயற்றியுள்ள வைத்திய நூல்களுக்கும் இவையே மூலமாயேற்பட்டன வென்பதிலும் ஸந்தேகமில்லை. தேசாந்தரங்களில் அல்லது த்வீபாந்தரங்களி லிருந்தவர்கள், நமது பரத கண்டத்திற்கு யாத்திரையாக வந்து, இங்கிருந்து மற்றச் சாஸ்திரங்களைப் போலவே ஆயுர்வேத நூல்களையும் தமது தேசத்திற்குக் கொண்டுபோய், தமது பாஷைகளில் மொழி பெயர்த்தும், அவற்றிலிருந்து விஷயங்களைக் கிரஹித்தும் வைத்திய நூல்களை யியற்றினர். ஆனால் ஆயுர்வேதத்தை ஆதாரமாகக்கொண்டு தம் தேசத்திய வைத்திய சாஸ்திரம் எழுதப் பட்டதாகக் கூறுவதைப் பெருமையாகக் கருதாமல், தமது தேசத்தில் தமது அறிவைக்கொண்டே ஏற்படுத்திய சாஸ்திரமெனக் கூறும்படி அன்னிய நாட்டினர் அவற்றை வரைந்தனர். ஆனால் பரதகண்டத்தியவரான நமது தமிழ் நாட்டார் வேதத்திலும் உபவேதமான ஆயுர்வேதத்திலும் அளவற்ற ஆதராதிசயமுடையவர்களா யிருப்பது இயல்பே யாதலின், தமிழில் பிரத்தியேகமாக இயற்றப்பட்ட வைத்தியநூல்களையும் ஆயுர்வேதநூல்கள் என்றே வழங்குவது தமக்கும் தமது நூல்களுக்கும் மிகப் பெருமையெனக் கருதினர் என்று நிர்ணயிக்கின்றேன். மேலும் ஸம்ஸ்கிருதத்தில் ஆயுர்வேதக் கிரந்தங்களை இயற்றிய ஆதி புருஷர்களான அகஸ்தியர், தன்வந்தரி முதலானவர்களே முக்கியமான தமிழ் வைத்திய நூல்க

ளுக்கும் ஆசிரியராயிருந்தனர் என்றும், ஸம்ஸ்கிருதத்திலுள்ள ஆயுர் வேத ஸூத்திரங்களுக்கு வியாக்கியானம் வரைந்த யோகாநந்தநாதர் என்பவர், தமிழ் வைத்திய முறைப்படி கிரந்தங்கள் இயற்றிய ஸித்தர் களில் ஒருவர் என்றும் கருதப்படுகிறது. இவை முதலான ஸம்பந்தங் களைக் கொண்டு தமிழிலுள்ள வைத்தியக் கிரந்தங்களுக்கும் ஆயுர்வே தம் என்னும் பெயர் வழக்கத்தி லிருப்பதாகக் கூறவேண்டி வருகிறது. ஆனால் அகஸ்தியர் வைத்திய காவியம், அகஸ்தியர் வைத்தியம், அகஸ் தியர் பரிபூரணம், போகர் எழுனூறு, யூகமுனி ஆயிரம், உரோமருஷி ஐன்னூறு, புலிப்பாணி ஐன்னூறு முதலிய தமிழ் வைத்தியக் கிரந்தங் களைக் கவனித்துப் பார்த்தோமாயின், அவற்றில் ஸம்ஸ்கிருத வைத்தியக் கிரந்தங்களில் வழங்கப்படும் பரிபாஷைகளும், விஷய விபாகங்களும் காண்பதரிதா யிருக்கின்றன. உதாரணமாகச் சரீர தத்துவம், பிரஸவ சிகித்ஸை, வஸ்திகர்மம், இரத்த மோக்ஷணவிதி, சஸ்திர.சிகித்ஸை, இரஸ-லோஹ-தாது வர்க்கங்களை ஔஷத முறைப்படி பக்குவம் செய்வதற்கான சாஸ்த்ரீய பரிபாஷா க்ரமங்கள் முதலிய வைத்திய சாஸ்திரத்திற்குப் பிரதான அங்கங்களான அம்சங்களைக் கூறும் பிரா சீனமான தமிழ்வைத்திய நூல்கள் எங்கிருக்கின்றனவோ இது வரையிலும் ஒருவராலும் வெளியிட முடியவில்லை.

சரீர தத்துவம், பிரஸவ சிகித்ஸை யென்னும் இவ் விஷயங்களைத் தவிர்த்தும் மற்ற எல்லா பாகங்களும் சார்ங்கதர ஸம்ஹிதையில் சுருக்க மாக விவரிக்கப் பட்டுள்ளன. சரீர தத்துவம் முதலிய ஸகல அங்கங் களும் அடங்கிய வைத்திய நூல்கள் வடமொழியில் அநேகம் உண்டு. அவ்விதமான கிரந்தங்களை ஸம்ஸ்கிருதமறியாத தமிழ் வைத்தியர்களும், தமிழிற் பரிசயமுள்ள ஆங்கில வைத்தியம் கற்றவரும், ஆயுர்வேதாபி மானிகளும் அறியவேண்டுமெனவும், இவ்வாறு ஆயுர்வேத வைத்திய சாஸ்திரத்தைத் தேசத்திற் பரவச்செய்து ஆயுர்வேத வைத்தியர்களுக் கும் ஒருவாறு செல்வாக்கை யுண்டுபண்ணி, ஆங்கில வைத்தியர்களு டன் இவர்களுக்குத் தொழில்களில் ஒற்றுமையை ஸம்பாதித்து வைக்க வேண்டுமெனவும் கருதி, ஸம்ஸ்கிருத பாஷையிலுள்ள ஆயுர்வேத நூல்களைத் தமிழில் மொழி பெயர்க்க முயன்றேன். அவற்றுள் சார் ங்கதர ஸம்ஹிதையே பெரும்பான்மையான ஆயுர்வேத வைத்திய பரி

பாஷைக ளடங்கிய சிறிய ஸங்கிரஹக் கிரந்தமாகவும், ஆயுர்வேதம் கற்க ஆரம்பிப்பவருக்கும், வைத்தியத்தில் தேர்ச்சி பெற்று சிகித்சை செய்து வரும் தொழிலாளிகளுக்கும் ஒருமிக்க உதவக்கூடிய சிறந்த நூலாகவும் இருப்பதைக் கண்டு, மொழி பெயர்க்கவேண்டிய வடமொழி வைத்திய நூல்களுள் இதையே முதலில் எழுதி வெளியிடுவது உசிதமென்று நிச்சயித்து, அங்ஙனம் செய்ய முயன்று, வைத்திய கலாநிதியின் மூலமாக நேயர்களுக்கு இதைச் சிறுகச் சிறுக அளித்துவந்து முற்றி லும் கடவுளருளால் கடைப் பிடிக்கலானேன்.

இதில் வடமொழியிலுள்ளபடியே வழங்கவேண்டிய பரிபாஷை களையும், மற்றும் ஸம்ஸ்கிருத வைத்தியத்திற் பரிசயமில்லாதவர் அறி வது கடினமெனத் தோற்றும் பாகங்களையும் அனைவரும் நன்குணரும் பொருட்டு அவ்வவ்விடங்களில் விவரமாக டிப்பணியும் வரையப்பட்டு ளது. அதிலடங்கிய ஒவ்வொரு விஷயத்தையும் உடனுக்குடன் அவ சியமான ஸமயங்களில் எடுத்துப் பார்ப்பதற்கு எளிதாயிருக்குமாறு இறுதியில் தெளிவாக **விஷய அகராதியும்** சேர்க்கப்பட்டிருக்கின்றது. ஆகவே வடமொழியிலுள்ள சார்ங்கதர ஸம்ஹிதையின் மொழிபெயர்ப் பான இப்புஸ்தகம் தமிழ் நாட்டிலுள்ள ஆயுர்வேத வைத்தியர்களுக் கும், வைத்திய நூல்களைப் படிப்பதிற் பிரியமுள்ள மற்றவருக்கும் நன் குதவுமென்று நம்புகிறேன்.

**வைத்திய கலாநிதி ஆபீஸ்,**
சென்னை.
1915ஞு செப்டம்பர்மீ 7உ

ஆயுர்வேத பூஷணம்
மே. துரைஸ்வாமி ஐயங்கார்.

---

இக் கிரந்தத்திலுள்ள ஆயிரக்கணக்கான விஷயங்கள் யாவும் வெவ்வேறுகப் பகுக்கப்பட்டு, **முற்றிலும் தலையங்கங்கள்** இடப் பெற்றிருக்கின்றன. இதனால் நூலிலுள்ள விஷயங்கள் எளிதில் கண்டறியக் கூடிய ஸௌகரியமுண்டாகிறது. இறுதியில் விஷய அகராதிக்கு முன்பு இரண்டுவித **அனுபந்தங்களும்** சேர்க்கப்பட் டிருக்கின்றன. (15-2-27)

ஶ்ரீ

# சார்ங்கதர ஸம்ஹிதை

## பூர்வ கண்டம்

### முதல் அத்தியாயம்

பரிபாஷை

கடவுள் வாழ்த்து:—இமயமலையில் மாசற்ற நிலவில் ஒளிவீசும் மஹௌஷதியைப்போல் [1] பார்வதியானவள் எவரது திருமேனியின் தேஜஸ்ஸினிடையிலிருந்தவளாய் பிரகாசிக்கின்றனளோ, அப்பரமேச்வரன் உங்களுக்கு எல்லாச் சிறப்பையும் அளித்தருள்வாராக. 1.

**நூலின் தன்மை:**—பிராசீன முனிவர்களால் பிரயோகிக்கப்பட்டு, வைத்தியர்களின் அனுபவத்தில் பன்முறையும் பயன் தரக்கூடியனவென்று அறியப்பெற்ற வைத்திய முறைகளை நன்கு சுருக்கிச் சான்றோர் மனதைத் திருப்தியுறச் செய்யுமாறு இந்நூல் இயற்றப்படுகிறது. 2

**ரோகபரீக்ஷையும் சிகித்ஸையும்:**--வைத்தியன், ரோகிகளுக்குண்டாகும் எல்லாப் பிணிகளையும், காரணம், பூர்வரூபம், ரூபம், ஸம்ப்ராப்தி, உபசயம் [2] மற்றும் அவற்றின் உட்பிரிவுகள் இவைகளால் நன்கு

---

1. சில ஔஷதிகள் இரவில் மின்மினியைப்போல் ஒளியுடன் பிரகாசிக்கும் குணமுடையவை. இது வைத்தியக்கிரந்தமானதால் இதற்கேற்றவாறு பிரகரணத்தை அனுஸரித்து மஹௌஷதியானது உபமானமாகக் கூறப்பட்டது.

2. காரணம் (வியாதி ஹேது), பூர்வரூபம் (ரோகத்தின் முற்குறிகள்), ரூபம் (ரோகத்தின் இயற்கைக் குறிகள்), ஸம்ப்ராப்தி (ரோகம் சரீரத்திற் பரவும் வகை), உபசயம் (ரோகம் உபசாந்தியாகும் வகை) இந்த ஐந்துக்கும் பஞ்சலக்ஷணங்கள் என்று பெயராம்.

பரீக்ஷித்து, ப்ருஹ்மணம், கர்ஷணம் [1] என்கிற இருவித சிகித்ஸா கிரமங்களேயும் சாஸ்திர முறைப்படி நடத்தவேண்டும். 3.

**நூலின் உபயோகம்:**—அறிவுடையோர், தேவர்களுக்கிருப்பது போல் சிறப்புற்ற ஓஷதிகளுக்கும் பல பேதங்களிருப்பதை யுணர்ந்து, ஐயமின்றி அவற்றின் பிரபாவங்களை ஆதரித்தேற்க வேண்டும். இயற்கையானவையும், வெளிக்காரணங்களாலேற்படுபவையும், உடலைப் பற்றியவையும், மனதைப்பற்றியவையுமான **நான்குவித ரோகங்களும்** பூர்வ கர்மங்களையும், வாத பித்த கபங்களென்னும் தோஷங்களையும் [2] காரணமாகக் கொண்டு உற்பத்தியாகின்றன; அவ்வித வியாதிகளை விலக்கப் பொல்லா வினைப் பயன்களைப் போக்குபவையும், நற்பயன் விளைவிப்பவையுமான சிறந்த வைத்திய முறைகளைப் பிரயோகிக்க வேண்டும். ஆகமங்களில் குறிக்கப்படாத அனேக முறைகளையும் பிரத்யக்ஷானுபவத்தைக்கொண்டும் அனுமானத்தைக்கொண்டும் அனைவரின் நன்மையின் பொருட்டு அதிக விரிவின்றி இதிற் கூறுவோம். 4—6.

**கண்டங்களுடையவும் அத்தியாயங்களுடையவும் அட்டவணை:-** (1) பரிபாஷை, ஔஷதம் முதலியவற்றின் விவரம், நாடீபரீக்ஷாதிவிதி, தீபனபாசனாதி குணங்கள், சாரீரம், உணவு முதலியது உட்செல்லும் வகை, ரோகங்களின் ஸங்க்யை இவ்விஷயங்களடங்கிய ஏழு அத்தியாயங்கள் முறையே பூர்வகண்டத்திலும், (2) ஸ்வரஸம், க்வாதம், பாண்டம், ஹிமம், கல்கம், சூர்ணம், குளிகை, லேஹ்யம், ஸ்நேஹம், ஸந்தானம்,

---

1. ப்ருஹ்மணம்—சரீரத்திற்கு புஷ்டி தரக்கூடிய சிகித்ஸை; கர்ஷணம்—சரீரத்திலுள்ள தோஷங்களை வெளிப்படுத்தச் செய்யப்படும் லங்கனம், வமனம், விரேசனம் முதலிய சிகித்ஸாமுறைகள்.

2. தோஷங்கள்—வாதம், பித்தம், கபம் என்கிற இம்மூன்றும், ரோகங்களைப் பிறப்பிக்கும் காரணங்களின் சேர்க்கையினால் கோளாறடைந்து, பிறகு சரீரத்தைத் தூஷிப்பதால் தோஷங்களென்று கூறப்படுகின்றன.

தாதுசுத்தி, இரஸங்கள் இவ்விஷயங்களடங்கிய பன்னிரண்டு அத்தியாயங்கள் முறையே மத்யமகண்டத்திலும், (3) ஸ்நேஹபானம், ஸ்வேதவிதி, வமனம், விரேசனம், அநுவாஸநவஸ்தி, நிரூஹவஸ்தி, உத்தரவஸ்தி, நஸ்யம், தூமபானவிதி, கண்டூஷாதிவிதி, லேபநாதிவிதி, இரத்தமோக்ஷணவிதி, நேத்திரசிகித்ஸை இவ்விஷயங்களடங்கிய பதின்மூன்று அத்தியாயங்கள் முறையே உத்தரகண்டத்திலும் விவரிக்கப்படும். ஆக இந்த ஸம்ஹிதையில் முப்பத்திரண்டு அத்தியாயங்களும், இரண்டாயிரத்து அறுனூறு பத்தியங்களும் [1] அடங்கியிருக்கின்றன. 7-13½.

**மாக்த பரிபாஷை**:--ஔஷதத்தில் வஸ்துக்களைப் பிரமாணமின்றியே உபயோகித்தால், அவை எங்கும் முறைப்படிச் சேராவாகையால் ஔஷதமுறைகளுக்கும் அவற்றை ரோகிகளுக்குப் பிரயோகிப்பதற்கும் அவசியமான அளவுகள் இங்கு கூறப்படுகின்றன. 14.

**அளவுகளின் விபரம்**:—சாளரம் முதலிய துவாரங்களினூடே சூரியகிரணங்களில் காணப்படும் நுண்ணிய பொடி. த்ரஸரேணுவென்றும், அதில் முப்பதில் ஒருபாகம் பரமாணுவென்றும் வழங்கப்படும்.

30 பரமாணுக்கள் கொண்டது 1 த்ரஸரேணு. இதற்கே வம்சீ என்றும் பெயர்.

6 த்ரஸரேணு கொண்டது 1 மரீசி.
6 மரீசிகள் கொண்டது 1 இராஜிகை.
3 இராஜிகை கொண்டது 1 ஸர்ஷபம்.
8 ஸர்ஷபம் கொண்டது 1 யவம்.
4 யவம் கொண்டது 1 குஞ்ஜா (குன்றுமணி.) இதற்கே இரக்திகை என்றும் பெயர்.

1. ப்ரக்ஷிப்தங்களென்று வழங்கப்படும் சில பத்தியங்களையும், பெரிய பத்தியங்களில் 32 எழுத்துகளுக்கு அதிகமிருக்கும் பாகங்களையும், மந்திரம் முதலிய வாக்கியங்களையும் சேர்த்துக் கொண்டால் குறைவுள்ளதாகத் தோற்றும் பத்தியங்களும் சரியாய் விடலாம்.

6 குஞ்ஜாக்கள் கொண்டது 1 மாஷம். இதற்கே ஹேமம், தாமம் என்றும் பெயர்.

4 மாஷங்கள் கொண்டது 1 சாணம். இதற்கே தரணம், டங்கம் என்றும் பெயர்.

2 சாணம் கொண்டது 1 கோலம். இதுவே க்ஷூத்ரகம், வடகம், த்ரங்க்ஷணம் என்றும் கூறப்படும்.

2 கோலம் கொண்டது 1 கர்ஷம். இதையே பாணிமானிகை, அக்ஷம், பிசு, பாணிதலம், கிஞ்சித்பாணி, திந்துகம், பிடாலபதகம், ஷோடசிகா, கரமத்யம், ஹம்ஸபதம், ஸுவர்ணம், கவளக்ரஹம், உதும்பரம் என்றும் வழங்குவர்.

2 கர்ஷங்கள் கொண்டது 1 அர்த்தபலம். இதற்கே சுக்தியென்றும், அஷ்டமிகை யென்றும் வேறு பெயருண்டு.

2 சுக்திகள் கொண்டது 1 பலம். இதுவே முஷ்டி, ஆம்ரம், சதுர்த்திகை, ப்ரகுஞ்சம், ஷோடசீ, பில்வம் என்றும் கூறப்படும்.

2 பலங்கள் கொண்டது 1 ப்ரஸ்ருதி. இதற்கு ப்ரஸ்ருதமென்றும் பெயர்.

2 ப்ரஸ்ருதிகள் கொண்டது 1 அஞ்ஜலி. இதுவே குடவம், அர்த்த சராவம், அஷ்டமானம் என்றும் வழங்கப்படும்.

2 அஞ்ஜலிகள் கொண்டது 1 மானிகை. இதற்கு சராவம், அஷ்டபலம் என்றும் பெயராம்.

2. மானிகைகள் கொண்டது 1 பிரஸ்த்தம்.

4 பிரஸ்த்தங்கள் கொண்டது 1 ஆடகம். இதற்கு பாஜநம், காம்ஸ்யபாத்ரம் என்றும் பெயர் (அறுபத்து நான்கு பலம்.)

4 ஆடகங்கள் கொண்டது 1 திரோணம். இது கல்வணம், உன்மணம், உன்மானம், கடம், இராசி, கலசம் என்றும் கூறப்படும்.

2 திரோணங்கள் கொண்டது 1 சூர்ப்பம். இதற்கே கும்பம் என்றும் பெயர் (அறுபத்து நான்கு சராவம்).

2 சூர்ப்பங்கள் கொண்டது 1 திரோணீ. இதுவே வஹம், கோணீ என்றும் கூறப்படும்.

4 திரோணிகள் கொண்டது 1 காரீ. (நாலாயிரத்துத் தொண்ணூத்தாறு பலம்.)

2000 பலங்கள் கொண்டது 1 பாரம்.

100 பலங்கள் கொண்டது 1 துலாம்.

மாஷம், சாணம், கர்ஷம், பலம், அஞ்ஜலி, பிரஸ்த்தம், ஆடகம், திரோணம், திரோணீ, காரீ இவை ஒவ்வொன்றும் முறையே மேன் மேலும் நான்கு நான்கு பாகம் அளவில் அதிகமானவையாம். 14-33.

**பதார்த்தங்களின் தன்மைகளை அனுஸரித்து பிரமாணபேதங்கள்** :—குஞ்ஜா என்கிற அளவு முதற்கொண்டு குடவம் வரையிலுள்ள அளவுகளின்படி திரவபதார்த்தத்தையாவது, ஈரம் அல்லது உலர்ந்த மற்ற எவ்வித பதார்த்தத்தையாவது ஔஷத முறைகளில் உபயோகிக்கும்போது அவற்றையெல்லாம் முறைகளிற்கூறிய அதே அளவில் உபயோகிக்க வேண்டும். திரவபதார்த்தம் அல்லது ஈர பதார்த்தங்களை மட்டும் பிரஸ்த்தம் அல்லது அதற்கு மேற்பட்ட அளவுகளில் பிரயோகிக்கும்போது, உலர்ந்த வஸ்துக்களுக்குக் கூறப்பட்டுள்ள அளவைவிட இரண்டு பங்கு அதிகமாய்ச் சேர்க்க வேண்டும். ஆனால் துலா பிரமாணங்கொண்ட அளவில் திரவம் அல்லது ஈர வஸ்துக்களை அவ்விதம் இரண்டு பங்காகச் சேர்க்க வேண்டிய அவசியமில்லை. 34,35.

**அளவு பாத்திரம்** :—சுற்றளவிலும், உயரத்திலும் நான்கு அங்குலங் கொண்டதாய் மண், மரம், மூங்கில், உலோஹம் முதலியதால் செய்யப்பட்ட பாத்திரத்தின் அளவானது குடவம்[1] எனப்படும். 36.

**ஔஷதங்களுக்குப் பெயரிடல்** :—ஔஷத முறைகளில் எந்த பதார்த்தம் முதலிற் கூறப்படுகின்றதோ, அப் பதார்த்தத்தின் பெயரைக்கொண்டே அந்த ஔஷதத்தின் பெயரும் வழங்கப்படும். 37.

**காளிங்க பரிபாஷை**:—நிறை அல்லது அளவானது காளிங்கம் மாகதம் என்று இருவகைப்படுமென்றும், காளிங்கத்தினும் மாகதமானமே சிறந்ததென்றும் இவ்விஷயமறிந்தவர் கூறுவர்[2]. காலம், ஜாட—

1. குடவத்தைப்போலவே அதற்குக் குறைந்தவையும் அதிகமுமான அளவுகளுக்கும் பாத்திரங்களை நிர்மிக்கலாம்.

2. முன்னுல் கலிங்கதேச முறைப்படி வழங்கிய அளவுகளுக்குக் 'காளிங்கம்' என்றும், மகததேச முறையில் வழங்கியவற்றிற்கு 'மாகதம்' என்றும் பெயர் வந்ததாக இதனுல் அறியப்படுகிறது.

ராக்னி, வயது, சக்தி, பிரக்ருதி,[1] தோஷம், இடம் இவற்றின் தன்மைகளை உற்று நோக்கித் தகுந்தவாறு மாத்திரைகள் ஏற்படுத்தவேண்டுமே யன்றி வேறுவிதமாய் அனைத்துக்கும் நிச்சயமான நிறை அல்லது அளவுகளைக் கூறுவதற்கில்லை. கலியுகத்தில் மனிதர் மந்தாக்னிகளாகவும், வலிவிற் குறைந்தவராகவும், உருவத்திற் குன்றியவராகவும் இருப்பதால், அவர்களுக்குத் தகுந்த அளவுகளை அறிஞர் அங்கீகரிக்கக்கூடிய வகையில் கூறுகின்றோம். 38, 39.

**காளிங்க அளவுகள் :—**

12 கௌரஸர்ஷபம்[2] (அல்லது ஸர்ஷபம்) கொண்டது 1 யவம்.
2 யவங்கள் கொண்டது 1 குஞ்ஜா.
2 குஞ்ஜா கொண்டது 1 வல்லம்.
8 குஞ்ஜா கொண்டது 1 மாஷம்[3]
4 மாஷம் கொண்டது 1 சாணம். இதுவே நிஷ்கம், டங்கம் என்றும் சொல்லப்படும்.
6 மாஷங்கள்கொண்டது 1 கத்யாநகம்.
10 மாஷங்கள் கொண்டது 1 கர்ஷம்.
4 கர்ஷம் கொண்டது 1 பலம். (10 சாணங்கள்).
4 பலம் கொண்டது 1 குடவம்.

பிரஸ்த்தம் முதலிய மற்ற அளவுகளெல்லாம் மாகதமானத்திற் கூறிய மாதிரியே. 40—43.

**பதார்த்தங்களை யுபயோகிக்கும் வகைகள் :—**வாய் விடங்கம், திப்பிலி, வெல்லம், நெய், கொத்தமல்லிவிதை, தேன் இவற்றைத் தவிர மற்ற வஸ்துக்களை எல்லாக் காரியங்களிலும் புதிதாகவே உபயோகிக்க வேண்டும். சீந்தில், வெட்பாலை, ஆடாதோடை, பூசணி, தண்ணீர் விட்டாங்கிழங்கு, அமுக்கிரங்கிழங்கு, மருதோன்றி, சத

1. வாதப் பிரக்ருதி, பித்தப் பிரக்ருதி, சிலேஷ்மப் பிரக்ருதி என்று பிரக்ருதிகள் மூன்று.

2. கௌரஸர்ஷபம் (வெள்ளைக் கடுகின் நிறை கொண்டதாகையால் இப்பெயர் வந்தது). இதற்குக் குறைந்த சிறிய அளவுகள் மாகத அளவுகளைப் போன்றவையே.

3. குஞ்ஜாக்கள் 7 கொண்டது 1 மாஷம் என்றும் சிலர்.

குப்பி, முதியார் கூந்தல் இவற்றை ஈரமாகவே உபயோகிக்கவேண்டும்; ஆனால் முன் ஈரவஸ்துக்களுக்குக் கூறிய முறைக்கேற்பட்ட அளவை விட இருமடங்காகச் சேர்க்கக்கூடாது. உலர்ந்த பதார்த்தம் புதிதாயிருந்தால் ஸகல காரியங்களிலும் உபயோகிக்கலாமென்றும், ஈரமான வஸ்துவை யோகத்தில்[1] விதித்ததைவிட இரண்டு மடங்காகச் சேர்க்க வேண்டுமென்றும் சொல்லப்படும் விதியானது எங்கும் பொதுவானதாகும். 44—46.

**ஔஷத முறைகளில் விவரம் கூறவிடின் செய்யவேண்டிய வகை:**—ஔஷத முபயோகிக்க வேண்டிய வேளையைக் குறிப்பிடாமலிருந்தால் காலைநேரமும், ஓஷதிகளிலிருந்து கிரஹிக்கவேண்டிய பாகம் இன்னதென்று குறிக்காமலிருந்தால் அவற்றின் வேரும், ஔஷதங்களில் உபயோகிககப்படும் பதார்த்தங்களுக்கு அளவுகள் தனித் தனிக் கூறுவிட்டால் எல்லாவற்றிற்கும் ஸம பாகமும், ஔஷதங்களைப் பக்குவம் பண்ணுவதற்குப் பாத்திரம் இன்னதென்று குறிப்பிடாவிட்டால் மட்பாத்திரமும், கஷாயம் முதலியதைக் காய்ச்சுவதற்குத் திரவ பதார்த்தம் இன்னதென்று கூறப்படாதவிடத்தில் ஜலமும், தைலம் முதலியதைப் பக்குவம் செய்ய இவ்வித எண்ணெய் வேண்டுமென்று விவரிக்காவிட்டால் நல்லெண்ணெயும் கிரஹிக்கப் படவேண்டும். ஏதேனும் ஒரு யோகத்தில் ஒரே பதார்த்தம் இரண்டு தடவைக் கூறப்பட்டிருந்தால், அதை அந்த முறையில் இரு மடங்காகச்சேர்க்கவேண்டுமென்பது கருத்தாம். சூர்ணம், ஸ்நேஹம், ஆஸவம், லேஹ்யம் இவற்றில் சந்தனம் சேர்க்கவேண்டியதானால் பெரும்பாலும் வெண் சந்தனமும், கஷாயம், லேபம் இவைகளிலாயின் செஞ்சந்தனமும் சேர்க்கவேண்டும்.[2] 47—50.

**காலபேதத்தினால் பதார்த்தங்களுக்கும் குணபேதம்:**—ஔஷதோபயோகியான மூலிகை முதலியவைகளை ஒரு வருஷத்திற்கு மேல் உபயோகிக்காமல் வைத்திருந்தால் குணஹீனங்களாய்விடும். சூர்ணங்களின் வீர்யமும் இரண்டு மாதங்களுக்குப் பின் குறைவடை

---

1. யோகம்—ஔஷதமுறை.

2. ஸ்நேஹம், ஆஸவம், லேபம் முதலிய விசேஷமுறைகளைப் பற்றிய பொருள் முதலான விவரங்களைப் பின்னால் அந்தந்த அத்தியாயத்திற் காண்க.

யும். குளிகைகளும் லேஹ்யங்களும் ஒரு வருஷத்திற்கப்பால் ஸத்துவ மிழந்துவிடும். நெய், தைலம் முதலியவை நான்கு மாதங்களுக்குப் பிறகு குணங்குன்றியவையாகும். இலகுபாகமான [1] ஔஷதிகள் ஒரு வருஷத்திற்குப்பின் வீர்யமற்றவையாய்விடும். ஆஸவங்கள், தாதுத் திரவ்யங்கள், இரஸவர்க்கங்கள் இவற்றிற்குக் காலம் செல்லச் செல்ல குணங்களும் அதிகமாகும். 51—53.

**ஒரு யோகத்தில் தகாததை விலக்குவதும் தகுந்ததைச் சேர்ப்பதும்:**—ஒரு யோகத்தில் சொல்லியிருக்கும் பதார்த்தங்களின் வரிசையில் ஏதேனுமொரு பொருள், குறிப்பிட்ட வியாதிக்குத் தகாததாயிருந்தால், அறிந்தவன் அப்பதார்த்தத்தை அவ்வரிசையிலிருந்து விலக்கிவிடலாம்; வியாதிக்கு ஏற்றதான பொருள் மற்றொன்றிருந்தால், முறையில் மொழியப் படாவிடினும் சேர்த்துக்கொள்ளலாம். 54.

**ஔஷதிகளுண்டாகும் இடங்களும் அவற்றைக் கிரஹிக்கத் தகுந்த காலங்களும்:**—விந்தியம் முதலிய பர்வதங்கள் சூடுள்ளவையெனவும், இமாலயம் முதலான மலைகள் குளிர்ந்தவை யென்றும் கருதப்படுகின்றன; ஆகவே அவற்றில் உற்பத்தியாகும் ஔஷதிவகைகளும், அவற்றிற்குக் காரணமாயுள்ள அப்பிரதேசங்களுக்கேற்ற குணமுள்ளனவாகும். காடுகள், தோட்டங்கள் முதலான வேறிடங்களிலும் இவ்வோஷதிகள் பயிராகின்றன. சுத்தமான சித்தத்துடனும் நிர்மலமான சரீரத்துடனுங் கூடிய புருஷன் நல்ல சுபதினத்தன்று விடியற்காலத்திலேயே சூரியனுக்கு எதிர்முகமாயிருந்து சிவபெருமானுக்கு வந்தனம் செய்வதாக இருதயத்தில் தியானித்து, ஸாதாரண பூமியில் [2] வடபாகத்திலிருக்கும் ஔஷதியை மௌனமாகவே இருந்து கிரஹிக்க வேண்டும். புற்று அல்லது பாழிகள், மனதுக்கு வெறுப்பைத் தரும்

---

1. இலகுபாகம்—சிறு ஜ்வாலையில் எளிதில் பண்ணப்படும் இளம் பாகம்.

2. ஆயுர்வேத நூல்களில் பூமியானது ஜாங்கலம், ஆநூபம், ஸாதாரணம் என்று மூன்று விதமானதென்றும், அவற்றில் வெயிலாலும் காற்றாலும் விசேஷமாய் வறண்டுள்ள பூமி ஜாங்கலமென்றும், சதுப்பான பூமி ஆநூபம் என்றும், இரண்டுக்கும் பொதுத்தன்மையாயுள்ளது ஸாதாரண பூமியென்றும் கூறப்படும்.

இடங்கள், எப்பொழுதும் ஈரமாகவேயிருக்கும் பள்ளத்தாக்குகள், மயானபூமி, சவர்நிலம், அனைவரும் செல்லும் பாதை இவ்விடங்களிலுண்டானவையும், கிருமி முதலிய ஜந்துக்கள், அக்னி, பனி இவற்றால் எரிக்கப்பட்டவையுமான ஓஷதிகள் பயன்படா. சரத்காலத்தில் ஓஷதிகளில் இரஸம் [1] நிரம்பியிருக்குமாகையால், அப்பொழுது ஸகல காரியங்களுக்கும் மூலிகைகளைக் கிரஹிக்கவேண்டும். ஆனல் விரேகம் வமனம் இவ்விரண்டுக்கும் உபயோகமாகக்கூடிய பதார்த்தங்களை வஸந்தகாலத்தின் இறுதியில் கிரஹிக்கவேண்டும். 55—59.

**அந்தந்த பதார்த்தங்களிலிருந்து கிரஹிக்கவேண்டிய அம்சங்கள்:**—எவற்றிற்கு வேர்கள் மிகவும் பெரிதோ, அவ்வித செடிகளின் வேர்களிலுள்ள பட்டையையே கிரஹிக்கவேண்டும். ஓஷதிகளின் தன்மையறிந்தவன், சிறிய வேர்களையுடைய மூலிகைகளை அறிந்து அவற்றை ஸமூலமாய் எடுத்துக்கொள்ளவேண்டும். ஆலமரம் முதலியதைப்போன்ற விருக்ஷங்களிலிருந்து பட்டையும், வேங்கையைப் போன்றவற்றிலிருந்து ஸாரமென்னும் பிசினும், தாளிசம் போன்ற மரங்களிலிருந்து இலைகளும், த்ரிபலை முதலியதிலிருந்து பலங்களும், [3] காட்டாத்தி முதலியதிலிருந்து புஷ்பங்களும், கள்ளி முதலானதிலிருந்து பாலும் கிரஹிக்கக்கூடியன. 60—61½.

---

## இரண்டாவது அத்தியாயம்.

---

### ஔஷதம் முதலியவற்றின் விவரம்.

**ஔஷதங்களை உபயோகிக்கும் காலங்கள்:**—ஔஷதத்தை அதிலும் விசேஷமாக கஷாயங்களைப் பெரும்பாலும் காலைநேரத்தில் உட்கொள்வதே உத்தமம். மனிதர் மருந்துண்பதற்கு ஐந்து விதமான காலங்களுண்டென்றறியவேண்டும். அவையாவன —சிறிது

---

1. வருஷ ருதுவில் பெய்யும் மழையினல் சரத்ருதுவில் செடிகொடிகளெல்லாம் செழித்து இரஸம் நிரம்பியிருப்பதியல்பு.

2. விரேகம்—குடலிலிருந்து கீழ்நோக்கி மலங்கழிதல்.

3 த்ரிபலை—கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய் இம்மூன்றுக்கும் தனிப்பட த்ரிபலை யென்று பெயர்.

சூர்யோதயமாகையிலும், பகற் போஜனஸமயத்திலும், மாலையில் போஜனமுண்ணும் நேரத்திலும், அடிக்கடியும், இரவிலும் என்கிற இவ்வைந்து வேளைகளிலும் ஔஷதம் புஜிக்கக்கூடும். (1) பித்தம், கபம் இவை அதிகமான ஸமயத்திலும், விரேகம், வமனம், லேகநம்[1] என்கிற இவற்றிற்காகவும் பெரும்பாலும் விடியற்காலத்தில் ஔஷதமுண்ணவேண்டும். ஔஷதத்தை யுபயோகிப்பதற்கு இதுவே முதற் காலமாகும். (2) அபானவாயு விகாரமடைந்திருந்தால் ஔஷதத்தை போஜனத்திற்கு முன்பு உபயோகிப்பது நலம். அரோசகமாயிருந்தால் அப்பொழுது சுவையுண்டுபண்ணக் கூடிய மருந்தை நற்சுவையுள்ள பற்பல ஆஹாரங்களுடன் கலந்து எடுத்துக்கொள்ளலாம். ஸமாநவாயு[2] விகாரமடைந்திருந்தால், ஜாடராக்னியும் மந்தமாயிருக்குமாதலால் ஸமர்த்தனை வைத்தியன் பசியை உத்தீபனம் செய்யக்கூடிய ஔஷதத்தை போஜனத்தின் இடையில் உபயோகிக்கச் செய்ய வேண்டும். வியாநமென்னும்[3] வாயு பிரகோபத்தையடைந்தால் போஜனம் செய்த வுடனேயும், விக்கல், ஆக்ஷேபகவாதம்,[4] நடுக்கல் இவ்வித ரோகங்களில் போஜனத்திற்கு முன்னும் பின்னுமாகவும் ஔஷதத்தை யுபயோகிக்கவேண்டும். ஔஷதமுபயோகிக்க இவ்விதம் இரண்டாவது காலமும் கூறப்பட்டது. (3) உதாநவாயு[5] பிரகோபத்தை யடைந்து குரல் முதலியதைக் கெடுத்தால் மாலையில் போஜனம் செய்யும்பொழுது ஒவ்வொரு கபளத்தினிடையிலும் ஔஷதத்தைப் பிணியாளிக்குக் கொடுக்கவேண்டும். பிராணவாயு[6] கோபா

---

1. விரேகம், லேகநம் முதலியவற்றின் விவரமான பொருள் முதலியவற்றை 4-வது அத்தியாயத்தில் பார்க்கவும்.

2. ஸமாநவாயு—நாபிக்குக் கீழுள்ள அவயவங்களின் வேலைகளைச் சரிவர நடத்தும் ஒருவித வாயு.

3. வியாநவாயு—ஸர்வ அவயவங்களையும் வியாபித்துச் சரீரகாரியங்களையெல்லாம் நடத்தும் வாயு.

4. ஆக்ஷேபகவாதம்—கை கால் கண் முதலிய அவயவங்களை மூலைக்கு மூலை யிழுக்கும் ஒருவித வாதரோகம்.

5. உதாநவாயு—கண்டத்திலிருந்துகொண்டு அவ்விடத்திலுள்ள வேலையை நன்ருக நடத்தும் வாயு.

6. பிராணவாயு—சரீரம் உயிருடனிருப்பதற்கு முக்கியமான ஒருவித வாயு. இதற்குச் சிரஸ்ஸு முக்கிய ஸ்தானமாம்.

றடைந்தால் பெரும்பாலும் மாலையில் போஜனம் செய்தபின் ஔஷ தத்தை யுபயோகிக்கலாம். இதை மூன்றாவது காலமாகக் கருத வேண்டும். (4) தாஹம், வாந்தி, விக்கல், ச்வாஸரோகம், விஷதோஷம் இவற்றில் ஔஷதத்தை அடிக்கடியும் ஆஹாரத்துடன் கலந்தும் கொடுக்கலாம். இது நான்காவது காலமாகும். (5) கழுத்திற்கு மேற்பட்ட அவயவங்களில் உற்பத்தியாகும் பிணிகளிலும், குமட்டலை யுண்டாக்குவதிலும், ப்ருஹ்மணம் செய்வதிலும் இரவில் உணவு உட்கொள்ளாமலிருந்து வெறும் வயிற்றிலேயே பாசநம் சமநம் என்னும் சிகித்ஸைகளைச் செய்யவேண்டும். மருந்துகளை யுபயோகிப்பதில் இவ் விதம் ஐந்தாவது வேளையும் கூறப்பட்டது. 1—12.

பதார்த்தங்களுக்கு ஐந்து தன்மைகள்:—பதார்த்தங்களில் இரஸம், குணம், வீர்யம், விபாகம், பிரபாவம் என்று ஐந்து விதமான தன்மைகள் அனுபவக் கிரமத்தைக்கொண்டு கூறப்படுகின்றன. 13.

இரஸங்கள்:—இனிப்பு, புளிப்பு, உப்பு, காரம், கைப்பு, துவர்ப்பு இவை ஆறும் இரஸங்கள் அல்லது சுவைகளெனப்படும்; இவை பல பதார்த்தங்களில் பலவகையிற் கூடியிருக்கின்றன. அவற்றுள் ப்ருதிவீ ஜலம் இவ்விரண்டு பூதங்களின் அம்சங்களால் புளிப்பும், ஜலம் அக்னி இவற்றின் அம்சங்களால் உப்பும், வாயு ஆகாசம் இவற்றின் அம்சங்களால் காரமும், வாயு அக்னி இவைகளின் அம்சங்களால் கைப்பும், பூமி வாயு இவற்றின் அம்சங்களால் துவர்ப்பும், இவ்வாறு இரண்டிரண்டு பூதங்களின் சேர்க்கையினால் முறையே அறுசுவையும் உற்பத்தி யாகின்றன. 14,15.

குணங்கள்:—குரு, ஸ்நிக்த்தம், தீக்ஷ்ணம், ருக்ஷம், இலகு என்கிற இவ்வைந்தும் கிரமமாக ப்ருதிவீ, ஜலம், அக்னி, வாயு, ஆகாசம் இவ்வைந்து பூதங்களின் அல்லது அந்த பூதங்களாலான வஸ்துக்களின் குணங்களாகக் கருதப்படுகின்றன. ஐந்துவகையான இக்குணங்களிலேயே மற்ற எல்லாக் குண ஸமூஹங்களும் அடங்கியவைகளாம். 16, 16½.

1. குரு—பாரமானது; ஸ்நிக்த்தம்—பசையுள்ளது; தீக்ஷ்ணம்,—வெகு சீக்கிரத்தில் வேலை செய்யும் சுருக்குள்ள தன்மை: ருக்ஷம்-வறட்சி; இலகு-இலேசு. [குரு, இலகு, மந்தம், தீக்ஷ்ணம். சீதம். உஷ்ணம், ஸ்நிக்த்தம், ருக்ஷம், ச்லக்ஷ்ணம், கரம், ஸாந்த்ரம், திரவம்,

**வீர்யங்கள்** :—திரவ்யங்களை ஊடுருவி ஆச்ரயித்திருக்கும் வீர்யங்கள் பெரும்பாலும் சீதம் உஷ்ணம் என்று இருவகைப்படும்; ஆகையினால் உலகமெங்கும் வியாபித்துள்ள வஸ்துக்களெல்லாம் காங்கை அல்லது குளிர்ச்சி யுள்ளதாகக் காணப்படுகின்றன. வேறு வீர்யங்கள் எவையாகிலும் உண்டானால், அவையும் ஒருவாறு இவ்விரண்டிலேயே உட்பட்டவையாகும். 17, 18.

**விபாகங்கள்**:—உட்கொள்ளப்படும் பதார்த்தங்கள் குடலிற் சென்றதும் மதுரமாகவும், அம்லமாகவும், கடுவாகவும் மூன்றுவித விபாகங்களை (பரிணமங்களை) அடைகின்றன; பெரும்பாலும் மதுரமும் இலவண ரஸமுமுள்ள பதார்த்தங்கள் மதுரமாகவும், அம்லம் அம்லமாகவும், துவர்ப்பு, காரம், கைப்பு இவை கடுவாகவும் பாகத்தை அடைகின்றன. இப்படி மதுரமாக பாகமாகும் பதார்த்தத்தினால் கபமும், அம்லமாக பாகமடையும் பதார்த்தத்தால் பித்தமும், கடுபாகத்தினால் வாயுவும் விருத்தியாவதியல்பு.[1] 19—20½.

**பிரபாவம்**:—நெல்லிக் கனியானது கொடியெலுமிச்சம் பழத்திற்கேற்ற இரஸம், குணம், வீர்யம், விபாகம் இவைகளுடன் கூடியதாயிருந்தும், கொடி யெலுமிச்சையைப்போல் இரஸாதிகளுக்குத் தகுந்த பயனைத் தராமல், மூன்று தோஷங்களுக்கும் ஒருமிக்கக் காணும் கோளாறுகளைப் போக்குவதும், அவ்விதமே ஸஹதேவீ[2] யென்னும் செடியின் வேரை சிரஸ்ஸில் கட்ட ஜ்வரம் உபசாந்தி யடைவது போல் சில திரவ்யம் உட்கொள்ளப் படாமலே பரிசம் முதலானதாலேயே சில ஸமயத்தில் பயனளிப்பதும் பிரபாவம் எனப்படும்.[3]

---

மிருது, கடினம், ஸ்த்திரம், ஸரம், ஸூக்ஷ்மம், ஸ்த்தூலம், விசதம், பிச்சிலம் என்று குணங்கள் இருபது விதங்களென்பது வாக்படன் முதலியவரது கொள்கை.]

1. உட்கொள்ளப்படும் பதார்த்தங்கள் எவ்வித சுவையுள்ளனவாயினும், குடலுக்குள் சென்றபின் கிரமமாக மேலே சொன்னவிதமாய் குடலிலுள்ள ஜடராக்னி முதலியதின் சேர்க்கையினால் மூன்று விதமாகப் பக்குவமாய் மாறுபாடடையும்.

2. ஸஹதேவீ—பேராமுட்டியைச் சேர்ந்த ஒருவித செடி.

3. ஒரு பதார்த்தமானது, அதற்குள்ள இரஸம் குணம் வீர்யம் விபாகம் இந்த நான்கு விதமான தன்மைகளுக்கும் மாறான வேலையைச் செய்தால், அந்த சக்தியே பிரபாவம் என்று சொல்லப்படும்.

ஔஷதத்திற்கு உபயோகிக்கப்படும் பதார்த்தங்களில் சில அவற்றிற்குள்ள இரஸத்திற்கும், வேறு சில குணங்களுக்கும், சில வீர்யத்திற்கும், சில விபாகத்திற்கும், வேறு சில பிரபாவத்திற்கும் ஏற்றவாறு வேலைகளைச் செய்யக்கூடியன. 21—23½.

**இருதுக்களும் அவற்றில் தோஷங்களுக்குண்டாகும் மாறுபாடுகளும்:**—வாத பித்த கபங்கள் எந்த காலங்களில் சயம், பிரகோபம், உபசமம் என்கிற மூன்று நிலைமைகளை யடைகின்றனவோ அந்த காலங்கள், சூரியன் மேஷம் முதலிய இராசிகளிற் சேருவதால் ஆறு இருதுக்களாக வகுக்கப்பட்டுள. சூரியன், மேஷம் விருஷபம் இவ்விரு இராசிகளில் இருக்கும்போது கிரீஷ்மருதுவும், மிதுனம் கடகம் இவற்றிலிருக்கையில் பிராவ்ருட் ருதுவும், சிங்கம் கன்னி இவற்றிலிருக்கையில் வர்ஷருதுவும், துலாம் விருச்சிகங்களிலிருக்கும்போது சரத்ருதுவும், தனுஸ் மகரங்களிலிருக்கையில் ஹேமந்தமும், கும்ப மீனங்களிலிருக்குங்கால் வஸந்தமுமாகும் [1]. வாயுவானது கிரீஷ்மருதுவில் சயத்தை அடைந்து, பிராவ்ருட்காலத்தில் பிராகோபித்து, சரத்ருதுவில் தானே உபசமமடைகின்றது. பித்தத்திற்கு வர்ஷாகாலத்தில் சயமும், சரத்காலத்தில் பிரகோபமும், வஸந்தத்தில் உபசமமும் உண்டாகும். கபத்திற்கு ஹேமந்தத்தில் சயமும், வஸந்தத்தில் பிரகோபமும், பிராவ்ருட்காலத்தில் உபசமமும் ஏற்படுகின்றது. [2] கார்த்திகைமாதத்தின் இறுதியிலுள்ள எட்டு நாட்களும், மார்கழிமாதத்

---

1. இருதுக்களை இவ்விதம் கணக்கிடுவது மற்ற ஆயுர்வேத நூல்களுக்கும், உலகத்தில் வழங்கப்படுவதற்கும் வித்தியாஸமாயிருப்பதுடன், தோஷங்களுக்கு உபசமமும் மற்ற வைத்தியக்கிரந்தங்களைப் போலில்லாமல் வெவ்வேறு ருதுவில் சொல்லப்பட்டிருக்கிறது; மேலும் ப்ராவ்ருட் என்பது வர்ஷருதுவுக்கே மற்றொரு பெயராயிருக்க, அதைப் பிரத்தியேகமாக ஒரு ருதுவாகவும் கூறியிருப்பது சில வைத்தியாசார்யர்களுடைய அபிப்பிராயத்தை யனுஸரித்ததாகும்.

2. வாத பித்த கபங்களுக்கு ஸ்தானங்களை விவரமாக 5-வது அத்தியாயத்தில் காண்க; ஒவ்வொரு தோஷமும் அததற்குள்ள முக்கியமான ஸ்தானத்திலேயே விருத்தியடைந்தால் சயம் என்றும், அதற்கும் மேலாக விருத்தியாய் இதர தோஷங்களின் இடத்தையும் வியாபித்தால் பிரகோபம் என்றும், அவ்விதமான நிலைமைகளிலிருந்து குறைந்து தன் ஸ்தானத்தை வந்தடைந்தால் உபசமம் என்றும்

தின் முதலில் எட்டு நாட்களுமாக இப்பதினறு தினங்களும் யம தம்ஷ்ட்ரைகள் [1] எனப்படுமாகையால், அக்காலத்தில் அற்பமாக உண வுகளையுண்டு ஜாக்கிரதையாயிருப்பவரே ஆரோக்கியக்குறைவின்றி ஸுகமாய் வாழ்வர். 24—29½.

ஆஹாராதிகளால் தோஷங்களுக்கு மாறுபாடுகள்:—வாதபித்தகபங்கள், அததற்கு ஏற்ற குணமுள்ள ஆஹாரங்களாலும் செயல்களாலும் அகாலத்திலுங்கூட சய ப்ரகோபங்களைப் பெறக்கூடும்; அவற்றிற்கு எதிரிடையான குணங்களுடன் கூடிய ஆஹாரவிஹாரங்களால் உபசமத்தை அல்லது க்ஷயத்தையடையும். இலகுவும் ரூக்ஷமுமான குணங்களுடையதும் அளவில் மிகக் குறைந்ததுமான உணவாலும், அதிக சைத்தியத்தாலும், ஆயாஸத்தாலும், மாலை நேரத்திலும், காமம், சோகம், பயம், சிந்தை இவைகளாலும், இராத்திரியில் நித்திரையின்மையாலும், அபிகாதத்தாலும், நீந்துவதாலும், சரீர தாதுக்கள் க்ஷீணமடைவதாலும், உணவு ஜீர்ணமான பின்பும் வாயு பிரகோபமடையும்; இவற்றிற்கு நேர் விபரீதகுணமுள்ளவைகளால் அது உபசாந்தியாகும். காரமும் அம்லமுமான இரஸங்களையுடையதும் மிகக் காங்கையுள்ளதும் காந்தலுமான உணவுகளையுண்பது, அதிக உஷ்ணமான இடங்களிலிருப்பது, உஷ்ணத்தை விருத்தியாக்கும் காரியங்களைச்செய்வது, பசி தாஹங்களை அடக்குவது இவற்றாலும், நடுப்பகலிலும், உணவு ஜீர்ணமாகும் தருணத்திலும் பித்தம் பிரகோபிக்கும்; இவற்றிற்கு விபரீத குணங்களால் பித்தம் சாந்தியடையும். மதுரமும் ஸ்நிக்தமும் குளிர்ந்ததுமான ஆஹாரங்களைப் புஜிப்பது, பகலில் நித்திரை செய்வது, பசி மந்தித்தல், காலைநேரம், ஆயாஸமின்றி ஸுகமாயிருப்பது இவைகளாலும், உணவு உட்கொண்ட ஸமயத்திலும் கபம் பிரகோபமாகும்; விபரீத குணங்களால் அது உபசாந்தியடையும். 30—35½.



வழங்கப்படும். சயம் பிரகோபம் இரண்டு நிலைமைகளில் சரீரக் கோளாறும், உபசயத்தில் அக்கோளாறுக்குக் குணமும் உண்டாகும்.

1. யமதம்ஷ்ட்ரை—யமனது கோரப்பல். (அதைப்போல் பயங்கரமானது எனக் கருத்து.)

## மூன்றாவது அத்தியாயம்.

---

### நாடி பரீக்ஷை முதலியது.

**நாடியின் நிலை:**—கரத்தில் பெருவிரலின் அடியில் ஜீவ நிலைமைகளைக் குறிப்பதான யாதொரு தமனியுண்டோ, [1] அதன் அசைவுகளைக் கொண்டு சரீரத்தின் ஆரோக்கிய நிலைமையையும், வியாதியின் கூறுபாட்டையும் பண்டிதர் அறிகின்றனர். 1.

**பலவித நிலைமைகளில் நாடியின் மாறுபாடுகள்:**—நாடியானது, வாயுவின் பிரகோபத்தினால் ஸர்ப்பத்தைப் போலவும் அட்டையைப் போலவும் அசையும். பித்தம் பிரகோபமடைந்தால் களிங்கம், [2] காகம், தவளை இவற்றைப்போல் அசையும். கபம் பிரகோபித்தால் ஹம்ஸம் போலவும் புறாவைப்போலவும் அசையும். ஸந்நிபாதத்தினால் செங்குருவி, தித்திரி, விச்சுள்ளி இப் பறவைகளைப்போல் செல்லும். ஸம்யோகங்களால் சிறிது நேரம் வேகமாகவும் சிறிது நேரம் மந்தமாகவும் நாடி நடக்கும். வாத பித்த கபங்கள் அதற்குற்ற நிலையைவிட்டு இடம் புறண்டசைந்தாலும், நாடி சற்றுநேரம் விட்டு விட்டசைந்தாலும், அதிக க்ஷீணகதியாகவோ சீதமாகவோ இருந்தாலும் உயிருக்கே அபாயம் நேரிடு மென்றறியவும். ஜ்வரம் வந்திருக்கையில் நாடி வெகு உஷ்ணமாகவும் வேகமாகவும் இருக்கும். கோபம் காமம் இவை யுண்டாயிருக்கையில் வேகமாகவும், சிந்தையும் பயமு முண்டானபோது க்ஷீணகதியாகவும், பசி யின்மையிலும் சரீர தாதுக்கள் மெலிவடைந் திருக்கையிலும் மிகவும் மந்தகதியாகவும், ஆமதோஷம் அதிகரித் திருந்தால் நாடியானது இரத்தம் நிறைந்து சிறிது உஷ்ணம் தணிந்து திரண்டிருண்டும், பசிதீபனம் நன்குண்டா யிருப்பவனுக்கு வேகத்துடன் சபலமாகவும், பசி தணிந்து சுகித்திருப்பவனுக்கு வலிவுடன் திடமாகவும் அசையும். 2—8½.

**அசுப ஸ்வப்னங்களும் பரிஹாரங்களும்:**—ஸ்வப்னங்களில் வஸ்

---

1. தமனீ—சுத்த ரத்தமோடும் இரத்தக்குழாய்.
2. களிங்கம் — கள்ளிக் காக்கை யெனப்படுகிறது.

திர மணியாமலும், மொட்டைத் தலையாகவும், சிவப்பு அல்லது கறுப்பான துணியைத் தரித்துக்கொண்டும், அங்கஹீனமாகக் கறுத்து விகாரமாகவும், பாசம் அல்லது ஏதேனும் ஆயுதத்தைக் கையிலேந்திக்கொண்டும், கட்டிப்படித்து வதைத்த வண்ணமும், தென்திசை நோக்கிச் சென்றவாறும், எருமை, ஒட்டை, கழுதை இவற்றிலேறிக்கொண்டுமிருக்கும் ஆண்களேயோ பெண்களேயோ யாதொருவன் காண்கிருனே, அவன் ஆரோக்கியநிலைமை தவறி சீக்ரத்தில் பிணியாளியாய் ஆயுளேயும் இழப்பான். மேலும் எவனொருவன் தான் உயரத்திலிருந்து கீழே விழுவதாகவும், நீரிலோ நெருப்பிலோ மறைவதாகவும், துஷ்ட விலங்குகளால் வதைக்கப் படுவதாகவும், மத்ஸியம் முதலிய வற்ருல் விழுங்கப்படுவதாகவும், நேத்திரங்களும் தீபமும் அவிந்து விடுவதாகவும், தைலத்தையும் கள்ளேயும் குடிப்பதாகவும், இரும்பையோ எள்ளேயோ பெறுவதாகவும், பக்குவமான அன்னத்தைப் புஜிப்பதாகவும், கிணற்றில் அல்லது பாதாளத்தில் விழுவதாகவும் கனவு காண்கிருனே, அவனும் அவசியம் ரோகியாகப் போய் உயிரையும் துறப்பான். இவை முதலிய துஸ்வப்னங்களேக் கண்டவன் அவற்றை வேறெவரிடமும் சொல்லாமலே, காலேயி லெழுந்திருந்து ஸ்நானம் செய்து, பொன், எள், இரும்பு இவற்றை தானம் செய்ய வேண்டும். இஷ்ட தைவங்களே ஸ்தோத்திரம் செய்து தேவாலயத்திலும் வஸிப்பது நலம். இவ்விதமாக மூன்று நாட்கள் செய்தபின் துஸ்வப்னத்தினு லுண்டாகும் தீமைகளினின்றும் அவன் மீட்சி பெறுவான். 9—16.

சுப ஸ்வப்னங்கள் :—ஸ்வப்னங்களில் தேவர்கள், அரசர், மித்திரர்கள், பிராம்மணர்கள், பசு, ஸமித்து, அக்னி, தீர்த்தம் இவைகளேக் காண்பவனும், கலங்கிய ஜலங்களேத் தாண்டுவதாகவும், பகைவரை ஜயிப்பதாகவும், மாடமாளிகையிலும் விருக்ஷத்தின்மீதும் பர்வதத்தின்மேலும் யானையின்பேரிலும் ஏறி யிருப்பதாகவும் பார்ப்பவனும், வெளுத்த புஷ்பங்கள் வஸ்திரங்கள் மாம்ஸம் மத்ஸியம் கனிகள் இவற்றைப் பெறுவதாகக் காண்பவனும் ஆரோக்கியமடைவதுடன் செல்வவாளுகவும் ஆவான். கூடத் தகாதவருடன் கூடுவது, மலத்தைப் பூசிக்கொள்வது, புலம்புவது, இறப்பதுபோல் தோற்றுவது, பக்குவம் பண்ணுத இறைச்சியை யுண்பது, அட்டை வண்டு ஸர்ப்பம்

தேனீ இவைகளால் கடிக்கப்படுவது, இவ்விதமான தோற்றங்கள் ஸ்வப்னத்திலுண்டானால் அவன் ரோகத்தினால் பீடிக்கப்படுபவனாயிருந்தாலும், சீக்ரத்தில் சுகமடைந்து ஆரோக்யமுள்ளவனாய் செல்வத்துடன் வாழ்வான். 17—21.

**தூத பரீக்ஷையும் சகுனமும்:**—ரோகியின் தூதர்கள் தன்னைச் சேர்ந்தவராகவும், திறமையுள்ளவராகவும், நிர்மலமான வஸ்திரங்கள் தரித்தவராகவும், ஆரோக்யமுள்ளவராயும், குதிரை அல்லது விருஷபத்தின் மீதேறிக்கொண்டு வெளுத்த புஷ்பம் கனி இவற்றையுடையவராயும், நல்ல குலத்தில் பிறந்து நன்னடக்கையுள்ளவராகவும், பிராணனுக்காதாரமான வாயு வரும் திசைநோக்கி நிற்பவராகவுமிருந்து 1 வைத்தியரிடம் தகுந்த ஸமயத்தில் சென்றால், அந்த ரோகிகள் சுகம் பெறுவர். ரோகியின் பொருட்டு வைத்தியரை அழைத்து வருவதற்காகச் செல்லும் தூதனுக்கு நற்சகுனமாவது சுபமல்ல; ஆனால் வெகு விரோதமாக இருப்பதுபோல் தோற்றும் க்ரூரமான சகுனமே நன்மை தரும். ரோகிக்கு சிகித்ஸை செய்வதற்காகப் புறப்படும் வைத்தியனுக்கு யாத்திரையில் சுபமான சகுனமே உற்றதாகும். வைத்தியனிடம் சிகித்ஸைக்காகப் புறப்படும் ரோகிக்கோ க்ரூரமாகத் தோற்றும் சகுனத்தையே சுபமாகவும், சுபமாகத் தோற்றுவதையே அபசகுனமாகவும் கருதவேண்டும். 22—25½.

**சிகித்ஸைக்குத் தகுந்த ரோகிகள்:**—அவனவனது சுபாவத்திற்குற்ற பிரக்ருதியென்ன, வர்ணமென்ன இவற்றுடன் கூடியவனும், தகுந்த வலிவுள்ளவனும், இந்த்ரியங்களை யடக்கியாளுந் தன்மையனும், வைத்தியரிடம் பக்தியுள்ளவனுமான ரோகிக்கே வைத்தியன் சிகித்ஸை செய்யவேண்டும். 26—26½.

---

1. 'யஸ்யாம் ப்ராணமருத் வாதி ஸா நாடீ ஜீவஸம்யுதா' என்கிற அரை ச்லோகம் ப்ரகரணத்துக்கு ஸம்பந்தமில்லாமல், எவராலேயோ நடுவில் சேர்க்கப்பட்டதாகத் தோற்றுவதால் இங்கு அதை மொழிபெயர்க்காமல் விடுத்தோம்.

# நான்காம் அத்தியாயம்.

## தீபன பாசனாதி குணங்கள்.

**தீபனம்:**—பசியை உத்தீபனம் செய்யக்கூடியதும், ஆனால் அபக்குவமான உணவை ஜீர்ணமாகத் தகுந்தவாறு பக்குவம் செய்ய வல்லமையற்றதுமான பதார்த்தம் அல்லது குணம் 'தீபனம்' எனப்படும். அதாவது ஜடாமாம்ஸியைப் போன்றது. ½.

**பாசனமும், தீபனபாசனமும்:**—யாதொன்று ஆமமென்னும் அபக்குவமான உணவை நன்கு ஜீர்ணமாகும்படி பக்குவம் செய்யக்கூடியதோ, ஆனால் பசியை உத்தீபனம் செய்ய வல்லமையற்றதாகவுமிருக்கிறதோ அவ்வித பதார்த்தம் அல்லது குணம் 'பாசனம்' எனப்படும். அதாவது நாககேஸரம் போன்றது. மேற்கூறிய இரண்டுவித குணங்களுமுடைய பதார்த்தங்கள் 'தீபனபாசனம்' என்று கூறப்படுமாம். அதாவது சித்திரமூலம் போன்றது. 1½.

**சமனம்:**—ஸமமான நிலைமையிலுள்ள வாத பித்த கபங்களென்னும் தோஷங்களுக்குக் கோளாறுண்டுபண்ணாமலும், பிரகோபமடைந்த தோஷங்களைச் சரீரத்தினின்றும் கழியச் செய்யாமலும், வைஷம்யப்பட்ட தோஷங்களை மட்டும் ஸமநிலைமைக்குக் கொண்டுவரத் தகுந்த பதார்த்தம் அல்லது குணம் 'சமனம்' என்று சொல்லப்படும். அதாவது சீந்திற்கொடி முதலியதாம். 2½.

**அனுலோமனம்:**—எப்பொருளானது குடலிலுள்ள மலங்களைப் பக்குவஞ்செய்து, மலச்சிக்கலைப் போக்கி, அம்மலங்களை ஆஸனவழியினால் தள்ளுகின்றதோ அதை 'அனுலோமனம்' என்று அறிக. அதாவது கடுக்காயைப் போன்றது. 3½.

**ஸ்ரம்ஸனம்:**—பக்குவமாகவேண்டிய மலம் முதலியது குடலில் சிக்கிக்கொண்டிருந்தால் அதைத் தகுந்தவாறு பக்குவம் செய்யாமலே ஆஸனவழியாக வெளியில் தள்ளுங் குணமுடைய பதார்த்தம் அல்லது குணம் 'ஸ்ரம்ஸனம்' எனப்படும். அதாவது சரக்கொன்றை போன்றது. 4½.

**பேதனம்:**—வாதாதி தோஷங்கள் கோளாறடைந்து, அதனால் இறுகிப்போய் குடல்களில் சிக்கிக்கொண்டும், அல்லது சிக்கிக்கொள்

ளாமலுமிருக்கும் எவ்வகையான மலத்தையும் உடைத்துக் கீழ்நோக்கித் தள்ளுங் குணமுடைய பதார்த்தம் 'பேதனம்' எனப்படும். அதாவது கடுகரோகிணியைப் போன்றதாம். 5½.

ரேசனம்:—பக்குவமானதும் பக்குவமாகாததுமான எல்லா மலத்தையும் நன்கு திரவமாகச்செய்து குதமார்கத்தினால் வெளியில் கழித்துவிடுங் குணமுடைய வஸ்துவானது 'ரேசனம்' எனப்படும். அதாவது சிவதை வேரைப்போன்றது. 6½.

வமனம்:—கோளாறடைந்த பித்தத்தையாவது கபத்தையாவது எப்பொருள் பலாத்காரமாய் மேல்நோக்கி வெளிப்படுத்துங் குணமுடையதோ, அது 'வமனம்' என்றறியவும். அதாவது மதனபலம் (மருக்காரை) முதலியதைப் போன்றதாம். 7½.

தேஹ ஸம்சோதனம்:—குடலில் சேர்ந்திருக்கும் மலத்தை அவ்விடத்திலிருந்து மேலாகவும் கீழாகவும் வெளிப்படுத்துங் குணமுடைய பதார்த்தம் 'தேஹ ஸம்சோதனம்' எனப்படும். அதாவது தேவதாரியின் கனி முதலியதைப் போன்றது. 8½.

சேதனம்:—சரீரத்தினுள் தகாத விதமாகப் பற்றிக்கொண்டுள்ள கபாதி தோஷங்களை எந்த வஸ்துவானது தனது சக்தியினால் நன்கு அடியோடு அறுத்து நிவ்ருத்தி செய்யுமோ அது 'சேதனம்' எனப்படும். அவையாவன: யவக்ஷாரம், மிளகு, சிலாஜது, முதலியன. 9½

லேகனம்:—எந்த பதார்த்தம், தேஹத்திலுள்ள தாதுக்களையாவது தோஷங்களையாவது சோஷணம் செய்து அவை யிருக்குமிடங்களினின்றும் கல்லி வெளிப்படுத்துமோ அது 'லேகனம்' என்று கூறப்படும். அவையாவன: தேன், வெந்நீர், வசம்பு, யவதானியம் முதலியன. 10½.

க்ராஹி:—உஷ்ண வீர்யத்தினால் தீபனம் பாசனமென்னும் குணங்களுடன் கூடியதாய், குடலிலுள்ளத் திரவ பதார்த்தங்களுக்கு வறட்சியை யுண்டாக்குவது 'க்ராஹி' என்று சொல்லப்படும். அவையாவன: சுக்கு, ஜீரகம், யானைத் திப்பிலி முதலியவை. 11½.

ஸ்தம்பனம்:—எப்பொருள் வறட்சி, சீதவீர்யம், கஷாய ரஸம், இலகுத்தன்மை இவற்றால் வாதத்தை விருத்தி செய்யுமோ அது

'ஸ்தம்பனம்' எனப்படும். அவையாவன: வெட்பாலை, பெருவாகை, முதலியவற்றைப் போன்றவையாம். 12½.

இரஸாயனம்:—சீக்கிரத்தில் கிழத்தனம் நேரிடாமல் சரீரத்திற்கு வலிமையைக் கொடுத்து, இதர ரோகங்களை யொழிக்கக்கூடிய பதார்த்தம் 'இரஸாயனம்' என்றறிக. அவையாவன: சீந்தில், ருதந்தி யென்னும் அழுகண்ணி, குங்கிலியம், கடுக்காய் முதலியவை. 13½.

வாஜீகரம்.—எந்த வஸ்துவை யுபயோகிப்பதால் ஸ்திரீகளிடம் விருப்பம் அதிகரிக்குமோ அது 'வாஜீகரம்' என்று வழங்கப்படும். அவை பூனைக்காலி, ... இவற்றைப் போன்றவையாம். 14½.

சுக்ரலம்:—எந்த திரவியத்தினால் சுக்ரம் விருத்தி யடையுமோ அது 'சுக்ரலம்' எனப்படும். அவையாவன:—அமுக்கிறாங்கிழங்கு, நிலப்பனங் கிழங்கு, சர்க்கரை, தண்ணீர்விட்டான் கிழங்கு, பால், உளுந்து, சேராங்கொட்டை; இவை சுக்ரத்தை விருத்தி பண்ணுவதுடன், அதை வெளிப்படுத்துங் குணமுமுடையன. 15—16½.

ஆர்த்தவ ஜனகமும், ஸ்தம்பனமும்:—கனிந்த கண்டங்கத்திரிக்காயானது ஸ்திரீகளுக்கு ஆர்த்தவத்தை உண்டுபண்ணி வெளிப்படுத்தும்; ஜாதிக்காய் அதைக் குறைக்கும்; கடுக்காய் சோஷணம் பண்ணிவிடும். 17½.

ஸூக்ஷ்மம்:—தேஹத்திலுள்ள வெகு ஸூக்ஷ்மமான துவாரங்களிலும் ஊடுருவிச் செல்லும் குணமுடைய பதார்த்தம் 'ஸூக்ஷ்மம்' என்று சொல்லப்படும். அவையாவன:—இந்துப்பு, தேன், வேப்பு, ஆமணக்கெண்ணெய் முதலியன. 18½.

வ்யவாயி:—எந்த பதார்த்தத்தை யுபயோகித்தவுடனே அதன் சக்தி உடலெல்லாம் வியாபித்து, அதன் பிறகு அப்பதார்த்தம் ஜீர்ணமாகுமோ, அது 'வ்யவாயி' என்று வழங்கப்படுகிறது. அது கஞ்ஜா, அபினி முதலியவற்றைப் போன்றது. 19½.

விகாஸி:—எது ஸந்தி பந்தங்களை நெகிழச் செய்து, ஓஜஸ் என்னும் வீர்யத்தையும் தாதுக்களிலிருந்து விலக்கி விடுங் குணமுடையதோ, அப்பொருள் 'விகாஸி' எனப்படும். அது பாக்கு, கோத்ரவம் முதலியதைப் போன்றது. 20½.

**மதகாரி:**—எந்த திரவ்யம் புத்தியைப் போக்குந்தன்மையதாக வும், தமோகுணம் மேலிட்டதாகவும் இருக்கின்றதோ, அது 'மதகாரி' எனப்படுகின்றது. அது மத்யம் முதலியதைப் போன்றதாம்; மேலும் வ்யவாயி, விகாஸி, ஸூக்ஷ்மம், சேதனம் என்னும் குணமுடைய வஸ்துக்களும் மதகாரியாக இருக்கின்றன. 21, 22.

**யோகவாஹி:**—ஸர்ப்ப விஷம்போல் மிக உஷ்ணவீர்யமுடையதாய் பிராணனைப்போக்கும் குணமுடைய விஷபதார்த்தம் 'யோகவாஹி' என்று கூறப்படும். 22½.

**ப்ரமாதி:**—எந்தவஸ்து, தன் வீர்யத்தினால் நாடிகளினின்றும் தோஷங்களை அப்புறப்படுத்தும் குணமுடையதோ அது 'ப்ரமாதி' என்று சொல்லப்படும். அவை மிளகு, வசம்பு முதலியதைப்' போன்றதாம். 23½.

**அபிஷ்யந்தி:**—பசையினாலும், குருகுணத்தினாலும் இரஸமென்னும் அன்னப்பசை ஓடுவதற்கான குழாய்களை அடைத்து, சரீரத்திற்குச் செழிப்பை யுண்டாக்கும் குணமுடைய பதார்த்தம், 'அபிஷ்யந்தி' என்று கூறப்படும். அது தயிர் முதலியதைப்போன்றது. 24½.

---

# ஐந்தாம் அத்தியாயம்.

## சாரீரம்—கலை முதலியவற்றின் விவரம்.

**கலை:**—தாதுக்களிலும் ஆசயங்களிலும் தேஹத்தின் சூட்டினால் பரிபக்குவமான நிலைமையில் பசைபோன்ற யாதொரு பதார்த்த முண்டோ அது 'கலை' என்று சொல்லப்படுகிறது. 1.

**தாதுமுதலியவற்றின் எண்ணிக்கைகள்:**— மனிதசரீரத்தில் உள்ளும் புறமுமுள்ள தாது முதலியவற்றின் எண்ணிக்கைகள் முதலில் சுருக்கமாகக் கூறப்படுகின்றன; அவையாவன:—கலைகள் ஏழு, ஆசயங்கள் ஏழு, தாதுக்கள் ஏழு, தாது மலங்கள் ஏழு, உபதாதுக்கள் ஏழு, சர்மங்கள் ஏழு, தோஷங்கள் மூன்று, ஸ்நாயுக்கள் தொள்ளாயிரம், ஸந்திகள் இரண்டாயிரத்துப்பத்து, எலும்புகள் முன்னூறு,

மர்மங்கள் நூற்றேழு, ஸிரைகள் எழுநூறு, இரஸவஹங்களான தமனிகள் இருபத்திநாலு, மாம்ஸபேசிகள் புருடருக்கு ஐந்நூறு, ஸ்திரீகளுக்கு ஐந்நூற்றிருபது, மாம்ஸகண்டரங்கள் பதினாறு; புருடருக்குச் சரீரத்தில் பத்து ஸ்ரோதஸ்ஸுகள்; இவைகளையே விவரமாக இதனடியில் கூறுகிறோம். 2—6.

ஏழு கலைகள்:—மாம்ஸதரா, இரக்ததரா, மேதோதரா, யக்ருத் அல்லது ப்லீஹதரா, அந்த்ரதரா, அக்னிதரா, சுக்ரதரா என்று கலைகள் எழுவிதமாகக் கூறப்பட்டிருக்கின்றன.[1] 7½.

ஏழு ஆசயங்கள்:—மார்புக்குள் கபாசயமும், அதற்குக் கீழ் ஆமாசயமும், நாபிக்குமேல் சிறிது இடது பாகத்தில் அக்னியாசயமும், அதற்கு மேலுள்ள திலமென்னும் பித்தாசயத்திற்குக்[2] கீழ் வாதாசயமும், அதற்கும் கீழ் மலாசயமும், அதன்கீழ் வஸ்தியென்னும் மூத்ராசயமும், மார்புக்குள் ஜீவாதாரமான இரத்தாசயமும் ஆக எழுவிதங்களாக ஆசயங்கள் வகுக்கப்பட்டன. கர்ப்பம் தரிக்கும் அவயவம் கர்ப்பாசயமென்றும், முலைப்பாலுண்டாகும் அவயங்கள் இரண்டும் ஸ்தந்யாசயங்களென்றும், ஸ்த்ரீகளுக்குப் புருடரைவிட மூன்று ஆசயங்கள் அதிகமாய் ஏற்பட்டிருக்கின்றன. 8—11.

ஏழு தாதுக்கள்:—இரஸம்,[3] இரத்தம், மாம்ஸம், மேதஸ்,[4] எலும்பு, மஜ்ஜை,[5] சுக்லம் என்று இவை எழுவகையான தாதுக்கள்

---

1. ஒவ்வொரு தாதுவின் நுண்ணிய அம்சங்களையும் கவசம் போல் மூடியிருக்கும் மிக மெல்லிய சர்மம்போன்ற பசையுள்ள பாகம் கலையென்று கூறப்படுகிறது.

2. கபம் முதலியது உண்டாய் நிலைத்திருப்பதற்கும் உணவு முதலியவை தங்குவதற்கும் ஆதாரமாயுள்ள பாகங்கள் ஆசயங்களெனப்படும். உணவுகள் நன்றாகப் பக்குவமாவதற்கு வேண்டிய பித்தம் அக்னியென்றும், அது தங்குமிடம் அக்னியாசயம் அல்லது பித்தாசயமென்றும் சொல்லப்படும்.

3. உடலில் வெண்மையாகவும் திரவமாகவும் இரத்தமாக மாறக்கூடிய நிலைமையிலுமுள்ள பக்குவமான உணவின் ஸாராம்சம் இரஸமெனப்படும்.

4. மேதஸ்—கொழுப்பு.

5. மஜ்ஜை—எலும்புகளுக்குள் இருக்கும் புரசலான தாது.

எனப்படும். இவையெல்லாம் பாசகமென்னும் பித்தத்தின் காங்கையினால் பக்குவம் பண்ணப்பட்டு ஒன்றிலிருந்தொன்றாய் உற்பத்தியாகின்றன; அதாவது—இரஸத்திலிருந்து இரத்தமும், இரத்தத்திலிருந்து மாம்ஸமும், மாம்ஸத்திலிருந்து மேதஸ்ஸும், மேதஸ்விலிருந்து எலும்பும், எலும்பிலிருந்து மஜ்ஜையும், மஜ்ஜையிலிருந்து சுக்லமும் உண்டாகின்றன. 12, 13.

**ஏழு மலங்கள்**:—(1) நாக்கு, கண், தலையின் உட்பாகம் இவ்விடங்களிலுண்டாகும் திரவபதார்த்தங்கள்: (2) அன்னரஸம் பக்குவமாய் இரத்தமாக மாறும்பொழுது அதற்கு ஒருவித வர்ணத்தை யுண்டுபண்ணும் இரஞ்ஜகம் என்கிற பித்தம்; (3) காதுகளுக்குள் உண்டாகும் குறும்பியென்னும் அழுக்கு: (4) நாக்கு பற்கள் அக்குள் இந்த அவயவங்களிலுண்டாகும் மலம்: (5) நகங்களிலும் நேத்திரங்களிலும் சேரும் அழுக்கு; (6) வாயிலுண்டாகும் ஊத்தை; (7) சரீரத்திலுண்டாகும் கட்டிகள்; இவை முறையே ஏழு தாதுக்களிலிருந்துமுண்டாகும் ஏழு மலங்களாகும். 14, 15.

**ஏழு உபதாதுக்கள்**:—(1) ஸ்திரீகளுக்கு அந்தந்த காலத்தில் உற்பத்தியாய், பின்னர் தானே க்ஷீணிக்கும் ஸ்தந்யம், (2) மாதவிடாயில் வெளியாகும் இரஜஸ் என்கிற திரவம், (3) வஸையென்னும் மாம்ஸங்களிலிருந்துண்டாகும் சுத்தமான ஒருவகைத் தைலம்போன்ற பதார்த்தம், (4) வியர்வை, (5) பற்கள், (6) மயிர்கள், (7) ஓஜஸ் இவை முறையே ஏழு தாதுக்களிலிருந்து உற்பத்தியாவதால் ஏழு உபதாதுக்கள் என்று வழங்கப்படுகின்றன. இவற்றுள் 'ஓஜஸ்' என்னும் உபதாதுவானது சீதவீர்யமாகவும், பசையுள்ளதாகவும், சரீரத்திற்கு வேண்டிய வைரப்பொருளடங்கியதாகவும், ஸௌம்யகுணமுள்ளதாயும் தேஹத்திற்கு வலிவையும் புஷ்டியையும் கொடுக்கக் கூடியதுமான ஓர் அருப்பொருளாகும். 16—18.

**ஏழு சர்மங்கள்**:—மாம்ஸங்களைக் கவர்ந்திருக்கும் 'அவபாஸினீ' என்கிற முதல் சர்மம் ஸித்மம என்கிற தேமலுண்டாவதற்கு ஆதாரமானது. 'லோஹிதா' என்கிற இரண்டாவது சர்மம் திலகாலகமென்னும் ஒருவித பரு உற்பத்தியாவதற்கு ஆதாரமானது. 'ச்வேதா' என்கிற மூன்றாவது சர்மம் சர்மதளமென்கிற படை உண்டாவதற்கு ஆதாரமாகும். நான்காவது 'தாம்ரா' எனப்படுகிறது; அது கிலா

ஸம் ச்வித்ரம் என்கிற வெண்குஷ்டங்களுண்டாகு மிடமாகும். ஐந்தாவது 'வேதநீ' என்றும், எல்லாவித குஷ்டங்களும் உண்டாவதற்கு அதுவே ஆதாரமென்றும் கூறப்படுகிறது. 'ரோஹிணீ' என்கிற ஆறுவது சர்மம் கிரந்தி, கண்டமாலை, அபசியென்னும் புற்றுவியாதி இவைகள் உற்பத்தியாவதற்கு ஆதாரமாகும். ஏழாவது சர்மம் 'ஸ்தூலா' எனப்படுகிறது: வித்ரதி முதலியவை இதை ஆச்ரயித்துண்டாகும். இவ்விதம் ஏழு சர்மங்களும் சேர்ந்து இரண்டு நெல்லளவு கனமுள்ளனவாம்.[1] 19—22

மூன்று தோஷங்கள்:—வாதம், பித்தம், கபம் என்கிற இம்மூன்றும் 'தோஷங்கள்' என்றும், 'தாதுக்கள்' என்றும், 'மலங்கள்' என்றும் வழங்கப்படுகின்றன. தோஷங்களில் ஒவ்வொன்றும் ஐந்துவிதமாகப் பிரிக்கப்படும்; இவைகள் முதலில் விகாரமடைந்தே, பிறகு சரீரமெல்லாம் தூஷிக்கப்படுமாகையால் 'தோஷங்கள்' என்றும், சரீரத்தை எவ்விதத்திலும் தாங்குவதற்கு ஆதாரமாயிருப்பதால் 'தாதுக்கள்' என்றும், மலங்கள் சரீரத்தில் சேருவதற்குக் கோளாறடைந்த இந்த தோஷங்கள் காரணமாயிருப்பதால் 'மலங்கள்' என்றும் மொழியப்படுவதாயறியவும். பித்தம் ஸ்வாதந்த்ரியமில்லாதது; கபமும் ஸ்வாதந்த்ரியமற்றது; அவ்விதமே ஏழு தாதுக்களும் ஸ்வேதம் முதலிய மலங்களும் பராதீனமான செயல்களை யுடையவை; ஆகையால் இவையனைத்தும் வாயுவால் இழுக்கப்படும் மேகம்போல் வாதமென்கிற தோஷத்தினால் எவ்வெவ்விதம் செலுத்தப்படுமோ அவ்விதமெல்லாம் செல்லுந் தன்மையுடையனவாம். 23—25.

---

1. சரீரத்தில் அவ்வவ்விடங்களுக்கு இயற்கையாயுள்ள வர்ணங்களை விளக்கக்கூடியதாயிருப்பதால் 'அவபாஸிநீ' என்றும், நிறத்தில் சிவந்திருப்பதால் 'லோஹிதா' என்றும், அவ்விதமே வெண்மையாயிருப்பது 'ச்வேதா' என்றும், வெண்சிவப்பு கலந்தது 'தாம்ரா' என்றும், பரிசம் முதலியவற்றால் விஷயங்களைப் புத்திக்கு எட்டவைக்கும் சக்தியுள்ளது 'வேதநீ' என்றும், வீக்கங்கொள்வதற்கும் ஆறுவதற்கும் தகுந்ததாயிருப்பதால் 'ரோஹிணீ' என்றும், தடிப்பாக இருப்பதால் 'ஸ்தூலா' என்றும் கிரமமாக பெயர்கள் ஏற்பட்டன. இங்கு 'ஸ்தூலா' என்று சொல்லப்படுவது ஸுச்ருதஸம்ஹிதையில் 'மாம்ஸதரா' என்று கூறப்பட்டிருக்கிறது.

வாயு அல்லது வாதம்:—வாயுவானது, சரீரத்தில் அந்தந்த தாதுக்களும் அவயவங்களும் இதர தோஷம் முதலியவைகளும் செய்ய வேண்டிய அதனதன் காரியங்களை விபஜனைசெய்து ஒழுங்காக நடத்தி அவைகளைத் தூண்டுவதற்கேற்ற ஸ்வதந்திர சக்தி யுடையதாயிருப்பதால், சரீரத்திலடங்கிய தோஷ-தாதுக்களுள் இதுவே வலிவுள்ளதென்று கருதப்படுகிறது. இது தமோகுணமயமாகவும், ஸூக்ஷ்மமாகவும், சீதவீர்ய முடையதாகவும், வறட்சி யுண்டுபண்ணும் தன்மையதாகவும், இலகுவாகவும், அசையக்கூடிய குணமுள்ளதாகவும் அமைந்துளது. அபானம், ஸமானம், பிராணம், உதானம், வியானம் என்று இவ்வாதம் ஐந்து வகையானது; இவற்றுள் அபானம் என்கிற வாயுவுக்குக் குடலுக்குள் மலாசயமென்னும்[1] பாகமும், ஸமானத்திற்கு பக்வாசயமும், பிராணவாயுவுக்கு இருதயமும், உதானவாதத்திற்குக் கண்டமும், வியானவாதத்திற்கு ஸர்வசரீரமும் முக்கிய ஸ்தானங்களாகக் கூறப்படுகின்றன. 26—28.

பித்தம்:—பித்தமானது உஷ்ணவீர்யம், திரவத்தன்மை, மஞ்சள் அல்லது இலைப்பசுமை நிறம், இராஜோகுணம், கசப்பும் காரமுமான இரஸம் இத்தன்மைகளுடையதும், எரிக்கப்பட்டபின் புளிப்பு ரஸத்தைப் பெறக்கூடியதுமாயிருக்கின்றது. குடலில் பக்வாசயமென்கிற இடத்திற்கருகில்[2] உணவுகளைப் பக்குவம் செய்யக்கூடியதான எள்ளிலையைப்போன்ற திலமென்கிற பித்தாசயத்திலடங்கிய பித்தமானது 'பாசகம்' என்றும், லேபனமென்னும் பூச்சுகளையும் அப்யங்கத்தி லுபயோகிக்கப்படும் தைலம் முதலியவற்றையும் பக்குவம் செய்யவல்லதும், தோலுக்கு ஒருவித காந்தியை யுண்டுபண்ணக் கூடியதுமான பித்தமானது 'ப்ராஜகம்' என்றும், யக்ருத் என்னும் கல்லீரலுக்குள் உண்டாவதும், அன்னரஸத்திற்கு ஒருவித நிறத்தைக் கொடுத்து இரத்தமாகச் செய்யத் தகுந்ததுமான பித்தம் 'ரஞ்ஜகம்' என்றும்; இரண்டு நேத்திரங்களுக்கும் ரூபங்களைப் பார்க்கக்கூடிய

1. மலாசயம்—உணவின் கழிவுப்பொருட்கள் சேர்ந்திருக்கும் குதத்திற்கு மேலுள்ள குடலின் ஒரு பாகம்.

2. உணவுகள் பித்தம் முதலியவைகளுடன் கூடி ஜீர்ணமாகுமிடமான சிறுகுடலைச் சேர்ந்த ஓர் பாகம் 'பக்வாசயம்' எனப்படும்.

சக்தியைக் கொடுக்கும் பித்தம் 'ஆலோசகம்' என்றும், அறிவையும், விசேஷமான புத்தியையும் உண்டாக்கக்கூடியதாய் இருதயத்திலிருக்கும் ஒருவித பித்தம் 'ஸாதகம்' என்றும், ஆக பித்தம் ஐந்து விதமாகப் பகுக்கப்படுகின்றது. 29—32½.

**கபம் அல்லது சிலேஷ்மம்;**—கபம், குளுகுளுப்பானது, பாரமுள்ளது, வெண்மையானது, பசையுள்ளது, சைத்யமுடையது, ஸத்வகுணம் மேலிட்டது, இயற்கையில் மதுரரஸமுள்ளது, தஹிக்கப்பட்டால் லவணரஸமுடையது. இதில் 'க்லேதகம்' என்கிற கபம் ஆமாசயமென்னும் இரைப்பையிலும், 'ஸ்நேஹநம்' என்பது சிரஸ்ஸிலும், 'ரஸநம்' என்பது கண்டத்திலும், 'அவலம்பகம்' என்பது இருதயத்திலும், 'ச்லேஷகம்' என்பது ஸந்திகளிலும் இருந்துகொண்டு, தேஹத்திற்கு வன்மையையும் எல்லா அவயவங்களுக்கும் திறமையையும் உண்டுபண்ணும். 33—35½.

**ஸ்நாயு, ஸந்தி, எலும்பு:**—தேஹத்தில் மாம்ஸம், எலும்பு, மேதஸ் இவைகளை ஒன்றோடொன்று பிணைத்துக் கட்டுவதற்குப யோகமான பந்தனவஸ்து 'ஸ்நாயு' என்றும், தனித்தனி அவயவங்கள் ஒன்றோடொன்று சிலேஷ்ம வஸ்துவுடன் சேர்ந்து கட்டுண்டிருக்கும் சரீரபாகங்கள் 'ஸந்திகள்' என்றும் சொல்லப்படுகின்றன. சரீரத்திலுள்ள இதர தாதுக்களெல்லாவற்றிற்கும் ஆதாரமாய் தேஹம் திடமாய் நிற்பதற்கு 'எலும்புகள்' உபயோகமாயிருக்கின்றன. 36, 37.

**மர்மம், ஸிரை, தமனீ, மாம்ஸபேசீ முதலியவை:**—பெரும்பாலும் ஜீவாதாரமான ஸ்தானங்கள் 'மர்மங்கள்' என்று முனிவர்கள் கண்டறிந்து மொழிந்திருக்கின்றனர். ஸந்திகளை பந்தனம் செய்யும் நார்கள் 'ஸ்நாயுக்கள்' என்றும்,[1] வாத பித்த கபங்களென்னும் தோஷங்கள் அல்லது தாதுக்கள் ஓடுவதற்கேற்ற நாடிகள் 'ஸிரைகள்' என்றும் வழங்கப்படுகின்றன.[2] இரஸமென்கிற தாதுவையும்

---

1. ஸ்நாயு—மாம்ஸபேசிகளை எலும்புகளுடன் சேர்த்துப் பிணைப்பதற்குபயோகமான வன்மையும் வெண்மை நிறமுமுள்ள நார்; இதை ஆங்கிலத்தில் டெண்டன் (Tendon) என்பார்கள்.

2. ஸிரைகள்—தாதுக்களிலிருந்து (தோஷங்கள்) கழிவுப்

விசேஷமாய் வாயுவையும் தேஹமெங்கும் வேகத்துடன் பரவச்செய்யும் குழல்கள் 'தமனிகள்' எனப்படும்.[1] பிராணிகளின் அவயவங்களுக்கு வன்மையையும் வேலைகளைச் செய்வதற்கு நல்ல பிடிமானத்தையும் தருவதற்கேற்ற தாதுக்களை "மாம்ஸபேசிகள்" என்பார்கள்.[2] அவயவங்களை வேண்டிய விதமாக நீட்டவும் சுருக்கவும் உபயோகமாகும்படி ஒருமிக்கச் சேர்ந்த மாம்ஸபேசிகளின் நார்கள் 'கண்டரங்கள்' என்று கூறப்படுகின்றன. மூக்கு, நேத்திரங்கள், காதுகள் இவற்றின் இரண்டிரண்டு த்வாரங்களும், மேஹநம் அல்லது யோனி, அபாநதேசம், முகம் இவற்றின் ஒவ்வொரு த்வாரமும், சிரஸ்ஸில் ஒரு த்வாரமும், ஸ்த்ரீகளுக்கு விசேஷமாக ஸ்தனங்களில் இரண்டும், கருப்பையின் வழியில் மற்றொன்றும் ஆக இப்பதின்மூன்று த்வாரங்களும் 'ஸ்ரோதஸ்ஸுகள்' என்று சொல்லப்படுகின்றன. பிராணிகளுக்குச் சரீரத்தில் நுண்ணிய வேறு த்வாரங்களும் அளவிறந்தவையுண்டு. 39—42.

**புப்புஸம், ப்லீஹம், யக்ருத்:**—'புப்புஸம்' என்கிற அவயவம் உதானவாயுவுக்கு ஆதாரமாய், மார்பின் உட்புறத்தில் இடதுபுறமாயமைந்திருக்கின்றது.[3] இரத்தம் ஓடுவதற்கு ஆதாரமான விரைகளென்னும் நாளங்களுக்கு ஒருவாறு மூலமாயிருக்கும் 'ப்லீஹம்' என்கிற அவயவம் வயிற்றினுள் இடது பக்கத்தில் இணைக்கப்பட்டிருக்கிறது.[4] வயிற்றினுள் வலது பாரிசத்தில் அமைந்துள்ள 'யக்ருத்'

---

பொருட்கள் வெளிப்பட்டு ஓடுவதற்கேற்ற குழாய்கள் விரைகள்; இக்குழாய்களே ஆங்கிலத்தில் வைன்கள் (veins) எனப்படும்.

1. தமனிகள்—சுத்தரத்தம் ஓடும் ஆர்டரீ (Artery) என்கிற இரத்தக்குழாய்கள்

2. மாம்ஸபேசிகள்—தசைநார்கள்.

3. புப்புஸம் என்பதே ச்வாஸாசயம் என்று சொல்லப்படும்; மார்பினுள் இடது புறத்திலிருக்கும் ச்வாஸாசயம் புப்புஸமென்றும், வலது புறத்திலிருப்பது உண்டுகமென்றும் சில கிரந்தங்கள் கூறுகின்றன. ஆனால் ச்வாஸாசயம் (Lungs-லங்ஸ்) இரண்டென்றும் இரண்டுக்கும் புப்புஸமென்றே பெயரென்றும் விவஹரிப்பது பொருந்தும்.

4. ப்லீஹத்தில் அநேகம் இரத்தக்குழாய்கள் பரவியிருப்பதுடன், அதில் இரத்தத்திலுள்ள செங்குறுகடங்கள் விசேஷமாய்

அல்லது கல்லீரல் என்ற அவயவம் இரஞ்ஜகமென்னும் பசுமைநிற முண்டாக்கக்கூடிய பித்தத்தை யுண்டாக்கும். முதலில் இரத்தம் ஊடுருவிச் செல்லுவதற்கும் ஆதாரமாயுள்ளது.[1] 43, 44.

திலம், வ்ருக்கம், பீஜம், ஹ்ருதயம்:—வயிற்றுக்குள் நீருருவங் கொண்ட ஒருவித திரவம் ஓடுவதற்கான நாளங்களுக்கு மூலமாகவும், நீர் வேட்கையைத் தணிக்கக் கூடியதுமான அவயவம் 'திலம்' என்றும், [2]'வ்ருக்கங்கள்' என்கிற இரண்டு கிரந்திகள் வயிற்றினடியில் மேதஸ் என்னும் கொழுப்பைப் போஷித்து நிரப்புவதற்காக அமைந்திருக்கின்றனவென்றும் கூறப்படுகின்றது.[3] வ்ருஷணங்கள் அல்லது 'பீஜங்கள்' என்கிற இரண்டு கிரந்திகள் வீர்யவாஹீ யென்கிற சுக்லம் ஓடுவதற்கேற்ற நாளக் குழல்களுக்கும், சுக்லமுண்டாவதற்கும், புருஷத்தன்மைக்கான சக்தியை உண்டாக்குவதற்கும் ஆதாரமானவை. சுக்லமும் மூத்திரமும் வெளிவருவதற்கு வழியாகவும் கர்ப்பத்தை யுண்டாக்கும் உபகரணமாகவும் ஏற்பட்டிருக்கும் அவயவம் லிங்கமென்று கூறப்படுகிறது. 'இருதயமானது' சைதன்யமென்கிற உணர்ச்சிக்கு ஒருவித ஸ்தானமென்றும், ஓஜஸ் என்னும் தாதுவுக்கு ஆச்ரயமானதென்றும் கருதப்படுகிறது.[4] 45—46½.

---

உற்பத்தியாவதும் அழிவதுமாயிருப்பதைக் கருதி, அதை முற்காலத்தில் இரத்த நாளங்களுக்கு மூலஸ்தானமென்று கருதினர்போலும்.

1. இரத்தம் ஊடுருவிச் செல்லுவதற்கு ஆதாரமாயுள்ளதென்று கூறுவதால், குடலிலிருந்து அன்னரஸத்தை கிரஹித்துக்கொண்டு யக்ருத்கண்டத்திலுள் நுழைந்துபோகும் ஒருவித முக்கிய இரத்தக் குழாய் (Portal Veine) குறிக்கப்படுகிறதென்க.

2. 'திலம்' என்பதை சிலர் பித்தாசயம் அல்லது பித்தப்பை (gall bladder) என்று கூறுகின்றனர். சார்ங்கதரனுடைய கொள்கைப்படி எள்ளிலைபோல் நீண்டிருக்கும் க்லோமா அல்லது கணையமே திலம் (Pancreas) எனத் தெரியவருகிறது.

3. 'வ்ருக்கங்கள்' மூத்திரக் குண்டிக்காய்களென்று (Kidneys) வழங்கப்படுகின்றன. ஆனால் இவை மூத்திரத்தை யுண்டுபண்ணுபவைகளேயன்றி மேதஸ்ஸை உண்டாக்குபவையல்ல.

4. இருதயமானது இரத்தக்குழாய்களுக்கெல்லாம் நாபிஸ்தானம் போலிருந்துகொண்டு இரத்தத்தை உடல்முடிய எப்பொழுதும்

**ஸிரை முதலியவற்றால் சரீரம் போஷிக்கப்படும் வகை:**—ஸிரைகளும் தமனிகளும் நாபியிலிருந்து கிளம்பி, சரீரத்திலெங்கும் வியாபிக்கின்றன. அந்த ஸிரை முதலியவை, வாயுவினால் தூண்டப்பட்டு, அந்தந்த அவயவங்களுக்கு வேண்டிய தாதுப்பொருட்களை யீன்றுக் கொடுத்து எப்பொழுதும் சரீரத்தைப் போஷிப்பிக்கும் இயல்புடையன. [1] நாபியில் வந்து சேரும் பிராணவாயுவானது இருதயகமலத்தின் இடையிலுள்ள பாகத்தைப் பரிசித்து, பிறகு ஆகாயத்திலுள்ள அமுதமெனத் தகும் சுத்தவாயுவைச் சரீரம் உட்கொள்வதற்காக, உள்ளடங்கிய வாயுவானது கண்டத்தை விட்டு வெளி வருகின்றது; அவ்விதம் ஆகாயத்திலுள்ள அமிருதவாயுவானது உச்சுவாஸரூபமாய் உறிஞ்சப்பட்டு வேகமாக உட்செல்லுகின்றது. இவ்விதவாயுவே தேஹமனைத்தையும் செழிக்கச்செய்து, ஜாடராக்னியையும் விருத்தி செய்கின்றது. 47—49½.

**ஆயுளும் இறப்பும்:**—சரீரத்திற்கும் முற்கூறிய பிராணவாயு முதலியவற்றிற்கும் பரஸ்பரமுண்டான சேர்க்கையினால் ஆயுள் ஏற்படுகிறதென்றும், காலக்கிரமத்தில் அவைகளுக்குண்டான ஸம்பந்தம் விலக அவை வெவ்வேறாகப் பிரிந்து விடுவதாலேயே மரணமென்பது உண்டாகிறதென்றும் அறிஞர் கூறுகின்றனர். பூமியில் எங்கும் என்றைக்கும் மரிக்காமலே ஜீவித்திருக்கக் கூடியதான பிராணி ஒன்றுமே கிடையாது. ஆகையால் மரணம் தடுக்கக்கூடாதது. என்றாலும், சரீரத்திற்கு ரோகங்களை மட்டும் வரவிடாமல் இயன்றவளவு தடுக்கவேண்டும். 50—51½.

**வியாதிகளை விலக்குதல்:**—மரணமென்பது எவராலும் தடுக்க முடியாதது; ஆகிலும் பிணிகளைமட்டும் தடுப்பது அவசியம். வியாதி நேர்ந்திருக்கையில் அதற்குப் பரிஹாரம் செய்யாமலிருந்தால், சிகித்ஸையினால் நிவ்ருத்திக்கக்கூடிய ரோகங்களும் சிகித்ஸைக்கு வசப்

---

பரவச் செய்கிறது; ஆனால் உணர்ச்சிக்கு இது முக்கிய ஆதாரமென்கிற விஷயம் யோசிக்கக்கூடியது.

1. இங்கு நாபி யென்று சொல்லப்படுவது தொப்புளல்ல; இரத்தக்குழாய் முதலியவைகளுக்கு மூலஸ்தானமான இடமே நாபியென்று சொல்லப்படுவதாய் அறிக. நாபியென்றால் மூலம் எனப் பொருள்.

டமாயும் 'யாப்யம்' என்ற நிலைமையை யடைந்துவிடும். யாப்யமா யிருக்கும் ரோகம் அஸாத்யமாகவும், அவ்விதமே அஸாத்யமான ரோகம் சீக்கிரத்தில் பிராணஹாரமாகவும் [1] ஏற்படும். ஆகையால், கர்மவிபாகங்களை [2] சந்தித்து ஒவ்வொரு மனிதனும் பிணிகள் அணுகவொட்டாமல் சரீரத்தை இரக்ஷித்து வரவேண்டும். ஏனெ னில் அறம் பொருள் இன்பம் வீடு என்கிற நான்குவித புருஷார்த் தங்களுக்கும் உடலே முதற் கருவியாகிறது. 52—53½.

**ரோகாரோக்கியங்களின் காரணம்:**—தாதுக்கள், மலங்கள், தோஷங்கள் இவை வைஷம்ய மடைந்தால் சரீரத்திற்கு அழிவை யுண்டுபண்ணும்; அவை இயற்கைத் தன்மையில் குறித்த அளவி லே இருந்து வந்தால் சரீரத்திற்கு வலிமையும் விருத்தியையும் இன்பத் தையும் அளிக்குமென்று அறிக. 54½.

## ஸ்ருஷ்டி கிரமம்

**மூலப் பிரக்ருதி முதலியது:**—உலகத்திற்கு முதற்காரணமாயிருப் பவனும், விருப்பு வெறுப்புகளொழிந்தவனும், ஞானந்தைக ஸ்வ ரூபியுமான பரமபுருஷனது அதீனத்தில், சூரியனுக்குப் பிரதிச்சாயை யைப்போல் 'மூலப்பிரக்ருதி' என்று ஒன்றுண்டு. இந்தப் பிரக்ருதி யானது ஜடம் அசேதனமாயிருந்தாலும், பரமாத்மாவுக்குள்ள சைதன்

---

1. ஸாத்யம், கஷ்ட ஸாத்யம், யாப்யம், அஸாத்யம் என்று வியாதிகள் நான்கு விதம். (1) சிகித்ஸையினால் எளிதில் பரிஹரிக் கக்கூடிய ரோகம் ஸாத்யம். (2) விசேஷமான சிகித்ஸைகளால் வெகு கஷ்டப்பட்டு நிவ்ருத்தி செய்யக்கூடியது கஷ்ட ஸாத்யம். (3) சிகித்ஸை செய்தும் ரோகம் நிச்சேஷமாக சாந்தியடையாமல் சிகித்ஸாபலத்தினால் சீக்கிரம் மரணம் நேரிடாமல் காலங்கழித்து வரக்கூடிய ரோகம் யாப்யம். (4) எவ்வித சிகித்ஸையினாலும் சிறி தும் நிவ்ருத்திக்க முடியாதது அஸாத்யரோகம் எனப்படும்.

2. பூர்வஜன்மத்திற் செய்த கர்மங்களுக்குத் தகுந்த விதமே இந்த ஜன்மத்தில் ரோகங்கள் உண்டாகுமென்று கர்மவிபாகம் என் கிற சாஸ்திரம் கூறுகின்றது. எவ்வெவ்வித கர்மங்களால் எவ்வெவ் வித ரோகங்கள் உண்டாகக் கூடுமென்று ஸம்ஸ்கிருதத்திலுள்ள 'வீர ஸிம்ஹாவலோகம்' முதலிய கர்மவிபாக கிரந்தங்களில் விவரங்கள் கூறப்பட்டன.

யத்தின் ஸம்பந்தத்தினால், ஒருவித நாடகம்போல் அநித்தியமான இவ்வுலக மனைத்தையும் படைத்தது. ஸர்வஜகத் காரணமான இந்தப் பிரக்ருதியானது இச்சாமயமானதும் மஹத்தென்னும் மற்றொரு பெயருள்ளதுமான 'புத்தி' யென்னும் தத்துவத்தை முதலில் உண்டாக்கிற்று. இந்த புத்தியிலிருந்து 'அஹங்காரம்' என்னும் தத்துவம் பிறகு உண்டாயிற்று. பின்னர், இது ஸாத்விகாஹங்காரம், இராஜஸாஹங்காரம், தாமஸாஹங்காரம் என்று மூன்று விதமாகப் பிரிந்தது. 55—58.

**ஏகாதசேந்த்ரியங்கள்:**—ஸாத்விக - ராஜஸாஹங் காரங்களின் சேர்க்கையினால் பதினொரு இந்திரியங்கள் உண்டாயின. அவற்றுள் செவி, சர்மம், நேத்திரம், நாக்கு, நாசி என்னும் இவ்வைந்தும் ஞானேந்த்ரியங்களென்றும், வாக்கு, கரம், பாதம், உபஸ்தம், குதம் என்கிற இவ்வைந்தும் கர்மேந்திரியங்களென்றும், மனமென்னும் பதினோராவது இந்திரியமானது இருவிதமான தன்மையு முள்ளதென்றும் வழங்கப்படும். 59—60½.

**பஞ்ச தன் மாத்ரைகள்:**—பிறகு, ஸாத்விக தாமஸாஹங்காரங்களின் சேர்க்கையினால் தன் மாத்ரைகள் என்னும் ஐந்துவித தத்துவங்கள் உண்டாயின. அவையாவன:—சப்த தன் மாத்திரை, ஸ்பர்ச தன் மாத்ரை, ரூப தன்மாத்ரை, இரஸ தன் மாத்ரை, கந்த தன் மாத்ரை என்பவைகளே. 61—62½.

**பஞ்சபூதங்கள் முதலியவை:**—இந்த பஞ்சத தன்மாத்ரைகளிலிருந்து முறையே ஆகாசம், வாயு, அக்னி, ஜலம், ப்ருதிவீ என்று ஐந்து பூதங்கள் உண்டாயின. ஸ்தூல ஸ்வரூபமான இந்த ஐந்து பூதங்களுடையவும் இயற்கைக் குணங்களான சப்தம், ஸ்பர்சம், ரூபம், இரஸம், கந்தம் என்கிற இவ்வைந்தும் பஞ்ச தன் மாத்ரைகளின் 'விசேஷங்கள்' எனப்படுகின்றன. சப்தம் முதலிய இந்த ஐந்து 'விசேஷங்களையும்' ஐந்து ஞானேந்த்ரியங்களுக்கு ஸம்பந்தமான ஐந்து 'விஷயங்கள்' என்றும் வழங்குவர். வாக்கு, கரம், பாதம், உபஸ்தம், குதம் என்கிற இந்த ஐந்து கர்மேந்த்ரியங்களுக்கும் முறையே பேசுதல், கிரஹித்தல், ஸஞ்சரித்தல், இன்பமனுபவித்தல், மலவிஸர்

ஜனம் செய்தல் என்று ஏற்பட்டுள்ள ஐந்து கர்மங்கள் அவற்றின் 'விஷயங்கள்' எனப்படும். 63—66.

**இருபத்தினாலு தத்துவங்கள்:**—ஈச்வரனை ஆச்ரயித்திருக்கும் மூலப்பிரக்ருதிக்கு பிரதானம், பிரக்ருதி, சக்தி, அவிக்ருதி என்று வேறு பெயர்களுமுண்டு, மஹத் அல்லது புத்தி, அஹங்காரம், பஞ்சதன்மாத்ரைகள் இவ்வேழு தத்துவங்களும் தனித்தனியே ஒரு வகையில் பிரக்ருதிகளாகவும், மற்றொரு வகையில் விக்ருதிகளாகவும் தோற்றுவதால், இவை 'பிரக்ருதி விக்ருதிகள்' என்று மொழியப்படுகின்றன. பதினேரிந்த்ரியங்களும், பஞ்சமஹா பூதங்களும் ஆக இப்பதினாறு தத்துவங்களும் 'விக்ருதிகள்' அல்லது 'விகாரங்கள்' எனப்படும். ஆக மூலப்பிரக்ருதி ஒன்று, பிரக்ருதி விக்ருதிகள் ஏழு, விக்ருதிகள் பதினாறு; இவை யெல்லாம் சேர்ந்து இருபத்தினாலு தத்துவங்களென்றும், உலகமனைத்திலும் வியாபித்திருப்பவை இவைகளேயென்றும் அறிஞர் கூறுகின்றனர். 67—69.

**ஜீவாத்மாவும் அதன் நிலைமையும்:**—எப்பொழுதும் அழிவில்லா நித்தியபுருஷனை ஜீவாத்மாவானவன், இவ்வாறு இருபத்தினன்கு தத்துவங்களாலாகிய சரீரமென்னும் கிருஹத்தினுள், மனதாகும் தனது தூதனுடன் சேர்ந்து வாஸம் செய்துவருகிறான். ஆதலால், இந்த ஜீவாத்மாவே நல்வினை தீவினைகள், இன்ப துன்பங்கள் முதலியவற்றால் சூழப்பட்டும், மனதாலும் கர்மங்களென்னும் மாயக் கயிறுகளாலும் கட்டப்பட்டுமிருக்கிற சரீரியென்றும் வழங்கப்படுகிறான். காமம், சினம், லோபம், மோஹம், அஹங்காரம், புத்தி அல்லது மஹத், பத்து இந்த்ரியங்கள் இவைகளெல்லாம் சரீரியென்கிற ஜீவாத்மாவைக் கட்டும் கருவிகளா யேற்பட்டிருக்கின்றன. இந்த ஜீவாத்மா அஞ்ஞானத்தினால் பந்தனத்தையும் சரீரத்திலிருந்தவாறே தனது ஸ்வரூபத்தையறியும் ஞானத்தைப் பெறுவதால் மோக்ஷத்தையுமடைகிறான். இவ்விதம் கட்டுண்டிருக்கையில் ஜீவாத்மாவுக்கும் சரீரத்திற்கும் துன்பங்களை ரோகமே விளைவிக்கின்றது. ஆரோக்யம் அவற்றின் இன்பத்திற்குக் காரணமாகும்.

# ஆறுவது அத்தியாயம்.

## உணவு உட்செல்லும் வகை முதலியது.

**ஆஹாரம் உட்சென்று ஜீர்ணமாவது:**—உணவு முதலில் பிராண வாயுவினால் தள்ளப்பட்டு 'ஆமாசயம்' என்னும் இரைப்பையில் விழுந்து, அது அறுசுவையுடையதாயிருந்தாலும், முதலில் மதுரரஸமாக மாறி, நுரைத்துத் திரவத்தன்மையையும் பெறுகின்றது. பிறகு, அன்னத்தைப் பக்குவம் செய்யும் 'பாசகம்' என்கிற பித்தத்தினால் சமைக்கப்பட்டு, அம்லரஸமாக மாறுபாடடையும். பக்வாசயத்திற்கும் ஆமாசயத்திற்கும் இடையிலிருப்பதும், பித்ததராவென்கிற ஆறுவது கலையாகக் கூறப்படுவதுமான 'கிரஹணீ' என்கிற இடத்தில்[1] அவ்வுணவு விழுகின்றது. குடலிலுள்ள 'ஜாடராக்னி' என்னும் ஒருவித பித்தத்தினால் அன்னம் பக்குவம் செய்யப்பட்டு, கடுரஸமாய் மாறுகிறது. இவ்விதம் உணவு கிரமமாகப் பக்குவமாய் வந்தால் 'இரஸம்' என்னும் ஒருவகை திரவமாகவும், பக்குவமாகாமற்போனால் 'ஆமம்' என்கிற ஒருவித தோஷமாகவும் பரிணமிக்கும். அங்குள்ள ஜாடராக்னியின் பலத்தினால் மறுபடியும் அந்த இரஸம் இனிய சுவையுள்ளதாகவும் அதிக எண்ணெய்ப் பசையுடையதாகவும் ஆய்விடும். நன்றாகக் குடலில் பக்குவமான உணவின் இரஸமானது அமுதத்திற்கு ஒப்பிடக்கூடியதாய் அகில தாதுக்களையும் போஷித்துவரும். ஜாடராக்னி மந்தமாயிருந்து உணவு தகுந்தவாறு பக்குவமாகாமற்போனால், அதன் இரஸம் கடுவும் அம்லமுமான இரஸத்தைப் பெற்று, விஷத்தன்மையையுமடைந்து, பலவித பிணிகளையும் உண்டாக்கும். 1—6.

---

1. சிறுகுடலும், ஆமாசயம் என்கிற இரைப்பையும் ஸந்திக்கும் இடத்திலுள்ள கபாடம்போன்ற பாகம் 'கிரஹணீ' எனப்படும். அதற்கு ஆங்கிலத்தில் பைலோரிக் வால்வ் (Pyloric valve) என்று பெயர். குடலில் பக்குவமாவதற்குத் தகுந்தவாறு உணவெல்லாம் ஒருவித திரவமாகும் வரையில் அதைச் சிறுகுடலிற் போகவிடாமல் கிரஹித்து வைத்திருப்பதால் 'கிரஹணீ' என்று பெயர் வந்தது. இவ்விடம் கெட்டுப்போவதால் உண்டாகும் ஒருவித அஜீர்ணபேதியும் 'கிரஹணீ' என்று வழங்கப்படும்.

**மலங்கள்:**—இவ்வாறு நன்கு ஜீர்ணமான உணவின் ஸாராம்சம் 'இரஸம்' ஆகவும், நிஸ்ஸாரமான கழிவுப் பொருளானது 'மலம்' என்பதாகவும், சில திரவமான கழிவுகளாகவும் மாறிவிடுகின்றன. அந்த நீர்மயமான கழிவுப்பொருள் விரைகளென்கிற காரி ரத்தக் குழாய்களின் மூலமாய் மூத்திராசயத்தையடைந்து மூத்திரமாக மாறி வெளிவருகின்றது. உணவின் திப்பியான மலமானது பக்வாசயத்திற்கு அடியில் வந்து சேர்ந்திருக்கும். அது, அதற்குக் கீழே குதத்துவாரத்தில் அமைந்துள்ள மூன்று வலயங்களைப்போன்ற 'வலிகள்' என்று சொல்லப்படும் அவயவங்களால் வெளிப்படுத்தப்படுகின்றது; அவற்றுள் மேலுள்ள வலயமானது 'பிரவாஹிணீ' என்றும், மத்தியிலுள்ளது 'ஸர்ஜநீ' என்றும், இறுதியிலிருப்பது 'கிராஹிகா' என்றும்[1] கூறப்படும். 7—8½.

**இரஸம் இரத்தமாக மாறுதல்:**—உணவுகளின் ஸாராம்சமான இரஸம் என்கிற தாதுவானது முதலில் ஸமானவாயுவினால் தள்ளப்பட்டு இருதயத்தை அடைகின்றது. பிறகு, அந்த இரஸம் இரஞ்ஜகம் என்கிற பித்தத்தினால் செந்நிறமடைந்து நல்ல இரத்தமாகப் பக்குவமாய்விடுகிறது. இரத்தமானது சரீரமெங்கும் வியாபித்து ஜீவனுக்கு உத்தமமான ஆதாரமாகவும் ஆகிறது. இரத்தம் சுபாவத்தில் குரு குணமுடையதாகவும், பசையுள்ளதாகவும், இடைவிடாது அசைந்தோடும் தன்மையதாகவும், சிறிது இனிய சுவையுடன் கூடியதாகவும் இருக்கும். ஏதேனும் காரணத்தினால் முறிவு பெறுமானால் பித்தம் போல் பசுமை நிறங்கொள்ளும். 9—10½.

**தாதுக்களின் பரிணாமம்:**—இரஸம் முதலிய தாதுக்கள் பாசக பித்தத்தினால் பக்குவம் செய்யப்பட்டு, முற்கூறியபடி முறையே ஒரு தாது மற்றொரு தாதுவாக மாறி, ஒரு மாஸத்தில் சுக்லமாக ஆய்விடு

---

1. குதம் என்கிற மலத்துவாரத்தில் மூன்றுவிதமான தசைநார்களால் மூன்றுவித வலயங்கள் அல்லது வலிகள் ஏற்பட்டிருக்கின்றன; இவற்றுள் மலத்தை அழுத்தித் தள்ளுவது 'பிரவாஹிணீ' என்றும், அதை மெல்ல நெகிழச்செய்வது 'ஸர்ஜநீ' என்றும், மேலிருந்து வரும் மலத்தைத் தாங்கிக்கொள்வது 'கிராஹிகா' என்றும் கூறப்படுகின்றன. இம்மூன்று வகையான தசைநார்களால் குதம் என்னும் அவயவம் ஆக்கப்பட்டிருக்கிறது.

கின்றன; ஸ்த்ரீகளுக்கும் அவை இவ்விதமே திரிபடைந்து, கடைசி யில் இரஜஸ் என்கிற தாதுவாக மாறுகின்றன. ஆண் பெண்கள் இரு பாலரும் காதலதிகரித்துப் புணருங்கால், அவர்களுடைய தோஷ மற்ற சுக்லமும் இரஜஸ்ஸும் ஒன்றோடொன்று கலந்தால், ஸ்த்ரீ யின் கருப்பையில் கர்ப்பம் ஆவிர்ப்பவித்து காலக்கிரமத்தில் சிசுவாக வெளிவருகின்றது. இதில், ஸ்த்ரீயினுடைய இரஜஸ் அதிகமாயிருந் தால் பெண் சிசுவும், சுக்லம் அதிகமானால் ஆண் சிசுவும், இரண்டும் ஒரே அளவாயிருந்தால் நபும்ஸகனும் பிறக்கக்கூடுமென்று கூறப்படு கிறது. ஈச்வரேச்சையின்படி இம்மூன்றிலொன்று ஜனிப்பதாகக் கொள்ளவேண்டும். 11—13½.

**வயதுக்குத் தகுந்தவாறு ஔஷதப் பிரமாணங்கள்:**—சிசுக்களு க்கு முதல் மாதத்தில் ஸாதாரணமாய் ஔஷதங்களை பால், தேன், சர்க்கரை, நெய் இவை சேர்த்து லேஹ்யமாகச் செய்து ஒரு குஞ்ஜா பிரமாணத்திற்கு அதிகப்படாமல் கொடுக்கலாம். ஒரு வருஷம் பூர்த்தி யாகிற வரையில் மாதம் ஒன்றுக்கு ஒரு குஞ்ஜாபிரமாணம் அதிக மாகக் கொடுத்து வரலாம். பிறகு பதினாறு வயது வரையில் வருஷம் ஒன்றுக்கு ஒரு மாஷம் வீதம் பிரமாணத்தை அதிகப்படுத்தலாம். அத ற்கு மேல் எழுபது வயதுவரையில் ஒரே அளவில் ஔஷதங்களை உப யோகித்து வரவேண்டும். எழுபது வயதுக்குமேல் பாலர்களுக்குக் கொடுக்கும் விதமாக ஔஷதப் பிரமாணங்களைச் சிறுகச் சிறுகக் குறை த்துவரவேண்டும். மேற்கூறிய அளவுகள் கல்கம், சூர்ணம் இவ்விரு வித ஔஷதங்களை உபயோகிப்பதற்கேயாம். பலவித கஷாய ரூப மாகப் பக்குவம் செய்த ஔஷதங்களை மட்டும் முற்கூறிய அளவுகளை விட நாலு மடங்கு அதிகமாய் உபயோகிக்கவேண்டும். 14—17.

**வயதுக்கேற்றவாறு சிகித்ஸாமுறை முதலியது:**—அஞ்ஜனம், லேபம், ஸ்நானம், அப்யங்கம், வமனம், பிரதிமர்சம் 1 என்கிற இவ்வித

---

1. அஞ்ஜனம்—மைதீட்டுவதுபோல் கண்களில் ஔஷதமிடல்; லேபம்—பூச்சிடல்; ஸ்நானம்—கஷாயாதிகளால் செய்யப்படும் நீராட் டம்; அப்யங்கம்—தைலாதிகளை சிரஸ்ஸு முதலானவற்றில் தேய்த் தல்; வமனம்—வாந்திக்குக் கொடுத்தல்; பிரதிமர்சம்—இரண்டு பிந்து அளவில் தைலத்தை நஸ்யமிடல் ; கவளம்—ஔஷதங்களால் வாய்க்

சிகித்ஸா முறைகள் மனிதனுக்குப் பிறந்தது முதலாக என்றைக்கும் பயன் தரக் கூடியன. கவளம் ஐந்தாவது வயதுக்குப் பிறகும், நஸ்ய மென்பது எட்டு வயதுக்கு மேலும், விரேகமானது பதினாறு வயதுக்குப் பிறகும், புணர்ச்சி இருபது வயதுக்கு மேலும் ஏற்றவையாம். 18, 19.

**ஆயுள் அழிதல்:**— வாலிபவயது விருத்தியாய் வருவதாலும், தேஹத்தின் ஒளி, புதிது புதிதான விஷயங்களை ஆலோசிக்கும் மேதை யென்னும் மதிவிசேஷம், சர்மம், திருஷ்டி, சுக்லம், விக்ரமச் செய்கை, ஸாதாரண புத்தி, கர்மேந்த்ரியங்கள்,[1] மனது என்கிற இப்பத்து தத்துவங்களும் க்ரமமாக முதிர்ச்சியடைந்து வருவதாலும் ஆயுளும் குறைந்து வரும். 20.

## வாதப் பிரக்ருதி முதலிய தன்மைகளின் குறிகள். 2

**வாதப் பிரக்ருதி:**—மிகச் சொற்பமான கேசங்களுடையவனும், மெலிந்தும் வறட்சியுள்ளதுமான தேஹமுடையவனும், மிதமின்றி எப்பொழுதும் பேசுங் குணமுள்ளவனும், சலசித்தனும், ஆகாயத்தில் ஸஞ்சரிப்பதாகக் கனவு காணும் தன்மையனுமான மனிதன் 'வாதப் பிரக்ருதி' எனப்படுவான். 21.

**பித்தப் பிரக்ருதி:**—வாலிப வயதிலேயே நரையுண்ட மயிர்களைப் பெற்றவனும், மதியிற் சிறந்தவனும், அடிக்கடி வியர்வையுண்டாகுந் தன்மையனும், வெகு ரோஷமுள்ளவனும், கனவுகளில் பற்பல தேஜோமயமான உருவங்களைக் காண்பவனுமான மனிதனைப் 'பித்தப் பிரக்ருதி' என்றறிய வேண்டும். 22.

---

கொப்புளித்தல்; நஸ்யம்—மூக்கில் ஔஷதமிடுதல்; விரேகம்—பேதிக்குக் கொடுத்தல். இவைகளைப் பற்றிய விஷயங்கள் உத்தரகண்டத்தில் விரிவாகக் கூறப்படும்.

1. கர்மேந்த்ரியங்களைப் பற்றி 5-வது அத்தியாயத்தில் பார்க்க.

2. சிசுக்கள் கர்ப்பத்தில் உற்பத்தியாகும்போதே, மாதா பிதாக்களுடைய சரீரத்தின் வாத பித்த கபங்களின் நிலைமைகளுக்கு ஏற்றவாறு, இம்மூன்று தோஷங்களில் ஒன்றோ இரண்டோ மூன்றுமோ சிறிது மேலோங்கியிருக்குமாகையால், அவற்றிற்கேற்க சிசுக்களுக்கு வாதாதிப் பிரக்ருதிகள் ஏற்படுகின்றன. இம்மூன்று பிரக்ருதிகளை ஆங்கில வைத்தியர் நெர்வஸ் (Nervous), பிலியஸ் (Bilious), ப்ளெக்மாடிக் (Phlegmatic) என்று முறையே வழங்குகின்றனர்.

**கபப் பிரக்ருதி** :—கம்பீரமான கொள்கைகளுடையவனும், திரண்டுருண்டு நல்ல வலிவுடன் கூடிய சரீரத்தைப் பெற்றவனும், செழித்து வளர்ந்து நிகிநிகிப்பான தலைமயிர்களுடையவனும், ஸ்வப்னங்களில் பற்பல நீரோடைகளைக் காண்பவனுமான மனிதன் 'கபப் பிரக்ருதி' எனப்படுவான். 23.

**மிச்ரப் பிரக்ருதிகள்**:-வாத பித்த கபங்களில் இரண்டிரண்டு அல்லது மூன்று தோஷங்கள் சேர்ந்து சிலருக்குப் பிரக்ருதியாக ஏற்படுமாலால் அவர்களிடம், முன் தனித் தனி தோஷத்திற்குக் கூறிய குறிகள் பலவாறு கலந்து காணப்படும்; அம்மனிதர்கள் 'மிச்ரப்பிரக்ருதிகள்' எனப்படுவார்கள்.[1] 23½.

**நித்ரை முதலியவை உண்டாகும் வகை** :—தமோகுணம், கப தோஷம் இவற்றின் ஸம்பந்தத்தினால் 'நித்ரை' உண்டாகிறது. தமோகுணம், பித்தம் இவற்றால் 'மூர்ச்சை' என்னும் மயக்கம் உண்டாகிறது. இரஜோகுணம், வாத பித்தங்கள் இவற்றின் ஸம்பந்தத்தினால் 'பிராந்தி' என்கிற புத்திமாறாட்டம் ஏற்படுகிறது. வாத கபங்கள், தமோகுணம் இவற்றின் ஸம்பந்தத்தினால் 'சோம்பல்' உண்டாகிறது. ஓஜஸ் என்கிற உபதாது க்ஷயமடைவது, மனநோய், அஜீர்ணம், அதிக சிரமம் இவற்றால் சரீரத்திற்கு 'இளைப்பு' உண்டாகும். 24—25.

**ஆலஸ்யம் முதலியவற்றின் விவரணம்**:—கார்யங்களைச் செய்வதில் திறமையிருந்தும் உத்ஸாஹமற்றிருந்தால் அது 'ஆலஸ்யம்' எனப்படும். புத்திக்கு மழுக்கம் சிறிது நேரிட்டு, ஒரு முறை ச்வாஸத்தை உட்கொண்டு மறுபடி வாயை நன்றாகத் திறந்து வெளியிடப்படும் நீண்ட ச்வாஸம் 'ஜ்ரும்பா' (கொட்டாவி) என்று சொல்லப்படும். உதாந வாயு, பிராணவாயு இரண்டும் சேர்ந்து மேல்நோக்கிச்செல்ல, அப்பொழுது சிரஸ்ஸுக்கு ஸமீபத்திலுள்ள கபமும் பொசிந்துவருமாலால், மூக்கிலிருந்து வேகமாய் சப்தம் வெளியாகும்; அது 'தும்

1. மிச்ரப் பிரக்ருதிகள்—வாத பித்தப்பிரக்ருதி, வாத கபப் பிரக்ருதி,பித்த கபப் பிரக்ருதி (த்வந்த்வப்ரக்ருதிகள்),வாத பித்த கபப் பிரக்ருதி (ஸந்நிபாதப்ரக்ருதி) என்று நான்கு வகைப்படும்.

மல்' (க்ஷவது) எனப்படும். வேண்டியவளவு ஆஹாரம் குடலில் விழுந்து நிரம்பியிருப்பதாலும், உதானவாயு பிரகோபமடைவதாலும் வயிற்றிலிருந்து மேலோங்கி வரும் ஒருவித வாயு 'உத்காரம்' (ஏப்பம்) எனப்படுகின்றது. 26—28½.

## ஏழாவது அத்தியாயம்.

### ரோகங்களின் ஸங்க்யை.

**வியாதிகளைப்பற்றிய முன்னுரை:**—முன்னால், முனிவர்களால் ஆராய்ச்சி செய்யப்பட்ட ரோகங்கள் எவ்வளவுண்டோ அவ்வளவையும் நாம் இங்கு சுருக்கமாகக் கூறுகின்றோம்; அநேக விதமான வியாதிகள் ஏற்பட்டிருப்பதுடன், அவற்றுள் ஒவ்வொன்றும் பலவித பேதமுடையதாகவும் இருக்கின்றது. 1.

**ஜ்வரங்கள்:**—ஜ்வரம் இருபத்தைந்து விதம்; அவற்றின் விவரம் பின்வருமாறு:—வாதம், பித்தம், கபம் இம்மூன்று தோஷங்கள் கோளாறடைவதால் மூன்றுவித ஜ்வரங்களும், வாத பித்தம், வாத கபம், பித்த கபம் என்று இரண்டிரண்டு தோஷங்கள் கோளாறடைவதால் மூன்று வித த்வந்த்வ ஜ்வரங்களும், மூன்று தோஷங்களும் ஒருமிக்கக் கோளாறடைவதால் 'ஸந்நிபாதம்' என்கிற ஜ்வரமும் உண்டாகின்றன. இவற்றில் உட்பிரிவுகள் அநேகம் உண்டு. விஷம ஜ்வரங்கள்[1] பெரும்பாலும் ஸந்நிபாதத்தினால்[2] உண்டாகின்றன; அவை—ஸந்ததம், ஸததம், அந்யேத்யுஷ்கம், த்ருதீயகம், சாதுர்த்திகம் என்று ஐந்து வகைப்படும்.[3] 'ஆகந்துகம்'[4] என்று வேறுவகை ஜ்வரமும்

---

1 'விஷம ஜ்வரங்கள்' தமிழில் 'முறைக்காய்ச்சல்' எனப்படும். விட்டுவிட்டு காலம் மாறி வருவதால் விஷமம் என்று கூறப்படுகிறது.

2. ஸந்நிபாதம்—மூன்று தோஷங்கள் ஒருமிக்கக் கோளாறடைதல்.

3. ஸந்ததம்—விடா ஜ்வரம்; ஸததம்—ஒரே நாளில் இரண்டு முறை விட்டுவிட்டு வரும் ஜ்வரம்; த்ருதீயகம்—நடுவில் ஒரு நாள் விட்டு மூன்றாவது நாள் வரும் ஜ்வரம்; சாதுர்த்திகம்—நடுவில் இரண்டு நாள் விட்டு நான்காவது தினம் வரும் ஜ்வரம்.

4. ஆகந்துகம்—பூர்வரூபம் முதலியவையில்லாமலே திடீரென்று உண்டாகும் ஜ்வரம்.

உண்டு. இது ஒன்றே பதின்மூன்று விதமாகப் பகுக்கப்படும். இப் பதின் மூன்றையும் மூன்று பகுதிகளாகவும் பிரிக்கலாம். அவற்றுள் முதற் பகுதியைச் சேர்ந்தவை: அபிசாரம், கிரஹாவேசம், சாபம் இக் காரணங்களால்[1] உண்டாகும் மூன்றுவித ஜ்வரங்களாம்; 'அபிகாத ஜ்வரங்கள்' இரண்டாவது பகுதியைச் சேர்ந்தவை ; அவை—சிரமம், அவயவங்கள் அறுபடுதல், சல்யம் முதலியவை சரீரத்திற்குள் பாய்தல், அக்னி முதலியவற்றால் எரிக்கப்படுதல் என்கிற நான்குவித காரணங்களால் உண்டாகின்றன. 'அபிஷங்க ஜ்வரங்கள்' மூன்றாவது பகுதியைச் சேர்ந்தவையாம்; அவை—காமம், பயம், மனநோய், கோபம், மஹத்தான வியஸனம், ஔஷதங்களின் வாஸனை என்கிற ஆறு வகையான காரணங்களால் உண்டாகக்கூடியன. இவ்விதமாக அந்தந்த காரணங்களைக்கொண்டு இருபத்தைந்து விதமான ஜ்வரங்களையும் அறிந்து கொள்ளவேண்டும்[2]. 2—6½

அதிஸாரம்:—மூன்று தோஷங்கள் தனித்தனியே கோபாறடைவதாலும், ஸந்நிபாதத்தினாலும், சோகத்தினாலும், ஆமமென்கிற அஜீர்ணத்தினாலும், பயத்தாலும் முறையே ஏழுவிதமான 'அதிஸாரம்' உற்பத்தியாகின்றது[3]. 7½.

கிரஹணீ:—'கிரஹணீ' என்கிற குடலின் ஒரு பாகம் விகாரமடைந்து, புஜித்த உணவு ஜீர்ணமாகாமல் அவ்விதமே பேதியாவதுண்டு; இதற்கு 'கிரஹணீ' என்றே பெயர். தனித்தனி தோஷங்

---

1. அபிசாரம்—பிசாசம்— முதலியவற்றை ஏவுதல்; கிரஹாவேசம்—யக்ஷர், கந்தர்வர், மற்றும் க்ஷுத்ரதேவதைகள் முதலியவற்றின் ஆவேசம்; சாபம்—முனிவர் முதலியவர்களால் இடப்படுவது.

2. 'அபிந்யாஸ ஜ்வரம்' என்கிற ஒருவித கொடிய ஜ்வரமும், ஸப்ததாதுகதமான ஏழு ஜ்வரங்களும், ஆமஜ்வரம், பக்வஜ்வரம் என்கிற சில ஜ்வரங்களும், ஆக வேறுவித பல விசேஷ ஜ்வரங்கள் 'மாதவநிதானம்' முதலிய கிரந்தங்களில் அதிகமாகக் கூறப்பட்டிருக்கின்றன. இந்த ஜ்வரங்களுக்கும் பிறகு கூறப்படும் ஸகல ரோகங்களுக்கும் குறிகள் பூர்வரூபம் முதலிய விவரங்கள் இந்த ஸங்கிரஹ கிரந்தத்தில் விசேஷமாய் விவரிக்கப்படமாட்டா.

3. பயாதிஸாரம் என்பது மாதவநிதானத்தில் இல்லை.

களால் மூன்றுவித கிரஹணீ ரோகமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும் ஆமதோஷத்தினால் ஒன்றும் ஆக ஐந்துவிதமாகும். 8.

**பிரவாஹிகா:**—'பிரவாஹிகா'[1] என்று மற்றொரு அதிஸாரம் உண்டு; இது தனித்தனி தோஷங்களாலும் இரத்தத்தினாலும் ஆக நான்கு விதமாய் உண்டாகின்றது. 8½.

**அஜீர்ணம்:**—மூன்று தோஷங்களால் தனித் தனியே மூன்று வித 'அஜீர்ணம்' உண்டாகும்; இவற்றுள் வாதத்தினால் உண்டாகும் அஜீர்ணம், 'விஷ்டப்த்தம்' என்றும், பித்தத்தினால் உண்டாவது 'விதக்த்தம்' என்றும், கபத்தினாலுண்டாவது 'ஆமம்' என்றும் வழங்கப்படும்.[2] ஒன்றுக்கொன்று விரோதகுணமுள்ள உணவுகளை யுண்பதால் ஏற்படும் இரஸதாது விஷத்தன்மையடைந்து, 'விஷாஜீர்ணம்' என்கிற மற்றோர் அஜீர்ணரோகத்தை உண்டாக்கும். 'அலஸகம்' என்று மற்றொரு அஜீர்ணவியாதி யுண்டு;அது வாத பித்த கபங்களால் தனித் தனியே மூன்று விதமாய் உற்பத்தியாகின்றது.[3] மூன்று தோஷங்கள் கோளாறடைவதால் ஏற்படும் சில அஜீர்ணத்தினால் மூன்றுவிதமான 'விஷூசி ரோகங்களும்' உண்டாகின்றன.[4] 'தண்டகாலஸகம்' என்றும், 'விளம்பிகா' என்றும் வேறிரண்டு[5] வியாதிகளும் அஜீர்ண ரோகத்தைச் சேர்ந்தவையாம். 9—11.

---

1. பிரவாஹிகா—இது சீதபேதி என்று வழங்கப்படும்.

2. விஷ்டப்த்தம்—ஜீர்ணமாகக் கூடாமலும், வெளிவரவிடாமலும் குடலிலேயே தகைப்பட்ட தெனப் பொருள்; விதக்த்தம்—பித்தத்தின் சூட்டினால் மிகவும் எரிக்கப்பட்டது; ஆமம்—கபம் பிரகோபமடைவதால் உணவு சிறிதும் பக்குவமாகாமல் தங்கிவிடுவது.

3. அலஸகம் வாதத்தினாலேயே உண்டாவதாகவும், விஷ்டப்த்தமே அலஸகம் என்பதாகவும் வாக்படர் கூறுகிறார். ஆஹாரம் குடலில் பக்குவமாகாமல் அடைபட்டு வெளிவரமுடியாமல் உண்டாகும் வயிற்றுப்பொருமல் 'அலஸகம்' என்று கூறப்படுகிறது.

4. வாந்திபேதி யென்கிற வியாதி விஷூசியெனப்படும்.

5. விஷத்தன்மையுள்ள இரஸதாது சரீரமெங்கும் பரவுவதால் தேஹம் விறைத்துப்போய் குத்தல் குடைத்தலேற்பட்டால் அது தண்டகாலஸகம் என்றும், விறைத்தலின்றி மற்றக் கோளாறுகளிருந்தால் விளம்பிகா என்றும் கூறப்படும்.

**அர்சோரோகம்** :—அர்சஸ் என்கிற மூலரோகம் ஆறுவிதம்; அவை—வாதார்சஸ், பித்தார்சஸ், கபார்சஸ், ஸந்நிபாதார்சஸ், ஸம்ஸர்கஜார்சஸ் [1], ரக்தார் சஸ்[2] என்பவைகளாம். இவை ஸஹஜார்சஸ், உத்தரகாலஜார்சஸ் என்று பொதுவாக இரண்டு விதமாகப் பிரிக்கப்படும்[3]. இவற்றில் சுஷ்கார்சஸ், ஆர்த்ரார்சஸ் என்று வேறிரண்டு வகைகளுமுண்டு. [4] 12½.

**சர்மகீலகம்**:—இந்த ரோகம்[5] வாதஜ சர்மகீலகம், பித்தஜ சர்மகீலகம், கபஜ சர்மகீலக்ம் என்று மூன்று வகைப்படும். 13.

**கிருமிரோகம்**:—இருபத்தோரு விதமான கிருமிகள் சரீரத்தில் உற்பத்தியாகின்றன; அவையெல்லாம் 'பாஹ்யகிருமிகள்,' 'ஆப்யந்தரகிருமிகள்' என்று பொதுவாக இருவகைப்பட்டனவாம்.[6] அவற்றுள்

---

1. ஸம்ஸர்கம்— இரட்டை தோஷங்களின் கோளாறு. ஸந்நிபாதம்—மூன்று தோஷங்களின் கோளாறு. [ஸம்ஸர்கஜமான அர்சஸ்ஸை மூன்றுவிதமாகப் பிரிக்கக் கூடுமாயினும், ஸம்ஸர்கம் என்கிற முறையைக்கொண்டு இங்கு ஒரேவிதமாகக் கூறப்பட்டதென்க. மாதவநிதாநம் முதலியவற்றில் ஸம்ஸர்கார்சஸ் என்பதற்குப் பதிலாக ஸஹஜார்சஸ்ஸே ஆறுவதாகக் கூறப்பட்டிருக்கிறது.]

2. ரக்தார்சஸ்—இரத்தம் பொசியும் மூலம்.

3. பிறப்பிலேயே உள்ளது 'ஸஹஜார்சஸ்' என்றும், பிற்காலத்தில் வாதாதிதோஷங்கள் கோளாறடைவதால் உண்டாவது, 'உத்தரகாலஜமான அர்சஸ்' என்றும் சொல்லப்படும்.

4. மூலத்திலிருந்து இரத்தம் முதலியது பொசிந்துகொண்டிருந்தால் அது ஆர்த்ரார்சஸ் என்றும், பொசிவில்லாமலிருந்தால் சுஷ்கார்சஸ் என்றும் கூறப்படும்.

5. குதத்வாரத்திலுண்டாகும் ஒருவித கட்டி 'சர்மகீலகம்' எனப்படும். இதைத் தமிழ் வைத்தியர்கள் 'கிரந்தி' என்பார்கள். ஆங்கிலத்தில் பிஸ்டுலா எனப் பெயர்.

6. பாஹ்யகிருமிகள்—வெளியில் ரோமம் முதலியவற்றிலுள்ள தோஷங்களால் உண்டாகும் பேன் முதலியன; ஆப்யந்தரகிருமிகள்—குடல், இரத்தம் முதலியற்றைச் சார்ந்து சரீரத்தின் உட்புறத்தில் விருத்தியாகும் கிருமிகள்.

யூகம், லிக்ஷா என்கிற இரண்டும் 'பாஹ்யகிருமிகள்' எனப்படும்.[1] மற்றவையெல்லாம் 'ஆப்யந்தர கிருமிகள்.' அவையாவன:—ஹ்ருத்யாதம், அந்த்ராதம், உதராவேஷ்டம், சூரு, மஹாகுஹம், ஸுகந்தம், தர்ப்பகுஸுமம், ரக்தம், மாத்ரு, ஸௌரஸம், லோமவித்வம்ஸம், ரோமத்வீபம், உதும்பரம், கேசாதம் என்கிற இப்பதினொன்றும் பெரும்பாலும் கபத்தை ஆச்ரயித்து விருத்தியாகக்கூடியவை. மகேருகம், லேலிஹம், ஸஹுஸம், ஸௌஸுராதம், ககேருகம் என்கிற வேறு ஐந்துவிதமான கிருமிகள் மலங்களில் உற்பத்தியாகின்றன.[2] இவ்விருபத்தொரு விதமான கிருமிகளன்றி வேறு சில கிருமிகளும் உண்டு; அவற்றுள் கபம், இரத்தம் இவ்விரண்டையும் ஆச்ரயித்து உண்டாவது 'ஸ்நாயுகம்'[3] என்று சொல்லப்படும். வெளி தோஷங்களைக் காரணமாகக்கொண்டு விரணங்களில் உற்பத்தியாகும் வெவ்வேறு வகையான வேறு கிருமிகளும் உண்டு.[4] 14—18.

---

1, யூகம்—பேன்; லிக்ஷா—ஈர் எனப்படும் பேன்முட்டை; (மலினமான வஸ்திரம் முதலியவற்றில் இருக்கும் வெண்மையான பேன்கள் லிக்ஷா எனப்படும் என்று சிலர்).

2. ஆப்யந்தரமான பத்தொன்பதுவித கிருமிகளுக்கும் வியவஹாரத்தின் பொருட்டும் பெரும்பாலும் அவ்விதமான பெயர்கள் இடப்பட்டனவென்று மாதவ நிதானத்தில் விஜயரக்ஷிதனுடைய வியாக்யானம்.

3. ஸ்நாயுகம்—உணர்ச்சி நரம்புகளுக்கு (Nerves) ஸ்நாயு என்றுபெயர்; அவ்வித நரம்புபோன்ற கிருமியானது 'ஸ்நாயுகம்' எனப்படும். ஸ்நாயுகம் என்கிற கிருமியானது, இரத்தத்தையும், நிணநீர் என்னும் ஒருவித கபத்தையும் விகாரப்படுத்தி 'நாடிவிரணம்' போன்ற ஒருவித ரோகத்தை யுண்டுபண்ணுகிறது; இதைத் தமிழில் நரம்புச்சிலந்தி யென்பார்கள்.

4. மாதவகரனுடைய கொள்கை இவ்விஷயத்தில் பின்வருமாறு:—கிருமிகள் இருபதுவிதம். அவை பொதுப்பட பாஹ்யங்கள், ஆப்யந்தரங்கள் என்று இருவகைப்படும். (1) வெளி தோஷங்களை அச்ரயித்துண்டாகுபவை, (2) கபத்தில் விருத்தியாகுபவை, (3) இரத்தத்தில் விருத்தியாகுபவை, (4) மலத்திலுண்டாகுபவை என்று. அவற்றை மீண்டும் நாலு விதமாகப் பிரிக்கலாம்; வெளி தோஷங்களாலுண்டாகுபவை:—யூகம், லிக்ஷா என்பவையாம், குடலில்

**பாண்டுரோகம்:**—வாதம், பித்தம், கபம், ஸந்நிபாதம் இவற்றால் தனித்தனியே ஒவ்வொருவித பாண்டுவும், மண் உண்பதால் மற்றொரு விதமும் ஆக ஐந்துவித பாண்டு ரோகங்களாம்.[1] 19.

**காமலா, கும்பகாமலா, ஹலீமகம்:**—ஸாதாரணமான காமலா ரோகம்[2] ஒருவிதம். கும்பகாமலா[3] என்பது மற்றொரு விதமானது. ஹலீமகம்[4] என்னும் வியாதியும் ஒரேவிதம். 19½.

**இரத்த பித்தம்:**—இரத்த பித்தம் என்கிற ரோகம் ஊர்த்வகம், அதோகம், உபயமார்க்ககம் என்று மூன்று வகைப்படும்; அவற்றுள்

---

கபத்தை ஆச்ரயித்த கிருமிகள்:—அந்த்ராதம், உதராவேஷ்டம், ஹ்ருதயாதம், மஹாகுதம், சுரு, தர்ப்பகுஸுமம், ஸுகந்தம் என்கிற கிருமிகள், நாகப்பூச்சி, அட்டை, தானிய மூளைகள் இவைகளைப் போன்றவையாம். இரத்தத்தில் கண்களால் பார்க்கக்கூடாதவாறு வெகு ஸூக்ஷ்மமாயிருக்கும் கிருமிகள் கேசாதம், ரோமவித்வம்ஸம், ரோமத்வீபம், உதும்பரம், ஸௌரஸம், மாத்ரு என்று கூறப்படுகின்றன. குடலில் மலாசயத்தில் உற்பத்தியாகும் கிருமிகள் ககேருகம், மகேருகம், ஸௌஸுராதம், லேலிஹம் என்பவைகளாம். இந்தக் கிருமிகளால் உண்டாகும் ரோகங்களும் அங்கு விவரிக்கப்பட்டிருக்கின்றன.

1. மண்ணை யுண்பதாலும் வாத பித்த கபங்களே விகாரமடைந்து, அக்கோளாறுகளுக்கேற்ற குறிகளே காணப்படுமாகையால் தனிப்பட மண்ணுண்பதால் ஒரு பாண்டுரோகம் உண்டாவதாகக் கூறுவது சரியல்லவென்னும் கொள்கையினால் ஸுச்ருத ஸம்ஹிதையில் நாலு விதமான பாண்டுரோகங்களே கூறப்பட்டிருக்கின்றனவாம்.

2. ஸம்ஸ்கிருதத்தில் காமலாவெனப்படுவது தமிழில் காமாலை என்று வழங்கப்படும்.

3. காமலா ரோகத்தில், இரத்தத்தில் பித்தம் அதிகம் சேர்ந்து உடலெல்லாம் மஞ்சள் நிறமாகக் காணப்படும். காமலாரோகமே மிகவும் முதிர்ந்துபோனால், மூத்திரம் முதலியவை மிகக் கறுநிறங் கொண்டு, உடல் வீங்கி, மல மூத்திரங்களில் சில ஸமயம் இரத்தமும் விழத் தொடங்கி, தாஹமும் வறட்சியும் பித்தமயக்கமும் அதிகரித்து விட்டால் அந்நிலை 'கும்பகாமலா' எனப்படும். தமிழில் 'வறட்காமாலை' என்றும் கூறுவதுண்டு.

4. பாண்டு ரோகத்தில் சரீரமானது, வாத பித்தங்களின் பிரகோபத்தினால் சிறிது மஞ்சள் நிறமாக அல்லது இலைப்பசுமை நிற

வாய், மூக்கு, செவி முதலிய மேல்வழிகளால் இரத்தம் வெளிவருமானால் 'ஊர்த்வகம்' என்றும், கீழே குதம், மூத்திரமார்க்கம் முதலியவற்றால் வெளிப்படுமானால் 'அதோகம்' என்றும், இரண்டு வழிகளாலும் அல்லது மயிர்க்கால்கள் மூலமாகவும் வெளிப்படுமானால் 'உபயமார்க்ககம்' என்றும் கூறப்படும்; ஊர்த்வகரக்தபித்தம் கபதோஷத்தினாலும், அதோகரக்தபித்தம் வாதத்தினாலும், வாதகபங்களுடைய சேர்க்கையினால் உபயமார்க்கமான இரத்தபித்தமும் உண்டாகின்றன. 20½.

காஸம்:—காஸரோகம் ஐந்துவிதம்; அவற்றில் வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்றுவித காஸங்களும், ச்வாஸாசயத்தினுள் ஏதாவது அபிகாதம் முதலியவற்றால் விரணமுண்டாவதால் க்ஷதகாஸம் என்கிற மற்றொருவித காஸமும், தாதுக்கள் க்ஷீணிப்பதால் வேறொருவித காஸமும் உண்டாகும்.[1] 21½.

க்ஷயம்:—க்ஷயரோகமும் ஐந்து விதமே; தனித்தனி தோஷத்தினால் மூன்று வித க்ஷயமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், விரணங்களிலிருந்து இரத்தம் அபரிமிதமாய் வெளியாவதால் மற்றொன்றும் உண்டாகிறது. 22½.

சோஷம்:—சோஷரோகம் ஆறுவிதம்; விசேஷமான ஸ்த்ரீப்ரஸங்கத்தினாலும், சோகத்தினாலும், உரக்ஷதம் முதலிய விரணத்தினாலும், அதிகமாய் ஓடி வழிநடப்பதாலும், மிதமிஞ்சிய வியாயாமத்தாலும், கிழத்தன்மையினாலும் அவை உற்பத்தியாகின்றன[2]. 23½.

---

முடையதாகவும் மாறிப்போய், வலிமையும் உத்ஸாஹமும் க்ஷயமடைந்து, பசியின்மையுடன் மெதுவான ஜ்வரமும், உடலெல்லாம் விசேஷமான நோவும் உண்டாகுமானால், அவ்வித ரோகம் 'ஹலீமகம்' என்று சொல்லப்படுகிறது.

1. சுதந்திரமான சில காரணங்களாலும், முதலில் கூறப்பட்ட நான்கு காஸங்களும் சிகித்சை செய்யப்படாமல் உபேக்ஷிக்கப்பட்டாலும், 'க்ஷயகாஸம்' உண்டாகக்கூடும்.

2. க்ஷயத்திற்கும் சோஷத்திற்கும் பேதம் விசேஷமாயில்லை. ஆயினும் வாத பித்த கபங்களின் கோளாறுகளால் உண்டாகுபவை பெரும்பாலும் க்ஷயம் என்றும், ஸ்த்ரீப்ரஸங்கம் முதலிய சரீரத்திற்கு ஆயாஸஹேதுவான மற்ற ஹேதுக்களால் உண்டாவது சோஷம் என்

**ச்வாஸரோகம்:**—க்ஷுத்ரச்வாஸம், தமகச்வாஸம், ஊர்த்வச்வாஸம், மஹாச்வாஸம், சின்னச்வாஸம் என்று ச்வாஸரோகம் ஐந்துவிதம். 1 24½.

**ஹிக்காரோகம்:**—விக்கல் என்று வழங்கப்படும் ஹிக்காரோகமும் ஐந்துவிதம்; அவையாவன:—க்ஷுத்ரஹிக்கா, அன்னஜஹிக்கா, கம்பீரஹிக்கா, யமளஹிக்கா, மஹாஹிக்கா என்பவையாம்2. 25½.

**அக்னிவிகாரம்:**—உணவுகளை வயிற்றினுள் பக்குவம் செய்வதற்கேற்ற ஒரு வகையான பித்தம் கோளாறடைவதால் உண்டாகும் பிணி 'அக்னிவிகாரம்' என்று வழங்கப்படுகிறது; இதில் அக்னியானது விஷமம், தீக்ஷ்ணம், மந்தம், பஸ்மகம் என்கிற நான்கு வித கோளாறுகளைப் பெறும்; இதில் விஷமம் என்பது வாதத்தினாலும்,

---

றும் சார்ங்கதரனுடைய கருத்து. இவ்விரண்டும் **இராஜயக்ஷ்மரோகம்** என்று வழங்கப்படும்.

1. (1) ஆயாஸகரமான வேலை செய்வதாலும், வறட்சியினாலும் அடிக்கடியும் சிறுகச் சிறுக மேலோங்கி வரும் மூச்சு 'க்ஷுத்ரச்வாஸம்' எனப்படும். (2) ச்வாஸமார்க்கங்களில் அடைபட்டுள்ள கபத்தை வெகு கஷ்டத்துடன் வெளிப்படுத்துகையில், கழுத்தும் சிரஸைச் சேர்ந்த முகம் முதலிய அவயவங்களும் விம்மிக்கொண்டு இரும்பவும் முடியாமல் அடிக்கடி மயக்கந்தரக்கூடிய ச்வாஸம் 'தமகச்வாஸம்' எனப்படும்; தமகச்வாஸமே பிரதமகம், ஸந்தமகம் என்று இருவகைப் படும் என்றும் மாதவநிதானம். (3) ஒரு முறை இருமல் வரும்போது மூச்சு ஒரே இழுப்பாய் மேலுக்கு வருமேயன்றி, மறுபடியும் சீக்கிரத்தில் வெளியிலிருந்து உள்ளுக்கு ச்வாஸம் வாங்கமுடியாமல் முகமெல்லாம் வெளுத்துத் திணறிப்போகும் நிலைமையையுண்டாக்குவது 'ஊர்த்வச்வாஸம்' எனப்படும். (4) தூரத்திலிருப்பவரும் கேட்குமாறு விருஷபம்போல் வேகமாகப் பிரயாஸப்பட்டு விடப்படுவது 'மஹாச்வாஸம்' என்று சொல்லப்படுகிறது. (5) வெகு நேரம் மூச்சுத்திணறி உடம்பெல்லாம் வலியுண்டாய் வயிறுப்பலுடன் வியர்வையும்விட்டு பிராணன்போய் விடுவதுபோல் தோற்றுவது 'சின்னச்வாஸம்' ஆகும்.

2. (1) இடையில் வெகுநேரம் விட்டுவிட்டு கண்டத்தின் அடியிலிருந்து வருவதுபோல் தோற்றுவது 'க்ஷுத்ரஹிக்கா'. (2) மிதமிஞ்சிய அன்னபானாதிகளால் வயிற்றினுள்ளடங்கிய வாயு நெருக்கப்பட்டு வெளிவருவதால் உண்டாகும் விக்கல் 'அன்னஜஹிக்கா'. (3)

தீக்ஷ்ணம் பித்தத்தினாலும், மந்தமானது கபத்தினாலும், பஸ்மகம் என்பது வாத பித்தங்களாலும் உண்டாகின்றன. 1 26½.

**அரோசகம்:**—வாத பித்த கபங்களால் தனித்தனியே ஒவ்வொன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், மனதுக்கு உண்டாகும் அருவருப்பு அல்லது ஸங்கடங்களால் ஒன்றும் ஆக ஐந்து அரோசகங்கள் உண்டாகின்றன. 27½.

**சர்தி:**—சர்தி 2 ஏழு விதம்; மூன்று தோஷங்களால் தனித்தனியே ஒவ்வொரு சர்தியும், குடலில் கிருமிகள் சேருவதால் ஒரு வித சர்தியும், ஸந்நிபாதத்தினால் வேறொரு சர்தியும், அருவருப்பான பதார்த்தங்களைக் காண்பதால் மற்றொரு சர்தியும்; ஸ்த்ரீகளுக்கு கர்ப்பந்தரிப்பதால் ஒருவித சர்தியும் உண்டாகும். 28½.

**ஸ்வரபேதம்:**—ஸ்வரபேதம் 3 ஆறுவிதம்; வாத பித்த கபங்களால் மூன்று விதமும், மேதஸ் என்னும் கொழுப்பு அதிகரிப்பதால் ஒருவிதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், தாதுக்கள் க்ஷீணிப்பதால் ஒன்றும் உண்டாகும். 29½.

---

நாபியிலிருந்து மேலோங்கி வருவதுபோலவும் கம்பீரமான தொனியுடன் கூடியதும் பலவித உபத்திரவங்களுண்டு பண்ணுவதுமான விக்கல் 'கம்பீரஹிக்கா'. (4) சிறிது நேரத்திற்கொரு முறை சிரஸ்ஸையும் கழுத்தையும் நடுங்கச்செய்துகொண்டு இரட்டையாக வரும் விக்கல் 'யமளஹிக்கா'. (5) மர்மங்களைப் பீடித்துக்கொண்டும் உடலை நடுக்கிக்கொண்டும் இடைவிடாமல் உண்டாவது 'மஹாஹிக்கா'.

1. ஒரு ஸமயம் நல்ல பசியும் மற்றொரு ஸமயம் பசி மந்தித்தும் இருந்தால் 'விஷமாக்னி' யென்றும், பசியுண்டாகும்போது அது தாங்க முடியாததாயிருந்தால் 'தீக்ஷ்ணாக்னி' என்றும், பசியே யில்லாமல் ஆஹாரத்தில் விருப்பமற்றிருந்தால் 'மந்தாக்னி' என்றும், ஒரு தினத்தில் அடிக்கடி உணவுகள் விசேஷமாய் புஜிக்கப்பட்டபோதிலும் அவையெல்லாம் பஸ்மீகரிக்கப்படுவதுபோல் எப்பொழுதும் சாப்பிட வேண்டுமென்கிற விருப்பம் அதிகமானால் 'பஸ்மகாக்னி' என்றும் கூறப்படும்.

2. சர்தி—வமனம் அல்லது வாந்தியாதல். [மாதவநிதானத்தில் கிருமிஜமான சர்தியும் கர்ப்பிணிகளுக்குண்டாகும் சர்தியும் சேர்க்கப்படவில்லை.]

3. ஸ்வரபேதம்—கண்டத்தின் தொனி மாறுபடுதல்; தொண்டைக்கம்மல்.

**த்ருஷ்ணாரோகம்:**—த்ருஷ்ணாரோகமும் ஆறுவகைப்படும்; [1] வாத பித்த கபங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், தாதுக்கள் க்ஷயமடைவதால் ஒன்றும், சிலரோகங்களுக்கு உபத்திரவரூபமாக [2] மற்றொன்றும் உண்டாகும். 30½.

**மூர்ச்சாரோகம்:**—மூர்ச்சாரோகம் வாதஜம், பித்தஜம், கபஜம், ஸந்நிபாதஜம் என்று நான்கு விதமாகும் [3]. 31½.

**பிரமம் முதலியன:**—பிரமம் என்னும் தலைச்சுற்றல், நித்திரை, தந்த்ரை யென்னும் சோம்பல், ஸந்யாஸரோகம், [4] க்லாநி என்கிற இளைப்பு இவற்றில் ஒவ்வொன்றும், ஒவ்வொரு விதமேயாம். 32.

**மதம்:**—வாத பித்த கபங்களால் மூன்று மதங்களும் [5], ஸந்நி

---

1. த்ருஷ்ணாரோகம்—நீர் வேட்கையினால் உண்டாகும் வியாதி. [மாதவநிதானத்தில் மூன்று தோஷங்களாலும், விரணங்களிலிருந்து இரத்தம் அபரிமிதமாய் வெளிப்படுவதாலும், மற்ற தாதுக்கள் க்ஷீணிப்பதாலும், ஆமம் என்கிற ஒருவித அஜீர்ணதோஷத்தினாலும், உப்பு புளிப்பு முதலியவை மேலிட்ட உணவுகளை யுண்பதாலும் ஆக ஏழு விதமான த்ருஷ்ணாரோகம் உண்டாவதாகக் கூறப்பட்டிருக்கிறது. வேறு சில ரோகங்களுக்கு விசேஷக் குறியாகத் தோன்றும் உபத்திரவரூபமான த்ருஷ்ணை இந்த ரோகத்துடன் கூட்டி எண்ணக்கூடியதாயில்லை. ஸந்நிபாதத்தினால் உண்டாவதையே ஆமதோஷத்தினால் ஏற்படும் த்ருஷ்ணை யென்றும் குறிப்பிட்டிருக்கிறது.]

2. உபத்திரவம்—ஒரு ரோகத்தைக் காரணமாகக்கொண்டு உற்பத்தியாகும் வேறு வியாதி.

3. மூன்று தோஷங்கள், இரத்தம், மதுபானம், விஷம் ஆக ஆறு காரணங்களால் ஆறுவித மூர்ச்சை யுண்டாவதாக மாதவகரனுடைய கொள்கை.

4. ஸந்யாஸம்—சிரஸ்ஸுக்குள் உஷ்ணம் அல்லது பித்தம் அதிகரித்து, ஸந்நிபாதத்தினால் உண்டாகும் ஒருவித மூர்ச்சாரோகம்.

5. மதம்—வெறி [மாதவகரன் முதலியவர்களால் 'மதரோகம்' என்று தனிப்பட ஒரு ரோகம் வாதாதிதோஷங்களால் ஸம்பவிப்பதாகக் கூறப்படவில்லை. பிறகு வரும் மதாத்யயத்தில் இது சேர்க்கப்படுகிறது.]

பாதத்திஞல் ஒன்றும், இரத்தத்திஞல் ஒன்றும், [1] மதுபானத்திஞல் மற்ருென்றும், விஷவேகத்திஞல் வேருென்றும் உண்டாகும். 33.

**மதாத்யயம் முதலியன:**—மதாத்யயம் 2 என்கிற ரோகம் தனித் தனி தோஷத்திஞல் ஒவ்வொன்றும், ஸந்நிபாதத்திஞல் ஒன்றும் ஆக நான்கு வகைப்படும். பரமதம், 3 பாநாஜீர்ணம் 4, பாநவிப்ரமம், 5 பாநாத்யயம் 6 இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு விதமேயாம். 34½.

**தாஹரோகம்:**—தாஹம் என்கிற காங்கை இரத்த - பித்த ஸம் பந்தத்திஞலும், இரத்தத்திஞலும், நாவறட்சியிஞலும், கேவல பித் தத்திஞலும், தாதுக்கள் க்ஷீணிப்பதாலும், மர்மஸ்தானங்களில் அடி படுவதாலும், வயிற்றில் இரத்தம் பொசிந்து நிரம்புவதாலும் ஆக ஏழு காரணங்களால் உற்பத்தியாகின்றன. 35, 36.

**உன்மாதம்:**—மூன்று தோஷங்களால் தனித்தனியே ஒவ் வொரு உன்மாதமும், ஸந்நிபாதத்திஞல் ஒன்றும், விஷப்பிரயோகத் திஞல் ஒன்றும், மனநோய்களால் மற்ருென்றும் ஆக ஆறு உன் மாத ரோகங்கள் உண்டு. 37.

---

1. இரத்தமதம்—இரத்தத்தைக் குடிப்பதாலுண்டாகும் வெறி.
2. மிதமிஞ்சிய மதுபானத்திஞல் உண்டாகும் ரோகம் மதாத்ய யம் எனப்படும்.
3. கபம் மிகவும் அதிகரித்து, ருசிகளை யறியவல்லமையற்று. சோம்பலும் மேலிட்டு, மலமூத்திரங்கள் பந்தமடைந்து, சரீரம் பளுவாயிருப்பதுடன் ஸந்திகளிலும் தலையிலும் ஸஹிக்கக்கூடாத நோயுண்டாஞல், அந்த மதம் 'பரமதம்' எனப்படும்.
4. பானம் பண்ணிய மது ஜீர்ணமாகாமல் பொறுக்க முடியாத வயிற்றுப் பொருமலும், வாந்தியும், தொண்டையில் எரித்தலும் உண் டாஞல் அது 'பாநாஜீர்ணம்' எனப்படும்.
5. இருதயம், தொண்டை, மற்றும் பல அவயவங்கள் இவற் றில் அழற்சியும், மூக்கு முதலான அவயங்களிலிருந்து கபம் அதிக மாய் பெருகுவதும், மூர்ச்சையும், வாந்தியும், ஜ்வரமும், தலைநோயும், மத்ய ஸம்பந்தமான உணவு வகைகளில் வெறுப்பும் உண்டாக்கும் வியாதி 'பாநவிப்ரமம்' என்று கூறப்படும்.
6. பாநாத்யயம் என்கிற பிணி மாதவநிதாநம் முதலியவற் றில் தனியாகக் கூறப்படவில்லை. [பெரும்பாலும் பாநாத்யயம் என்பது மதாத்யயத்திஞல் நேரிடக்கூடிய அபாயகரமான ஒருவகை நிலைமையாகும்.]

**பூதோன்மாதம்:**—பூதோன்மாதம் இருபது விதம்; தேவர், அஸுரர், கந்தர்வர், கின்னரர், யக்ஷர், பித்ருதேவதைகள், குரு சாபம், பிரேதம்,[1] குஹ்யகர்,[2] வ்ருத்தர், ஸித்தர், பூதங்கள், பிசாசங்கள், ஜலதேவதைகள், நாகங்கள், பிருஹ்ம ரக்ஷஸ்ஸுகள், இராக்ஷஸர், கூஷ்மாண்டதேவதை,[3] எனவெனப்படும் க்ருத்யை, வேதாளம் இவற்றால் பூதோன்மாதங்கள் இருபதும் உண்டாகின்றன. 38—39½.

**அபஸ்மாரம்:**—அபஸ்மாரம்[4] வாத பித்த கபங்களாலும், ஸந்நிபாதத்தினாலும் ஆக நான்கு காரணங்களால் உண்டாகின்றது, 40½.

**ஆமவாதம்:**—கீல்வாயு எனப்படும் ஆமவாதரோகமும் வாத பித்த கபங்களாலும், ஸந்நிபாதத்தினாலும் ஆக நான்கு விதமாய் உற்பத்தியாகின்றது. 41½.

**சூலை:**—சூலையென்னும் வயிற்றுநோய் எட்டுவிதம்; அவை வாத பித்த கபங்களால் ஒவ்வொருவிதமும், த்வந்த்வ தோஷங்களால்[5] மூன்றுவிதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், ஆமதோஷத்தினால்[6] ஒன்றும் ஆக எண்வகைப்படும். 42½.

**பரிணாமசூலை முதலியன:**—உணவு ஜீர்ணமாகுங்கால் உண்டாகிற சூலை பரிணாமசூலை யெனப்படும்; இதுவும் ஸாதாரண சூலைக்குண்டான காரணங்களாலேயே எட்டுவிதமாய் உற்பத்தியாகின்றது;

---

1. பிரேதம்—ஒருவன் அபரிமிதமான பாபங்களைச் செய்து இறந்தபின், உத்தரக்ருத்யங்கள் அவனுக்கு நடவாமற்போனால், நரகானுபவம் செய்து முடிந்த பிறகும் நல்ல ஜன்மமுமில்லாமல், மோக்ஷமுமடைய முடியாமல் தவிக்க நேரிடும்; அதன் பெயர் பிரேதம்.

2. குஹ்யகர்—நிதிகளைக் காக்கும் பூதங்கள்.

3. கூஷ்மாண்ட தேவதை—சிவனுடைய பிரமதகணத்தில் இருக்கும் கூஷ்மாண்டம்போன்ற வயிற்றையுடைய பூதங்கள்.

4. அபஸ்மாரம்—காக்கைவலி.

5. வாதபித்தம், வாதகபம், பித்தகபம் என்றவாறு இரட்டைப்பட்ட தோஷங்கள் த்வந்த்வங்கள் எனப்படும்.

6. ஆமதோஷம்—இதைப்பற்றி 40-வது பக்கத்தில் டிப்பணியில் 2-என்று குறிப்பிட்டிருப்பதைப் பார்க்க.

மேலும் அன்னத்ரவசூலை,[1] ஜ்வர பித்தசூலை[2] என்கிற இவ்விரண்டும் ஒவ்வொரு விதமேயாம். 43, 44.

**உதாவர்த்தம்:**—உதாவர்த்தம்[3] என்னும் ரோகம் பதின்மூன்று வகைப்படும்; அவற்றுள் பசியை அடக்குவதால் உண்டாவது ஒன்று; நாவறட்சியை அடக்குவதால் ஏற்படுவது இரண்டாவது; நித்திரையைத் தடுப்பதால் உற்பத்தியாவது மூன்றாவது; ச்வாஸத்தை நிக்ரஹம் செய்வதால் ஸம்பவிப்பது நான்காவது; மேலோங்கி வரும் வாந்தியை அடக்குவதால் ஜனிப்பது ஐந்தாவது; தும்மலைத் தடுப்பதால் உண்டாவது ஆறுவது; கொட்டாவியை அடக்குவதால் நேரிடுவது ஏழாவது; ஏப்பமென்னும் தேக்கெறிவைத் தடுப்பதால் உற்பத்தியாவது எட்டாவது; கண்ணீரை அடக்குவதால் ஏற்படுவது ஒன்பதாவது; சுக்ரத்தை அடக்குவதால் ஸம்பவிப்பது பத்தாவது; மூத்திரத்தைத் தடுப்பதால் உண்டாவது பதினொன்றுவது; மலத்தைக் கட்டுவதால் ஜனிப்பது பன்னிரண்டாவது; அபாநவாயுவை அடக்குவதால் உற்பத்தியாவது பதின்மூன்றுவது;[4] இந்த உதாவர்த்

1. பத்தியமும் அபத்தியமுமான உணவுகளைக் கலந்துண்பதால் ஆஹாரம் ஜீர்ணமான பிறகோ, ஜீர்ணமாகும்போதோ, ஜீர்ணமாகாமலிருக்கையிலேயோ எந்த சூலை உண்டாகிறதோ அது அன்னத்ரவ சூலை எனப்படும்.

2. ஜ்வரம் விசேஷமாய் அடித்து, அதனால் குடலில் பித்தம் அதிகரித்து உண்டாகும் சூலை 'ஜ்வரபித்தசூலை' என்று சொல்லப்படும். [மாதவநிதாநம் முதலிய நூல்களில் இந்த சூலை குறிப்பிடப்படவில்லை.]

3. குடலுக்கும், துவாரமுள்ள மூத்திரநாளம் முதலிய மற்ற அவயவங்களுக்கும் இயற்கையில் அமைந்துள்ள கீழ் நோக்கிச் செல்லும் அசைவு இயற்கைக்கு மாறாக மேல்நோக்கி அசையத் தலைப்படுவதால் உண்டாகும் ரோகம் 'உதாவர்த்தம்' என்று கூறப்படுகிறது. குடலுக்கு இயற்கையான நெளியுந்தன்மை ஆவர்த்தம் (Peristaltic motion) என்றும், மேல் நோக்கி யுண்டாகும் அவ்வசைவு உதாவர்த்தம் என்றும் கருதப்படுகிறது.

4. பசி, தாஹம், மல மூத்திர விஸர்ஜனத்தின் நிமித்தம் உண்டாகும் உணர்ச்சி முதலியவை வேகங்கள் எனப்படும்.

தங்களுள் இறுதியிற் கூறிய மூன்றும் பல தீங்குகளுக்குக் காரணமான உபத்திரவங்களை யுண்டுபண்ணக் கூடியவையாகும். 45—48.

**ஆநாஹமும் உரோக்ரஹமும்:**—வயிற்றுப் பொருமலெனப்படும் ஆநாஹரோகம் இருவகைப்படும்; அவற்றுள் குடலில் பக்வாசயம் என்கிற பாகத்தில் உற்பத்தியாகும் பொருமல் ஸாதாரண ஆநாஹம் என்றும், இரைப்பை யென்கிற ஆமாசயத்தில் உண்டாவது 'பிரத்யாநாஹம்' என்றும் கூறப்படும். மாரடைப்பு என்னும் உரோக்ரஹரோகம் [1] ஒரே விதம். 49.

**ஹ்ருத்ரோகம்:**—இருதயத்தைப் பற்றிய ரோகம் ஐந்துவிதம்; அவற்றுள் வாத பித்த கபங்களால் மூன்று, ஸந்நிபாதத்தினால் ஒன்று [2], கிருமிகளால் ஒன்று ஆக ஐந்து வகையாம். 50.

**உதரரோகம்:**—உதரரோகம் எண்வகைப்படும்; [3] அவற்றுள் வாத பித்த கபங்களால் மூன்று, ஸந்நிபாதத்தினால் ஒன்று, வயிற்றில் ஒருவித நீர் சேருவதால் மற்றொன்று, மண்ணீரல் என்னும் ப்லீஹம் வீங்குவதால் ஒன்று, குடலில் முள் முதலியவை சேர்ந்து அவற்றால் குத்தப்பட்டு துவாரம் உண்டாய் விடுவதால் ஒன்று, மலபந்தத்தினால் ஒன்று ஆக எட்டு விதம். 51½.

**குன்மம்:**—குன்மரோகம் வாத பித்த கபங்களால் மூன்றும், த்வந்த்வதோஷங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், இரத்தத்தினால் ஒன்றும் [4] ஆக எட்டு விதமாகும். 52¾.

---

1. உரோக்ரஹம்—ச்வாஸநாளத்தில் உண்டாகும் ஒருவித வாதரோகம். மாதவகரனால் இது குறிப்பிடப்படவில்லை. ஆனால் 'உரோகாதம்' என்று மற்றொரு வியாதி அங்கு குறிக்கப்படுகிறது.

2. ஸந்நிபாதத்தினால் ஒரு ஹ்ருத்ரோகம் உண்டாவதாக ஸுச்ருதரால் கூறப்படவில்லை.

3. உதரம்—மஹோதரரோகம்; [வயிற்றுக்குள் குடலுக்கு வெளியில் ஜலநீர் சுரந்து வயிறு மிகவும் ஊதியிருப்பதாகக் காணப்படுங்கால் அது 'ஜலோதரம்' என்று சொல்லப்படும். வயிற்றின் இடது பக்கத்திலுள்ள மண்ணீரல் வீங்குவதால் 'ப்லீஹோதரம்' என்கிற வியாதி உண்டாவது போல், வலது புறத்தில் கல்லீரல் என்கிற யக்ருத் வீங்குவதால் 'யக்ருத்தாலீ' என்கிற கல்மந்தரோகம் உண்டாகின்றது.]

4. இரத்த குன்மம்—இந்த ரோகம், ஸ்த்ரீகளுக்கு மாதவிடாயில் ஏற்படும் கோளாறுகளால் கருப்பையினுள் உண்டாகின்றது;

**மூத்ராகாதம்:**—நீரடைப்பு என்கிற மூத்ராகாதரோகம் பதின்மூன்று வகைப்படும்; அவற்றுள் வாதகுண்டலிகா என்பது முதலாவது; இரண்டாவது வாதாஷ்டீலா; மூன்றாவது வாதவஸ்தி; மூத்ராதீதம் நான்காவது; மூத்ரஜடரம் ஐந்தாவது; மூத்ரக்ஷயம் ஆறாவது; ஏழாவது மூத்ரோத்ஸங்கம்; எட்டாவது மூத்ரக்கிரந்தி; ஒன்பதாவது மூத்ரசுக்ரம்; மலாகாதம் பத்தாவது; மூத்ரஸாதம் பதினொன்றாவது; உஷ்ணவாதம் பன்னிரண்டாவது; வஸ்திகுண்டலிகா பதின்மூன்றாவதாம்;[1] இவற்றுள் இறுதியிற் கூறிய மூத்திரரோகங்கள் மூன்றும் மிகவும் கொடியவையாகும். 53—56.

---

ஆகவே ஸ்த்ரீகளுக்கே இவ்வியாதி உண்டாகக் கூடுமேயன்றி புருடருக்கு உண்டாகாதென்று கூறப்படுகிறது; ஏழு தாதுக்களில் ஒன்றான இரத்தம் ஒருவாறு விகாரமடைவதால் புருடருக்கும் வயிற்றில் இரத்த குன்மம் உண்டாகக் கூடுமென்று சிலரது கொள்கை.

1. (1) வஸ்தியெனப்படும் மூத்திரப்பையினுள் வாயு பிரகோபமடைந்து அப்பையின் உட்புறத்திலேயே ஸஞ்சரிப்பதால் மூத்திரம் அடிக்கடியும் வெகு சொற்பமாகவும் வெளிவருமாயின் அது 'வாதகுண்டலிகா' எனப்படும். (2) வாயுவானது வஸ்தியையும், குதமார்க்கத்தையும் அடைத்து, வஸ்தியில் பொருமலை யுண்டாக்கி வீங்கச் செய்தால் அது 'அஷ்டீலா' எனப்படும்; (கூழாங்கல் எனப்படும் அண்ட வடிவமான ஒருவித வழுக்கைக் கல் வட தேசத்தில் அஷ்டீலா என்று முன்னால் வழங்கப்பட்டதாம்; அவ்விதக் கல்லைப் போலவே இவ்வீக்கமும் காணப்பட்டதால் இதற்கும் அஷ்டீலா என்று பெயரிடப் பெற்றது). (3) மூத்திரவேகத்தை அடக்குபவனுக்கு வஸ்தியினுள் வாயு பிரகோபித்து அப்பையின் துவாரத்தை அடைத்து விடுவதால் சிலருக்கு மூத்திரம் வெளிவர முடியாமற் போய்விடும்; அந்த ரோகம் 'வாதவஸ்தி' எனப்படும். (4) மூத்திரத்தை அடக்குவதால் சிலருக்கு மூத்திரம் வேகமாய் வெளிவராமல் வெகு மந்தமாய் வருமானால் அது 'மூத்திராதீதம்' எனப்படும். (5) மூத்திரவேகத்தை அடிக்கடியும் தடுப்பதால் வஸ்தியின் கீழ் துவாரம் அடைப்பட்டு வஸ்தியில் பொருமலுண்டாய் அவ்வவயவம் நாபிக்கு மேல் கிளம்பினால் அது 'மூத்ரஜடரம்' என்று கூறப்படும். (6) சரீரவறட்சியுடன் பலம் குன்றியவனுக்கு வஸ்தியில் வாயு பித்தம் இரண்டும் பிரகோபித்து மூத்திரத்தை வற்றச் செய்தால் அது 'மூத்ரக்ஷயம்' எனப்படும். (7) வஸ்தியிலோ, நாளத்திலோ, லிங்கத்தின் முனையிலோ பிரகோபமடைந்த வாதத்தினால் மூத்திரம் தடைபடுவதுடன் இரத்தமும்

மூத்ர க்ருச்சிரம்:—நீர்ச் சுருக்கெனப்படும் மூத்ரக்ருச்சிரம் எட்டு விதம்; அவற்றுள் வாத பித்த கபங்களால் மூன்று விதமும், ஸந்நி பாதத்தினுல் நான்காவதும், சுக்ரத்தினுல் ஐந்தாவதும், 1 மலபந்தத்தினுல் 2 ஆருவதும், அபிகாதத்தினுல் 3 ஏழாவதும், அச்மரீ என்கிற கல் அடைபடுவதால் எட்டாவதும் உண்டாகிறது. 57,—58.

---

மூத்திரத்தோடு வந்தால் அது 'மூத்ரோத்ஸங்கம்' எனப்படும். (8) வஸ்தியின் அடித்துவாரத்தில் உருண்டை வடிவாக ஒரு கிரந்தி உண்டாய் திடீரென்று மூத்திரத்தைத் தடுத்தால் அது 'மூத்ரக்கிரந்தி' எனப்படும். (9) மூத்திரத்துடன் ரேதஸ் கலந்து வருவதால் சாம்பல் கலந்ததுபோல் மூத்திரம் வெளியாகும்; அது 'மூத்ரசுக்ரம்' எனப்படும். (10) மலத்தின் வேகத்தைத் தடுப்பவனுக்கு உதாவர்த்த ரோகம் உண்டாய், அதன் மூலமாய் மூத்திரத்திலும் மலத்திற்குண்டான நாற்றம் முதலியது தோன்றும்; அது 'மலாகாதம்' என்று வழங்கப்படும். (11) வாயுவினுல் பித்தமாவது கபமாவது இரண்டுமாவது இறுகிப்போய், மூத்திரம் மஞ்சள் நிறமாகவோ வெண்மையாகவோ செந்நிறமாகவோ எரித்தலுடன் வெளி வந்தால் அது 'மூத்ரஸாதம்' என்று சொல்லப்படுகிறது. (12) மிதமிஞ்சின சரீர வுழைப்பினுல் பிரகோபமான பித்தம் வஸ்தியை யடைந்து, மஞ்சள் நிறமாகவும் இரத்தம் கலந்ததுமாய் மூத்திரத்தை கஷ்டத்துடன் எரித்தலை யுண்டாக்கி வெளிப்படுத்தினுல் அது 'உஷ்ணவாதம்' எனப்படும். (13) வெகு வேகமாய் ஓடுவது முதலிய ஆயாஸ கரமான காரியங்களால் திடீரென்று வஸ்தி இடம் புரண்டு கர்ப்பத்தைப் போல் நாபிக்குமேல் தூக்கிக்கொண்டு நின்ருல் அது 'வஸ்திகுண்டலிகா' எனப்படும்.

1. ஏதேனும் தோஷத்தால் விகாரமடைந்த ரேதஸ்ஸானது மூத்திரநாளத்தினுள் வந்து தங்கியிருந்து மூத்திரத்திற்குத் தடையை யுண்டுபண்ணி, வஸ்தியிலும் லிங்கத்திலும் வலியைத் தரும்.

2. மலமானது மலாசயத்தில் சிக்கிக்கொண்டு, மேன்மேலும் அவ்விடத்திலேயே விருத்தியாவதால், மலாசயத்திற்கு எதிரில் வெகு அருகிலுள்ள மூத்திராசயமும் தாக்கப்பட்டு, மூத்திர நாளம் அதனுல் சிறிது அடைபட்டு மூத்ரக்ருச்சிரம் உண்டாகும்.

3. ஏதாவது அடிபட்டு, சல்லியம் ஏதேனும் உட்புகுந்து மூத்திர மார்க்கத்தில் தடையை யுண்டுபண்ணுமாயின் 'அபிகாதஜ மூத்ர க்ருச்சிரம்' உற்பத்தியாகும்.

அச்மரீ:—அச்மரீரோகம் [1] நான்கு விதம்; அவற்றில் வாத பித்த கபங்களால் மூன்றுவித அச்மரீ ரோகங்களும், சுக்ரத்தினால் மற்றொரு அச்மரீ ரோகமும் உண்டாகும். 59.

மேஹம் அல்லது பிரமேஹம்:—மேஹரோகம் இருபது வகைப் படும்; அவையாவன:—இக்ஷுமேஹம், ஸுராமேஹம், பிஷ்ட மேஹம், ஸாந்த்ரமேஹம், சுக்ரமேஹம், உதகமேஹம், லாலாமேஹம், சீதமேஹம், ஸிகதாமேஹம், சனைர்மேஹம், மாஞ்ஜிஷ்டமேஹம், ஹாரித்ரமேஹம், நீலமேஹம், இரத்தமேஹம், கிருஷ்ணமேஹம், க்ஷார மேஹம், ஹஸ்திமேஹம், வஸாமேஹம், மஜ்ஜாமேஹம், மதுமேஹம் என்பவையாம்; [2] இவற்றுள் இக்ஷுமேஹம் முதல் சனைர்மேஹம் வரையிலுமுள்ள பத்துமேஹங்களும் கபத்தினாலும், மாஞ்ஜிஷ்டமேஹம் முதல் க்ஷாரமேஹம் வரையிலுமுள்ள ஆறும் பித்தத்தினாலும், மற்ற நான்கும் வாதத்தினாலும் உற்பத்தியாகின்றன. 60—62½.

---

1. வாயுவானது வஸ்தி முதலிய மூத்திர மார்க்கங்களிலுள்ள கப பித்தங்களையும், மூத்திரத்தின் திரவ பாகத்தையும், சுக்ரத்தையும் சோஷணம் செய்வதால் மணல்களைப் போன்ற சில கடின பதார்த்தங்கள் உண்டாகும்; அவை 'அச்மரீ' என்று சொல்லப்படும்; மணல் களைப்போன்ற இப் பதார்த்தங்கள் சிறிய பருக்காங்கற்களைப் போல் இருந்தால் அவை 'சர்க்கரா' எனப்படும்.

2. மேஹரோகத்தில் மூத்திரமானது நிறம், மணம், சுவை முதலியவைகளால் இக்ஷுரஸம் முதலியவற்றிற்குச் சமானமாயிருந்தால் அந்தந்தற்குத் தகுந்த பெயரால் அந்தந்த மேஹரோகமும் வழங்கப்படு கிறது. இக்ஷு-கருப்பஞ்சாறு; ஸுரா-கள்; பிஷ்டம்-அரிசி முத லியவற்றின் மாவு; ஸாந்த்ரம்-தோய்ந்துபோன பால் முதலியதைப் போன்றது; சுக்ரம்-ரேதஸ்; உதகம்-ஜலம்; லாலா-உமிழ்நீர்; சீதம்—வெகு குளிர்ந்தது; ஸிகதா-பருக்காங்கல் அல்லது மணல்; சனைர் மேஹம்-வெகு சிறிய அளவில் அடிக்கடியும் போகும் மூத்திரரோகம்; மஞ்ஜிஷ்டை-ஓர் சாயமிடும் வேர்; ஹரித்ரா-மஞ்சள்; நீலம்-நீலநிறம் அல்லது நீலியைப்போன்றது; ரக்தமேஹம்-இரத்த நிறமானதும் இரத்தத்துடன் கூடியதுமான மேஹம்; கிருஷ்ணம்-மிகவும் கறுப் பானது; க்ஷாரம்-உப்பு முதலிய சில காரப்பொருள்; ஹஸ்திமேஹம்-யானையைப்போல் அதிகமாக மூத்திரம் வெளிவிடுதல்; வஸா-மாம்ஸம் கழுவிய நீர் போன்றது; மஜ்ஜா-மஜ்ஜை யென்னும் எலும்புக்குள் ளடங்கிய ஓர் தாது; மது-தேன்.

**ஸோம ரோகம்:**—ஸ்த்ரீகளுக்கு சில ஸமயம் கருப்பையிலிருந்து வெண்ணிற திரவம் வெளிவருவதுண்டு; அவ்வித மேஹரோகம் 'ஸோமரோகம்' என்று சொல்லப்படும்; இது [1] ஒரே விதமாம். 63.

**பிரமேஹ பிடகைகள்:**—பிரமேஹபிடகை [2] பத்துவிதம்; அவை யாவன:—சராவிகா, கச்சபிகா, புத்ரிணீ, விநதா, அலஜீ, மஸூரிகா, ஸர்ஷபிகா, ஜாலிநீ, விதாரிகா, வித்ரதி என்பவையாம்; [3] இவை மேஹரோகத்திற்கு உபத்திரவங்களாய் உண்டாவதியல்பு. 64½.

**மேதோ ரோகமும் சோஷையும்:**—மேதோ விருத்தி [4] யென்னும் அதிஸ்தூலரோகம் ஒரே விதம். சோபம் அல்லது சோகை என்கிற நீர்க்கோவை ஒன்பது வகையாம்; அவற்றுள் தனித்தனி தோஷத்தினுல் உண்டாவது மூன்று; த்வந்த்வதோஷங்களால் உண்டாவது மூன்று; ஸந்நிபாதத்தினுல் ஒன்று; அபிகாதத்தினுல் ஒன்று; விஷ ஸம்பந்தத்தினுல் மற்றொன்றும். 65½.

**விருத்தி, அண்டவிருத்தி, கண்டமாலை, கண்டாலஜீ:**—விருத்தி ரோகம் ஏழுவிதம்; அவற்றுள் வாதம், பித்தம், கபம் இவற்றால் மூன்

1. ஸோமரோகம் மாதவகரனுல் கூறப்படவில்லை. ஆனுல் நிர்ணயஸாகர அச்சுக்கூடத்தில் வெளியாயிருக்கும் மாதவநிதானத்தின் இறுதியில் அனுபந்தத்தில் இந்த ரோகம் சேர்க்கப்பட்டிருக்கிறது. பாவப்ரகாசம் முதலிய சில கிரந்தங்களிலும் இது குறிப்பிடப்பட்டுளது.

2. பிரமேஹ பிடகை:—மேஹரோகிகளுக்குண்டாகும் இராஜப் பிளவை என்னும் சிலந்தி.

3. சாரவிகா—சராவம் என்றால் அகல் எனப் பொருள். அதைப் போன்றது சராவிகா; கச்சபிகா—ஆமையைப்போன்றது; புத்ரிணீ—சுற்றிலும் சிறிய கொப்புளங்களுடன் கூடிய பிளவை; விநதா—வெகு ஆழமுள்ளதும் விசேஷ வலியுண்டுபண்ணுவதுமான பிளவை; அலஜீ—பல பருக்களுடன் கூடியதும், வெளுப்பும் சிவப்புமான வர்ணமுடையதும், வெகு துன்பந் தருவதுமான சிலந்தி; மஸூரிகா—கடலைகளுக்கு ஒப்பானது; ஸர்ஷபிகா—வெண் கடுகுக்குச் சமானமாயிருப்பது; ஜாலிநீ—வரிசையாய் வீங்கியெழும்பிய மாம்ஸஜாலங்களுடன் கூடியது; விதாரிகா—நிலப்பனங்கிழங்குக்கு ஒப்பானது; வித்ரதி—விப்புருதியென்று வழங்கப்படும் சீழ்க்கட்டி.

4. கொழுப்பு மிகவும் அதிகரிப்பதால் உண்டாகும் ரோகம் 'மேதா விருத்தி' எனப்படும்.

றும், இரத்தித்திஞல் ஒன்றும், மேதஸ் என்னும் கொழுப்பிஞல் ஒன்றும், மூத்திரத்திஞல் ஒன்றும், குடலிறக்கத்திஞல் ஒன்றும் உண்டாகின்றன.[1] அண்டவிருத்தி என்பது ஒரே விதம். கண்டமாலை, கண்டாலஜீ என்கிற ரோகங்களும் ஒவ்வொரு விதமாம். 66—67½.

கிரந்தி:—கிரந்தி[2] என்னும் வியாதி ஒன்பது விதம்; அவற்றுள் மூன்று தோஷங்களால் மூன்றுக் கிரந்திகளும், இரத்ததோஷத்திஞல் ஒன்றும், ஸிரைகளின்[3] தோஷத்தால் ஒன்றும், மேதோ தோஷத்திஞல்[4] ஒன்றும், விரணத்திஞல் ஒன்றும், அஸ்த்தி தோஷத்தால் ஒன்றும், மாம்ஸதோஷத்திஞல் ஒன்றும் உண்டாகின்றன. 68½.

அர்புதம், யானைக்கால்:—அர்புதரோகம்[5] ஆறுவிதம்; வாதார்புதம், பித்தார்புதம், கபார்புதம், மாம்ஸார்புதம், மேதோர்புதம், இரத்

---

1. விருத்தி—அண்டம் என்கிற பீஜம் பருத்துப்போவது. [மூத்திரவேகத்தை அடக்குபவனுக்கு அண்டத்தில் அவ்விதத் திரவம் ஒன்று சேர்ந்து 'மூத்திர விருத்தி' உண்டாகும். அண்ட விருத்தி யென்று தனியாக ஒரு விருத்திரோகம் மாதவகரன் முதலியவர்களால் கூறப்படவில்லை. கழுத்துக்கு மேல் சில விரணங்கள் வரிசையாக உண்டாவதுண்டு; சுவாஸாசய ஸம்பந்தமான கழலைரோக முள்ளவருக்கு இவ்வித கட்டிகள் முக்கியமாய் உற்பத்தியாகும்; இவை 'கண்டமாலை' என்று சொல்லப்படுகின்றன. ஒரு கட்டி உண்டாய் அது உடைந்து போய் ஆறிய பிறகு அதன் பக்கத்தில் மற்றொன்று உண்டாவது 'கண்டாலஜீ' எனப்படும். இதற்கே 'அபசீ' என்றும் பெயருண்டு.]

2. கிரந்தி—மாம்ஸம் கொழுப்பு இவை முதலியவை கெட்டுப் போய் உண்டாகும் ஒருவித கடினமான கட்டி; இரத்தக்கிரந்தி, விரணக்கிரந்தி, அஸ்த்திக்கிரந்தி, மாம்ஸக்கிரந்தி என்னும் கிரந்திகள் மாதவ நிதானத்தில் கூறப்படவில்லை.

3. ஸிரைகள்—காரிரத்தக்குழாய்கள்—அதிக வேலை செய்யும் சிலருடைய கை கால்களிலுள்ள ஸிரைகள் பருத்து முடிச்சு கட்டிக் கொள்வது இயல்பு; அவை ஸிராக்கிரந்தி எனப்படும்.

4. மேதஸ்—கொழுப்பு; கொழுப்பானது சிலருக்கு ஒவ்வொரு அவயவத்தில் அதிகமாகச் சேர்ந்து கட்டிகள் உண்டாகக் கூடும்; அவ்விதக் கட்டிகள் 'மேதோகிரந்தி' எனப்படுகின்றன.

5. அர்புதம்—புரைகுழல்.

தார்புதம் என்பவையாம். ச்லீபதம் என்கிற யானைக்கால் வாதஜம், பித்தஜம், கபஜம் என்று மூன்று விதமாம். 69½.

**வித்ரதி:**—வித்ரதி[1] ஆறு விதம்; அவற்றுள் வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்று வித்ரதிகளும், இரத்த தோஷத்தினுல் ஒரு வித்ரதியும், அடிபடுவதால் ஒரு விதமும், ஸந்நிபாதத்தினுல் ஒரு வித்ரதியுமாம். 70½.

**விரணங்கள்:**—விரணங்கள்[2] பதினைந்து விதம். அவையாவன:—வாதவிரணம், பித்தவிரணம், கபவிரணம், இரத்தவிரணம்; வாத பித்தவிரணம், வாதச்லேஷ்மவிரணம், பித்த கபவிரணம், ஸந்நிபாதவிரணம், வாதரக்த விரணம், இரத்தபித்த விரணம், கபரக்த விரணம், வாத பித்த ரக்தவிரணம், வாத கப ரக்தவிரணம், பித்த கப ரக்த விரணம், ஸந்நிபாத ரக்தவிரணம் என்பவையாம்; இந்த விரணங்கள் யாவும் ஆகந்துகங்கள், சாரீரங்கள், சுத்தமானவை, அசுத்தமானவை என்று மீண்டும் நான்குவிதமாகப் பிரிக்கப்படுகின்றன. 71—75.

**ஸத்யோவிரணம்:**—ஸத்யோவிரணம்[3] எண் வகைப்படும்;

---

1. வித்ரதி—ஒரு விதமான சீழ்க்கட்டி; இதையே விப்புருதியென்று தமிழில் வழங்குகிறார்கள். [குடல் முதலிய உள் அவயவங்களில் உற்பத்தியாகும் வித்ரதிகளைத் தனியாகக் குறிப்பிட்டு அவைகளை 'அந்தர் வித்ரதி' என்று மாதவகரன் கூறியிருக்கிறார்.]

2. விரணங்கள்—இவை, இரத்தம் முதலிய தாதுக்களில் தோஷங்கள் சேர்ந்து சரீரத்தில் தானுகவே உண்டாகக்கூடிய கட்டி முதலியன.

3. ஸத்யோவிரணம்—ஏதாவது அடிபடுவதால் உண்டாகும் விரணம். இதில் அவிக்லுப்தம் என்ருல் அவயவம் அறுபடாமல் உள் காயம்படுதல்; விலம்பிதம்—சதைகள் அறுபட்டுத் தொங்கும் காயம், சின்னம்—ஸாதாரணமாய் சிறிது அறுபடுதல்; பின்னம்—கோடரி கொண்டு பிளக்கப்பட்டது போன்ற காயம்; ப்ரசலிதம்—அவயவம் நெகிழ்ந்து போதல்; க்ருஷ்டம்—சர்மம் வழுன்றுபோதல்; வித்தம்—ஆணி முதலியவற்ருல் குத்தப்படுதல்; நிபாதிதம்—அடித்து நசுக்கப்படுதல். [மாதவநிதானத்தில் சின்னம், பின்னம், வித்தம், க்ஷதம், பிச்சிதம், க்ருஷ்டம் என்று ஆறுவிதமான ஸத்யோவிரணங்கள் கூறப்பட்டிருக்கின்றன.]

அவையாவன:—அவிக்லுப்தம், விலம்பிதம், சின்னம், பின்னம், ப்ரச விதம், க்ருஷ்டம், வித்தம், நிபாதிதம் என்பவையாம். 76.

**கோஷ்ட பேதம்:**—கோஷ்ட[1] பேதம் என்பது சின்னாந்திரம், நிஸ் ஸ்ருதாந்திரம் என்று இருவகைப்படும். 76½.

**அஸ்த்தி பங்கம், தக்த்த விரணம்:**—அஸ்த்தி பங்கம்[2] எட்டு விதமாம். அவையாவன:—பக்நப்ருஷ்டம், விதாரிதம், விவர்த்திதம், விச்லிஷ்டம், திர்யக் க்ஷிப்தம், அதோகதம், ஊர்த்வகதம், ஸந்தி பக்நம் என்பனவாம். அக்னியினால் எரிக்கப்படுவதால்[3] ப்லுஷ்டம், விதக்த்தம், துர்த்தக்த்தம், ஸம்யக்தக்த்தம் என்று நான்குவிதமான விரணங்கள் உண்டாகின்றன. 77.

**நாடீ விரணம்:**—நாடீ விரணம்[4] ஐந்து விதம்; அவற்றுள் வாத பித்த கபங்களால் மூன்று நாடீ விரணங்களும், ஸந்நிபாதத்தினால் ஒரு விரணமும், சல்யத்தினால் ஒன்றும் உண்டாகின்றன. 78,79.

**பகந்தரம்:**—'பகந்தரம்'[5] என்கிற குதத்துவாரத்திற்கு அருகில் உண்டாகும் பிளவை எண் வகைப்படும்; அவற்றுள் வாயுவினால் உற்

---

1. கோஷ்டம்—குடல்; குடலுக்கு உண்டாகும் சிதைவானது 'கோஷ்டபேதம்' என்று சொல்லப்படுகிறது; அதில் குடல் அறுபடுமானால் 'சின்னாந்திரம்' என்றும், ஆஸநத்வாரம் முதலியவற்றின் மூலமாய் குடல் வெளியே சரிந்துபோமானால் 'நிஸ் ஸ்ருதாந்திரம்' என்றும் கூறப்படுகிறது.

2. அஸ்த்தி பங்கம்—எலும்பு முரிதல். பக்நப்ருஷ்டம்—இடுப்பு முரிதல்; விதாரிதம்—எலும்பு பிளந்துபோதல்; விவர்த்திதம்—எலும்புகள் திரும்பிப்போதல்; விச்லிஷ்டம்—நழுவுதல்; திர்யக்க்ஷிப்தம்—குறுக்காகச் சாய்தல்; அதோகதம்—மேலிருந்து கீழ்முகமாக நழுவுதல்; ஊர்த்வகதம்-கீழிருந்து மேலே ஏறி விடுதல்; ஸந்திபக்நம்—ஸந்தியில் ஒடிந்து அல்லது விலகிப் போதல்.

3. ப்லுஷ்டம்—கொப்புளிக்கச் செய்தல்; விதக்த்தம்—அதிகமாக எரிந்து போகுதல்; துர்தக்த்தம்-நன்றாக சுடப்படாமை; ஸம்யக்தக்த்தம்—நன்றாக முறைப்படி எரிக்கப்பட்டது.

4. நாடீ விரணம்—நரம்புச் சிலந்தி என்பதைப்போல் புரையோடும் விரணம்.

5. பகந்தரம்—இதைத் தமிழில் பவுத்திரம் என்கிறார்கள்.

பத்தியாவது 'சதபோநகம்' என்றும், பித்தத்தினல் உண்டாவது 'உஷ்ட்ரக்ரீவம்' என்றும், கபத்தினல் ஆவது 'பரிஸ்ராவீ' என்றும், வாத கபங்களால் உற்பத்தியாவது 'ருஜு' என்றும், வாத பித்தங்களால் உண்டாவது 'பரிக்ஷேபீ' என்றும், கப பித்தங்களால் உண்டாவது 'அர்சோஜம்' அல்லது 'மூலபகந்தரம்' என்றும், ஆகந்துகமான பகந்தரம் 'உந்மார்கி' என்றும், ஸந்நிபாதத்தினல் உண்டாவது 'சங்காவர்த்தம்' என்றும் வழங்கப்படுகின்றன[1]. 80—81½.

**உபதம்சம்:**—மர்மஸ்த்தானத்திலுண்டாகும் 'உபதம்சம்'[2] என்கிற வியாதி வாத பித்த கபங்களால் தனித்தனியாக ஒவ்வொன்றும், ஸந்நிபாதத்தினல் ஒன்றும், இரத்த தோஷத்தினல் ஒன்றும் ஆக ஐந்து விதமானது. 82.

**சூக தோஷம்:**—சூக தோஷம்[3] என்னும் மர்மஸ்த்தானத்திலுண்டாகும் விரணமானது இருபத்து நாலு விதமாம்; அவையாவன:—லிங்கார்சஸ், க்ரந்திதம், நிவ்ருத்தம், அவமந்தம், ம்ருதிதம், சதபோநகம், அஷ்டலிகா, ஸர்ஷபிகா, த்வக்பாகம், அவபாடிகா, மாம்ஸபாகம், ஸ்பர்சஹாநி, விருத்தமணி, உத்பவம், மாம்ஸார்புதம், புஷ்

1. (1) சதபோநகம்—அனேக முகங்களுடன் கூடியதும், நுரை போன்ற இரத்தம் வடிவதுமான விரணம்; (2) உஷ்ட்ரக்ரீவம்-ஒட்டையின் கழுத்தைப்போல் நீண்டு வளர்ந்த விரணம்; (3) பரிஸ்ராவீ-அதிகமாய் சீழ் வடியக்கூடிய விரணம்; (4) ருஜு-ஆஸன துவாரத்திற்கு முன்புறத்தில் குறுக்காக நீண்டு வளர்ந்திருப்பது; (5) பரிக்ஷேபீ-மிகவும் வலியுண்டுபண்ணும் விரணம்; (6) அர்சோஜம்.மூல முளையினல் நேரிடும் கட்டி; (7) உந்மார்கி-குதத்வாரத்தினுள் ஏதாவது சல்லியம் தாக்கி குதத்வாரச்சுவரில் துவாரம் ஏற்பட்டு உண்டாகும் சீழ்க்கட்டி; (8) சங்காவர்த்தம்-சங்கின் உட்பக்கத்துச் சுழியைப்போல் இருப்பது. [மாதவநிதானத்தில் ருஜு, பரிக்ஷேபீ, அர்சோஜம் என்கிற ஸம்யோகஜ பகந்தரங்கள் மூன்றும் கூறப்படவில்லை.]

2. உபதம்சம்—லிங்கப்புற்று என்று சொல்லப்படுகிறது.

3. சூக தோஷம்—மர்மஸ்த்தானத்தில் உண்டாகும் ஒரு வகையான மேஹவிரணம்; இதில் இரத்தமும் விகாரமடைந்து தோலைப் பற்றிய சில மேஹப்படைகளும் உண்டாகும்; சர்மத்தைப்பற்றி உண்டாகும் முள்ளுகளைப் போன்ற சில முளைகள் சூகங்கள் எனப்படும்.

கரிகா, ஸம்மூடபிடகா, அலஜீ, இரத்தார்புதம், வித்ரதி, கும்பிகா, திலகாலகம், நிருத்தப்ரகசம், பரிவர்த்திகா [1] என்பவையாம். 83—86.

1. (1) லிங்கார்சஸ்—மர்மஸ்த்தானங்களில் மூல முளைகளைப் போல் ஒன்றன்மேல் ஒன்ருக வளர்ந்து மிகத்துன்பமளிக்கும் முளைகள்; (2) க்ரத்திதம் - எப்பொழுதும் சூகம் என்கிற முளைகளால் லிங்கம் நிரம்பியிருக்கும் வியாதி ; (3) நிவ்ருத்தம்-அடிக்கடி யுண்டாவதும் மறைவதுமான சூக தோஷம் ; (4) அவமந்தம்—மிக வேதனை யுண்டாக்குபவையும், வெகு நீண்டு எண்ணிக்கையில் அதிகமாயிருப்பவையுமான கொப்புளங்களைப் போன்ற சூகங்கள் ; இதையே அதிமந்தம் என்று மாதவகரன் ; (5) ம்ருதிதம் - தினவெடுத்துத் தேய்ப்பதால் வீங்கிப்போய் விடும் சூகம் ; (6) சதபோநகம் - ஸூக்ஷ்மமான அநேக துவாரங்களுடன் கூடியது ; (7) அஷ்டீலிகா - சிறிதும் பெரிதுமாய் நீண்டு வளர்ந்திருப்பது ; (8) ஸர்ஷபிகா-வெள்ளைக்கடுகு போன்றது ; (9) த்வக் பாகம்-எரித்தலுடன் கூடிய ஜ்வரத்தை யுண்டாக்கும் சூகம் : (10) அவபாடிகா-லிங்கத்தின்மேல் பிளவுகளை யுண்டுபண்ணுவது ; (11)மாம்ஸபாகம் - மாம்ஸத்தைக் கெடுத்து நெகிழச் செய்யும் சூகம் ; (12) ஸ்பர்சஹானி - பரிசித்தால் உணர்ச்சி யில்லாத சூகம் ; (13) விருத்தமணி - மணியென்னும் முளையை மூடிவிடும் வியாதி : (14) உத்பவம்-பயறுகள் போன்ற சூக தோஷம் ; இதையே மாதவகரன் உத்தமா என்கிறுர் ; (15) மாம்ஸார்புதம் - லிங்கத்தின் மாம்ஸம் கெட்டுப்போய் குழல்போல் உண்டாகும் விரணம் ; (16) புஷ்கரிகா-அநேகம் சிறிய கொப்புளங்களுடன் கூடிய தாமரைப் பூவின் தாதுபோன்ற கட்டி ; (17) ஸம்மூடபிடகா - சுணையுள்ள வஸ்துக்களால் தேய்க்கப்படுவதால் லிங்கம் வீங்கிப்போய் உண்டாகும் சூக தோஷம் ; (18) அலஜீ—சிவப்பும் கறுப்புமான அநேக சிறிய விரணங்களுடன் கூடியது ; (19) இரத்தார்புதம் - சிவப்பும் கறுப்புமான அநேக பெரிய கொப்புளங்களுடன் கூடிய ஸஹிக்கக்கூடாத வேதனையைத் தரும் சூகதோஷம் ; (20) வித்ரதி - அநேக வர்ணமான சீழ் இரத்தங்கள் வெளியாகும் கட்டி ; (21) கும்பிகா-நாவற் கொட்டைப்போல் கறுப்பாயிருக்கும் விரணம் ; (22) திலகாலகம்-மாம்ஸங்களைக் கறுக்கச்செய்து சிதறப்பண்ணும் வியாதி ; (23) நிருத்த ப்ரகசம்—லிங்கத்வாரத்தை அடைத்துவிடும் சூக தோஷம்; (24) பரிவர்த்திகா-மணியின் மேலுள்ள சர்மத்தை மடித்துத் தோலுடன் தோலாய் சுருக்கிவிடும் சூக தோஷம். [இவற்றுள் லிங்கார்சஸ் என்பதை மாதவகரன் உபதம்சரோகத்தில் சேர்த்திருக்கிறுர் ; நிவ்ருத்தம், அவபாடிகா, விருத்தமணி, நிருத்தப்ரகசம், பரிவர்த்திகா இந்த ஐந்தும்

குஷ்டமும் வெண்குஷ்டமும்:—குஷ்டரோகம் பதினெட்டு விதமாம்; அவற்றுள் வாதத்தினால் காபாலிகம் என்கிற குஷ்டமும், பித்தத்தினால் உதும்பரம் என்பதும், கபத்தினால் மண்டலம் விசர்ச்சிகா என்பவையும், வாத பித்தங்களால் ருக்ஷஜிஹ்வமும், வாத கபங்களால் விபாதிகா-ஸித்மம்-ஏககுஷ்டம்-கிடிபம்-அலஸம் என்பவைகளும், கப பித்தங்களால் தத்ரு - பாமா—விஸ்போடம் - மஹாகுஷ்டம் - சர்மதளம்-புண்டரீகம்-சதாருகம் இவைகளும், ஸந்நிபாதத்தினால் காகணமும் உண்டாகின்றன.[1] ச்வித்ரம் என்கிற வெண்குஷ்டம் வாதஜம், பித்தஜம், கபஜம் என்று மூன்றுவிதம். 87—90.

---

மாதவநிதானத்தில் இப்பிரகரணத்தில் கூறப்படவில்லை; ஆகவே மாதவ நிதானத்தின்படி குஷ்ட ரோகம் பதினெட்டு விதமேயாம்.]

1. (1) காபாலிகம்—சர்மமானது வறட்சியுடன் கறுஞ்சிவப்பான மண் ஓடுபோல் ஆய்விடுவது; (2) உதும்பரம்—அத்திப்பழம் போன்றது; (3) மண்டலம்-வெளுப்பும் சிவப்பும் சிக்கிகிப்புமுள்ள வீக்கம்போல் சிறந்து மேலுக்குக் கிளம்பிய அடர்த்தியான படை; (4) விசர்ச்சிகா-கறுப்பாயும், தினவுள்ளதும், ஒருவித நீர்ப்பொருள் பொசிந்து கொண்டிருப்பதுமான படை; (5) ருக்ஷஜிஹ்வம்-சுற்றிலும் சிவந்து நடுவில் மேக வர்ணமுள்ள வெகு தடிப்பான குஷ்டம்; இதையே ருக்ஷயஜிஹ்வம் என்றும் சொல்வர்; (6) விபாதிகா—கை கால்களில் வெடிப்புகளை அதிகமாய் உண்டாக்குவது; (7) ஸித்மம்-சொறியும்போது வெளுப்பும் சிவப்புமான மெல்லிய தோல்களை உதிரச் செய்வதும், சுரைப்பூ போன்றதுமான படை; இது பெரும்பாலும் மாரில் உண்டாகிறது. (8) ஏககுஷ்டம்—மீன்செதிள் போன்றதாய் உடலெங்கும் பரவியிருக்கும் குஷ்டம்; (9) கிடிபம் அல்லது கிடிமம்-காய் காய்த்ததுபோல் கடினமும் கறுவலுமான படை; (10) அலஸம்-தினவுடன் கூடிய சிவந்த கட்டிகளையுடைய படை; (11) தத்ரு-படர் தேமல் எனப்படும் படை; (12) பாமா-ஸாதாரண சிரங்கு; (13) விஸ்போடம்-கொப்புளம்; (14) மஹா குஷ்டம்-இது வரையில் சொன்ன எல்லா இலக்ஷணங்களுடன் கூடியது; (15) சர்மதளம்-தினவு வலிகளுடன் கூடிய சிவந்த கொப்புளங்களையுடைய விரணம்; (16) புண்டரீகம்-தாமரைப்பூ போன்றது; (17) சதாருகம்-கறுஞ்சிவப்பான அனேக வர்ணங்களுடன் கூடிய அதிக எரித்தலைத் தரும் வியாதி; (18) காகணம்-காக்கணம் பூவுக்கு ஸமமான குஷ்டம்.

**க்ஷுத்ர ரோகங்கள்:**—இவை[1] அறுபது விதம்; அவையாவன:— சர்க்கரார்புதம், இந்திரவ்ருத்தா, பனஸிகா, விவ்ருதா, அந்த்ராலஜீ, வராஹதம்ஷ்ட்ரா, வல்மீகம், கச்சபீ, திலகாலகம், கர்தபீ, ரகஸா, யவப்ரக்யா, விதாரிகா, கதரம், மஷகம், நீலிகா, ஜாலகர்தபம், இரிவேல்லீ, ஜதுமணி, குதப்ரம்சம், அக்னிரோஹிணீ, ஸந்நிருத்தகுதம், கோடம், குநகம், அநுசயீ, பத்மினீ கண்டகம், சிப்பம், அலஸம், முகதூஷிகா, கக்ஷா, வ்ருஷ்ணகச்சு, கந்தம், பாஷாணகர்தபம், ராஜிகா, வ்யங்கம், விஸ்போடம், மஸூரிகா என்பவைகளும் இவற்றின் பிரிவுகளுமாம். [2] இவற்றுள் வ்யங்கமானது வாதஜம், பித்தஜம், கபஜம், ரக்தஜம் என்று நாலுவிதம்; விஸ்போடமானது வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்றுவிதமும், த்வந்த்வதோஷங்களால் மூன்றும், இரத்தத்தினுல் ஒன்றும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும் ஆக எண்வகைப்படும்; மஸூரிகையானது மூன்று தோஷங்களால் தனித்தனியே மூன்று விதமும், த்வந்த்வதோஷங்களால் மூன்றுவிதமும், ஸந்நிபாதத்தினுல் ஒரு விதமும், சர்மம்-இரத்தம்-மாம்ஸம்-மேதஸ்-அஸ்த்தி-மஜ்ஜா-சுக்ரம் இந்த தாதுக்களை ஆச்ரயித்து ஏழு விதமும் ஆகப் பதினைன்கு விதமாக உண்டாகின்றது; இவையனைத்தும் சேர்ந்து அறுபது விதங்களாகின்றன: மேதஸ் என்கிற கொழுப்பு-அஸ்த்தி-மஜ்ஜா-சுக்ரம் இவற்றைப்பற்றிய மஸூரிகாரோகம் நான்கும் அஸாத்தியம். 91—99½.

---

1. காரணம், குறிகள், சிகித்ஸை முதலியவை எவற்றிற்கு அற்பமாயிருக்கின்றனவோ அவை 'க்ஷுத்ரரோகங்கள்' எனப்படுகின்றன. புலி முதலிய கொடிய விலங்குகள் க்ஷுத்ரமிருகங்கள் எனப்படுவதுபோல், மிகத் தீய குணமுள்ள சர்க்கரார்புதம் முதலியவைகளும் 'க்ஷுத்ரரோகங்கள்' என்று கூறப்படுவதாகவும் சிலரது கருத்து.

2. (1) சர்க்கரார்புதம்—வாதம் கபம் இரண்டும் பிரகோபித்து மாம்ஸம்-ஸிரை—ஸ்நாயு இவைகளை உலர்த்தியும், அவற்றில் சீழ்க் கட்டிகளையும், பளிங்குகளைப் போன்ற கட்டிகளையும் உண்டுபண்ணி துர்க்கந்தமான சீழ் முதலியவற்றை வெளிப்படுத்துமானல் அது 'சர்க்கரார்புதம்' எனப்படும். (2) இந்திரவ்ருத்தா—தாமரைக்கிழங்கு போன்ற ஒருவித சீழ்க்கட்டி; இந்திரவித்தா என்றும் சொல்லப்படும்; (3) பனஸிகா—காதுகளுக்குச் சமீபத்தில் அதிக வேதனையை யுண்டுபண்ணிக்கொண்டு உற்பத்தியாகும் கட்டி; (4) பழுத்த அத்திப்பழம் போன்றதாய் அகன்ற முகத்துடன் கூடிய விரணம் 'விவ்ருதா'

என்று கூறப்படும். (5) அந்த்ராலஜீ—அடி சிறுத்து மேல்பாகம் விசாலித்து முகம் காணப்படாமல் உன்னதமாகக் கிளம்பியதான அதிக சீழில்லாத கட்டி. (6) வராஹதம்ஷ்ட்ரா—இரத்த வர்ணமான வட்டத்துடன் கூடியதும், சர்மத்தை வேகச் செய்வதும், கொடிய வேதனையைத் தருவதுமான விரணம். (7) வல்மீகம்—கழுத்து, அக்குள், துடையிடுக்கு முதலிய விடங்களில் கிரந்திகள் வீங்கிப்போய் அனேக த்வாரங்களுடன் கூடியதாயுண்டாகும் புற்றுபோன்ற சீழ்க்கட்டி. (8) கச்சபீ—வரிசையாக ஐந்தாறு இடங்களில் உற்பத்தியாகும் ஆமையைப்போன்ற கட்டி. (9) திலகாலகம்—தோலோடு தோலாய் எள்ளுகள்போல் கறுப்பாக உண்டாகும் சர்மரோகம். 10) கர்தபீ—அனேக சிறிய கட்டிகளுடன் கூடிய வீக்கம். (11) ரகஸா—வேதனையின்றியே சர்மத்தின்மேல் சிவப்பாகவோ கறுப்பாகவோ மேலோங்கி வந்திருக்கும் சர்மவியாதி; இதற்கே மாதவநிதானம் முதலியதில் 'வியச்சம்' எனப் பெயர். (12) யவப்ரக்யா—மாம்ஸத்தை ஆச்ரயித்து சாமையென்னும் தானியம்போல் கடினமாயுண்டாகும் பரு. (13) விதாரிகா-அக்குள் துடையிடுக்கு முதலான விடங்களில் இரத்தவர்ணமாய் கிலப்பனங்கிழங்குபோல் உண்டாகும் சிலந்தி. (14) கதரம்-கல்லுகள் அல்லது முள்ளுகள் தாக்குவதால் பாதங்களில் உண்டாகும் ஒருவித காய்ப்பு; ஆணிவிழுதல் என்றும் சொல்வது வழக்கம். (15) மஷகம்-வேதனையுண்டுபண்ணாமல் உளுந்துருவங்கொண்டு உண்டாகும் பரு. (16) நீலிகா—கறுத்தவர்ணமான பிறவி மறு. (17) ஜாலகர்தபம்—சீக்கிரம் பக்குவமாகாமல் ஜ்வரத்துடன் உண்டாகும் அக்னியம்மை போன்ற விரணம். (18) இரிவேல்லீ—தலையில் உருண்டையாயுண்டாகும் வெகு வேதனையைத் தரக்கூடிய கட்டி. (19) ஐந்து மணி அல்லது ஐதுமணி—தோலுடன் தோலாய் நோயில்லாமல் உண்டாயிருக்கும் பிறவித்தேமல். (20) குதப்ரம்சம்—சீதபேதி அதிஸாரம் முதலியவற்றால் வெகு துர்பலமான மனிதனுக்கு குதம் வெளிவருதல். (21) அக்னிரோஹிணீ—மஹத்தான ஜ்வரத்தையும் அக்னியைப்போல் உள்ளும் புறமும் தாபத்தையும் உண்டாக்கிக்கொண்டும், மாம்ஸத்தைப் பிளக்கச் செய்துகொண்டும் அக்குள் முதலான விடத்தில் உண்டாகும் பிளவை; இந்த நோய் ஒரு வாரத்திலாவது பத்து நாட்களிலாவது பதினைந்து நாட்களிலாவது மனிதனைக் கொன்றுவிடும். (இதுதான் ப்ளேக் என்று சொல்லப்படுவதாகச் சில வைத்தியர்களுடைய கருத்து). (22) ஸந்நிருத்த குதம்—குதம் என்கிற ஆஸனத்வாரம் வாயுவின் பிரகோபத்தால் சுருங்கிப்போய் மலம் தாராளமாய் வெளிவர முடியாமற்போய்விடுதல். (23) கோடம்—சரீரமெங்கும் தினவையுண்டு பண்ணிக்கொண்டு வியாபிக்கும் சிவந்த படை. (24)

**விஸர்ப்பம், உதர்தம், சீதபித்தம்:**—விஸர்ப்பரோகம் [1] வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்று விதமும், த்வந்த்வ தோஷங்களால் மூன்று விதமும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், அக்னி தாஹத்தினால் ஒரு விதமும், அபிகாதத்தினால் ஒருவிதமும் ஆக ஒன்பது விதமாகின்றது. பித்த ச்லேஷ்மங்களால் ' உதர்தம் ' என்கிற ரோகமும், [2] வாதபித்தங்களின் ஸம்பந்தத்தால் 'சீதபித்தம்' என்கிற ரோகமும் [3] உண்டாகின்றன. 100—102.

---

குநகம்—நகம் கறுத்தும் கடினமாகவும் ஆய்விடுவது. (25) அநுசயீ-பாதத்தின் உட்புறத்தில் ஆழமாக மாம்ஸங்களை ஆச்ரயித்து அதிக வலியைத் தராமல் உண்டாகும் ஒருவித வீக்கம். (26) பத்மிநீகண்டகம்—தாமரைத் தண்டிலுள்ள முள்ளுகளைப்போல் உண்டாகும் சர்ம வியாதி. (27) சிப்பம்-நகத்திற்குச் சுற்றிலுமுள்ள மாம்ஸத்தை ஆச்ரயித்து உண்டாகும் ஒருதவி விரணம்; இதையே நகச்சுற்று என்பார்கள். (28) அலஸம்-சேற்றுப்புண். (29) முகதூஷிகா--முகத்திலுண்டாகும் ஒருவிதமான தழும்பு. (30) கக்ஷா—அக்குளிலுண்டாகும் கறுநிறமான இரத்தக்கட்டி. (31) வ்ருஷணகச்சு—துடை யிடுக்குகளில் உற்பத்தியாகும் தினவை யுண்டுபண்ணுவதான படை. (32) கந்தம்-கக்ஷா என்னும் விரணத்தைப்போல் சரீரத்தில் வேறெங்கேயாவது உற்பத்தியாகும் பிளவை; இதையே 'கந்தமாலா' என்றும் சொல்வார்கள். (33) பாஷாணகர்தபம்—முகவாய்க்கட்டையின் பூட்டிலுற்பத்தியாகும் ஒரு கட்டி. (34) ராஜிகா—கடுகைப்போன்ற பரு; இதையே யுவாநபிடகா அல்லது யௌவனப் பரு என்பார்கள். (35) வ்யங்கம்-ஒவிருதமான தேமல். (36) விஸ்போடம்-கொப்புளம். (37) மஸூரிகா—அம்மை. [இவற்றுள் கோடம், விஸ்போடம், மஸூரிகா என்பவற்றை மாதவகரன் க்ஷுத்ரரோகத்தில் சேர்க்காமல் தனித்தனி அதிகாரத்தில் கூறியிருக்கிறார். வ்யங்கம் முதலியவை வாதாதி பேதங்களைக்கொண்டு பிரிக்கப்படுவதால் மற்ற 23 விதங்களான க்ஷுத்ரரோகங்களும் கணக்கிடப்படும்.]

1. விஸர்ப்பம்—அக்கி அல்லது அக்னியம்மை. மாதவநிதானத்தில் விஸர்ப்பம் ஏழுவிதமென்று சொல்லப்படுகிறது; அதில் அக்னிதாஹ அபிகாதங்களால் விஸர்ப்பம் கூறப்படவில்லை.

2. உதர்தம்—எப்பொழுதும் தினவுடனும் வீக்கத்துடனும் கூடிய செந்நிறமான படை.

3. உதர்தமென்னும் படையில் எரித்தலும் வறட்சியும் அதிகரித்தால் அது 'சீதபித்தம்' எனப்படும்.

**அம்ல பித்தம், வாத ரக்தம்:—**'அம்லபித்தம்' [1] என்னும் ரோகம் வாதத்திலால் ஒன்றும், கபத்திலால் ஒன்றும், வாத கபங்களால் ஒன்றும் ஆக மூன்று விதமாய் உண்டாகின்றது. 'வாதரக்தம்' என்கிற ரோகம்[2] வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்று, ஸந்நிபாதத்திலால் ஒன்று, த்வந்த்வ தோஷங்களால் மூன்று, இரத்த தோஷத்திலால் ஒன்று ஆக எட்டு விதம். 103—105.

**வாதரோகங்கள்:—**முற்காலத்திய முனிவர்களால் கூறப்பட்டபடி எண்பதுவித வாதரோகங்களும் அடியில் குறிக்கப்படுகின்றன; அவையாவன—[3] ஆக்ஷேபகம், ஹநுஸ்தம்பம், ஊருஸ்தம்பம், சிரோக்ரஹம், பாஹ்யாயாமம், அந்தராயாமம், பார்ச்வசூலம், கடிக்ரஹம், தண்டாபதாநகம், கல்லீ, ஜிஹ்வாஸ்தம்பம், அர்திதம், பக்ஷாகாதம், க்ரோஷ்டுக சிர்ஷம், மந்யாஸ்தம்பம், பங்கு, கலாயகஞ்ஜம், தூநீ, பிரதிதூநீ, கஞ்ஜம், பாதஹர்ஷம், க்ருத்ரஸீ, விச்வாசீ, அபபாஹுகம், அபதாநகம், விரணாயாமம், வாதகண்டகம், அபதந்திரகம், அங்கபேதம், அங்கசோஷம், மிந்மிநம், கத்கதம், அஷ்டீலா, பிரத்யஷ்டீலா, வாமநம், குப்ஜம், அங்கபீடா, அங்கசூலம், ஸங்கோசம், ஸ்தம்பம், ரௌக்ஷ்யம், அங்கபங்கம், அங்கவிப்ரம்சம், விட்க்ரஹம், பத்தவிட்கம், மூகம், அதிஜ்ரும்பா, அத்யுத்காரம், அந்திரகூஜநம், வாதப்ரவ்ருத்தி, ஸ்புரணம், ஸிராபூரணம், கம்பம், கார்ச்யம், ச்யாவம், ப்ரலாபம், க்ஷிப்தமூத்திரம், நித்திராநாசம், ஸ்வேதநாசம், துர்பலம், பலக்ஷயம், சுக்ராதிப்ரவ்ருத்தி, சுக்ரகார்ச்யம், சுக்ரநாசம், சித்தாநவஸ்திதி, சித்தகாடிந்யம், ஆஸ்யவைரஸ்யம், கஷாய வக்த்ரம், ஆத்மாநம், பிரத்யாத்மாநம், சைத்யம், ரோமஹர்ஷம், பீருத்வம், தோதம், கண்டூ, ரஸாஜ்ஞதா, சப்தாஜ்ஞதா, பிரஸுப்தி, கந்தாஜ்ஞத்வம், நேத்திரக்ஷயம் என்பவையாம். 106—114½.

---

1. அம்லபித்தம்—நெஞ்செரிவு அல்லது குலை யெரிவு; மாதவநிதாநத்தில் பித்தகபங்களால் நான்காவது அம்லபித்தம் ஒன்று கூறப்படுகிறது.

2. வாதரக்தம்—குஷ்டத்தைச் சேர்ந்த ஒரு ரோகம்.

3. (1) ஆக்ஷேபகம்—வலி அல்லது இசிவு. (2) ஹநுஸ்தம்பம்-மோவாய்க்கட்டைப் பிடிப்பு. (3) ஊருஸ்தம்பம்-தொடைகளில்

வெகு வேதனையுண்டு பண்ணுவதான ஜ்வரத்துடன் கூடிய வாத நோய். (4) கிரோக்ரஹம்-தலையை அசைக்கமுடியாமலுண்டாகும் பிடிப்பு. (5) பாஹ்யாயாமம்-முதுகுப் பக்கமாய் வளையச்செய்யும் வலி. (6) அந்தராயாமம் - வயிற்றுப்பக்கமாய் வளையச்செய்யும் வலி. (7) பார்ச்வசூலம்-பக்கச்சூலை. (8) கடிக்ரஹம்-இடுப்புப் பிடித்தல். (9) தண்டாபதாநகம் - கொம்பைப்போல் சரீரத்தை விறையச்செய்யும் ஒருவித வலி. (10) கல்லீ அல்லது கல்வீ-பாதம், துடை, கை இவற்றை முடக்கிவிடும் வாயு. (11) ஜிஹ்வாஸ்தம்பம்-நாக்கு அசைக்கக் கூடாமற் போய்விடுவது. (12) அர்திதம்-முகத்தை அல்லது வாயை ஒரு பக்கமாக இழுக்கும் ஒருவித பார்ச்வவாயு. (13) பக்ஷாகாதம்-பார்ச்வவாயு. (14) க்ரோஷ்டுகசீர்ஷம்—முழங்கால் வீங்கிப்போய் நோயையுண்டுபண்ணும் ஒரு வாதரோகம்; இதை நரித்தலைவாயு வென்றும் சொல்வர். (15) மந்யாஸ்தம்பம்-கழுத்து நரம்புச்சுளுக்கு. (16) பங்கு-வாயுவினால் இரண்டு காலும் ஸ்வாதீனமில்லாமற்போய் முடவனாய் விடுதல். (17) கலாயகஞ்ஜம்-கால்களுடைய பூட்டுகள் தளர்ந்துபோய் தடுமாறிக்கொண்டே நடத்தல். (18) தூநீ-குடலின் மேற்புறத்தில் ஆரம்பித்து ஆஸனத்வாரம் முதலியவற்றைப் பிளப்பதுபோல் கீழ் நோக்கிச் செல்லும் வாதநோய். (19) பிரதிதூநீ-ஆஸனத்வாரத்திலிருந்து ஆரம்பித்து குடலினுள்ள பக்வாசயம் என்கிற பாகத்தை நோக்கி மேல்பக்கமாக நோவை யுண்டுபண்ணும் வாதரோகம். (20) கஞ்ஜம்-இடுப்பில் ஸம்பந்தப்பட்ட வாயுவானது துடையிலுள்ள கண்டரங்களை இழுத்து கால் அசைக்கக்கூடாமற் போவது. (21) பாதஹர்ஷம்-பாதங்களிற் பரிச உணர்ச்சியற்று ஒருவித சிலிர்க்கையுண்டாவது. (22) கருத்ரஸீ-இடுப்பிலிருந்து ஆரம்பித்து துடை, முழங்கால், பாதம் இவற்றை நோக்கிக் கிரமமாக நோவை யுண்டுபண்ணிக்கொண்டு செல்லும் ஒருவித வாயு. (23) விச்வாசீ-க்ருத்ரஸீ மாதிரியே கையிலுண்டாகும் வாயு. (24) அபபாஹுகம்-கைகளிலுள்ள இரத்த நாடிகள் சுருங்கிப்போய் கை ஸ்வாதீனமற்று விடுவது. (25) அபதாநகம்-இருதயம், சிரஸ், கன்னம் முதலிய அவயவங்களில் வெகு வேதனையுண்டாய், கண்களும் மற்ற அவயவங்களும் முற்றிலும் அசைவற்று ஞாபகம் தடுமாறி, கூக்குரலிட்டுக்கொண்டு விழச்செய்யும் ஒருவித வலி. (26) விரணாயாமம்-விரணவேதனையைப் பொறுக்க முடியாமலுண்டாகும் வலி; (இது மாதவநிதாநம் முதலியவற்றில் கூறப்படவில்லை.) (27) வாதகண்டகம்-தரையில் நடக்கப் போகாமல் குதிகால்களில் உண்டாகும் நோய். (28) அபதந்திரகம் - அபதாநகத்திற்குள்ள குறிகளே சிறிது குறைவாகக் காணும் ரோகம்; (மாதவகரன் அபதாநக அபதந்திரகங்கள்

இரண்டும் ஒன்றே என்று கூறுகிறார்.) (29) அங்கபேதம்—ஒவ்வோரவயவத்தையும் பிளப்பதுபோல் உண்டாகும் நோய். (30) அங்கசோஷம்—அவயவங்கள் போஷணைகளைக் கிரஹிக்கமுடியாமல் சுஷ்கித்தல். (31) மிங்மிநம்—வாய் குளறுதல். (32) கத்கதம்—தெற்றுவாய். (33) அஷ்டீலா-குடலுக்குள் நாபிக்குக் கீழே வாதம் அதிகரித்து குன்மத்தைப்போல் உண்டாகும் ஒருவித கட்டி. (34) பிரத்யஷ்டீலா-குடலில் குறுக்காக நீண்டு உண்டாயிருக்கும் கட்டி. (35) வாமநம்-குள்ளம். (36) குப்ஜம் - கூன். (37) அங்கபீடா - உடம்பெல்லாம் முறுக்கிப் பிழியப்படுவதுபோன்ற நோய். (38) அங்கசூலம்-ஊசியினால் குத்தப்படுவதுபோன்ற நோய். (39) ஸங்கோசம் - அவயவங்கள் குறுகிப்போதல். (40) ஸ்தம்பம் - அவயவங்கள் அசைக்கமுடியாமற்போகும் திமிர்வாயு. (41) ரௌக்ஷ்யம் - சரீரத்தில் பசையற்றுப்போதல். (42) அங்கபங்கம் - அவயவம் சிதைவுறுதல். (43) அங்கவிப்ரம்சம்-அவயவம் இடம்விட்டு நெழுகிப் போதல். (44) விட்க்ரஹம்-மலபந்தம். (45) பத்தவிட்கம்-மிகவும் முதிர்ந்துபோன மலபந்தம் (46) மூகம்-ஊமை. (47) அதிஜ்ரும்பா-மிதமிஞ்சிய கொட்டாவி. (48) அத்யுத்காரம்-மிதமிஞ்சிய ஏப்பம். (49) அந்திரகூஜநம்-வயிற்றிலுண்டாகும் இரைத்தல். (50) வாதப்ரவ்ருத்தி - குடலிலிருந்து மேலும் கீழுமாய் எப்பொழுதும் வாயு வெளிவருதல். (51) ஸ்புரணம்-கை கால் முதலிய அவயவங்களின் துடிப்பு. (52) விராபூரணம்- விரைகளென்னும் இரத்தக்குழாய்களில் இரத்தம் மிதமிஞ்சி நிரம்பியிருத்தல். (53) கம்பம்-சரீரநடுக்கம். (54) கார்ச்யம் - இளைத்தல். (55) ச்யாவம்-கறுத்தல். (56) பிரலாபம் - தன்னையும் அறியாமல் பிதற்றல். (57) க்ஷிப்தமூத்ரம்-தனக்குத் தெரியாமல் அல்லது அடக்கச் சக்தியில்லாமல் மூத்திரம் வெளிவருதல். (58) நித்திராநாசம்-தூக்கமின்மை. (59) ஸ்வேதநாசம் - வியர்வையின்மை. (60) துர்பலம்-பலயீனம். (61) பலக்ஷயம்-பலம் அடியோடு அழிதல். (62) சுக்ராதிப்ரவ்ருத்தி-இரேதஸ் அதிகமாய் வெளிவருதல். (63) சுக்ரகார்ச்யம்-இரேதஸ் குறைவுபடுதல். (64) சுக்ரநாசம் - சுக்ரம் அடியோடு அழிந்துபோதல். (65) சித்தாநவஸ்திதி - சித்தப்ரமை. (66) சித்தகாடிந்யம்-எவ்வளவு கஷ்டத்திலும் மனமிளகாமை. (67) ஆஸ்யவைரஸ்யம்-அரோசகம். (68) கஷாயவக்த்ரம்-எந்த சுவையும் துவர்ப்புபோல் உணரப்படுதல். (69) ஆத்மாநம் - வயிற்றுப்பொருமல். (70) பிரத்யாத்மாநம்-நாபிக்கு அருகில் மட்டும் உண்டாகும் பொருமல். (71) சைத்யம்-உடலில் உஷ்ணம் குறைந்துவிடுதல். (72) ரோமஹர்ஷம் - மயிர்ச்சிலிர்க்கை (73) பீருத்வம் - திடீரென்று பயப்படுந்தன்மை. (74) தோதம்-குத்தல். (75) கண்டூ-தினவு.

பித்த ரோகங்கள்:—பிறகு பித்தத்தினாலுண்டாகும் நாற்பது வித ரோகங்கள் கூறப்படுகின்றன; அவையாவன—தூமோத்காரம், விதாஹம், உஷ்ணாங்கத்வம், பிரமம், காந்திஹாநி, கண்டசோஷம், முகசோஷம், அல்டசுக்ரத்வம், திக்தாஸ்யதா, அம்லவக்த்ரத்வம், ஸ்வேதஸ்ராவம், அங்கபாகதா, க்லமம், ஹரிதவர்ணத்வம், அத்ருப்தி, பீததேஹத்வம், ரக்தஸ்ராவம், அங்கதாரணம், லோஹகந்தாஸ்யதா, தூர்க்கந்தத்வம், பீதமூத்ரத்வம், அரதி, பீதமலத்வம், பீததர்சநம், பீதநேத்ரதா, பீததந்தத்வம், சீதேச்சை, பூதநகத்வம், தேஜோத்வேஷம், அல்பநித்ராத்வம், கோபம், கார்ச்யம், பிந்நமலத்வம், ஆந்த்யம், உஷ்ணச்வாஸம், உஷ்ணமூத்ரத்வம், உஷ்ணமலத்வம், தமோதர்சநம், பீதமண்டலதர்சநம், பித்தநிஸ்ஸரணம் [1] என்பவையாம். 115—121.

---

(76) ரஸாஜ்ஞதா-சுவையறியக்கூடாமை. (77) சப்தாஜ்ஞதா - சப்தமுணரக்கூடாமை. (78) பிரஸுப்தி-பரிசவுணர்ச்சி யிழத்தல். (79) கந்தாஜ்ஞத்வம்-மணமறிய முடியாமை. (80) நேத்திரக்ஷயம் - கண் தெரியாமை. [மாதவநிதாநம் முதலியவற்றில் கூறப்பட்டவைகளை விட சில வாதரோகங்கள் வேறு விதமாகக் கூறப்பட்டிருக்கின்றன.]

1. (1) தூமோத்காரம்—புகைவதுபோல ஏப்பம் விடுதல். (2) விதாஹம்-எரிவு. (3) உஷ்ணாங்கத்வம்-சரீரம் சூடாயிருத்தல். (4) பிரமம்-தலைச்சுற்றல். (5) காந்திஹாநி-சரீரத்தில் ஒளி மழுங்குதல். (6) கண்ட சோஷம் - தொண்டைக்கம்மல். (7) முகசோஷம் - முகம் உலர்ந்துபோதல். (8) அல்பசுக்ரத்வம்- இரேதஸ் மிகக் குறைவுபடுதல். (9) திக்தாஸ்யதா-வாய்க் கசப்பு. (10) அம்லவக்த்ரத்வம் - வாய்ப்புளித்தல். (11) ஸ்வேதஸ்ராவம்-வியர்வை அதிகமாகக் கசிதல். (12) அங்கபாகதா - சரீர வேக்காடு. (13) க்லமம்-சோர்வு. (14) ஹரிதவர்ணத்வம்-தேஹம் இலைப்பசுமை நிறங்கொள்ளல். (15) அத்ருப்தி-எதிலும் திருப்தியின்மை. (16) பீத தேஹத்வம் - தேஹம் மஞ்சள் நிறமாதல். (17) ரக்தஸ்ராவம் - சரீரத்திலிருந்து இரத்தங் கசிதல். (18) அங்கதாரணம்-சரீரம் பிளவுபடுதல். (19) லோஹகந்தாஸ்யதா-வாயில் இரும்பு வாஸனையுண்டாவது. (20) தூர்கந்தத்வம் - சரீரத்தில் தூர்க்கந்தமுண்டாவது. (21) பீதமூத்ரத்வம்-மூத்ரம் மஞ்சள் நிறமாயிறங்குதல். (22) அரதி-புரட்டல். (23) பீதமலத்வம்-மலம் அதிக மஞ்சள் நிறமாவது. (24) பீததர்சநம்-பார்க்கப்படுவதெல்லாம் மஞ்சள் நிறமாகத் தோற்றல். (25) பீதநேத்ரதா-கண் மஞ்சள் நிறமாயிருப்பது. (26) பீத தந்தத்வம்-பற்கள் மஞ்சள் நிற

**கப ரோகங்கள்:**—கபத்தினல் இருபதுவித ரோகங்கள் உண்டாகின்றன. அவையாவன:—தந்த்ரா, அதிநித்ரை, கௌரவம், முகமாதுர்யம், முகலேபம், ப்ரஸேகம், ச்வேதாவலோகநம், ச்வேதமலம், ச்வேதமூத்ரம், ச்வேதாங்கம், சைத்யம், உஷ்ணேச்சை, திக்தகாமிதா, மலாதிக்யம், சுக்ரபாஹுல்யம், பஹுமூத்ரம், ஆலஸ்யம், மந்தபுத்தி, த்ருப்தி, குர்க்குரவாக்யம் [1] என்பவையாம். 122—124½.

**இரத்த வியாதிகள்:**—இரத்த தோஷத்தினல் பத்துவித ரோகங்கள் உண்டாவதாக மொழியப்படுகிறது; அவையாவன:—கௌ

---

மாதல். (27) சீதேச்சை-குளிர்ச்சியில் விருப்பம் அதிகரித்தல். (28) பீதகத்வம்-கண்கள் மஞ்சள் நிறமாவது. (29) தேஜோத்வேஷம்-பிரகாசமான வெளிச்சங்களில் வெறுப்பு. (30) அல்ப நித்ராத்வம்-தூக்கம் குறைந்து போதல் (31) கோபம்-சினம். (32) கார்ச்யம்-இளைத்துப் போதல். (33) பிந்நமலத்வம்-திரவமாக விரேசனமாகுதல். (34) ஆந்த்யம்-குருட்டுத்தனம். (35) உஷ்ணச்வாஸம்-வெகு சூடாக மூச்சுவிடுதல். (36) உஷ்ண மூத்ரத்வம்-மூத்திரம் வெகு சூடாக வருதல். (37) உஷ்ணமலத்வம்-மலம் மிகச் சூடாகப் போதல். (38) தமோதர்சநம்-கண்பார்வை இருளடைதல். (39) பீதமண்டல தர்சநம்-ஆகாயத்தில் மஞ்சள் நிறமான ஏதோ வட்டங்கள் காணப்படுதல். (40) பித்தநிஸ்ஸரணம்— பித்தம் அதிகமாகச் சுரப்பது.

1. (1) தந்த்ரா-சோம்பல் (2) அதிநித்ரை-மிதமிஞ்சிய தூக்கம். (3) கௌரவம்-தன் சரீரம் தனக்கே பாரமாகத் தோற்றல். (4) முகமாதுர்யம்-எப்பொழுதும் வாய் இனிப்பாயிருத்தல். (5) முகலேபம்-வாய் குழ குழப்பாயிருத்தல். (6) ப்ரஸேகம்-உமிழ்நீர் அதிகமாகச் சுரத்தல். (7) ச்வேதாவலோகநம்—எப்பொருளும் வெண்மையாக இருப்பது போலத் தோற்றுதல். (8) ச்வேதமலம்—மலம் வெளுப்பாயிருத்தல். (9) ச்வேதமூத்ரம்—மூத்திரம் வெளுத்துப்போதல். (10) ச்வேதாங்கம்—உடல் வெளிறுதல். (11) சைத்யம் –உடலில் சீதம் அதிகரித்தல். (12) உஷ்ணேச்சை—சூட்டில் விருப்பம். (13) திக்தகாமிதா-கசப்பில் விருப்பம். (14) மலாதிக்யம்-மலம் அதிகமாதல். (15) சுக்ரபாஹுள்யம்—சுக்ரம் அதிகமாகச் சுரத்தல் (16) பஹுமூத்ரம்-மூத்திரம் அதிகமாயிறங்குதல். (17) ஆலஸ்யம்-மந்தமாகக் காரியம் செய்தல், (18) மந்த புத்தி-மிகக்குறைவான புத்தி. (19) த்ருப்தி-வயிறு நிரம்ப ஆஹாரமுண்டது போல் எப்பொழுதும் உணர்ச்சி. (20) குர்க்குர வாக்யம்-குரகுரவென்கிற குரலுடன் பேசுதல்.

ரவம், ரக்தமண்டலம், ரக்தநேத்ரம், ரக்தமூத்ரம், ரக்தஷ்டீவநம், ரக்த பிடகா, ஔஷ்ண்யம், பூதிகந்தம், [1]பீடை, பாகம்[1] என்பவையாம். 125—126½.

**முக ரோகங்கள்:**—முகத்தினுள் எழுபத்தினொன்கு வியாதிகள் உண்டாவதாக மூத்தோரால் மொழியப்பட்டிருக்கின்றது ; அவற்றுள் உதடுகளில் பதினொரு ரோகங்கள் உண்டாகின்றன ; அவையாவன— வாத பித்த கபங்களால் தனித்தனியே மூன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், இரத்தத்தினால் ஒன்றும், க்ஷதம், மாம்ஸார்புதம், கண்டோஷ்டம், ஜலார்புதம், மேதோர்புதம், அர்புதம் என்பவையுமாம். [2] பற்களில் பத்துவித வியாதிகள் உற்பத்தியாகின்றன ; அவை: தாளநம், க்ருமிதந்தம், தந்தஹர்ஷம், கராளம், தந்தசாலம், சர்க்கரா, அதிதந்

---

1. (1) கௌரவம்:—உடல் பருத்து பாரமாயிருப்பது போல் தோற்றம். (2) ரக்தமண்டலம்—உடலில் இரத்த வர்ணமான படைகள் உண்டாவது. (3) ரக்தநேத்ரம்—கண் இரத்தவர்ணமாக ஆவது. (4) ரக்தமூத்ரம்—மூத்திரத்துடன் இரத்தம் கசிதல். (5) ரக்தஷ்டீவநம்—உமிழ்நீரில் இரத்தம் வருதல். (6) ரக்தபிடகா—இரத்தக் கட்டி. (7) ஔஷ்ண்யம்—தேஹத்தில் சூடு அதிகரித்தல். (8) பூதிகந்தம்—சரீரத்தில் துர்நாற்றமுண்டாவது. (9) பீடை—சரீரத்தில் நோவுண்டாவது. (10) பாகம்—சரீர வேக்காடு. [வாத பித்த கபங்களைப் போல் இரத்தமும் நான்காவதான ஒரு தோஷமென்று சிலரது கருத்தானதால், இரத்தத்தினாலும் ஸ்வதந்திரமாய் சில வியாதிகள் உண்டாகின்றன என்று இங்கு கூறப்பட்டது. மாதவகரன் முதலியவர்கள் வாதத்தினால் பிரத்தியேகமாக 80 வியாதிகள் உண்டாவதாகக் கூறியிருக்கின்றாரேயன்றி, பித்தம் முதலியவற்றால் இவ்வித வியாதிகள் பிரத்தியேகமாய் உண்டாவதாகச் சொல்லவில்லை.]

2. க்ஷதம்:—அடிபடுவதால் உண்டாகும் விரணம். மாம்ஸார்புதம்—புரை சூழலைப்போல் உதடு வீங்கி விடுவது. கண்டோஷ்டம்—உதடு வெடித்துப்போதல். ஜலார்புதம்—உள்ளே துர்நீர் தங்கிய புரை குழல். மேதோர்புதம்—கொழுப்புத் தங்கிய புரை குழல். அர்புதம்—ஸாதாரண புரை குழல்.

தம், ச்யாவதந்தம், தந்தபேதம், கபாலிகா என்பனவாம்.[1] பல்லீறுகளில் பதின்மூன்று வியாதிகள் உற்பத்தியாகின்றன; அவை சீதாதம்; உபகுசம், தந்தவித்ரதி, புப்புடம், அதிமாம்ஸம், விதர்ப்பம், ஸௌஷிரம், மஹாஸௌஷிரம், வாதநாடீ, பித்தநாடீ, கபநாடீ, ஸந்நிபாதநாடீ, ரக்தநாடீ என்பவையாம்.[2] நாக்கிலுண்டாகும் வியாதிகள் ஆறு; அவை வாதஜம், பித்தஜம், கபஜம், அலஸம், அதிஜிஹ்வம், உபஜிஹ்வா என்பவையாம்.[3] அர்புதம், தாலுபிடகா, கச்சபீ, தாலு ஸம்ஹதி, களசுண்டீ, தாலுசோஷம், தாலுபாகம், புப்படம் என்று தவடையில் எட்டு

---

1. (1) தாளநம்:—பல் பிளக்கப்படுவதுபோன்ற வேதனை. (2) க்ருமிதந்தம்-பற்களில் கிருமியுண்டாதல். (3) தந்தஹர்ஷம்-பற்சிலிர்க்கை. (4) கராளம்—கோரப்பற்களைப் போல் பல் ஒழுங்கினமாதல். (5) தந்தசாலநம்-பற்கள் ஆட்டங்கொள்ளல். (6) சர்க்கரா—பற்களில் கறள் கட்டுதல். (7) அதிதந்தம்—பற்கள் ஒன்றுமேலொன்றாய் முளைத்தல். (8) ச்யாவதந்தம்—கறுத்த பற்கள். (9) தந்தபேதம்—பற்களில் இடிப்பது போன்ற நோய். (10) கபாலிகா—சர்க்கரையே விருத்தியாய் பற்களை விட்டுப் பிளந்து கழன்றுவிடும் நிலைமைக்கு வந்துவிடுவது.

2. சீதாதம்:— பல்லீறுகளிலிருந்து இரத்தமும், மிருதுவான சிறிய துர்க்கந்த மாம்ஸங்களும் அடிக்கடி வெளியில் சிதறுதல். உபகுசம்—பல்லீறுகள் வெந்துபோய் எரிச்சலெடுத்து பற்கள் ஆட்டங்கொள்ளும் ரோகம். தந்த வித்ரதி—பல்லீறுகளின் குழிப்புண். புப்புடம்—இரண்டு அல்லது மூன்று பற்களின் ஈறுகள் வீக்கங்கொண்டு உண்டாகும் ஒரு கட்டி. அதிமாம்ஸம்—கடைவாய்ப் பல்லில் அதிக நோயை யுண்டாக்கி உமிழ் நீரை விசேஷமாகச் சுரப்பிக்கும் பெரிய கட்டி. விதர்ப்பம்—பற்களின் அடியிலுள்ள மாம்ஸங்கள் தேய்ந்து ஈறுகளில் அதிக வலியை யுண்டாக்கும் வியாதி. ஸௌஷிரம்—ஈறுகளின் அடியில் உண்டாகும் புரையோடும் கட்டி. மஹாஸௌஷிரம்—ஸௌஷிரமே விருத்தியாய் ஈறுகளிலிருந்து பற்கள் சிதறிப் போகும் நிலைமைக்கு வந்து தவடைகள் பிளக்கப்படுவது போன்ற நோய். வாதநாடீ, பித்தநாடீ, கபநாடீ, ரக்தநாடீ—இவைகள் அந்தந்த தோஷத்தினால் பல்லீறுகளில் உண்டாகும் புரையோடு கூடிய விரணங்கள்.

3. அலஸம் அல்லது அலாஸம்:—நாக்கின்மேல் உண்டாகும் ஒருவித கட்டி. அதிஜிஹ்வம்—உள்நாக்கு வளருதல். உபஜிஹ்வா—நாக்கின் அடியில் அதைப்போல் உண்டாகும் ஒருவித கட்டி.

வியாதிகள் உண்டாகும்.[1] வாதரோஹிணீ, பித்தரோஹிணீ, கபரோஹிணீ, ஸந்நிபாதரோஹிணீ, மேதாரோஹிணீ, ப்ருந்தம், கௌளகம், களவித்ரதி, ஸ்வரபங்கம், துண்டிகேரீ, சதக்நீ, சாலூகம், அர்புதம், களாயு, வலயம், வாதகண்டம், கபகண்டம், மேதோகண்டம் என்று தொண்டையில் பதினெட்டு வியாதிகள் உண்டாகும்.[2] வாத பித்த கபங்களாலும், இரத்தத்தினாலும், ஸந்நிபாதத்தினாலும் ஐந்து ஆஸ்யபாகங்களும், பூத்யாஸ்யம் என்கிற ஒரு வியாதியும், ஊர்த்வகதம், அர்புதம் என்கிற இரண்டும் ஆக எட்டு வியாதிகள் முகத்தினுள்

1. (1) அர்புதம்.—தவடையின் மத்தியில் தாமரைப்பூ போல் உண்டாகும் வீக்கம். (2) தாலுபிடகா—தவடையிலுண்டாகும் கட்டி. (3) கச்சபீ—ஆமையுருவமான அதிக வலியில்லாத வீக்கம்; புட்டாளம்மை யென்று பாமரஜனம் சொல்லும். (4) தாலு ஸம்ஹதி—தாடையினிடையில் வலியில்லாமல் மாம்ஸம் பருத்துப் போவது. (5) களசுண்டீ—தாடையின் அடியில் துருத்தியைப் போல் உண்டாகும் நீண்ட வீக்கம். (6) தாலு சோஷம்—தவடை உலர்ந்து போவது; இதில் நோயுமுண்டு. (7) தாலுபாகம்—தாடையின் வேக்காடு. (8) புப்படம்—தாடையில் இலந்தங்கொட்டையைப் போல் உண்டாய் நீடித்திருக்கும் சிறிய வீக்கம்.

2. ரோஹிணீ:—அனேக சிறிய முளைகளுடன் கூடியதாய் தொண்டையின் துவாரத்தை மறைத்து விடுமாறு வளர்ந்த கிரந்தி ஸம்பந்தமான வீக்கம். ப்ருந்தம்—அந்த வீக்கத்திலேயே விசேஷ எரித்தலும், அதனால் ஜ்வரமும் தொடருமானால் ப்ருந்தம் என்று சொல்லப்படும். கௌளகம்—அன்ன பானங்கள் வாயு இவை போகும் மார்க்கத்தைத் தடுக்கும் ஜ்வரத்துடன் கூடிய வீக்கம். களவித்ரதி—தொண்டையனைத்திலும் வியாபித்த சீழ்க்கட்டி. ஸ்வரபங்கம்—மூச்சுவிட முடியாமல் தொண்டையிலுண்டாகும் ஒருவித கம்மல். துண்டிகேரீ—எரித்தலுடன் கண்டத்தை வேகச் செய்யும் புண். சதக்நீ—மாம்ஸ ஸம்பந்தமான முளைகள் விருத்தியாய் அவற்றால் தொண்டையினுள் வர்த்தியைப் போலுண்டாகும் மிக வேதனையுண்டுபண்ணுவதான விரணம். சாலூகம்—சிறிய முளைகளுடன் கூடிய கிரந்தி. அர்புதம்—குழல்போன்ற விரணம். களாயு—கண்டத்தினுள் கடினமாயுண்டாகும் நெல்லிக்காய்களைப் போன்ற வீக்கம். வலயம்—கபம் பிரகோபமடைவதாலான வலயம் போன்ற வீக்கம். கண்டம்—தொண்டையிலுண்டாகும் மிகப் பெரிதான ஒருவித கட்டி.

உண்டாகின்றன.1 இவ்விதம் முகவியாதிகள் எழுபத்தைன்காகும். 127—141.

**கர்ண ரோகங்கள்**:—செவிகளுக்குள் வாதம், பித்தம், கபம் இரத்தம், ஸந்நிபாதம் இவற்றால் ஐந்துவித ரோகங்களும், வித்ரதி, சோதை, அர்புதம், பூதிகர்ணம், கர்ணார்சஸ், கர்ணஹல்லிகா, பாதிர்யம், தந்த்ரிகா, கண்டூ, சஷ்குலீ, க்ருமிகர்ணம், கர்ணநாதம், ப்ரதீநாஹம் என்று பதின்மூன்றும் ஆகப்பதினெட்டு வியாதிகள் உண்டாகும்.2

---

1. ஆஸ்யபாகம்—வாயின் உட்புறத்திலுண்டாகும் வேக்காடு. பூத்யாஸ்யம்—வாயிலுண்டாகும் துர்நாற்றம். ஊர்த்வகதம்—வாயின் மேற்புறத்திலுண்டாகும் வேக்காடு.

[பற்களில் எட்டுவித வியாதிகளும், உதடுகளில் எட்டு வியாதிகளும், பல்லீறுகளில் பதினைந்தும், தாடைகளில் ஒன்பதும், நாக்கில் ஐந்தும், கண்டத்தினுள் பதினேழும், முகத்தினுள் எல்லா இடத்திலும் சேர்ந்து மூன்றும் ஆக அறுபத்தைந்து வியாதிகளே முகத்தினுள் உற்பத்தியாவதாக மாதவநிதாநம் முதலியவற்றில் கூறப்படுகிறது. இந்த கிரந்தத்தில் முகரோகங்களில் பல வியாதிகளின் பெயர் வேறு விதமாயிருப்பதுடன், மாதவநிதாநம் முதலியவற்றில் கூறப்பட்டிருப்பதினும் அதிகமாகவும் கூறப்பட்டன.]

2. சோதை:—ஸாதாரண வீக்கம். பூதிகர்ணம்—செவிக்குள் சீழ்க் கொள்ளல். கர்ணார்சஸ்—காதுக்குள் உண்டாகும் மூளைகள் கர்ணஹல்லிகா—காதின் உட்புறத்திலுண்டாகும் ஒருவித இரத்தக் கட்டி; குறும்பியென்று சிலர். பாதிர்யம்—செவிட்டுத்தனம். தந்த்ரிகா—வீணையின் த்வனியைப்போல் எப்பொழுதும் செவியில் மெல்லிய சப்தம் உண்டாவது. கண்டூ—அதிகமான தினவு. சஷ்குலீ—காதின் சங்குபோன்ற உள்ளவயவத்திலுண்டாகும் விரணம். க்ருமிகர்ணம்—காதுக்குள் க்ருமிகள் உற்பத்தியாவது. கர்ணநாதம்—எப்பொழுதும் காதுக்குள் கோஷமுண்டாவது. ப்ரதீநாஹம்—காதிலுண்டான குறும்பி மிகத்திரவமாகப் போய் மூக்கு வழியாக வெளிவருவது; அப்பொழுது ஒரு பக்கத்தில் தலையில் அதிக வலியுண்டாகும். [மாதவநிதாநத்தில் ரக்தஜகர்ணரோகம் கூறப்படவில்லை. மாதவநிதாநத்தில் குறிப்பிடப்பட்ட கர்ணசூலை, கர்ணக்ஷ்வேடம், கர்ணஸ்ராவம், கர்ணகூதம், கர்ணத்தில் குளவி முதலியவற்றின் பிரவேசம், கர்ணபாகம் இவைகளுக்குப் பதிலாக இங்கு சோதை, அர்புதம், கர்ணார்சஸ், கர்ணஹல்லிகா, தந்த்ரிகா, சஷ்குலீ இவை கூறப்பட்டன.]

கர்ணபாளீ யென்கிற வெளிக்காதில் உத்பாதம், பாளி சோஷம், விதாரீ, துக்கவர்த்தநம், பரிபோடம், லேஹ்ஹீ, பிப்பலீ என்று ஏழு வித ரோகங்கள் உற்பத்தியாகின்றன.[1] காதின் அடிப்புறத்தில் வாத பித்த கபங்களால் மூன்றும், இரத்தத்தினால் ஒன்றும், ஸந்நிபாதத் தினால் ஒன்றும் ஆக ஐந்துவித வியாதிகள் உண்டாகின்றன. 142—146.

**நாஸா ரோகங்கள்**:—மூக்கில் வாதம், பித்தம், கபம், ஸந்நிபா தம், இரத்தம் இவற்றால் ஐந்துவிதமான பிரதிச்யாயம் என்கிற ரோக மும், பீநஸம், பூதிநஸ்யம், நாஸார்சஸ், ப்ரம்சது, க்ஷவம், நாஸாநாஹம், பூதிரக்தம், அர்புதம், துஷ்டபீநஸம், நாஸாசோஷம், நாஸாபாகம், பூய ஸ்ராவம், தீப்தகம் என்கிற வேறு பதின்மூன்று வியாதிகளும் ஆகப் பதினெட்டு ரோகங்கள் நாசியில் உண்டாகும்.[2] 147—148½.

---

1. உத்பாதம்:—கனமான ஆபரணாதிகளைப் பூணுவதால் அல்லது அடிபடுவதால் காதுகள் கன்றிப்போயுண்டாகும் வீக்கம். பாளி சோஷம்—பாளியென்கிற வெளிக்காது மிகவும் வறண்டு போதல். விதாரீ-காது வெடித்துப்போயுண்டாகும் விரணம். துக்க வர்த்தநம்—த்வாரமுண்டாக்கி வளர்க்கும்போது உண்டாகும் வீக் கம். பரிபோடம்—காதில் கருஞ்சிவப்பாக உண்டாகும் வீக்கம். லேஹ்ஹீ—காதிலுள்ள மாம்ஸங்களை அழித்துவிடும் விரணம். பிப்பலீ— காதின் மேற்புறத்தில் கரடு முரடாக உண்டாகும் சர்மவியாதி. [மாதவ நிதானத்தில் பாளிசோஷம், பரிபோடம், உத்பாதம், உந்மந் தகம், லேஹ்ஹீ அல்லது பரிலேஹ்ஹீ என்று ஐந்துவித பாளீ விரணங்கள் கூறப்பட்டுள. காதின் அடிப்புறத்தில் ஐந்துவித வியாதிகள் உண் டாவதாகவும் அதில் மொழியப்படவில்லை; ஆகவே மாதவநிதானத் தில் இருபத்திரண்டு கர்ணரோகங்களும், இந்த கிரந்தத்தில் முப்பது கர்ணரோகங்களும் மொழியப்படுகின்றன; ஸுச்ருத ஸம்ஹிதையில் இருபத்தெட்டுவித கர்ணரோகங்கள் கூறப்பட்டிருக்கின்றன.]

2. பிரதிச்யாயம்:—சிரஸ்ஸுக்குள் வாயு பிரகோபமடைந்து, நாசியின் அடியிலுள்ள கபம், பித்தம் முதலியது சிரஸ்ஸை நோக்கி இழுக்கப்படுவதால் உண்டாகும் வியாதி. பீநஸம்—மூக்கில் எப்பொழு தும் கபம் சீழ் முதலியது கசிந்துகொண்டிருப்பதுடன், எரித்தலும், மூக் கினுள் பொருமலும், வாஸனையறிவதில் உணர்ச்சியின்மையு முண்டா னல் பீநஸம் எனப்படும். பூதிநஸ்யம்-மூக்கில் சீழுண்டாவது, அல்லது துர்நாற்றமுண்டாவது. நாஸார்சஸ்-மூக்கினுள் உண்டாகும் முளை

**சிரோ ரோகங்கள்:**—சிரஸ்ஸைப்பற்றி யுண்டாகும் வியாதிகள் பத்து விதம்; அவற்றுள் வாதத்தினுல் அர்த்தாவபேதமும், பித்தத்தினுல் சிரஸ்தாபமும், ஒருவித ரோயும், கபத்தினுல் ஒன்றும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும், இரத்தத்தினுல் ஒன்றும், ஸூர்யாவர்த்தம் என்பது ஒன்றும், தலையின் அதிர்ச்சியினுல் ஒன்றும், க்ருமியினுல் ஒன்றும், சங்ககம் என்பது ஒன்றுமாம். [1] 149—150½.

**கபால ரோகங்கள்:**—மண்டையில் உபசீர்ஷகம், அரும்ஷிகா,

---

கள். ப்ரம்சது-சிரஸ்ஸுக்கு அடியில் சேர்ந்து தோய்ந்திருக்கும் கபம் வெயிலின் வெப்பத்தினுல் திரவமாகவும் முறிந்தும் போய் நாசியின் வழியாகப் பெருகும் வியாதி; வெயிலில் செல்லுவதால் ஜலதோஷமுண்டாவதாகக் கூறுவதற்குக் காரணம் இதுவே. க்ஷவம்—தும்மல். நாஸாநாஹம்—நாசியின் பொருமல். பூதிரக்தம்-சீழும் இரத்தமும் கலந்து நாசியின் மூலமாய்க் கசிதல். துஷ்ட பீநஸம்-அடிக்கடி மூக்கிலிருந்து முற்கூறியபடி தோஷங்கள் கசிவதும் உலர்வதுமாயிருந்து மூக்கில் பொருமலும் துர்நாற்றமும் அதிகரிக்கும் வியாதி. நாஸாசோஷம்-நாசியில் பசையற்றுப் போவது. நாஸாபாகம்-நாசி வெப்பங்கொள்வது. பூயஸ்ராவம்-சீழ் வெளிவருதல். தீப்தகம்-மூக்கில் அழற்சி அதிகரித்து ச்வாஸமும் வெகு சூடாக வெளிவருதல். [பீநஸம், பூதிநஸ்யம், நாஸாபாகம், ஆகந்துபூயரக்தம், தோஷஜ பூயரக்தம், தோஷஜ க்ஷவது, ஆகந்து க்ஷவது, ப்ரம்சது, தீப்தகம், ப்ரதீநாஹம், நாஸாஸ்ராவம், நாஸாசோஷம், ஐந்துவித ப்ரதிச்யாயம், ஆகந்துக ப்ரதிச்யாயம், ஏழுவித அர்புதம், நான்கு சோதைகள், நான்குவித அர்சஸ், நான்குவித இரத்த பித்தங்கள்; ஆக முப்பத்தேழு வித நாஸா ரோகங்கள் மாதவநிதாநத்தில் கூறப்பட்டுள. ஸுச்ருதத்தில் முப்பத்தோருவித நாஸாரோகங்கள் கூறப்பட்டிருக்கின்றன.]

1. அர்த்தாவபேதம்—ஒற்றைத் தலைவலி. சிரஸ்தாபம்-தலையில் உண்டாகும் அழற்சி. ஸூர்யாவர்த்தம்-ஸூர்யன் உதயமாகும் போது ஆரம்பித்து மத்தியான்னம் வரையில் க்ரமமாக அதிகரித்து வெயில் தாழத்தாழ குறைந்துவரும் தலைவலி. சங்ககம்-கன்னத்தில் ஸஹிக்கக் கூடாமலுண்டாகும் வலி.

வித்ரதி, தாருணம், பிடிகா, அர்புதம்; இந்த்ரலுப்தம், கலதி, பலிதம் என்று ஒன்பது வியாதிகள் உண்டாகும்[1] 151—152.

**நேத்திர ரோகங்கள்:**—கண்களில் தொண்ணூற்று நான்கு வியாதிகள் உற்பத்தியாகின்றன; அவற்றுள் வர்த்மா என்கிற கண் சவ்வில் உண்டாவது இருபத்திநான்கு; அவையாவன.—க்ருச்சிரோந்மீலநம், பக்ஷ்மபாதம், கபோத்க்லிஷ்டம், லோஹிதம், அருந்திமேஷம், ரக்தோத்க்லிஷ்டம், குகூணகம், பக்ஷ்மார்சஸ், பக்ஷ்மரோதம், பித்தோத்க்லிஷ்டம், போதகீ, க்லிஷ்டவர்த்மா, பஹலம், பக்ஷ்மோத்ஸங்கம், அர்புதம், கும்பிகா, ஊிகதாவர்த்மா, லகணம், அஞ்ஜநநாமிகா, கர்தமம், ச்யாவ வர்த்மா, பிஸவர்த்மா, அலஜீ, உத்க்லிஷ்ட வர்த்மா என்பனவாம்.[2] வர்த்மாவும் கண்ணின் வெள்ளை விழியும்

---

1. உபசீர்ஷகம்—தலையின்மேல் மற்றொரு சிறிய தலையைப் போல் உண்டாகும் ஒருவித வளர்ச்சி. அரும்ஷிகா—அதிகமாக ஊன் ஜலத்தைப் பெருக்கும் அநேக கண்களுடையவையான தலையிலுண்டாகும் புண்கள். தாருணம்-மண்டையிலுள்ள சர்மம் அடிக்கடி வெடித்துப் போதல். பிடிகா-சிறிய கட்டி. இந்த்ரலுப்தம்-தலை மயிர் உதிர்ந்து போதல். கலதி—வழுக்கைத் தலை. பலிதம்-மயிர் நரைத்தல். [கபால ரோகங்களை மாதவகரன் க்ஷுத்ரரோக நிதாநத்தில் சேர்த்திருக்கிறார்.]

2. க்ருச்சிரோந்மீலநம்—இமைகளை கஷ்டப்பட்டுத் திறக்க-வேண்டியதான வியாதி; பக்ஷ்மபாதம்-இமைகளில் தின வெடுத்து அதிலுள்ள மயிர்கள் உதிர்ந்து விடுவது; கபோத்க்லிஷ்டம்-கபம் பிரகோபமடைந்து கண்கள் கலங்கிப் போகும் வியாதி; லோஹிதம் வர்த்மா என்கிற சவ்வின் இடையில் மிருதுவாகவும் சிவப்பாகவும் உண்டாகும் சிறிய முளை; இதற்கே சோணிதார்சஸ் எனவும் பெயர்; அருந்திமேஷம்-வாயுவின் பிரகோபத்தினால் கண்ணிமைகள் தானே எப்பொழுதும் அசைவது; ரக்தோத்க்லிஷ்டம்-வர்த்மாவில் இரத்தம் அதிகமாய் ஓடுவதால் உண்டாகும் வீக்கம்; குகூணகம் அல்லது குஞ்சநம்—வர்த்மாவானது சுருங்கிப் போவதால் கண் திறக்கக்கூடாமல் போவது; பக்ஷ்மார்சஸ்-வெள்ளரிக்காயின் சிறிய விதைகள்

சேரும் ஸந்தியில் ஜலஸ்ராவம், கபஸ்ராவம், ரக்தஸ்ராவம், பர்வணீ, பூயஸ்ராவம், க்ருமிக்கிரந்தி, உபநாஹம், அலஜீ, பூயாலஸம் என்று ஒன்

போல் உண்டாகும் முளைகள்; இதற்கே அர்சோவர்த்மா என்றும் பெயர்; பக்ஷ்மரோதம்—இமைகளின் உட்புறங்களில் மயிர்கள் முளைத்து கண்களில் அரிப்பையும் வீக்கத்தையும் உண்டு பண்ணும் வியாதி; இதற்கே மாதவநிதானத்தில் பக்ஷ்மகோபம் என்றும் வேறு சில நூல்களில் உபபக்ஷ்ம என்றும் பெயர் வழங்கப்படுகிறது; பித்தோத்க்லிஷ்டம்—பித்தத்தினால் கண்களில் உஷ்ணம் அதிகரித்தல்; போதகீ—கண்ணீரையும் தினவையும் வலியையும் அதிகமாயுண்டாக்கிக் கடுகுகளைப்போலுண்டாகும் சிறிய கொப்புளங்கள்; க்லிஷ்டவர்த்மா — அதிக வேதனையின்றியே ம்ருதுவாகவும் சிவப்பாகவும் திடீரென்று உண்டாகும் ஸாதாரண வீக்கம்; பஹலம்—வர்த்மாவில் எல்லா இடத்தையும் வியாபித்து வர்த்மாவின் வர்ணமாகவே உண்டாகும் கடினமான கொப்புளங்கள்; பக்ஷ்மோத்ஸங்கம்—வர்த்மாவுக்கு உட்புறத்திலும் வெளிப்புறத்திலு முண்டாகும் புரைகள் போன்ற முகங்களுடன் கூடியதும், தினவுள்ளதுமான பெரிய கொப்புளம்; குப்பிகா—மாதளம் விதைகளைப்போன்ற கொப்புளம்; வீகத வர்த்தமா—கடினமாகவும், சிறியவைகளாகவும் உண்டாகும் பிடகைகள்; லகணம்—கடினமாகவும், பழுக்குந்தன்மை யற்றதும், பெரிதாகவும் உண்டாகும் வேதனையற்றதான கொப்புளம்; இதற்கு மாதவநிதானம் முதலியவற்றில் நகணம் எனப் பெயர்; அஞ்ஜநாமிகா—குத்தல் அழற்சியுடன் கூடிய சிவந்த சிறிய கொப்புளம்; கர்தமம்—க்லிஷ்டவர்த்மாவைப் போலவே இருப்பதுடன் துர்நீர்கள் விசேஷமாகக் கசிந்து கொண்டிருக்கும் வியாதி; சியாவவர்த்மா—வர்த்மாவுக்கு வெளிப்புறத்திலும் உட்புறத்திலும் கன்றிப்போனதுபோல் கறுஞ்சிவப்பாயுண்டாகும் வீக்கம்; பிஸவர்த்மா—வர்த்மாவுக்கு உட்புறத்தில் துவாரங்களும் வெளிப்புறத்தில் வீக்கமும் உண்டாய் ஒருவித திரவத்தைக் கசியச் செய்யும் வியாதி; அலஜீ—சிவந்த கோடுகளுடன் கூடியதாய் வர்த்மாவில் உண்டாகும் வியாதி; இதை மாதவகரன் ஸந்தியிலுண்டாகும் ரோகங்களில் சேர்த்திருக்கிறார். உத்க்லிஷ்டவர்த்தமா—வேதனையில்லாமல் வெளிப்புறத்தில் வீக்கத்துடன் கூடியதாய் ஒருவித துர்நீரைக் கசியச் செய்யும் வியாதி.

பது வியாதிகளுண்டாகின்றன. [1] சுக்லம் என்கிற வெண்மண்டலத்தில் ஸிரோத்பாதம், ஸிராஹர்ஷம், ஸிராஜாலம், சுக்லிகா, சுக்லார்மம், அதிமாம்ஸார்மம், ப்ரஸ்தார்யர்மம், பிஷ்டகம், ஸிராபிடிகா, கபக்கிரந்தி, அர்ஜுநம், ஸ்நாய்வர்மம், சோணிதார்மம் எனப் பதின்மூன்று வியாதிகளுண்டாகும். [2] கிருஷ்ணபாகம் என்கிற கருவிழியில் சுத்த சுக்லம்,

---

1. ஜலஸ்ராவம்—ஸந்தியின் இடையிலிருந்து மஞ்சள் நிறமான நீர்வடிதல்; இதை பித்தஸ்ராவம் என்று மாதவநிதானம்; கபஸ்ராவம்—பிசுபிசுப்புள்ள வெண்மையான நீர் வடிதல்; ரக்தஸ்ராவம்—இரத்தம் வடிதல்;பர்வணீ—குத்தல் அழற்சிகளுடன்கூடிய கொடி கொடியாகப் படர்ந்திருக்கும் வியாதி; பூயஸ்ராவம்—சீழ் போன்ற துர்நீர் வடிதல்; கிருமிக்கிரந்தி—வர்த்மாவிலும் இமைகளிலும் தினவை யுண்டாக்கும் ஸூக்ஷ்ம கிருமிகள் சேர்ந்து ஸந்தியில் கிரந்தியைப் போலுண்டாகும் வீக்கம்; உபநாஹம்—ஸந்தியிலுள்ள கிரந்திகள் வலியில்லாமல் வீக்கங்கொள்வது; அலஜீ — வர்த்மாவிலுண்டாகும் அலஜியைப் போன்றதே; மாதவநிதானத்தில் ஸந்தியில் மாத்திரமே அலஜீ உண்டாவதாகக் கூறப்படுகிறது; பூயாலஸம்—ஸந்தியிலுண்டான வீக்கம் பக்குவமான பின் குத்தலுடன் சீழைப் பொசியச் செய்யும் வியாதி.

2. ஸிரோத்பாதம்—வேதனையுடன் அல்லது வேதனையில்லாமல் செந்நிறமாயுண்டாகும் கொடிபோன்ற மாசுகளால் கண் சிவப்பு நிறங் கொள்ளல்; ஸிராஹர்ஷம்—ஸிரோத்பாதம் முதிர்ந்து போவதால் கண்களிலிருந்து செந்நிறமான நீர் வடிதல்; ஸிராஜாலம் — இரத்தநாடிகள் பெருத்துப்போய் வெண்மண்டலத்தில் வலையைப்போல் சிக்குள்ளவைகளாக காணப்படுவது; சுக்லிகா—சிறிது கறுநிறமாகவும் மாம்ஸவர்ணமாகவும் அல்லது வெண்ணிறமாகவும் உண்டாகும் பொட்டுகள்; இதையே சுக்திகா என்று மாதவகரன் முதலியவர் கூறியிருக்கின்றனர்; சுக்லார்மம்—மிருதுவாகவும் வெண்மையாகவும் உண்டாகும் ஒருவித பிந்து; அதிமாம்ஸார்மம்—பெரிதாகவும் மிருதுவாகவும் கறுநிறமாகவும் கல்லீரலைப் போலுண்டாகும் வியாதி; ப்ரஸ்தார்யர்மம் — கறுஞ்சிவப்பாக முதலில் உற்பத்தியாய் அப்பால் கிரமமாக நேத்திரம் முடிய வியாபிக்கும் பிந்து; பிஷ்டகம்—சாம்பல் பூத்தது போன்ற மாசுகள் உண்டாவது; ஸிரப்பிடிகா—ஸிரைகள் என்னும் இரத்தநாடிகள் பருத்துப்போல கொப்புளங்களைப் போலுண்டாகும் வியாதி; கபக்கிரந்தி—வெண்கராநிறமாகவோ வெண்ணிறமாகவோ உண்டாகும் மிருதுவான கிரந்தி

விராசுக்லம், க்ஷதசுக்லம், அஜகா, விராஸங்கம் என்று ஐந்துவித வியாதிகள் உண்டாகும்.[1] கண்களில் காசம் என்கிற ரோகம் வாதம், பித்தம், கபம், ஸம்ஸர்கம், ஸந்நிபாதம், இரத்தம் இவற்றால் ஆறு விதமாக உற்பத்தியாகின்றது.[2] திமிரரோகமும் வாத பித்த கபங்களாலும், ஸம்ஸர்க்கத்தினாலும், ஸந்நிபாதத்தினாலும், இரத்தத்தினாலும் ஆக ஆறு விதமாக உற்பத்தியாகும்.[3] லிங்கநாசம் என்பது வாத பித்த கபங்களால் மூன்று விதமும், ஸம்ஸர்க்கத்தினால் ஒன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், இரத்தத்தினால் ஒன்றும், மற்றொரு ரோகத்திற்கு உபத்திரவரூபமாக ஒன்றும் ஆக ஏழுவிதமாம்.[4] த்ருஷ்டி பாகத்தில் பித்தவிதக்த்த த்ருஷ்டி, அம்ல விதக்த்தத்ருஷ்டி, உஷ்ண விதக்த்த த்ருஷ்டி, நகுலாந்த்யம், தூஸராந்த்யம், ராத்ரியாந்த்யம்,

---

அர்ஜுநம்—முயலின் இரத்தத்திற்குச் சமானமான நிறமுடையதாய் உண்டாகும் ஒரு பிந்து; ஸ்நாய்வர்மம்—கடினமானதும், மாம்ஸத்தில் வியாபித்ததும், பசையற்றதுமான ஒரு பொட்டு; சோணிதார்மம்—வெண்மண்டலத்தில் தாமரைப்பூவைப் போல் மிருதுவாக உண்டாய் மாம்ஸவளர்ச்சியைத் தருவதான வியாதி.

1. சுத்த சுக்லம்—வெகு வெண்ணிறமாகப் பூவிழுதல்; விரா சுக்லம்—விரைகள் சிறுத்துப்போவதாலுண்டாகும் வெண்ணிறமான மாசு; க்ஷதசுக்லம்—காயம்படுவதாலுண்டாகும் குறி; அஜகா—பிசு பிசுப்புள்ள கண்ணீரை வடியச் செய்வதும், செந்நிறமானதும், ஆட்டுப்புழுக்கையைப் போன்றதுமான காய்ப்பு; இதையே அஜகாஜாதம் என்றும் கூறுவர்; விராஸங்கம்—விரைகளென்னும் நாடிகள் ஒன்று மேலொன்றாகச் சேர்ந்து வளர்ந்து விடுதல்.

2. காசம்—காய் காய்ப்பது. அல்லது பூவிழுவல். ஸம்ஸர்கம்—இரண்டு தோஷங்கள் ஒன்றாக விகாரமடைதல்; ஸம்ஸர்கத்தினால் மூன்று விதமான வியாதிகள் உண்டாகுமாயினும், ஸம்ஸர்கம் என்கிற ஒரு பொதுப் பெயரால் அம்மூன்றும் குறிக்கப்படுவதைக் கருதி, மூன்றும் ஒரே ரோகமாகக் கூறப்பட்டதென்க.

3. திமிரம்—திருஷ்டியை மறைத்துவிடும் வியாதி.

4. லிங்கநாசம்—தர்சனசக்தியை அடியோடு அழித்துவிடும் வியாதி. [உபஸர்க்கத்தினால் உண்டாகும் லிங்கநாசம் மாதவகரால் குறிக்கப்படவில்லை].

ஹ்ருஸ்வ த்ருஷ்டி, கம்பீர த்ருஷ்டி என்று எட்டுவிதமாம்.[1] அதி மந்தம்[2] என்பது வாதஜம், பித்தஜம், கபஜம், ரக்தஜம் என்று நான்கு விதம். அபிஷ்யந்தமும்[3] வாத பித்த கப ரக்தங்களால் நான்கு விதமா யுண்டாகும். நேத்திரத்தில் எல்லா பாகங்களிலும் பொதுவாக உண்டாகக்கூடிய ரோகங்கள் எண்வகைப்படும்; அவையாவன:—வாத விபாயயம், அல்பசோபம், அந்யதோ வாதம், பாகாத்யயம், சுஷ்காக்ஷி

1. பித்த விதக்த்த த்ருஷ்டி—பிரகோபமடைந்த பித்தம் நேத்திரத்தின் மத்தியில் வியாபித்து த்ருஷ்டியை மஞ்சள் நிறமாகச் செய்து பார்க்கப்படும் வஸ்துக்களையெல்லாம் மஞ்சள் நிறமாகத் தோற்றச்செய்வது; அம்ல விதக்த்த த்ருஷ்டி—கண்களில் அம்லமான நீருண்டாய், அதன் ஸம்பந்தத்தினுல் த்ருஷ்டிபாகம் அழற்சி கொள்வது; உஷ்ணவிதக்த்த த்ருஷ்டி—அதிக உஷ்ண வஸ்துக்களை அல்லது அதிக தாபமான வெயிலைப் பார்ப்பதால் த்ருஷ்டி பாகம் கெட்டுப்போவது; நகுலாந்த்யம்—பகலில் பற்பல வர்ணமண்டலங்கள் ஆகாயத்தில் வியாபித்திருப்பதுபோல் தோற்றுவதும், கீரிப்பிள்ளையின் கண்ணைப்போல் காணப்படுவதுமான த்ருஷ்டி; தூஸராந்த்யம்—பார்க்கப்படுவதெல்லாம் புகைபடிந்ததுபோல் தோற்றுவது; ராத்ரியாந்த்யம்—இரவிற் கண் தெரியாமை; ஹ்ருஸ்வ த்ருஷ்டி—வெகு ஸமீபத்திலிருப்பதைத் தவிர தூரத்திலிருப்பவை காணமுடியாமற் போவது; பகலில் எந்த வஸ்துவும் வெகு சிறிதாகக் காணப்படுமென்றும் சிலரது கொள்கை; கம்பீர த்ருஷ்டி—வாயு பிரகோபமடைந்து த்ருஷ்டிபாகம் மிகவும் சிறுத்துப் போய், ஆழமான பிரதேசத்திலிருந்து வேதனை யுண்டாகும் வியாதி. த்ருஷ்டி—கருவிழிக்கு நடுவில் பாபா என்று சொல்லப்படும் பாகம்.

2. அதிமந்தம்—ஒற்றைத் தலைவலியுடன் நேத்திரகோளம் வேருடன் பிடுங்கப்படுவதுபோல் உண்டாகும் வெகு துன்பமளிக்கக் கூடிய ரோகம்.

3. அபிஷ்யந்தம்—கண்களில் பலவித துர்நீர்கள் சேர்ந்து கண்ணீர் வடிதல்.

பாகம், சோபம், அத்யுஷிதம், ஹதாதிமந்தம் என்பனவாம்.[1] 153—170½.

**நபும்ஸக தோஷங்கள்.**—புருஷர்களுக்கு உண்டாகும் நபும் ஸகதோஷம் ஐந்து விதம்; அவ்வித தோஷத்துடன் கூடியவர் ஈர்ஷ்

---

1. வாத விபர்யயம்—வாயு பிரகோபித்து நேத்திரங்களிலும் புருவங்களிலும் மாற்றி மாற்றி வலியை யுண்டுபண்ணுவது. அல்ப சோபம்—கண்களில் உஷ்ணம் அதிகரித்து சிறிது வீக்கமுண்டாவது. அந்யதோவாதம்—காது, செவியின் மூலபாகம், சிரஸ், மோவாய்க் கட்டை, இன்னும் வேறு இடங்களிலும் கோளாறடைந்த வாயுவானது கண்களிலும் புருவங்களிலும் அதிக வேதனை யுண்டுபண்ணும் வியாதி. பாகாத்யயம்—அரிப்பு, அதிக வீக்கம், வேதனை, வேக்காடு இவற்றுடன் கூடியதாய் நேத்திரம் கனிந்த அத்திப்பழம்போல் ஆய் விடுவது. சுஷ்காக்ஷிபாகம்—பார்வை மங்காலகப் போய், வர்த்மா என்கிற சவ்வு மிக வறண்டுபோவது. சோபம்—ஸாதாரண வீக்கம். அத்யுஷிதம்—கண்ணைச்சுற்றிலும் சுறுஞ்சிவப்பான நிறம் படர்ந்து, கண் மூடியவும் அழற்சி அதிகமாயுண்டாய், கண்ணீரும் விசேஷமாகப் பெருகும் வியாதி. ஹதாதிமந்தம்—வாயுவின் பிரகோபத்தாலுண் டான அதிமந்தம் என்கிற வியாதி முதிர்ந்து விடுவதால் மஹத்தான வேதனைகள் நேத்திரத்திலுண்டாகும்; அது அஸாத்தியமான வியாதி யானதால் ஹதாதிமந்தம் என்று வழங்கப்படுகிறது.

[வர்த்மாவில் இருபத்தொரு வியாதிகளும், சுக்லமென்கிற வெண் மண்டலத்தில் பதினொரு வியாதிகளும், ஸந்திகளில் ஒன்பது வியாதிகளும், கிருஷ்ணமென்கிற கருவிழியில் நான்கும், நேத்திரம் முழுமையிலும் சேர்ந்து பதினேழும், த்ருஷ்டிபாகத்தில் பன்னி ரண்டும், கண்களுக்கு வெளிப்புறத்தில் அவற்றைச் சார்ந்து இரண் டும் ஆக எழுபத்தாறு நேத்திரரோகங்கள் மாதவகரன் முதலியவர் களால் கூறப்பட்டிருக்கின்றன.]

யகன், ஆஸேக்யன், கும்பீகன், ஸௌகந்தி, ஷண்டன் என்று கூறப்படுவர்.[1] 171½.

**சுக்ர தோஷங்கள்.**—சுக்ரதோஷங்கள் எண் வகைப்படும்; அவையாவன:—வாத பித்த கபங்களால் மூன்றும், ஸம்ஸர்க தோஷங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினால் ஒன்றும், இரத்தத்தினால் ஒன்றுமாம்; இவற்றுள் இரத்தத்தினால் உண்டாவதற்கு குணபகந்தி யென்றும், வாத கபங்களின் சேர்க்கையினாலுண்டாவதற்கு பூயதோஷமென்றும், வாத பித்தங்களால் உண்டாவதற்கு க்ஷீணதோஷமென்றும், வாத கபங்களால் உண்டாவதற்கு கிரந்திலம் என்றும், ஸந்நிபாதத்தினாலுண்டாவதற்கு மலதோஷமென்றும் பெயர் வழங்கப்படும்.[2] 172—173½.

---

1. ஈர்ஷ்யகன்— தனக்குச் சுயமாய் வீர்யமில்லாமல் பிறர் புணர்வதையறிந்து பொறாமை மேலிட்டு அவ்விஷயத்தில் பிரவ்ருத்திப்பவன்; ஆஸேக்யன் — மிகவும் சொற்பமான சுக்ரசோணிதமுள்ள தாய் தந்தையருக்குப் பிறந்ததால் சுக்ரமில்லாமலிருப்பவன்; கும்பீகன்— சொற்பமான சுக்ரமுடையவனாயிருந்தும் இந்த்ரியநிக்ரஹம் பண்ண சக்தியற்றவனாய் புருஷரிடமும் புணரவிரும்புபவன்; ஸௌகந்தி அல்லது ஸௌகந்திகன்—பற்பல ரோகங்களால் கோளாறடைந்த கர்ப்பாசயத்திலிருந்து பிறந்தவன்; ஷண்டன் — ருதுகாலத்தில் ஸ்த்ரீஸம்போகத்தினால் பிறக்கும் பிள்ளை.

2. குணபகந்தி—சவத்திற்கு ஸமானமான துர்நாற்றமுள்ளது; பூயதோஷம்—சீழ்போன்றது; கிரந்திலம்—தோய்ந்துபோய் கட்டியானது. [இங்கு இரத்த தோஷத்தினால் சுக்ரத்திற்கு தோஷம் உண்டாவதாகக் கூறாமல், வாத கபங்களாலேயே குணபகந்தி, கிரந்திலம் என்கிற இரண்டு சுக்ர தோஷங்களும் உண்டாவதாகக் கூறப்பட்டிருக்கிறது; ஆனால் வாத கபங்களாலேயே இரண்டு தோஷங்களும் உண்டாவதாகச் சொல்வது யுக்தமாகத் தோற்றாததுடன், ஸுச்ருதம் முதலிய இதர கிரந்தங்களில் இரத்தத்தினால் குணப தோஷம் உண்டாவதாகப் பிரயோகிக்கப் பட்டிருப்பதையும் கருதி இங்கு இரத்த தோஷத்தினாலேயே குணபகந்தி உண்டாவதாக வரையப்பட்டது.]

**ருது தோஷங்கள்:**—இனி பிராசீன சாஸ்திர முறைப்படி ஸ்த்ரீகளுக்குண்டாகும் ரோகங்கள் கூறப்படுகின்றன:—ருது காலத்தில் வெளியாகும் சோணிதம் என்கிற உதிரத்தைப் பற்றிய வியாதிகள் வாத பித்த கபங்களால் மூன்றும், பூயகந்தி, குணபகந்தி, கிரந்திலம், க்ஷீணம், புரீஷதுல்யம் என்று ஐந்தும் ஆக எண்வகைப்படும் 1. 'பிரதரம்' அல்லது 'ரக்தப்பிரதம்'2 என்கிற வியாதியில் வாத பித்த கபங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும் ஆக நான்கு விதமுண்டு. 174—176.

**யோனி ரோகங்கள்:**—வாத பித்த கபங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றும், இரத்தம் கெட்டுப் போவதால் ஒன்றும், இரத்தம் க்ஷீணித்துப்போவதால் ஒன்றும், சுஷ்கம், வாமநம், ஷண்டிதம், அந்தர்முகம், ஸூசீமுகம், விப்லுதம், புத்ரக்நம், பரிப்லுதம், உபப்லுதம், ப்ராக்சரணம், மஹாயோநி, கர்ணிநீ, அத்யாநந்தி, அதிசரணம் என்று பதினைந்தும் ஆக இருபது வித யோனி ரோகங்களாம். 3 யோனிகந்தம்4 என்கிற ரோகம் நான்கு விதம்; வாத பித்த கபங்களால் மூன்றும், ஸந்நிபாதத்தினுல் ஒன்றுமாம். 177—180.

---

1. பூயகந்தி முதல் புரீஷதுல்யம் வரையிலுள்ள ஐந்து வியாதிகளின் விவரங்களைப்பற்றி சுக்ர தோஷ விவரங்களைப் பார்க்கவும்.

2. பிரதரம்—பெரும் பாடு.

3. சுஷ்கம்—வறட்சியுள்ளது ; வாமனம்—துஷ்டமலங்களைக் கசியச் செய்வது; ஷண்டிதம்—நபும்ஸகதோஷத்திற் கூறிய ஷண்டன் என்கிற குணமுள்ள யோனி ; அந்தர்முகம்—யோனியின் முகம் உட்புறமாக மடிந்திருப்பது ; ஸூசீமுகம்—ஊசியைப் போல் வெகு மெல்லிய த்வாரமுடையது ; விப்லுதம்—எப்பொழுதும் வேதனையுடன் கூடியது ; புத்ரக்நம்—கர்ப்பமுண்டாஞலும் அடிக்கடி அதை அழியச் செய்யும் தன்மையுள்ளது ; பரிப்லுதம்—புணர்ச்சையில் விசேஷ நோயுண்டுபண்ணுவது; உபப்லுதம்—நுரையுடன் கூடிய ஆர்த்தவமென்னும் உதிரத்தை கஷ்டத்தோடு வெளியிடுவது ; இதற்கே 'உதாவர்த்த யோனி' என்று மாதவகரன் ; ப்ராக்சரணம்—ஸம்யோகத்தில் முன்னதாக ஸ்த்ரீக்குப் பிரவ்ருத்தியை யுண்டுபண்ணக்கூடியது ; கர்ணிநீ—யோனியில் ஒருவிதக் கிரந்தி உண்டாவது ; அத்யாநந்தி—மிதமிஞ்சிய ஆவலுள்ளது; அதிசரணம்—பல முறையிலும் திருப்தி யடையாதது.

4. யோனிகந்தம்—யோனிப்புற்று என்கிற ஒருவித விரணம்.

**கர்ப்ப வியாதிகள்:**—உபவிஷ்டகம், நாகோதரம், மக்கல்லம், மூடகர்ப்பம், விஷ்கம்பம், கூடகர்ப்பம், ஜராயுதோஷம், கர்ப்பபாதம் என்று கர்ப்பத்தைப் பற்றிய கோளாறுகள் எண் வகைப்படும்.[1] 181, 181½.

**ஸ்தன ரோகங்களும், ஸ்தன்ய ரோகங்களும்:**—வாத பித்த கபங்களால் மூன்றும், ஸந்நிபாதத்திறைல் ஒன்றும், அடிபடுவதால் ஒன்றும் ஆக ஸ்தன ரோகங்கள் ஐந்து. ஸ்தன்யம் என்கிற முலைப்பாலைப் பற்றி முன்போலவே வாத பித்த கப ஸந்நிபாதங்களாலும், காயம் படுவதாலும் ஐந்துவித வியாதிகள் உற்பத்தியாகின்றன. 182, 183.

**பால ரோகங்கள்:**—திறமையில்லாத புருஷனுல் உண்டான சிசு, ஒருவனுக்கு இரண்டு பத்னிகளிருப்பதால் அவ்விருவர்களில் எவருக்கேனும் பிறக்கும் பலங்குன்றிய பிள்ளை, ஸ்த்ரீ புருஷர்களுக்குப் புத்ரோத்பான சக்தியில்லாமலிருந்தும் தைவச்செயலாகப் பிறக்கும் குழந்தை இம்மூன்றும் பெற்றோர்களின் தோஷத்தால் பிறந்தவையாம். அன்றியும் வேறு வகையான பால ரோகங்கள் இருபத்திரண்டாம்; அவற்றுள் வாத பித்த கபங்களின் தோஷத்திறைல் கோளாறடைந்த முலைப்பாலால் முறையே மூன்று வியாதிகள் உண்டாகும்; தந்தோத்பேதம், தந்தாகாதம், தந்த சப்தம், அகாலதந்தம்—

---

1. உபவிஷ்டகம்—கர்ப்பத்தில் சிசு நன்கு வளராமல் சிறுத்துப்போதல்; நாகோதரம்—சுக்ரசோணிதங்கள் கருப்பையில் சேரும்போது வாயுவின் ஸம்பந்தத்திறைல் கோளாறடைந்து வயிற்றுப்பொருமலை யுண்டுபண்ணி, கர்ப்பக் குறிகளைக் காட்டி, பிறகு சிறிது காலத்தில் தானே கரைந்துவிடும் நோய்; மக்கல்லம்—பிரஸவித்தவுடனே கர்ப்பாசயத்திலுள்ள அழுக்குகள் நன்கு வெளிவராமல் போய், அழுக்குள்ள இரத்தம் அவ்விடத்தில் பிரகோபமடைந்த வாயுவினுல் தகையப்பட்டு ஒருவித கட்டியை யுண்டுபண்ணி, நாபிக்கு ஸமீபத்திலும் இடுப்பிலும் விசேஷமாக வேதனை யுண்டுபண்ணி வயிற்றுப் பொருமலையும் தருமாறுல் 'மக்கல்லம்' எனப்படும்; மூடகர்ப்பம்—பிரஸவ காலத்தில் வாயுவினுல் கருப்பையின் வாய் தகையப்பட்டு சிசு வெளிவரமுடியாமல், மூத்திரமும் விருத்தியாய் இடுப்பு முதலான விடங்களில் நோயுண்டுபண்ணுதல்; விஷ்கம்பம்—கர்ப்பாசயத்திற்கு அடியில் பிரஸவ காலத்தில் சிசு உழல் மரம்போல் குறுக்காயிருப்பது; இதற்கே 'பரிகம்' என்றும் பெயர்; கூட கர்ப்பம்-கருத்தரித்திருந்தும்

என்று பற்களைப்பற்றி யுண்டாகும் ரோகங்கள் நான்கு; [1] மேலும்அஹி பூதநம், முகபாகம், முகஸ்ராவம், குதபாகம், உபசிர்ஷகம், பத்மாருணம், தாலுகண்டகம், விச்சின்னம், பாரிகர்ப்பிகம், தௌர்பல்யம், காத்ர சோஷம், சய்யாமூத்திரம், குகூணகம், ரோதனம், அஜகல்லீ என்று பதினைந்து வியாதிகளும் உற்பத்தியாகின்றன. [2] வாத பித்த கபங்க ளின் கோளாறால் ஜ்வரம் முதலிய மூன்று ஸம்ஹிகா ரோகங்களும்

---

கர்ப்பிணிக் குண்டான குறிகள் காணப்படாமை ; ஜராயு தோஷம்—கர்ப்பாசயத்தினுள் சிசுவுக்குப் போர்வையைப் போலிருக்கும் பை கோளா றடைவது; கர்ப்பபாதம் 5-மாதங்களுக்குப் பிறகு 7 மாதங்களுக்குமுன் அகாலத்திலுண்டாகும் பிரஸவம்.

1. தந்தோத்பேதம்—பற்கள் புதிதாக முளைக்கும்போது உண்டாகும் வேதனை ; தந்தாகாதம்—பற்கள் பிடுங்கப்படுவது போன்ற வேதனை ; தந்த சப்தம்—பற்களில் நோய் அதிகரித்து விண்விண் என்பது போன்ற சப்தம் உண்டாவது ; அகால தந்தம்—அகாலத்திலுண் டாகும் பல். [மாதவநிதாநம் முதலியவற்றில் இந்த நான்கு ரோகங்க ளும் கிடையா.]

2. அஹிபூதநம்—பற்கள் முளைக்கும்போது வாந்தி, ஜ்வரம், வாயிலும் உடம்பிலும் ஒரு வகையான துர்நாற்றம், அதிக அழுகை இவை இருக்குமானால் அஹிபூதநம் என்று சொல்லப்படுகிறது. அஹி பூதநம் என்பது ஸாமான்ய பால ரோகத்தில் சேர்ந்தது. முகபாகம்—வாயில் புண் உண்டாவது ; முகஸ்ராவம்—வாயிலிருந்து எப்பொழுதும் சொள் ஒழுகுவது ; குதபாகம்—ஆஸனத்வாரம் புண்ணாய்விடுவது; உபசிர்ஷகம்—சிரஸ்ஸின்மேல் மற்றொரு தலையைப்போல் உண்டாகும் வீக்கம்; பத்மாருணம்—தேஹம்தாமரைப் பூவைப்போல் வெண் சிவப்பாக ஆவது ; தாலுகண்டகம்—தவடையின் மேற்புறத்தில் ஒரு பள்ளம் விழுந்து, தவடை அசைக்க முடியாமல், ஸ்தந்யபானத்தில் குழந்தைக்கு வெறுப்புஉண்டாவது;விச்சின்னம்—மூத்திரப்பையின் ஸமீபத்தில்உண் டாகும் ஒருவித விஸர்ப்பரோகம் ; பாரிகர்ப்பிகம்—தாய் கர்ப்பிணியாகப் போன பின்பு அக்குழந்தை அவளிடத்தில் ஸ்தன்யபானம் செய்து, காஸம், அஜீர்ணம்,வாந்தி, இளைப்பு முதலியவற்றால் பீடிக்கப்படுமானால் பாரிகர்ப்பிகம் என்று சொல்லப்படுகிறது ; தௌர்பல்யம்—பலயீனம் ; காத்ரசோஷம்—சரீரம் நாளுக்குநாள் இளைத்துப்போதல் ; சய்யா மூத்திரம்—படுக்கையிலேயே மூத்திரம் விட்டுக்கொள்வது ; குகூண கம்—பாலின் தோஷத்தினால் கண்களின் வர்த்மாவில் ஒருவகையான அரிப்பு உண்டாகும் வியாதி ; ரோதனம்—எப்பொழுதும் மிதமின்றி

உண்டாகின்றன ; [1] அந்தந்த தோஷங்களுக்கும் அவரவரது பலங்களுக்கும் தகுந்தவாறு சிகித்ஸை செய்தால் அவை எளிதில் நிவ்ருத்திக்கக் கூடியவையாம். 184—188.

**பால கிரஹங்கள்.**—பன்னிரண்டு பாலகிரஹங்கள் [2] உண்டென்று மாமுனிகள் கண்டறிந்திருக்கின்றனர் ; அவையாவன :— ஸ்கந்தகிரஹம் [3], விசாககிரஹம் [4] ச்வகிரஹம் [5] பித்ருகிர

---

அழுதல் ; அஜகல்லீ—ஒரு விதமான அக்கியைப்போன்ற சர்மவியாதி. [இவற்றுள் தாலுகண்டகம், பாரிகர்ப்பிகம், குகூணகம் இவற்றைத் தவிர்த்து மற்றவைகள் வேறு நிதானக்கிரந்தங்களில் காணப்படவில்லை.]

1. பிரஸவித்த ஸமயத்தில் உண்டாகும் ஜ்வராதிகள் ஸூதிகா ரோகங்கள் எனப்படும்.

2. முன்னால் ஞாழற்காட்டிற் பிறந்த ஸுப்ரமண்யனைக் காப்பதற்காகச் சிவபெருமானால் புருஷ உருவமுள்ள ஐந்து கிரஹங்களும் ஸ்திரீ யுருவமுள்ள ஏழு கிரஹங்களும் படைக்கப்பட்டதாகக் கூறுகின்றனர்.

3. ஸ்கந்தகிரஹபீடை:—இதில் குழந்தைகளுக்கு ஒரு கண்ணில் நீர்வடியும், தலையை அடிக்கடி புரட்டும், தேஹத்தில் ஒரு பாரிசமெல்லாம் விழுந்து போகும், உடல் அசைவற்றிருக்கும், வியர்வை அதிகமாகும், தலை வணங்கி விடும், பற்களைக் கடிக்கும், முலையுண்ணதில் விருப்பமிராது, பயந்து வீரிட்டு அழும், வாய் ஒரு பக்கமாய் இழுக்கப்படும், சொள் அதிகமாய் பெருகும், உயர விழித்துப் பார்க்கும், உடலில் சவர்நாற்றம் வீசும், முகம் திகைத்திருக்கும், மலம் இறுகி விடும், கையை கெட்டியாக மூடிக்கொள்ளும், ஒரு கண்ணும் புருவமும் அசையக்கூடும், இரு கண்களும் மிகச் சிவந்திருக்கும்; இந்த கிரஹத்தினால் சரீரத்தில் ஏதாவது சாச்வதமான கோளாறாவது மரணமாவது உண்டாவது நிச்சயம். இதுவே ஸ்கந்தாபஸ்மாரம் எனப்படும்.

4. விசாக கிரஹ பீடை :—நினைவு தவறுதல், மயிர்களைப் பிச்சிக் கொள்ளுதல், கழுத்து மடங்கிக் கொள்ளல், வாயிலிருந்து நுரை வருதல், கைகால்கள் உதறுதல், தாயின் ஸ்தனம் தனது நாக்கு இவைகளைக் கடித்தல், ஜ்வரம், தூக்கமின்மை, உடம்பில் ஒருவித துர்க்கந்தம் இவைகள் மேற்படி பீடையின் குறிகளாம்.

5. ச்வ கிரஹ பீடை :—நடுக்கல், மயிர்ச்சிலிர்க்கை, வியர்வை, கண்களை எப்பொழுதும் மூடிக் கொள்ளல், பஹிராயாமம் என்கிற

ஹம் [1], நைகமேய கிரஹம், [2] சகுநி கிரஹம், [3] சீதபூதநா கிரஹம், [4] முகமண்டிகா கிரஹம், [5] பூதநா கிரஹம், [6] அந்தபூதநா கிர

வலி, நாக்கைக் கடித்துக்கொள்ளல், கூக்குரலிடல், ஓடுதல், உடம்பில் மலத்திற்குச் சமமான துர்நாற்றம் உண்டாதல், கதறுதல் இக்குறிகள் உண்டாகும்.

1. பித்ருகிரஹ பீடை:—மயிர்ச்சிலிர்க்கை, அடிக்கடி அச்சமுறுதல், திடீரென்று அழுதல், ஜ்வரம், இருமல், அதிஸாரம், வாந்தி, அதிக கொட்டாவி, தாஹம், உடலில் சவத்திற்கு ஸமானமான துர்நாற்றம், வலி, உடல் அசைவற்றுப்போதல், கறுநிறமாகுதல், கைகளை கெட்டியாக மூடிக்கொள்ளுதல், கண்ணீர் விடுதல் இவை பித்ரு கிரஹக் குறிகளாம்.

2. நைகமேய கிரஹ பீடை:—வயிற்றுப் பொருமல், கை கால் வாய் இவை துடித்தல், நுரை கக்குதல், தாஹம், அதிஸாரம், குரல் கம்மல், தேகவர்ணம் மாறுபடுதல், கூக்குரலிடல், வாந்தி, இருமல், தூக்கமின்மை, உதட்டைக் கடித்துக் கொள்ளுதல், அவயவங்கள் சுருக்கங்கொள்ளல், விழித்துப் பார்த்து சிரித்தல், இடுப்பு வளைந்து போதல், ஜ்வரம், ஒரு கண் வீங்குதல், மயக்கம் இவ்விதக் குறிகள் காணப்படும்; இதுவே நைகமேஷ கிரஹம் என்றும் கூறப்படுகிறது.

3. சகுநி கிரஹம்:—இரவில் எல்லா அவயவங்களும் வீழ்ந்துவிடுதல், அதிஸாரம், வாய்க்குள்ளும் தொண்டையிலும் விரணம் வெடிப்புகள், ஸந்திகளில் எரித்தல் இவை யுண்டாகும்; பகலில் அவையனைத்தும் மறைந்துபோய் வாயும் குதமும் அழன்றுவிடும்; ஜ்வரமும் அதிகமாகும்.

4. சீதபூதநா கிரஹ பீடை:—உடல் நடுக்கம், அழுகை, மூலைப் பார்வை, தாஹம், குடல் இரைத்தல், அதிஸாரம், உடலில் துர்நாற்றம், சரீரத்தில் ஒரு பாரிசம் முடிய குளிர்ந்து போதல், மற்றொரு பாரிசம் சூடாயிருத்தல் என்பவை இதன் குறிகளாம்.

5. முகமண்டிகா கிரஹ பீடை:—கைகால்கள் மஞ்ஜளநிறமாகத் தோற்றும், வயிற்றில் கறுநிறமான ஸிரைகள் வியாபிக்கும், ஜ்வரம், அரோசகம், சரீரவாட்டம், கோமய நாற்றம் இக்குறிகளும் காணப்படும்.

6. பூதநா கிரஹ பீடை:—வாந்தி, நடுக்கம், சோம்பல், தூக்கமின்மை, விக்கல், வயிற்றுப் பொருமல், பேதி, தாஹம், மூத்திரம் கட்டிப்போதல், சரீரம் சக்தியற்று விழுந்துபோதல், மயிர்ச்சிலிர்க்கை என்பவை இதன் குறிகளாம்.

ஹம்,[1] ரேவதீ கிரஹம்,[2] சுஷ்கரேவதீ கிரஹம்[3] என்பனவாம். கால் வெடிப்பு, வாதரக்தம் முதலிய வேறு நாற்பத்திரண்டு வியாதிகளும்[4] குழந்தைகளுக்குண்டாகுமென இருஷிகள் கூறியிருக்கிறார்கள். 188—191½.

**தோஷங்களின் பலவகையான கோளாறுகள்:**—வாத பித்த கபங்கள் சரீரத்தில் ஏற்றக்குறைவான நிலைமையை அடைவதால், தனித்தனியான நிலைமையிலும், இரண்டிரண்டு தோஷங்களின் சேர்க்கையிலும், ஒருமிக்க மூன்று தோஷங்களின் சேர்க்கையிலும் அறுபத்திரண்டு வகையான வேற்றுமைகளைப் பெறும்; அவ்விதமான மாறுபாடுகளும் ரோகங்களென எண்ணப்பட்டும். ஆகிலும் அவற்றை எங்கும் தனியாக வியாதிகளென்று விவஹரிக்கவில்லை.[5] 192½.

---

1. அந்த பூதநா கிரஹபீடை:—ஜ்வரம், காஸம், வாந்தி, பேதி, சரீர இளைப்பு, த்ருஷ்டி மந்தமாகுதல், அதிக வேதனை, மயக்கம், திகில், முலையுண்பதில் விருப்பமின்மை, நடுக்கம் முதலியவை இதில் காணப்படும்.

2. ரேவதீ கிரஹபீடை:— சரீரம் பசுமையாகவும் கறுப்பாகவும் மாறுதல், காது கண் முதலியவற்றைத் தேய்த்துக்கொள்ளல், இருமல், வாயினுட்புறம் இரத்தவர்ணமாதல், ஜ்வரம், திரவமாகவும் மஞ்சளாகவும் மலம் இறங்குதல் என்பவை இதன் குறிகள்.

3. சுஷ்கரேவதீ கிரஹம்:—சரீரத்தில் கிரமமாக எல்லா அவயவங்களும் க்ஷீணித்து வரும்.

4. சாரீர வ்ரணம் 15 விதம், ஸத்யோவ்ரணம் 8 விதம், விஸர்ப்பம் 9 விதம், உதர்த்தம் ஒன்று, வாத ரக்தம் 8 விதம், கால் வெடிப்பு ஒன்று; ஆக 42 விதங்களாம்.

5. தோஷங்கள் சுபாவநிலைமையினும் அதிகமாவதினாலேயோ, க்ஷீணிப்பதாலேயோ அவற்றிக்கு ஏற்படும் பிரிவுகள் பின்வருமாறு:—வாதம் விருத்தியாதல், பித்தம் விருத்தியாதல், கபம் விருத்தியாதல் என்று தனித்தனியே 3 விதமாக விருத்திரூபமான கோளாறு. ஸம்ஸர்கத்தினால் 9 வித விருத்தியுண்டு:—வாத பித்தங்கள் ஸமமாக விருத்தியாதல், வாத கபங்கள் ஸமமாக விருத்தியாதல், பித்த கபங்கள் ஸமமாக விருத்தியாதல்; வாதம் வ்ருத்தம்—பித்தம் வ்ருத்ததரம், பித்தம் வ்ருத்தம்—வாதம் வ்ருத்ததரம், கபம் வ்ருத்தம்—வாதம் வ்ருத்ததரம்; வாதம் வ்ருத்தம்—கபம் வ்ருத்ததரம், பித்தம் வ்ருத்தம்—கபம் வ்ருத்ததரம், கபம் வ்ருத்தம்—பித்தம் வ்ருத்ததரம்; என்பனவாம்

**பஞ்ச கர்மஜ ரோகங்கள்.**—பஞ்ச கர்மங்களைச்[1] செய்கையில் ஒவ்வொன்றிலும் நேரிடும் ஹீநயோகம், மித்யா யோகம், அதியோகம்

---

ஸந்நிபாதத்தினால் நேரிடும் விருத்திகள் 13 விதங்கள்:—கபம் வ்ருத்தம்-வாத கபங்கள் வ்ருத்ததரங்கள், பித்தம் வ்ருத்தம்—வாத கபங்கள் வ்ருத்ததரங்கள், வாதம் வ்ருத்தம்—பித்த கபங்கள் வ்ருத்த தரங்கள்; பித்த கபங்கள் வ்ருத்தங்கள்-வாதம் வ்ருத்ததரம்; வாத கபங்கள் வ்ருத்தங்கள்-பித்தம் வ்ருத்ததரம், வாத பித்தங்கள் வ்ருத்தங்கள்—கபம் வ்ருத்ததரம் என்று ஆறுவிதம். மூன்றும் ஒரே அளவாக வ்ருத்தியாவது ஒருவிதம். வாதம் வ்ருத்தம்-பித்தம் வ்ருததரம்-கபம் வ்ருத்ததமம்; வாதம் வ்ருத்தம் — கபம் வ்ருத்ததரம்—பித்தம் வ்ருத்ததமம்; பித்தம் வ்ருத்தம்-கபம் வ்ருத்ததரம்-வாதம் வ்ருத்த தமம்; பித்தம் வ்ருத்தம்-வாதம் வ்ருத்ததரம்-கபம் வ்ருத்ததமம்; கபம் வ்ருத்தம்-வாதம் வ்ருத்ததரம்-பித்தம் வ்ருத்ததமம்; கபம் வ்ருத்தம்-பித்தம் வ்ருத்ததரம்-வாதம் வ்ருத்ததமம் என்று ஆறுவிதங்களும் சேர்ந்து ஸந்நிபாதத்தினால் 13 வகைகளாம். இவ்வாறு வ்ருத்தி ரூபமான கோளாறின் மூலமாய் தோஷங்கள் 25 வித நிலைமைகளை அடையும். க்ஷீணரூபமான கோளாறின் மூலமாகவும் வ்ருத்திக்குக் கூடிய க்ரமப்படியே 25 வித நிலைமைகள் தோஷங்களுக்கு நேரிடுவதுண்டு. ஸந்நிபாதத்தில் ஒரு தோஷம் தந்நிலைமையில் இருப்பது, ஒன்று வ்ருத்தியாவது, மற்றொன்று க்ஷீணிப்பது என்கிற க்ரமத்தில் ஆறுவிதமாம்; அது எவ்விதமெனில்:—வாதம் ஸமம்-பித்தம் வ்ருத்தம்-கபம் க்ஷீணம்; பித்தம் ஸமம்-வாதம் வ்ருத்தம்-கபம் க்ஷீணம்; கபம் ஸமம்-பித்தம் வ்ருத்தம்-வாதம் க்ஷீணம்; வாதம் ஸமம்-கபம் வ்ருத்தம் - பித்தம் க்ஷீணம்; பித்தம் ஸமம்-கபம் வ்ருத்தம் - வாதம் க்ஷீணம்; கபம் ஸமம்-வாதம் வ்ருத்தம்-பித்தம் க்ஷீணம் என்றவாறு. ஒரு தோஷம் க்ஷயித்து இரண்டு தோஷங்கள் வ்ருத்தியாவதாலும், இரண்டு க்ஷயித்து ஒன்று வ்ருத்தியாவதாலும் ஆறு பேதங்களுண்டு; அவையாவன:—வாதம் க்ஷீணம்-பித்தகபங்கள் வ்ருத்தங்கள்; பித்தம் க்ஷீணம்-வாதகபங்கள் வ்ருத்தங்கள்; கபம் க்ஷீணம்-வாத பித்தங்கள் வ்ருத்தங்கள். வாதபித்தங்கள் க்ஷீணங்கள்-கபம் வ்ருத்தம்; வாத கபங்கள் க்ஷீணங்கள்-பித்தம் வ்ருத்தம்; பித்தகபங்கள் க்ஷீணங்கள்-வாதம் வ்ருத்தம் என்று 6 வகைகளாம். ஆக இவை 12 விதங்களாயின. இவை அனைத்தும் சேர்ந்து தோஷங்களின் 62 விதமான கோளாறுகள் எனப்படும். 63-வது விதம் தோஷங்களின் ஸமமான இயற்கை நிலைமையேயாம்; அது ஆரோக்கியத்திற்குக் காரணமாம்.

1. பஞ்ச கர்மங்கள்—வமநம், விரேகம், நிரூஹவஸ்தி, அநுவாஸந வஸ்தி, நஸ்யம் என்கிற ஐந்துவித சிகித்ஸா முறைகளும் பஞ்ச

என்கிற பேதங்களை [1] ஆதாரமாகக் கொண்டு பதினைந்துவிதமான கோளாறுகள் சரீரத்தில் உண்டாக்கக் கூடும்; [2] அவையும் ரோகங்களாகவே ஒருவாறு கருதப்படுகின்றன. 193½.

**ஷட்கர்மஜ ரோகங்கள்.**—ஸ்நேஹம், ஸ்வேதம், கண்டூஷம், தூமம், அஞ்ஜனம், தர்ப்பணம்[3] என்கிற ஆறுவித சிகித்ஸைகளைச் செய்கையில் ஒவ்வொன்றிலும் ஹீநயோகம், மித்யாயோகம், அதியோகம் என்கிற மூன்றுவித தவறுதல்கள் நேரிடக் கூடுமாகையால், அவற்றால் பதினெட்டு விதமாகச் சரீரத்தில் கோளாறுகள் உண்டாகலாம்; அவற்றையும் ரோகங்களாகவே கூறவேண்டும். 194½.

---

கர்மங்கள் எனப்படும். [வமநம்-வாந்தியாவதற்காகச் செய்யப்படும் சிகித்ஸை. விரேகம்- பேதியாவதற்காகச் செய்யப்படுவது. நிருஹவஸ்தி-கஷாயங்களை குதத்தின் வழியாகச் செலுத்தி மலங்களைக் கழித்தல். அநுவாஸந வஸ்தி-தைல ஸம்பந்தமான ஔஷதங்களை குதமார்க்கத்தினால் செலுத்தி சிகித்ஸை செய்தல். நஸ்யம்-மூக்கில் மருந்திடல். ஸ்நேஹம், ஸ்வேதம், வமநம், விரேகம், வஸ்தி என்பவை பஞ்ச கர்மங்களென்று வேறு சிலரின் கொள்கை.]

1. பஞ்ச கர்மங்களைச் செய்கையில் ஔஷதங்களை உபயோகிக்க வேண்டியதைவிட குறைந்த அளவில் உபயோகிப்பதும், சிகித்ஸையைச் செய்யவேண்டிய கால அளவுப்படி செய்யாமல் குறைந்த கால அளவில் செய்து முடிப்பதும், அந்தந்த முறைக்கு 'ஹீநயோகம்' என்றும், எந்த சிகித்ஸை எந்த ஸமயத்தில் செய்யக்கூடியதோ அதை விட்டு வேறுவிதமான சிகித்ஸையை வேறுவிதமான ஸமயத்திற் செய்வது 'மித்யாயோகம்' என்றும், எந்த கர்மமும் அளவுமீறி செய்யப்படுவது அல்லது அளவு கடந்த காலத்திற் செய்வது 'அதியோகம்' என்றும் கூறப்படும்.

2. வமநத்தில் ஹீநயோகம், மித்யாயோகம், அதியோகம் என்றும், விரேகத்தில் ஹீநயோகம், மித்யாயோகம், அதியோகம் என்றும் ஒவ்வொன்றிலும் 3 பேதங்கள் கூறப்படும். அவ்விதமே நிருஹவஸ்தி, அநுவாஸந வஸ்தி, நஸ்யம் இவற்றிற்கும் தனித்தனியே மூன்று விதபாஸங்கள் உண்டாகையால் ஆகக்கூடி 15 ரோகங்கள் உண்டாகலாம் எனப்படுகிறது.

3. ஸ்நேஹம் - சரீரத்தில் உள்ளும் புறமும் பற்பல தைலம் கிருதம் முதலியவற்றால் செய்யப்படும் சிகித்ஸை. ஸ்வேதம்-வியர்வையுண்டாகுமாறு செய்யப்படும் சிகித்ஸை. கண்டூஷம் - வாய்க்கொப்புளிக்கும் முறை. தூமம்-பற்பல ஔஷதங்களால் தூமபானம் செய்தல். அஞ்ஜநம்-மையிடுதல். தர்ப்பணம் - தலையில் சில ஔஷதங்

**சைத்தியம் முதலியவற்றால் உண்டாகும் ரோகங்கள்:**—அதிக சைத்தியத்தினால் உண்டாகிற பாதை ஒரு ரோகமாகவும், அவ்விதமே அதிக உஷ்ணத்தினால் ஒரு ரோகமும், சல்யங்கள்[1] சரீரத்திற் புகுவதால் ஒரு ரோகமும், க்ஷாரங்களைக்[2] கொண்டு அஜாக்கிரதையாக சிகித்ஸை செய்வதால் ஒரு ரோகமும் உண்டாவதுண்டு. 195½.

**ஸ்த்தாவர ஜங்கமாதி விஷங்கள்:**—ஸ்த்தாவரம்,[3] ஜங்கமம்,[4] க்ருத்ரிமம்[5] என்று விஷம் மூன்று விதம். அவற்றுள் காலகூடம் முதலிய ஸ்த்தாவர விஷங்கள் ஒன்பது விதமாகப் பிரிக்கப்படுகின்றன.[6] ஜங்கம விஷமும் அநேக விதம். சிலந்திவிஷம், ஸர்ப்பவிஷம், தேள் விஷம், எலிவிஷம், குளவிவிஷம் முதலானவை ஜங்கமவிஷங்களாம். இந்த விஷங்களில் ஒவ்வொன்றும் வாதப்ரகோபகாரி, பித்தப்ரகோபகாரி, கபப்ரகோபகாரி, ஸந்நிபாதகாரி என்று மீண்டும் நான்கு விதமாக வகுக்கப்படுகின்றது. விஷமானது சில ஜந்துக்களுக்குக் கோரப்பற்

---

களின் கல்கத்தால் வரம்புகட்டி, தைலம் முதலியவற்றைத் தலையில் தேங்கவைத்து செய்யப்படும் ஒருவித சிகித்ஸை.

1. சல்யங்கள் சரீரத்திற்குள் புகுந்து பாதையை யுண்டுபண்ணும் முள், ஆணிகள், கல், மண் முதலிய வெளிப்பொருட்கள்.

2. க்ஷாரம்—எரித்தலையுண்டாக்கிக் கொப்புளிக்கச் செய்யும் காரமான உப்புவகை.

3. செடி கொடி விருக்ஷம் முதலியவற்றைச் சேர்ந்த விஷங்கள் 'ஸ்த்தாவரவிஷங்கள்' எனப்படும்.

4. ஸர்ப்பம், தேள் சிலந்தி, நாய் முதலியவற்றின் விஷங்கள் 'ஜங்கம விஷங்கள்' என்று சொல்லப்படும்.

5. ஸாதாரண சில ஓஷதிகளை அல்லது ஒளஷதங்களைக் கொண்டு செய்யப்படும் விஷம் 'க்ருத்ரிமவிஷம்' என்று சொல்லப்படுகிறது.

6. ஒன்பது விதமான ஸ்த்தாவர விஷங்கள்,—மூலவிஷம், பத்ரவிஷம், பலவிஷம், புஷ்பவிஷம், சர்மவிஷம், க்ஷீரவிஷம், ஸாரவிஷம், நிர்யாஸவிஷம், கந்தவிஷம் என்பவையாம். [மூலம் - வேர்; பத்ரம்-இலை: பலம்-கனி; சர்மம்-தோல்; க்ஷீரம்-பால்; ஸாரம்-மரத்தின் உட்புறத்திலுள்ள வைரம் அல்லது சாறு; நிர்யாஸம்-பிசின்; கந்தம்-மணம். தாதுவிஷம் என்பது பத்தாவதாக ஸுச்ருத ஸம்ஹிதையில் கூறப்படுகிறது.]

களிலும், சிலவற்றிற்கு நகங்களிலும், சிலதுக்கு மயிர்களிலும், சிலதுக்குக் கொம்புகளிலும், சிலவற்றிற்கு எலும்புகளிலும், சிலதுக்கு மூத்திரத்திலும், சிலவற்றிற்கு மலத்திலும், சிலதுக்கு சுக்ரத்திலும், சிலதுக்கு த்ருஷ்டியிலும், சிலதுக்கு நிச்வாஸம் என்கிற வெளிவரும் மூச்சுக் காற்றிலும், சிலவற்றிற்கு உமிழ்நீரிலும் இருக்கும்; வேறு சில ஜந்துக்கள் பரிசிப்பதாலும் விஷதோஷங்கள் ஏற்படுவதுண்டு. ஏதோ விஷம் சரீரத்தில் ஸம்பந்தித்து விட்டதாக சங்கை அதிகரிக்குமானால், அவ்வித சங்கையினாலேயும் விஷத்திற்குண்டான துர்க்குணங்கள் சரீரத்தில் தோற்றுவதுண்டு. 196—199.

**க்ருத்ரிமவிஷம் முதலியன:**—க்ருத்ரிமவிஷமானது கரவிஷம்,[1] தூஷீவிஷம்[2] என்று இரண்டு விதமாகப் பிரிக்கப்படுகிறது. தாது விஷங்கள் ஏழுவிதம்[3]; உபதாது விஷங்கள் ஏழுவிதம் [4];

---

1. கரவிஷம்—சத்ருக்களாலாவது, புருஷர்களைத் தம்மிடம் பாசமுள்ளவராகச் செய்ய விருப்பமுள்ள ஸ்த்ரீகளாலாவது உணவு முதலியவற்றில் இடப்படும் ஒருவித விஷம் கரவிஷம் என்று சொல்லப்படுகிறது. இது பெரும்பாலும் விஷகுணமற்ற சில பதார்த்தங்களைச் சேர்த்துச் செய்யப்படுவதாம்.

2. தூஷீவிஷம்-விஷகுணமுள்ள சில பதார்த்தங்கள், அவற்றின் தன்மைக்குத் தகாத இடங்களின் ஸம்பந்தத்தாலோ, காலவித்யாஸத்தினாலோ, விஷஹரமான ஔஷதிகளின் சேர்க்கையினாலோ, தீ வாயு வெய்யில் முதலியவற்றாலோ, அல்லது இயற்கையினாலேயோ வீர்யத்தில் குன்றிப் போகுமானால் 'தூஷீவிஷம்' எனப்படும். தாதுக்களைப் பலவாறு தூஷிப்பிக்குந் தன்மை யுடையதாலும் தூஷீவிஷம் என்று சொல்லப்படுகிறது.

3. பொன், வெள்ளி, செம்பு, இரும்பு, வங்கம், நாகம், காரீயம் இவை ஸப்த தாதுக்கள் எனப்படுகின்றன. இவற்றை முறைப்படி சுத்தம் செய்யாவிட்டால், இவை விஷத்தன்மை யுடையவைகளாகும்.

4. பொன் மிளை, வெள்ளி மிளை, மயில் துத்தம், வெண்கலம், பித்தளை, கிரி ஸிந்தூரம் என்னும் காவி, சிலாஜது இவை ஸப்த உபதாதுக்கள். இவற்றையும் அசுத்தமாய் உபயோகித்தால் விஷத்தன்மையைக் காட்டும்.

அவ்விதமே உபவிஷங்களும் ஏழுவிதங்களென்று கூறப்படுகின்றன. கெட்டுப்போன தண்ணீரால் ஒருவித விஷம் உண்டாகின்றது. அம்பு முதலிய ஆயுதங்களின் முனைகளில் தீட்டப்பட்டிருக்கும் ஒருவித விஷம் 'திக்த்த விஷம்' எனப்படும்[2]. 200, 201.

**காஞ்சொறி முதலியதால் உண்டாகும் தீமைகள்.**—காஞ்சொறியிலை, கெட்டுப்போன தண்ணீர், காருங் கருணைக்கிழங்கு முதலியவற்றின் ஸம்பந்தத்தினால் சர்மத்தில் எரித்தல் உண்டாகும். சேரான்கொட்டையின் பாலாலும் எரித்தலுடன் வீக்கமும் உண்டாகும். 202.

**மயக்கம்.**—கொட்டைப்பாக்கு, கஞ்ஜா, தான்றிக்காய், கோத்ரவம்[3] இந்த நான்கு வஸ்துக்களால் நான்குவிதமான மதம் அல்லது மயக்கம் உண்டாகும். சில ஔஷதிகளுடைய கனி, சர்மம், வேர், இலை இவற்றாலும் நான்குவித மயக்கம் ஸம்பவிக்கும். 2 3.

**நிதான அத்தியாயத்தின் முடிவுரை.**—இவ்வாறு உடலில் இதர பதார்த்தங்களின் ஸம்பந்தத்தால் பிரஸித்தமாக உண்டாகக்கூடிய பற்பல உபத்திரவங்களும் கூறப்பட்டன; தாதுவர்க்கங்கள், ஔஷதிகளின் மூலவர்க்கங்கள், ஜீவவர்க்கங்கள் முதலியவைகளால் ஸம்பவிக்கக்கூடிய வியாதிகள் இன்னும் எண்ணிறந்தவையுண்டு. 204.



1. எருக்கம்பால், கள்ளிப்பால், சிவனார்கிழங்கு, அலரி, குன்றி, அபினி, ஊமத்தை இவ்வேழும் ஸப்த உபவிஷங்களாம்.

2. முற்காலங்களில் எதிரிகளின்மேல் அல்லது காட்டு விலங்குகளின் மேல் அம்பு முதலிய ஆயுதங்களைப் போடும்போது, அவ்வம்புகள் பட்டு உடனே எதிரிகள் அல்லது விலங்குகள் தவறாமல் உயிர் துறக்க வேண்டுமென்று எண்ணி அவ்வாயுதங்களின் முனையில் விஷங்களைப் பூசுவது வழக்கம். அது 'திக்த்த விஷம்' எனப்படும்.

3. கோத்ரவம்—ஒருவித மயக்கந்தரும் தானியம்; வரகுதானியம் என்று சிலர்; ஆனால் வரகுக்கு மயக்கமுண்டாகக்கூடிய சுபாவம் இருப்பதாகத் தெரியவில்லை.



# மத்யம கண்டம்

## முதல் அத்தியாயம்

### ஸ்வரஸ கல்பனை.

**பஞ்ச கஷாயங்கள்.**—இனி ஸ்வரஸம், கல்கம், க்வாதம், ஹிமம், பாண்டம் என்னும் ஐந்துவித கஷாயங்கள் கூறப்படுகின்றன; இவற்றுள் ஸ்வரஸத்தைவிட கல்கமும், கல்கத்தினும் க்வாதமும், க்வாதத்தினும் ஹிமமும், ஹிமத்தைவிட பாண்டமும் முறையே இலகு குணம் மேலிட்டவையாம்.[1] 1.

**சுத்த ஸ்வரஸம்.**—பதனழியாத ஓஷதிகளைப் புதிதாகக் கொண்டுவந்து அப்பொழுதே இடித்து, வஸ்திரத்திலிட்டுப் பிழிந்தெடுப்பதால் வரும் சாறானது ஸ்வரஸம் எனப்படும். 2.

**நிசோஷித ஸ்வரஸம்.**—முற்கூறிய ஸாதாரண ஸ்வரஸத்திற்குபயோகமான வஸ்துக்கள் உலர்ந்திருந்தால் அவற்றைச் சூர்ணம் செய்து, நான்கு பலம் சூர்ணத்தை இரு மடங்கு ஜலத்திற் போட்டு, ஓர் இராப்பகல் முடிய ஊறவைத்து, அப்பால் வடிக்கட்டியெடுத்தாலும் சுத்தஸ்வரஸம்போன்றதாயிருக்கும். இது இரவெல்லாம் ஊறவைப்பதால் நிசோஷித ஸ்வரஸம் எனப்படும். 3.

**பக்வ ஸ்வரஸம்.**—ஸ்வரஸத்திற்கான மூலிகைகள் ஈரமாகவே கிடைக்காவிட்டால், உலர்ந்தவைகளைக் கிரஹித்து, எட்டுமடங்கு ஜலத்தில் இடித்துச் சேர்த்து, பக்குவம் செய்து, நாலில் ஒரு பங்காக வற்றவைத்து, வடிக்கட்டி ஸ்வரஸத்திற்குப் பதிலாப்பயோகிக்கலாம். 4.

**ஸ்வரஸங்களை யுபயோகிக்கும் அளவு:**—ஸ்வரஸம் வெகு குருகுணமுள்ளதாகையால் அதைப் பொதுவாக அரைப்பலம் உப

---

1. திரவியங்களுக்கு இலகு, குரு என்று குணம் இரண்டுண்டு; அவற்றுள் குடல் முதலியவற்றிற்குக் கஷ்டத்தை யுண்டுபண்ணாமல் எளிதில் ஜீர்ணமாகக்கூடிய பதார்த்தங்கள் இலகு குணமுள்ளவை; சிறிது அல்லது அதிக பிரயாசத்தின்பேரில் நீடித்து ஜீர்ணமாகக் கூடிய அல்லது ஜீர்ணமாகக்கூடாத வஸ்துக்கள் குருகுணமுள்ளவை.

யோகிக்கலாம். கிசோஷிதஸ்வரத்தையும், பக்வஸ்வரஸத்தையும் ஒரு பலப்பிரமாணம் உட்கொள்ளலாம்.[1] 5.

**ஸ்வரஸத்தில் சேர்க்கக்கூடிய இதர வஸ்துக்களின் பிரமாணம்.**—தேன், சர்க்கரை, க்ஷாரம், ஜீரகம், உப்பு, நெய், தைலம், மற்றும் பலவித சூர்ணங்கள் இவை முதலியவற்றை அவசியமானால் ஸ்வரஸத்தில் தனித்தனியே அரைக்கால் பிரமாணம் சேர்க்கலாம்.[2] 6.

**அம்ருதா ஸ்வரஸம்**[3].—சீந்திற்கொடியிலிருந்து ஸ்வரஸம் பிழிந்தெடுத்து, அதில் தேன் கலந்து உட்கொள்ள ஸகல பிரமேஹங்களும் தீரும். $6\frac{1}{2}$.

**தாத்ரீ ஸ்வரஸம்.**—நெல்லிக்கனியிலிருந்து ஸ்வரஸமெடுத்து, அதில் மஞ்சளின் சூர்ணத்தைக் கலந்தாவது, தேன் சேர்த்தாவது பிரமேஹரோகங்கள் தீருவதற்கு உட்கொள்ளலாம். 7.

**வாஸா ஸ்வரஸம்:**—ஆடாதோடையின் ஸ்வரஸத்தில் தேன் சேர்த்து உட்கொண்டால் இரத்தபித்தம், ஜ்வரம், காஸம், க்ஷயம், காமாலை, சிலேஷ்மரோகம், பித்தப்பிரகோபம் இவை நீங்கும். 8.

**த்ரிபலா ஸ்வரஸம் முதலியன.**—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இம்மூன்றின் ஸ்வரஸத்தையும் ஒருமிக்கச் சேர்த்துத் தேன் கலந்து உட்கொண்டாலும், மரமஞ்சள் ஸ்வரஸம், வேப்பிலை ஸ்வ

---

1. பிறகு கூறப்படும் பற்பல ஸ்வரஸங்களை உட்கொள்ளுவதற்குத் தனித்தனியே பிரமாணம் பெரும்பாலும் கூறப்படமாட்டா: அவற்றை உட்கொள்ளுவதற்குப் பொதுவான பிரமாணம் இதுதான் என்றறிக.

2. ஸ்வரஸங்களில் தேன் முதலியவற்றையும் சூர்ணவகைகளையும் சேர்ப்பதற்கு இதுவே பொதுவான அளவு; ஆகவே பிறகு ஒவ்வொரு ஸ்வரஸத்திலும் தனித்தனியே இதர சரக்குகளைச் சேர்ப்பதற்குப் பெரும்பாலும் பிரமாணம் கூறப்படமாட்டாது.

3. அம்ருதா-சீந்திற் கொடி; இவ்விதமே பிறகு கூறப்படும் எல்லா ஔஷதமுறைகளிலும் முதற்சரக்கின் பெயரைக்கொண்டு, ஸம்ஸ்கிருதத்தில் ஔஷதங்களைக் குறிக்கப்படும் பெயரை முறைகளில் முதன்முதல் குறிப்பிடப்படும் தமிழ் பெயரைக்கொண்டு 'தாத்ரீ' என்பது நெல்லிக்கனி யென்றும், 'வாஸா' என்பது ஆடாதோடையென்றும் கிரமமாயுணருக. அவ்விதம் முதலிற் குறிக்கப்படுவது பெரும்பாலும் அந்தந்த முறையின் தாய்ச்சரக்காகும்.

ரஸம், சீந்திற்கொடி ஸ்வரஸம் இவற்றில் ஏதேனும் ஒன்றில் தேன் விட்டு உபயோகித்தாலும் காமாலை சமனமாகும். 9.

**துளஸீஸ்வரஸம் முதலியது.**—துளஸியிலைச்சாற்றிலாவது, பெருவாகையின் ஸ்வரஸத்திலாவது மிளகுப் பொடியைக் கலந்துப யோகித்தால் முறைக்காய்ச்சலென்னும் விஷமஜ்வரங்கள் தீரும். 10.

**ஜம்பூபல்லவ ஸ்வரஸம் முதலியது.**—நாவல், மா, நெல்லி இவற்றின் தளிர்களிலிருந்து ஸ்வரஸம் பிழிந்தெடுத்து, அவற்றில் ஏதேனுமொன்றில் தேன், நெய், பால் இவற்றுள் எதையாவது சேர்த்து உட்கொள்ள உக்கிரமான இரத்தாதிஸாரமும் நிவ்ருத்தியாகும். 11.

**பப்பூல ஸ்வரஸம்.**—கருவேலந்தளிர் ஸ்வரஸமாவது, பெருவாகை, வெட்பாலை இவற்றின் பட்டைகளின் சாறாவது உட்கொள்ளப்படுமானால் ஸகல விதமான அதிஸாரங்களையும் போக்கும். 12.

**ஆர்த்ரக ஸ்வரஸம்.**—இஞ்சியின் ஸவரஸத்தில் தேன் கலந்து உட்கொள்ள வ்ருத்தி யென்கிற அண்டவாயு நீங்கும். ச்வாஸம், காஸம், அரோசகம், பிரதிச்யாயம் இவற்றையும் அது சமனப்படுத்தும். 13.

**பீஜபூர ஸ்வரஸம்.**—கொடிமாதளம்பழத்தின் ஸ்வரஸத்துடன் தேன் அல்லது யவக்ஷாரம் கலந்து உபயோகிக்க பார்ச்வசூலம், இருதயத்தைப்பற்றிய நோய்கள், மூத்திராசய ஸம்பந்தமான வியாதிகள், கடுமையான குடலைப்பற்றிய வாயு இவை நிவ்ருத்தியாகும். 14.

**சதாவரீ ஸ்வரஸமும்கந்யா ஸ்வரஸமும்.**—(1) தண்ணீர் விட்டாங் கிழங்கின் ஸ்வரஸத்தோடு தேன் கலந்துபயோகித்தால் வயிற்றிலுண்டாகும் பித்த சூலை போகும். (2) சோற்றுக் கற்றாழைச்சாற்றில் மஞ்சட்பொடி சேர்த்து உட்கொண்டால் ப்லீஹரோகம், அபசீயென்கிற வியாதி இவ்விரண்டும் ஸ்வஸ்த்தமாகும். 15.

**அலம்புஷா ஸ்வரஸம்.**—பேச்சுரையின் ஸ்வரஸத்தை இரண்டு பலம் அளவில் பருகினால் அபசீ, கண்டமாலை, காமாலை இவை நீங்கும். 16.

**சசமுண்ட ஸ்வரஸம்.**—சசமுண்ட மென்னும்[1] பச்சிலைச் சாற்றை இளஞ்சூடாகக் காய்ச்சி, மிளகுப்பொடியும் தூவி ஏழு நாட்கள் உபயோகித்துவர ஸூர்யாவர்த்தம், அர்த்தாவபேதமென்கிற ஒற்றைத்தலை நோய் இவை நிவ்ருத்தியாகும். 17.

**பிராஹ்மீ ஸ்வரஸம் முதலியது.**—பிரமியிலை, கூஷ்மாண்டம், வசம்பு, சங்கங்குப்பி இவற்றின் ஸ்வரஸங்களுள் ஏதேனுமொன்றில் தேன், கோஷ்டம் இவற்றைச் சேர்த்து உட்கொள்ள ஸகலவித உன்மாத ரோகங்களும் தீரும். 18.

**கூஷ்மாண்ட ஸ்வரஸம்.**—நீற்றுப் பூசினிக்காய் ஸ்வரஸத்தை வெல்லம் கலந்து உபயோகித்தால், பதனழிந்த கோத்ரவ தானியத்தாலான உணவுகளை யுட்கொண்டதால் நேரிட்ட வெறி நிவ்ருத்தியாகும். 19.

**காங்கேருகீ ஸ்வரஸம்.**—பேய்ப்பீர்க்கம் வேரின் ஸ்வரஸத்தை உடனே கத்தி முதலியவற்றால் வெட்டுண்ட அவயத்திலுள்ள விரணத்தின் துவாரத்தில் நிரம்பவும் விட்டால், விரணத்தில் ஏற்படக்கூடிய வலியைச் சிறிதும் உணராம லிருக்கலாம். 20.

## புடபாக ஸ்வரஸங்கள்[2].

**புடபாக முறை:**—சில ஔஷதிகளைப் புடமிட்டு பக்குவம் செய்து, அப்பால் அதன் கல்கத்தைப் பிழிந்து ஸ்வரஸம் கிரஹிக்கப்படுவதுண்டு ; அவ்வித புடபாகம் செய்வதற்கான சில முறைகள் இங்கு மொழியப்படுகின்றன. எவற்றிலிருந்து ஸ்வரஸம் கிரஹிக்க வேண்டுமோ அவ்வோஷதிகளை யெடுத்து, அவற்றின்மேல் சில இலை

---

1. சசமுண்டம் என்பது இன்ன ஔஷதியென்று நன்கு விளங்கவில்லை; சசமுண்டம் என்பதும் சசிப்பீ யென்பதும் ஒரே வஸ்துதானென்றும், அதுதான் ஜீவந்தீ அல்லது பாலக்கீரை யென்றும் சிலரது கொள்கை.

2. சில பதார்த்தங்களிலிருந்து ஸ்வரஸமெடுப்பது சிறிது பிரயாஸமாயிருந்தாலும், அல்லது பக்குவம் செய்யாமல் அவ்வித ஸ்வரஸங்களை உபயோகிப்பது பிசகெனக் கருதப்பட்டாலும், அப்பொழுது அவ்வஸ்துக்களைப் புடபாகம் செய்து, அதன் பிறகு அவற்றிலிருந்து ஸ்வரஸம் பிழிந்துபயோகிப்பது நலமாகுமென்பது கருத்து; அவ்வித புடபாகவிதி யென்கிற விஷயம் இங்கு விவரிக்கப்படுகிறது.

களையோ மரப்பட்டைகளையோ சுற்றவேண்டும்; அவை பெருங்குமிழன், ஆல், நாவல் முதலிய மரங்களின் பத்திரங்களாயிருந்தால் உத்தமம். அதன்மேல் இரண்டு அங்குலம் கனமாக மண் முதலியவற்றை லேபனம் செய்யவேண்டும்; பிறகு மேற் பூச்சானது தழல் போல் சென்னிறமாகும் வரையில் புடத்தில் ஔஷதத்தை எரிக்க வேண்டும். இதுதான் ஸாதாரணமாய் புடபாகம் செய்வதற்கான முறையாகும். 21—22½.

**புடபாக ஸ்வரஸத்தை உட்கொள்ளுவதற்கும் அதில் சேர்க்கும் பதார்த்தங்களுக்கும் அளவுகள்:**—புடபாகத்தினால் பக்குவம் செய்தெடுத்த ஸ்வரஸங்களைப் பொதுவாய் ஒரு தடவைக்கு ஒரு பலம் விதம் உட்கொள்ளலாம்; இவ்வித ஸ்வரஸத்தில் தேன் சேர்க்க வேண்டுமானால் அதில் கால் பலம் சேர்க்கலாம்; கல்கம், சூர்ணம், திரவ பதார்த்தங்கள் முதலியவைகளை ஸாதாரண ஸ்வரஸத்திற்கு உபயோகிக்கும் விதமாகவே சேர்க்கவேண்டும். 23½.

**குடஜ புட பாகம்.**—வெட்பாலையின் பட்டையை அரிசி கழுவிய நீரால் பச்சையாகவே அரைத்து அக்கல்கத்தில் நான்கு பலம் உருட்டியெடுத்து, அதன்மேல் நாவலிலையைச் சுற்றி, நூலால் நன்றாகக் கட்டி, கோதுமைமாவை அதன்மேல் பூசி, அதற்குமேல் கனமாக மண்ணைத் தடவி, பசுஞ்சாணத்தினாலான வறட்டிகளின் இடையில் வைத்து எரித்தல் போடவும்; மேலே பூசிய மண் தழலைப்போல் சென்னிறமாகக் காணப்படும்போது அதை வெளியிலெடுத்து, மேலுள்ள கவசங்களை விலக்கி, உட்புறத்தில் பக்குவமாயுள்ள கல்கத்தைப் பிழிந்து ஸ்வரஸம் கிரஹிக்கவும். அந்த ஸ்வரஸம் நன்கு குளிர்ந்தபின்னர் தேன் கலந்து உட்கொள்ளலாம். இவ்வௌஷதம், எவ்வித சிகித்ஸைக்கும் வசப்படாதவையும், வெகு நாட்களாகத் துன்பமளிப்பவையுமான ஸகலவித அதிஸாரங்களையும் போக்கும். ஒரு பலம் அரிசியை உடைத்துக் கழுவி, எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்து, ஒரு நாள் ஊறவைத்து, அந்த ஜலத்தை மட்டும் வடித்து இவ்விதமான எல்லா சிகித்ஸைகளிலும் அனுபானமாகக் கொடுப்பது நலம். 24—28.

**அரலுத்வக் புட பாகம்.**—பெருமரப்பட்டையையும் முன்போல் புடபாகம் செய்து ஸ்வரஸமெடுத்து உபயோகிக்க ஜாடராக்னி விரு

த்தியாகும்; அதில் தேனையும் இலவம்பிசினையும் சேர்த்து உட்கொண்டால் எல்லா அதிஸாரங்களும் தீரும். 29.

**நியக்ரோதாதி புடபாகம்:**—[1] ஆலமரம் முதலியவற்றின் பட்டைகளை அரைத்து கல்கம் செய்யவும்; தித்திரி யென்கிற பக்ஷியின் வயிற்றைக் குடைந்து குடல் முதலியவற்றை விலக்கி, அக்கல்கத்தை அவ்வயிற்றினுள் நிரப்பி, அக்னியிலிட்டுப் புடபாகத்தினால் பக்குவம் செய்து, அப்பால் அதைப் பிழிந்தெடுத்த ஸ்வரஸத்தில் தேன் சேர்த்து உபயோகித்தால் எல்லா அதிஸாரங்களும் நிவ்ருத்தியாகும். 30½.

**தாடிம புடபாகம்:**—நன்றாகக் கனிந்த மாதளம்பழத்தைப் புடபாக விதிப்படி சமைத்து, அதன் ஸ்வரஸத்தைத் தேனுடன் உட்கொண்டாலும் அகில அதிஸாரங்களும் தீரும். 31½.

**பீஜபூர புடபாகம் முதலியது:**—கொடிமாதளை, மா, நாவல் இவற்றின் தளிர்களைத் தனித்தனியே புடபாகம் செய்து, இரஸம் பிழிந்து, அந்த இரஸங்களில் ஒன்றைத் தேனுடன் பருகினால், ஸந்நிபாதத்தினாலுண்டான மிகத் துன்பமளிக்கும் வாந்தியும் நின்றுவிடும். 32, 33.

**வ்ருக்ஷபத்ர புடபாகம்:**—ஆடாதோடை யிலைகளை அரைத்து, புடபாகம் செய்து, ஸ்வரஸமெடுத்து, குளிர்ந்த பின்னர், தேன் கலந்து உபயோகித்தால், இரத்த பித்தம், காஸம், ஜ்வரம், க்ஷயரோகம் இவை குணமாகும். 34.

**கண்டகாரீ புடபாகம்:**—கண்டங்கத்திரியின் வேர், இலை, பட்டை, புஷ்பம், காய் இவ்வைந்தையும் இடித்து புடபாகத்தினால் பக்குவம் செய்து, ஸ்வரஸம் பிழிந்து, அதில் திப்பிலியின் சூர்ணத்தைச் சேர்த்து உட்கொண்டால் காஸம், ச்வாஸம், கபப்ரகோபம் இவையனைத்தும் தீரும். 35.

---

1. ஆல், அரசு, அத்தி, வெள்ளிலோத்தி, செவ்விலோத்தி, சிறுநாவல், பெருநாவல், மருதை, வஞ்சி, கருங்காலி, பூவரசு, மா, நீர்வஞ்சி, பலாசு, மணிப்புங்கு, இலந்தை, கடம்பு, தும்பை, அதிமதுரம், இலுப்பை இவை யாவும் "ஆலமரம் முதலியவற்றின் + +" என்பதால் குறிக்கப்படுகின்றன; இவற்றின் கூட்டுக்கு "ந்யக்ரோதாதி கணம்" என்று பெயர்.

**விபீதக புடபாகம்:**—பசுமையான தான்றிக்காய்களை யெடுத்து, அவற்றின் மேல் நெய்தடவி, கோதுமைமாவை மேலே பூசி, தழலி லிட்டு புடபாகம்போல் பக்குவம் செய்து, பின்னர் வெளியிலெடுத்து மேலுள்ள கவசங்களைப் போக்கி, அதன் தோலை சிறிதளவு புஜித் தால் காஸம், ச்வாஸம், பிரதிச்யாயம், தொண்டைக்கம்மல் இவை நீங்கும். 36,37.

**சுண்ட புடபாகம்:**—சுக்குப் பொடியில் சிறிது நெய் சேர்த்து, அதை ஆமணக்கிலையில் சுற்றி, மந்தாக்னியிலிட்டு புடபாகம் செய்து, வெளியிலெடுத்து அச்சூர்ணத்துடன் ஸமபாகம் சர்க்கரை சேர்த்து, காலை வேளைகளில் புஜித்து வரலாம்; அதனால் ஆமாதிஸாரத்தி னுண்டாகும் கஷ்டங்கள் நிவ்ருத்தியாகும். மேலும் சுக்குத் தூளை ஆமணக்கம் வேரின் சாற்றில் கலந்து, அதைப் புடபாகம் செய்து, அந்த இரஸத்துடன் தேன் கலந்து உட்கொண்டால், வெகு கஷ்ட ஸாத்யமான ஆமவாத ரோகத்தினுலுண்டாகும் துன்பங்கள் போகும். 38—40½.

**ஸூரண புடபாகம்:**—காருங்கருணைக் கிழங்கைப் புடபாகஞ் செய்து, ஸ்வரஸம் பிழிந்து, தைலம் உப்பு இவற்றை அத்துடன் கல ந்து உட்கொள்ள அர்சஸ் என்னும் மூலரோகம் தீரும். 41½.

**சீருங்க புடபாகம்:**—மான்கொம்பை ஓர் மண் அகலில் வைத்து, அதன் மேல் மற்றொரு அகலை மூடி, சீலை செய்து புடம் போட்டு, அப்பால் அதிலிருந்துண்டாகும் பஸ்மத்தைப் பசுவின் நெய்யிற் கலந்து உபயோகிக்க, இருதயத்திலுண்டாகும் நோய் நிச் சயமாய் நிவ்ருத்தியாகும். 42½.



# இரண்டாம் அத்தியாயம்.



## க்வாத கல்பனை.

**க்வாதம்:**—[1] கஷாயத்திற்கு உபயோகமான ஒரு பலம் திரவி யங்களை இடித்துப் பதினறு படங்கு ஜலத்தில் சேர்த்து, மட்பாத்தி

1. உலர்ந்த அல்லது பசுமையான ஓஷதிகளைக் காய்ச்சி வடிக் கட்டி யெடுக்கப்படும் கஷாயம் 'க்வாதம்' எனப்படும். மூலிகை முத

ரத்தில் எட்டில் ஒரு பங்காகச் சுண்டக் காய்ச்சி, வடிக்கட்டி யெடுக்க வேண்டும்; இக்கஷாயத்தைக் கமலாக்னியிட்டு எரிக்கவேண்டும்; இக் கஷாயத்தை இளஞ்சூடாயிருக்கையிலேயே உட்கொள்ளலாம்; இவ் விதம் பக்குவம் செய்யப்படும் முறை' க்வாதம்', 'ச்ருதம்', 'கஷாயம்', 'நிர் யூஹம்' என்கிற பெயர்களால் வழங்கப்படுகிறது. 1,2.

**க்வாதத்தை உட்கொள்ளும் அளவு:—** வயது முதிர்ந்து அனுப வம்பெற்ற வைத்தியருடைய உபதேசப்படி க்வாதத்தை நன்றாகப் பக்கு வம் செய்து, அதற்கு முன் புஜித்த ஆஹாரத்தின் இரஸம் [1] நன்கு ஜீர்ணமான பிறகு க்வாதங்களைப் பொதுவாக ஒரு பலம் அளவில் உட் கொள்ளலாம். 3.

**க்வாதத்தில் பதார்த்தங்களைச் சேர்க்கவேண்டிய பிரமாணம்:-** க்வாதத்தில் சர்க்கரை சேர்க்க வேண்டுமானால், வாத தோஷத்தாலுண் டாகிய வியாதிகளுக்கான க்வாதத்தில் நான்கில் ஒரு பாகம் சர்க்கரை யும், பித்தாதிகமான வியாதிகளில் க்வாதத்திற்கு எட்டில் ஒரு பங்கும், கபாதிகமான ரோகத்தில் க்வாதத்திற்குப் பதினாறில் ஒரு பங்கும் சேர்க் கலாம். தேன் சேர்க்கவேண்டுமானால், வாதாதிகமான வியாதியிலுப யோக்கிகக்கூடிய க்வாதத்தில் பதினாறில் ஒரு பங்கும், பித்த வியாதியில் எட்டில் ஒரு பங்கும், கபவியாதியில் நான்கில் ஒரு பங்குமாக முறையே முற் கூறியதற்கு மாறாகச் சேர்க்கவேண்டும். ஜீரகம், குங்கிலியம், க்ஷாரங்கள், உப்புகள், சிலாஜது, பெருங்காயம், த்ரிகடுகம் [2] இவற்றை க்வாதங்களில் சேர்ப்பதானால் ஒரு சாணப்பிரமாணம் [3] உபயோகிக்

---

வியவைகளைக் காய்ச்சி யெடுக்கப்படுவதே கஷாயமென்று ஸாமானிய மாய் வழங்கப்பட்டாலும், ஸ்வரஸம், க்வாதம், பாண்டம், சீதகஷாயம், கல்கம் என்கிற ஐந்துக்குமே கஷாயம் என்பது பொதுப் பெயரா கும்.

1. உணவுகளையுண்ட பின்பு, அவற்றின் திப்பிகளெல்லாம் கீழ்க் குடலில் மலமாகப் பிரிக்கப்பட்ட பின், இரத்தத்திற் சேருவதற் கேற்றதாய் மிகுந்துள்ள வெண்மையான திரவபதார்த்தம் 'இரஸம்' எனப்படும்.

2. சுக்கு, திப்பிலி, மிளகு இம்மூன்றுக்கும் ஒருமிக்க 'த்ரிகடு கம்' எனப் பெயர். 'த்ரியூஷணம்' என்றும் வழங்கப்படும்.

3. சாணம்—4-வது பக்கம் பார்க்க.

கலாம். பால், நெய், வெல்லம், தைலம், மூத்திரம் இவைகளையும், இதர திரவ பதார்த்தங்களையும், கல்கம், சூர்ணம் முதலியவற்றையும் க்வாதத்தில் கால் பலம் வீதம் சேர்க்கலாம். 4—6

**க்வாதத்தைத் தயார் செய்வதற்கான குறிப்பு:—** பாத்திரத்தின் முகத்தை மூடிவிட்டு க்வாதத்தைக் காய்ச்சினால் அதில் சேர்த்துள்ள ஜலம் நன்றாகச் சுண்டாது; ஆகவே க்வாதம் முதலியவற்றைக் காய்ச்சும்போது பாத்திரத்தின் வாயை மூடாமலிருக்க வேண்டுவது அவசியம். 7.

**குடூச்யாதி க்வாதம்.—** சீந்திற்கொடி, கொத்தமல்லி விதை, வேப்பு, செஞ்சந்தனம், பத்மகம் [1] இவற்றிற்கு 'குடூச்யாதி கணம்' எனப் பெயர்; இப்பதார்த்தங்களைக்கொண்டு பக்குவம் செய்யப்படும் க்வாதத்தை யுபயோகிக்க ஸகல ஜ்வரங்களும் தீருமென நிச்சயிக்கப் படுகிறது; மேலும் நாவறட்சி, ஹ்ருல்லாஸம், [2] சரீரவேக்காடு, வாந்தி, அருசி இவற்றையும் போக்கும்; தீபனகுணமும் இதற்குண்டு. 8½.

**சுண்ட்யாதி க்வாதம்:—** சுக்கு, தேவதாரு, கொத்தமல்லி விதை, கண்டங்கத்திரி வெண் கண்டங்கத்திரி இவற்றை க்வாதம் செய்து, ஜ்வரத்தினால் வருந்துபவர் முதன் முதலில் பருகினால் ஆமதோஷத்தைப் பக்குவஞ்செய்து ஜ்வரத்தையும் போக்கும். 9½.

**க்ஷுத்ராதி க்வாதம்:—** கண்டங்கத்திரி, நிலவேம்பு, சுக்கு, ஆடாதோடை, தாமரைக்கிழங்கு இவற்றின் கஷாயத்தை யுட்கொள்ள எட்டுவித ஜ்வரங்கள் [3] சமனமாகும். 10½.

---

1. பத்மகம்.— இதை ஓரிலைத் தாமரையென்பர் சிலர்.

2. ஹ்ருல்லாஸம்:—இருதயம் இயற்கையினும் அதிகமாய் படபடவென்று அடித்துக்கொள்ளல்.

3. வாதஜ்வரம், பித்தஜ்வரம், கபஜ்வரம், வாத பித்த ஜ்வரம், வாதகபஜ்வரம், பித்தகப ஜ்வரம், ஸந்நிபாதஜ்வரம், ஆகந்துக ஜ்வரம் என்று ஜ்வரம் ஸாமான்யமாய் எட்டு விதங்களாம். [இந்நூலில் ரோகங்களின் ஸங்க்யையைக் குறிப்பிடும் அத்தியாயத்தில் ஜ்வரம் இருபத்

**துருச்சியாதி க்வாதம் இரண்டாவது:—** சீந்திற்கொடி, மோடி, சுக்கு இவற்றின் க்வாதத்திற்கு நல்ல பாசக சக்தியுண்டு; எல்லாக் குறிகளுடனும் பூர்ணமாய் உண்டான வாதஜ்வரத்தில், அது உற்பத்தியான ஏழாவது தினத்தில் இக்கஷாயம் உபயோகிக்கத் தகுந்தது. 11½.

**சாலிபர்ண்யாதி க்வாதம்.—** சிறுமல்லி, சிற்றாமுட்டி, திராக்ஷை, சீந்திற்கொடி, நன்னாரிவேர் இவற்றைக் கஷாயமிட்டு இளஞ்சூடா யிருக்கையிலேயே பானம் செய்தால் கடுமையான வாத ஜ்வரம் தீரும். 12½.

**காச்மர்யாதி க்வாதம்:—** பெருங்குமிழன், நன்னாரிவேர், திராக்ஷை, கழற்சி, சீந்திற்கொடி இவற்றின் க்வாதத்தில் வெல்லம் சேர்த்து உட்கொண்டால் வாதஜ்வரம் நிவ்ருத்தியாகும். 13½.

**கட்பலாதி க்வாதம்:—** சிறுதேக்கு, வெட்பாலரிசி, வட்டத்திருப்பி, கடுகரோகிணீ, கோரைக்கிழங்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்வாதமானது தீவிரமான பித்தஜ்வரத்தில் தோஷங்களைப் பக்குவம் செய்வதற்காக ஜ்வரமுண்டான பத்தாவது தினத்தில் உபயோகிக்கத் தகுந்தது. 14½.

**பர்ப்படாதி க்வாதம்:—** பர்ப்பாடகம், ஆடாதோடை, கடுகரோகிணீ, நிலவேம்பு, காஞ்சொறி, ஞாழல் இவற்றினால் செய்த கஷாயத்துடன் சரக்கரையும் சேர்த்து உட்கொண்டால் நாவறட்சி, தேகவேக்காடு, இரத்தபித்தம் இவ்வித உபத்திரவங்களுடன் கூடிய பித்த ஜ்வரம் நிவாரணமாகும். 15,16.

**திராக்ஷாதி க்வாதம்.—** திராக்ஷை, கடுக்காய், கோரைக்கிழங்கு, கடுகரோகிணீ, பச்சிலை, பர்ப்பாடகம் இவற்றால் பக்குவம் செய்த கஷாயம் பித்தஜ்வரத்தை நிவாரணம் செய்யும்; நாவறட்சி, மூர்ச்சை, சரீர தாபம், இரத்தபித்தம் இவற்றையும் போக்கும். 17½.

**பர்ப்படாதி க்வாதம் இரண்டாவது:—** பித்தஜ்வரத்தைப் போக்குவதற்கு பர்ப்பாடகம் ஒன்றே சிறந்த ஔஷதமாகும்; அதை சந்

---

தைந்து விதமென்று ஸாமானிய ஜ்வரங்களையும் விசேஷ ஜ்வரங்களையும் சேர்த்துக் கணக்கிடப்பட்டதென்க.]

தனம், வெட்டிவேர், குருவேர் இவற்றுடன் சேர்த்து க்வாதம் செய்து பானம் பண்ணினால் பித்தஜ்வரம் எளிதில் நிவ்ருத்தியாகு மென்று கூறவும் வேண்டுமோ ? 18½.

**பீஜபூராதி க்வாதம்:**— கொடி மாதளை வேர், ஜடாமாம்ஸீ, கடுக் காய், சுக்கு, கிரந்திதகரம் இவற்றால் காய்ச்சிய கஷாயத்தில் யவக்ஷாரக் சேர்த்து, கபஜ்வரத்தில் அது உண்டான பன்னிரண்டாம் நாளில் உட்கொள்வது நலம்; இக்கஷாயத்திற்குள்ள பாசன குணத்தினால் ஆம தோஷங்கள் நீங்கி ஜ்வரம் நிவ்ருத்தியாகும். 19½.

**பூநிம்பாதி க்வாதம்:**— நிலவேம்பு, வேம்பு, திப்பிலி, கிச்சிலிக் கிழங்கு, சுக்கு, தண்ணீர்விட்டான், சீந்தில், கண்டங்கத்திரி இவற் றின் க்வாதம் கபஜ்வரத்தைப் போக்கும். 20½.

**படோலாதி க்வாதம்:**— பேயப்புடல், த்ரிபலை. 1 கடுகரோகிணீ, கிச்சிலிக்கிழங்கு, ஆடாதோடை, சீந்தில் இவற்றின் க்வாதத்தில் தேன் சேர்த்து உட்கொண்டாலும் கபஜ்வரம் நீங்கும். 21½.

**பஞ்சபத்ர க்வாதம்:**— பர்ப்பாடகம், கோரைக்கிழங்கு, சீந்தில், சுக்கு, நிலவேம்பு இவ்வைந்துக்கும் பொதுவாக 'பஞ்சபத்ரம்' எனப் பெயர்; இவற்றால் பக்குவம் செய்யப்பட்ட கஷாயம் வாத பித்தங் களாலுண்டான ஜ்வரத்தைத் தீர்க்கும். 22½.

**க்ஷுத்ராதி க்வாதம், இரண்டாவது:**— கண்டங்கத்திரி, சுக்கு, சீந்தில், அல்லிக்கிழங்கு 2 இவற்றின் கஷாயத்தை கபவாதங்களின் பிரகோபத்தினாலுண்டான ஜ்வரத்திலாவது ஸந்நிபாத ஜ்வரத்திலா வது பானம் செய்யலாம்; காஸம், ச்வாஸம், அருசி, பார்ச்வசூலை இவ்வு பத்திரவங்களை யுண்டுபண்ணும் ஜ்வரத்திலும் இக்கஷாயம் நற்பயன் விளைவிக்கும். 23, 24.

**ஆரக்வதாதி க்வாதம்:**— கொன்றை, மோடி, கோரைக்கிழங்கு, கடுகரோகிணீ, கடுக்காய் இவற்றைக்கொண்டு பக்குவம் செய்த கஷாயம் வாதகப ஜ்வரத்தை சீக்கிரத்திற் போக்கும்; ஆமதோஷத்

---

1. த்ரிபலை—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இம்மூன் றின் பொதுப்பெயர்.

2. பௌஷ்கரம் என்பதை புஷ்கர தேசத்திலுண்டாகும் ஒரு வித மூலிகையென்றும், தாமரைக் கிழங்கென்றும், ஒருவித கோஷ்ட மென்றுங்கூட கூறுவர். மற்ற விடங்களிலும் பௌஷ்கரம் புஷ்கர மூலம் என்பவற்றிற்கு இதே விவரம் பொருந்தும்.

திலுண்டான சூலத்தையும் போக்கும்; இக்கஷாயத்திற்கு தீபன பாசனம், பேதனம் என்கிற குணங்களும் உண்டு. 25½.

**அம்ருதாஷ்டக க்வாதம்:**—சிந்தில், வேம்பு, கடுகரோகிணி, கோரைக்கிழங்கு, வெட்பாலரிசி, சுக்கு, பேய்ப்புடல், வெண் சந்தனம் இவ்வெட்டுக்கும் சேர்ந்து 'அம்ருதாஷ்டகம்' எனப் பெயர்; அம்ருதாஷ்டகத்தை க்வாதமிட்டு, திப்பிலிப்பொடியையும் சேர்த்து உட்கொள்ள பித்தகபங்களாலுண்டான ஜ்வரம் நிவ்ருத்தியாகும்; வாந்தி, அருசி, இருதயத்தின் படபடப்பு, சரீரதாபம், நாவறட்சி இவையும் தீரும். 26—27½.

**படோலாதி க்வாதம், இரண்டாவது:**—பேய்ப்புடல், இரத்த சந்தனம், மருளங்கிழங்கு,[1] கடுகரோகிணீ, வட்டத்திருப்பி, சிந்தில் இவற்றின் க்வாதம் பித்தகபஜ்வரம், வாந்தி, தாபம், சொறி, சிரங்கு, சில விஷங்களாலுண்டாகும் தீங்குகள் இவற்றைப் போக்கும். 28½.

**கண்டகார்யாதி க்வாதம்:**—கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, சுக்கு, கொத்தமல்லிவிதை, தேவதாரு இவற்றின் க்வாதம் ஸர்வ ஜ்வரங்களையும் போக்கும்; பாசனம் என்கிற குணத்திலும் சிறந்தது. 29½.

**தசமூல க்வாதம்:**—சிறுமல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, நெரிஞ்சி, பில்வம், தழுதாழை, பெருவாகை, பெருங்குமிழன், பாதிரி இம்மூலிகைகள் பத்துக்கும் 'தசமூலம்' எனப் பெயர்; இத்தசமூலத்தைக் கொதிக்க வைத்து வடிக்கட்டி, அதில் திப்பிலிப் பொடியைச் சேர்த்து உட்கொள்ளலாம். இதனால் வாதஜ்வரம், ஸந்நிபாதஜ்வரம், ஸூதிகாதோஷம், க்ஷயம், மிதமிஞ்சிய சைத்தியம், தலைச்சுற்றல், அதிக வியர்வை, காஸம், ச்வாஸம், ஹ்ருத்க்ரஹம்,[2] கண்டக்ரஹம்[3], பார்ச்வசூலை, சோம்பல், தலைவலி, இவை தீரும், 30—33.

**ஹரீதக்யாதி க்வாதம்:**—கடுக்காய், கோரைக்கிழங்கு, கொத்தமல்லி விதை, செஞ்சந்தனம், தாமரைக்கிழங்கு, ஆடாதோடை, வெட்

---

1. 'மூர்வா' என்பதற்கு வைத்யகசப்தஸிந்து முதலிய நிகண்டுக்கள்படி மருள் (Sansesnera Zeylanica) என்று பெயர். சிலவிடங்களில் பெருங்குரும்பைக்கும் மூர்வா என்கிற பெயருண்டு.

2. ஹ்ருத்க்ரஹம்:—இருதயப்பிடிப்பு; அதாவது இருதயநடை தடைபடுதல்.

3. கண்டக்ரஹம்:—கழுத்தை அசைக்கமுடியாமல் உண்டாகும் பிடிப்பு.

பாலரிசி, வெட்டிவேர், சீந்திற்கொடி, பச்சிலே, வட்டத்திருப்பி, சுக்கு, கடுகரோகிணீ இவற்றைக் கஷாயமிட்டு வடிக்கட்டி, அதில் நாவபிலிச் சூர்ணத்தைச் சேர்த்து உட்கொள்ள ஸந்நிபாதஜ்வரம் தீரும். ஸம்றட்சி, காஸம், தேகதாபம், வாய் தழுதழுத்துப் பிதற்றல், ச்வா திப், சோம்பல், வாந்தி, க்ஷயம், அருசி இவையும் சமனமாகும்; மலம், மூத்திரம், அபாநவாயு இவை கட்டுப்பட்டிருப்பதையும் அகற்றும்; தீபன பாசகுணமும் உண்டு. 34—36.

**பிப்பல்யாதி** க்வாதம்,—திப்பிலி, மோடி, சவியம், சித்திர மூலம், சுக்கு, வசம்பு, அதிவிடயம், சோம்பு, வட்டத்திருப்பி, வெட் பாலரிசி, [1] அரேணுகம், நிலவேம்பு, மருளங்கிழங்கு, கடுகு, மிளகு, கடுகரோகிணீ, அல்லிக்கிழங்கு, கண்டுபாரங்கி, வாய்விடங்கம், காக் காடச்ருங்கி, எருக்கம் வேர், கண்டங்கத்திரி, கடுக்காய், காஞ்சொறி, ஓமம், ஜீரகம், பெருவாகை, பெருங்காயம் இவ்விருபத்தெட்டு பதார்த் தங்களேயும் ஸமபாகமாகச் சேர்த்து, க்வாதமிட்டு உட்கொள்ளுவதால் கப-வாதஜ்வரம் நீங்கும்; வாதரோகம், சரீரத்தில் சைத்தியமதிகரித்தல், பிரபலமான கபம் இவற்றைக் கண்டிக்கும்; வாய்ப்பிதற்றுதல், அதி நித்ரை, அதிகமாய் மயிர்சிலிர்த்தல், அரோசகம், உக்கிரமான வாத நோய்கள், அபதந்த்ரகம், சரீரமெல்லாம் உணர்ச்சியற்றிருத்தல் இவற் றையும், ஸகல ஜ்வரங்களேயும், பதின்மூன்றுவிதமான ஸந்நிபாத ஜ்வ ரங்களேயும் [2]போக்கும். 37—42.

**கிராதார்தி க்வாதம்**:—நிலவேம்பு, கடுகரோகிணீ, கோரைக் கிழங்கு, கொத்தமல்லிவிதை, வெட்பாலரிசி, சுக்கு, தசமூலங்கள், மரமஞ்சள், யானைத்திப்பிலி இவற்றால் பக்குவம் செய்த கஷாயம் பக்கசூலே, ஸந்நிபாத ஜ்வரம், காஸம், ச்வாஸம், வாந்தி, விக்கல், சோம்பல், ஹ்ருத்க்ரஹம் இவற்றைக் குணப்படுத்தும். 43—44.

**கட்பலாதி க்வாதம், இரண்டாவது**:—சிறுதேக்கு,[3] கோரைக் கிழங்கு, கண்டுபாரங்கி, கொத்தமல்லிவிதை, காவட்டம்புல், பர்ப்பாட

---

1. வெட்பாலரிசிக்கு வழங்கப்படுவது போலவே ஆடாதோடை, கருநொச்சி இவற்றிற்கும் 'வத்ஸகம்' என்கிற பெயருண்டு.

2. எல்லா விஷமஜ்வரமும் ஸந்நிபாதத்தினுல் உற்பத்தியாவதாகக் கூறப்படுவதால், அவ்விஷம ஜ்வரங்கள் பதின்மூன்றுமே இங்கு ஸந்நி பாத ஜ்வரங்கள் என்று குறிக்கப்படுவதாயறிக; இவ்விஷமஜ்வரங் களின் விவரத்தைப்பற்றி 38-வது பக்கத்தைப் பார்க்க.

3 கட்பலத்தை சிலர் மருதமரமென்றும் (Myrica Sapida) கூறுவர். 'கட்பலா' என்று ஸ்த்ரீலிங்கமானல் குமிழனுக்குப் பெயர்.

கம், வசம்பு, கடுக்காய், கர்க்காடகச்ருங்கி, தேவதாரு, சுக்கு இவற்றின் கஷாயம் காஸம், ஜ்வரம், ச்வாஸம், கபப்பிரகோபம், கண்டக்ரஹம் இவற்றைச் சமனம் செய்யும். 45½.

**குடூச்சியாதி க்வாதம், மூன்றவது:**—சீந்திற்கொடியையும் திப்பிலி யையும் சேர்த்து பக்குவம்செய்த க்வாதத்தையுபயோகித்தால் வெகு நாட்களாகத் தொடர்ந்துவரும் ஜ்வரமும் நிவ்ருத்தியாகும். 46.

**பர்ப்படாதி க்வாதம், மூன்றவது.**—பர்ப்பாடகத்தைச் சேர்த்து க்வாதம் செய்து உபயோகித்தால் பித்த ஜ்வரம் நன்றாக நிவ்ருத்தி யாகும்; செஞ்சந்தனம், குருவேர், சுக்கு இவற்றையும் மேற்கூறிய சரக்குகளுடன் சேர்த்து க்வாதம் செய்தால் பித்த ஜ்வரம் நிச்சயமாய் நிவ்ருத்தியாகும். 47.

**நிதிக்திகாதி க்வாதம்.** — கண்டங்கத்திரி, சீந்திற்கொடி, சுக்கு இவற்றை க்வாதமிட்டு திப்பிலிப் பொடியை அக்கஷாயத்தில் சேர்த்து பானம் பண்ணலாம்; இதனுல் ச்வாஸரோகம், காஸம், அர்திதம்,[1] பீநஸம், அருசி, தொண்டைக்கம்மல், சூலநோய், அஜீர்ணம், ஜ்வரம் இவை நிவ்ருத்தியாகும். 48½.

**தேவதார்வாதி க்வாதம்:**—தேவதாருப்பட்டை, வசம்பு, கோஷ்டம், திப்பிலி, சுக்கு, சிறு தேக்கு, கோரைக்கிழங்கு, நிலவேம்பு, கடுகரோ கிணீ, கொத்தமல்லி விதை, கடுக்காய், யானைத்திப்பிலி, பூனைக்காலி, நெரிஞ்சி, பெருங்காஞ்சொறி, கண்டங்கத்திரி, அதிவிடையம், சீந்திற் கொடி, கர்க்கடக ச்ருங்கி, கருஞ்ஜீரகம் இவற்றை இடித்துச்சேர்த்து இவ்வற்றிற்கு எட்டுபங்கு ஜலம் சேர்த்து, எட்டில் ஒரு பங்காகக் காய்ச்சி வடிக்கட்டி, பிரஸவித்த ஸ்த்ரீகளுக்குக் கொடுத்தால், அவர் களுக்குண்டாகும் பக்கசூலை, காஸம், ச்வாஸம், ஜ்வரம், மூர்ச்சை, உடல் நடுக்கம், தலைநோய் இவை தீரும். 49—51½.

**க்ஷுத்ராதி க்வாதம், மூன்றவது:**—கண்டங்கத்திரி, கொத் மல்லி விதை, சுக்கு, சீந்திற்கொடி, கோரைக்கிழங்கு, அல்லிக்கிழங்கு,

---

1. அர்திதம்:—இதைப்பற்றி 66-வது பக்கத்தில் (12) என்று குறிப்பிட்டுள்ள டிப்பணியைப் பார்க்க.

செஞ்சந்தனம், நிலவேம்பு, பேய்ப்புடல், ஆடாதோடை, தாமரைக் கிழங்கு, கடுகரோகிணி, வெட்பாலரிசி, வேம்பு, கண்டுபாரங்கி, பர்ப்பாடகம் இவற்றை க்வாதம் செய்து காலையில் உட்கொண்டு வந்தால் ஸகலவித குளிர்ஜ்வரங்களும் போகும். 52—53½.

**முஸ்தாதி க்வாதம்:**—கோரைக்கிழங்கு, கண்டங்கத்திரி, சீந்திற்கொடி, சுக்கு, நெல்லிக்காய் இவற்றைக் கஷாயமிட்டு, திப்பிலிச் சூர்ணத்தையும் தேனையும் சேர்த்துப் பருகினால் விஷமஜ்வரம்நீங்கும். 54½.

**படோலாதி க்வாதம், மூன்றவது:**—பேய்ப்புடல், வெட்பாலரிசி, தேவதாருப்பட்டை, த்ரிபலை, கோரைக்கிழங்கு, திராக்ஷை, அதிமதுரம், சீந்திற்கொடி, ஆடாதோடை இவற்றின் க்வாதத்தில் தேன் சேர்த்து உட்கொண்டால் ஸந்ததம், த்ருதீயகம், அந்யேத்யுஷ்கம் என்கிற விஷம ஜ்வரங்களும்[1], முதலில் தாபம் அதிகரித்து அப்பால் சீதளமுண்டாகக்கூடிய ஜ்வரமும், நவஜ்வரமும்[2] தீரும். 55—56½.

**படோலாதி க்வாதம், நான்காவது:**—பேய்ப்புடல், த்ரிபலை, வேம்பு, திராக்ஷை, கோரைக்கிழங்கு, ஆடாதோடை இவற்றின் க்வாதத்தில் தேனையும் சர்க்கரையையும் சேர்த்து உட்கொள்ள அந்யேத்யுஷ்கஜ்வரம் நிவாரணமாம். 57½.

**குடூச்யாதி க்வாதம், நான்காவது:**—சீந்திற்கொடி, கொத்தமல்லி விதை, கோரைக்கிழங்கு, செஞ்சந்தனம், வெட்டிவேர், சுக்கு இவற்றைக் கஷாயமிட்டு, தேனும் சர்க்கரையும் கலந்து, த்ருதீயக ஜ்வரம் நிவ்ருத்தியாவதற்கும், நாவறட்சி சரீரதாபம் முதலியவற்றைப் போக்குவதற்கும் உபயோகிக்கலாம். 58, 59.

**தேவதார்வாதி க்வாதம், இரண்டவது:**—தேவதாரு, கடுக்காய், ஆடாதோடை, சிறுமல்லிகை, சுக்கு, நெல்லிக்காய் இவற்றைக் கஷாய

---

1. விஷம ஜ்வரங்கள்:—38-வது பக்கம் டிப்பணியில் விவரம் பார்க்க.

2. நவஜ்வரம்:—ஜ்வரம் உற்பத்தியானது முதல் 8 நாள் வரையில் நவஜ்வரம் எனப்படும்; அது ஆமஜ்வரம் என்றும் கூறப்படும்.

மிட்டு, தேன் சர்க்கரை சேர்த்து, சாதுர்த்திகஜ்வரம்,[1] ச்வாஸம், காஸம், அக்னி மாந்த்யம் இந்த ரோகங்களிற் கொடுக்கலாம். 60½.

**துடுச்சியாதிக்வாதம், ஐந்தாவது**:—சிந்திற்கொடி, கொத்த மல்லிவிதை, வெட்டிவேர், சுக்கு, விளாமிச்சை வேர், பர்ப்பாடகம், பில்வவேர், அதிவிடயம், வட்டத்திருப்பி, செஞ்சந்தனம், ஆடாதோடை, நிலவேம்பு, கோரைக்கிழங்கு, வெட்பாலரிசி இவற்றைக் கஷாயம் போட்டு, வடிக்கட்டி, ஆறியபிறகு தேன் சேர்த்து உட்கொள்ளலாம்; அதனால் இரத்த பித்தம்,[2] ஜ்வரம், அதிஸாரம் இவை நிவ்ருத்தியாகும். 61—62-½.

**குண்டயாதி க்வாதம்**:—சுக்கு, வெட்பாலரிசி, கோரைக்கிழங்கு, சிந்திற்கொடி, அதிவிடயம் இவற்றின் க்வாதத்தைப் பருகினால் ஜ்வராதிஸாரம்[3] ஒழிந்துவிடும். 63½.

**தாந்யகாதி க்வாதம்**.—கொத்தமல்லி விதை, சுருவேர், பில்வவேர், கோரைக்கிழங்கு, சுக்கு இவற்றின் க்வாதம் நன்கு ஜீர்ணமாகாத உணவுகளாலுண்டாகும் சூலத்தைப் போக்கும்; க்ராஹி, தீபனம், பாசனம்[4] என்கிற குணங்களையும் விசேஷமாயுடையது. 64½.

**தாந்யகாதி க்வாதம், இரண்டாவது**:—கொத்தமல்லி விதை, சுக்கு இவற்றினாலான கஷாயத்திற்கும் தீபனம் பாசனம் என்கிற குணங்களுண்டு; ஆமணக்கு வேரையும் சேர்த்து இக்கஷாயத்தைப் பக்குவம் செய்தால் ஆமவாதத்தினாலுண்டாகும்[5] பாதையும் நிவ்ருத்தியாகும். 65½.

**வத்ஸகாதி க்வாதம்**:— வெட்பாலரிசி, அதிவிடயம், பில்வவேர், கோரைக்கிழங்கு, வெட்டிவேர் இவற்றைக் கஷாயம் காய்ச்சி யுப

---

1. சாதுர்த்திக ஜ்வரம்:— 38-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.

2. இரத்த பித்தம்:—43-வது பக்கம் பார்க்க.

3. ஜ்வராதிஸாரம்:— ஜ்வரத்துடன் அதிஸாரமும் தொடர்ந்திருக்கும் வியாதி.

4. 'க்ராஹி' முதலிய விஷயங்களைபபற்றி 18,19-ம் பக்கங்களைக் காண்க.

5. ஆமவாதம்:— 49-வது பக்கம் பார்க்க.

யோகித்தால் அஜீர்ணத்துடன் கூடிய அதிஸாரமும், நாட்பட்ட சூலை யுடன் கூடிய இரத்தாதிஸாரமும் சமனமாகும். 66½.

**குடஜாஷ்டக க்வாதம்:**—குடசப்பாலை, அதிவிடயம், வட்டத் திருப்பி, நெல்லிப்பருப்பு, வெள்ளிலோத்தி, கோரைக்கிழங்கு, வெட்டிவேர், மாதளை இவ்வெட்டு வஸ்துக்களின் சேர்க்கைக்கு 'குடஜாஷ்டகம்' எனப் பெயர். இவற்றைக் கஷாயமிட்டு அதில் தேனையும் இலவம்பிசினையும் சேர்த்து உட்கொண்டால் குடலில் எரித்தல், இரத்தப்போக்கு, சூலை, அஜீர்ணதோஷம் இவற்றுடன் கூடியதும் வேறுவித சிகித்ஸைக்கு வசப்படாததுமான அதிஸாரங்கள் நீங்கும். 67—68½.

**ஹ்ரீபோராதி க்வாதம்:**—குருவேர், காட்டாத்திப்பூ, வெள்ளி லோத்தி, வட்டத்திருப்பி, நாகப்பூ, வெட்பாலை, கொத்தமல்லி விதை, அதிவிடயம், கோரைக்கிழங்கு, சீந்திற்கொடி, பில்வவேர், சுக்கு இவற் றைக் கஷாயமிட்டு உட்கொள்ள, நாட்பட்ட அதிஸாரம், அரோசகம், அஜீர்ணசூலை, இரத்தாதிஸாரம், ஜ்வரம் இவை குணமாகும்; இக் கஷாயத்திற்குப் பாசனசக்தியும் உண்டு. 69—70½.

**தாதக்யாதி க்வாதம்.**—காட்டாத்திப்பூ, பில்வவேர், வெள்ளி லோத்தி, குருவேர், யானைத்திப்பிலி இவற்றை க்வாதம் செய்து சிறிது குளிரச்செய்து, தேன் சேர்த்து குழந்தைகளுக்குக் கொடுக்க லாம்; அல்லது இக்கஷாயத்தை மீண்டும் காய்ச்சி சர்க்கரையும் தேனும் கலந்து லேஹ்யமாகச் செய்தும் சிறுவர்களுக்கு உபயோகிக்க லாம்; எல்லா அதிஸாரங்களும் குணமாகும், 71, 72.

**சாலிபர்ண்யாதி க்வாதம்:**—சிறு மல்லிகை, சிற்ருமுட்டி, பில் வம், கொத்தமல்லி விதை, சுக்கு இவற்றைக் கஷாயமிட்டு உபயோ கிப்பதால் வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி இவற்றுடன் கூடிய வாத ஸம்பந்தமான கிரஹணீரோகம் நிவ்ருத்தியாகும். 73.

**குடூச்யாதி க்வாதம், ஆறுவது:**— சீந்திற்கொடி, அதிவிடயம், சுக்கு, கோரைக்கிழங்கு' இவற்றின் கஷாயம் ஆமதோஷத்துடன் கூடிய கிரஹணீரோகத்தைப் போக்கும். ஆகவே க்ராஹீ, தீபனபாச னம் என்கிற குணங்கள் இக்கஷாயத்திற்கு உண்டு. 74.

**யவாதி-பில்வாதி க்வாதம்:**— (1)வதானியம், பேய்ப்புடல், கொத்தமல்லி விதை இவற்றைக் கஷாயமிட்டு, அத்துடன் தேனும் சர்க்கரையும் சேர்த்து உபயோகித்தாலும், பில்வவேர், (2) மாங்கொட்டை இவற்றைக் கஷாயமிட்டு அதில் தேன் சர்க்கரை சேர்த்து உட்கொண்டாலும் ஸகலவித அதிஸாரங்களும் நீங்கும். 75.

**த்ரிபலாதி க்வாதம்:**—த்ரிபலை, தேவதாரு, கோரைக்கிழங்கு, சவரியார் கூந்தல், முருங்கை இவற்றைக் கஷாயம் செய்து, அதில் திப்பிலிப் பொடியையும், வாய்விடங்கப் பொடியையும் சேர்த்து உட்கொள்ளலாம்; இதற்கு 'க்ருமிக்னம்' என்கிற குணமுண்டு; ஆகையால் வயிற்றுக் கிருமிகளை அழித்து வெளிப்படுத்த இக்கஷாயம் உபயோகமாகும். 76½.

**த்ரிபலாதி க்வாதம், இரண்டாவது:**—த்ரிபலை, சீந்திற்கொடி, கடுகரோஹிணீ, வேப்பு, நிலவேம்பு, ஆடாதோடை இவற்றைக் கஷாயமிட்டு, அதில் தேன் சேர்த்து காமாலை, பாண்டுரோகம் இவற்றைப் போக்குவதற்கு உபயோகிக்கலாம். 77½.

**புநர்நவாதி க்வாதம்:**—சாறணை, கடுக்காய், வேப்பு, மரமஞ்சள், கடுகரோஹிணீ, பேய்ப்புடல், சீந்திற்கொடி, சுக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த க்வாதத்துடன் பசுவின் மூத்திரமும் சேர்த்து உபயோகித்தால் பாண்டுரோகம், காஸம், மஹோதரம், ச்வாஸரோகம், வயிற்றுவலி, ஸர்வாங்கங்களிலுமுண்டாகும் வீக்கம் இவை நிவ்ருத்தியாகும். 78—79.

**வாஸாதி க்வாதம்:**—ஆடாதோடை, திராக்ஷை, கடுக்காய் இவற்றின் க்வாதத்தில், தேன் சர்க்கரை சேர்த்து உட்கொண்டால் உக்கிரமான இரத்தபித்தம், ச்வாஸம், காஸம் இவை நீங்கும். 80.

**கேவல வாஸா க்வாதம்:**—ஆடாதோடையை மட்டும் கஷாயமிட்டு, தேன் சேர்த்து உபயோகித்தால் இரத்தபித்தம், க்ஷயம், காஸம், கபபித்தஜ்வரம் இவை குணமாகும். 81.

**வாஸாதி க்வாதம், மூன்றாவது:**—ஆடாதோடை, கண்டங்கத்திரி, சீந்திற்கொடி, இவற்றின் கஷாயத்தைத் தேன் கலந்து உட்கொண்டால் ஜ்வரம், காஸம் இவை தீரும். 81½.

**வார்ஸ்ர்தி க்வாதம், நான்காவது:**—ஆடாதோடையையும், கண்டங்கத்திரி வேரையும் சேர்த்துக் கஷாயமிட்டு, அதில் திப்பிலிப் பொடியையும் தூவி யுபயோகித்தால் காஸரோகம் தீரும். 82.

**க்ஷுத்ராதி க்வாதம், நான்காவது:**—கண்டங்கத்திரி, கொள், ஆடாதோடை, சுக்கு இவற்றினால் பக்குவம் செய்த க்வாதத்தில் அல்லிக்கிழங்கின் பொடியைத் தூவி உட்கொண்டால் ச்வாஸ-காஸம் நிவ்ருத்தியாகும். 83.

**ரேணுகாதி க்வாதம்:**—அரேணுகம், திப்பிலி இவற்றை க்வாதம் செய்து, பெருங்காயத்தைப் பொடித்துச் சேர்த்து உட்கொள்ள ஐந்துவித [1] விக்கல்களும் உடனே நீங்கும். 84.

**பில்வ க்வாதம் முதலியது, இரண்டாவது:**—பில்வவேர்ப்பட்டையையாவது, சீந்திற் கொடியையாவது க்வாதமிட்டு, அதில் தேனையும் கலந்து உட்கொள்வதால் ஸந்நிபாதத்தினாலுண்டாகும் வாந்தி நீங்கும்; அவ்விதமே பர்ப்படக க்வாதத்தைப் பக்குவம் செய்துட்கொண்டால் பித்தத்தினாலுண்டான சர்த்தியும் தீரும். 85.

**இரண்டாவது தசமூல க்வாதமும் சேபாலிகா க்வாதமும்:**—தசமூலங்களைக் கொண்டு [2] பக்குவம் செய்த வாதத்தில் பெருங்காயம், அல்லிக்கிழங்கு இவற்றைப் பொடித்துச் சேர்த்து உட்கொண்டால் க்ருத்ரஸீ [3] ரோகம் நீங்கும்; பெருங்காயம் முதலியதைச் சேர்க்காமல் கெருநாச்சியிலையை மட்டும் கஷாயமிட்டு உபயோகித்தாலும் க்ருத்ரஸீ ரோகம் தீரும். 86.

**ராஸ்நாதி க்வாதம்:**—சிற்றரத்தை, சீந்திற்கொடி, பெருமரம், சுக்கு, ஆமணக்குவிதை இவற்றைக் காய்ச்சிய கஷாயத்தை ஏழு தாதுக்களையும் ஆச்ரயித்து உண்டான ஸர்வாங்க வாதரோகத்திலும், ஆமவாதரோகத்திலும் உட்கொள்ளலாம். 87.

**இரண்டாவது ராஸ்நாதி க்வாதம்:**—சிற்றத்தை, நெரிஞ்சி,

---

1. 5-வித விக்கல்கள்:—45-வது பக்கத்தில் விவரம் காண்க.

2. தசமூலம்:—105-ம் பக்கம் பார்க்க.

3. க்ருத்ரஸீ:—66-வது பக்கம் (22) என்று குறிப்பிட்டிருப்பதைப் பார்க்க.

ஆமணக்கன் வேர், தேவதாரு, வெள்ளைச்சாறடை, சீந்திற்கொடி, கொன்றை இவற்றைக் கஷாயம் காய்ச்சி, சுக்கைப் பொடித்துச் சேர்த்து உட்கொண்டால் கால்பிடிப்பு, இடுப்புப்பிடிப்பு, பக்கசூலை, பின்புறச்சூலை, தொடைவலி, வெகு கடினமான ஆமவாதம் ஆகிய வாத ரோகங்கள் நீங்கும். 88, 89.

மஹா ராஸ்நாதி க்வாதம்:—சிற்றரத்தை, காஞ்சொறி, சிற்றாமுட்டி, ஆமணக்கு, தேவதாரு, கிச்சிலிக்கிழங்கு, வசம்பு, ஆடாதோடை, சுக்கு, கடுக்காய், சவியம், கோரைக்கிழங்கு, சாறடை, சீந்திற்கொடி, கடற்பாலை, சதகுப்பி, நெரிஞ்சி, அமுக்கிறாங்கிழங்கு, அதிவிடயம், பச்சிலை, தண்ணீர்விட்டாங்கிழங்கு, திப்பிலி, மருதோன்றி, கொத்தமல்லி விதை, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை இவற்றைக் கொண்டு பக்குவம் செய்த க்வாதத்தில் சுக்குத்தூள் சேர்த்து உட்கொள்ளலாம்; இவற்றுள் சிற்றரத்தை மட்டும் இரண்டு பாகமும், காஞ்சொறி முதலிய மற்றவையெல்லாம் ஒவ்வொரு பாகமும் சேர்க்கப்படவேண்டும்; இக்கஷாயத்தில் சுக்குப் பொடியைச் சேர்ப்பதற்குப் பதிலாகத் திப்பிலிப் பொடியை உபயோகிக்கலாம்; அல்லது யோகராஜகுக்குலு [1] என்கிற ஔஷதத்தையாவது, அஜமோதாதி சூர்ணத்தையாவது [2], ஆமணக்கெண்ணெயையாவது சேர்த்து உட்கொள்ளலாம்; இதற்குப் பெயர் 'மஹாராஸ்நாதி க்வாதம்' என்றும், கர்ப்போத்பத்தி செய்யக்கூடிய சக்தி இவ்வௌஷதத்திற்கு உண்டென்றும் பிரம்மாவினாலேயே கூறப்பட்டிருக்கிறது. மேலும் ஸர்வாங்கங்களிலும் நடுக்கமுண்டாவது, கூன் விழுதல், பார்ச்வவாயு, அபபாஹுகம், [3]

---

1. யோகராஜகுக்குலு:—இதைப்பற்றி இந்த கண்டத்தில் 7-வது அத்தியாயத்தில் 56 முதல் 70-வது ச்லோகம் வரையில் பார்க்க.

2. அஜமோதாதி சூர்ணம்:—இந்த முறையைப்பற்றி இதே கண்டத்தில் 6-வது அத்தியாயத்தில் 13 முதல் 17-வரையிலுமுள்ள ச்லோக எண்ணிக்கைகளைப் பார்க்க; அஜமோதாதி மாத்திரையும் செய்யலாம்.

3. அபபாஹுகம்—66-வது பக்கம் (24) என்று குறிப்பிட்டுள்ள டிப்பணியைக் காண்க.

க்ருத்ரஸீ, [1] ஆமவாதம், [2] யானைக்கால், அபதானகம், [3] அந்த்ரவ்ருத்தி யென்னும் குடலிறக்கம், வயிற்றுப்பொருமல், கால் முழங்கால் இவற்றைப் பற்றிக்கொண்டு உண்டாகும் வாதரோகங்கள், அர்திதம், [4] சுக்ல ஸம்பந்தமான ரோகங்கள், ஆண்குறியைப்பற்றிய வியாதிகள், மலட்டுத்தனம், யோநிஸம்பந்தமான பிணிகள் இவற்றை ஸ்வஸ்த்தம் செய்யும். 90—96.

**ஏரண்ட மூலாதி க்வாதம்.**—ஆமணக்கு, மாதளை, நெரிஞ்சி, சிறு வழுதுணை, கண்டங்கத்திரி, கல்லுருவி, பில்வம் இவற்றின் வேர்களால் பக்குவம் செய்த கஷாயத்தில் ஆமணக்கெண்ணெய், பெருங்காயம், யவக்ஷாரம், இந்துப்பு இவற்றைச் சேர்த்து உபயோகித்தால் ஸ்தனங்கள், தோள்கள், இடுப்பு, ஆண்குறி, இருதயம் இவற்றிலுண்டாகும் வலி நிவ்ருத்தியாகும். 97, 98.

**மூன்றுவது சுண்ட்யாதி க்வாதம் முதலியது.**—சுக்கு, ஆமணக்கு வேர் இவற்றின் க்வாதத்திலாவது, வெட்பாலரிசியின் க்வாதத்திலாவது பெருங்காயத்தையும் கல்லுப்பையும் சேர்த்து உட்கொண்டால் வாதத்தின் கோளாறுலுண்டான சூலை நிவ்ருத்தியாகும். 99.

**த்ரிபலாதி க்வாதம், மூன்றுவது**—த்ரிபலை, கொன்றை இவற்றின் கஷாயத்தில் சர்க்கரையும் தேனும் கலந்துபயோகித்தால் இரத்த பித்தம், சரீரவேக்காடு, பித்தசூலை இவை நிவ்ருத்தியாகும். 100.

**ஏரண்ட மூல க்வாதம், இரண்டாவது**—இரண்டு பலம் ஆமணக்குவேரை எட்டு பங்கு ஜலத்தில் சேர்த்து க்வாதம் காய்ச்சி, யவக்ஷாரமும் சேர்த்து உட்கொள்வதால் பக்கசூலை, இருதயத்திலுண்டாகும் சூலை இவை நீங்கும். 101.

**தசமூலக்வாதம் மூன்றுவது**—தசமூலங்களைச் சேர்த்து பக்கு

1. க்ருத்ரஸீ—66-வது பக்கம் டிப்பணியைப் பார்க்க.
2. ஆமவாதம்—49-வது பக்கம் பார்க்க.
3. அபதானகம்—66-வது பக்கம் பார்க்க.
4. அர்திதம்—66-வது பக்கத்தில் பார்க்க.

வம் செய்த க்வாதத்தில் யவக்ஷாரமும் இந்துப்பும் சேர்த்து உட்கொண்டால் இருதயசூலை, குன்மம், வயிற்றுநோய், காஸம், ச்வாஸம் இவை நிவ்ருத்தியாகும். 102.

**ஹரீதக்யாதி க்வாதம், இரண்டாவது**—கடுக்காய், காஞ்சொறி, பச்சிலை, நெரிஞ்சி, கல்லுருவி இவற்றைக் கஷாயமிட்டு, தேன்சேர்த்து உட்கொண்டால் மலபந்தம், எரிச்சலுடனும் வலியுடனும் கூடிய நீர்ச் சுருக்கு இவை நிவ்ருத்தியாகும். 103½.

**வீரதர்வாதிகண க்வாதம்.**—விளாமிச்சை,[1] புல்லுருவி, ஞாழல், செங்குறிஞ்சி, மஞ்சட்குறிஞ்சி, வாடாக்குறிஞ்சி, தர்ப்பை, நெட்டிக் கோரை, கொறுக்கை, பேய்க்கரும்பு, கொக்குமந்தாரை, முன்னை, மருள், கல்லுருவி, பெருவாகை, நெரிஞ்சி, நாயுருவி, தாமரை, பிரமியிலை இவ் வோஷதிகளின் சேர்க்கை 'வீரதர்வாதி' யென்னும் சிறந்ததோர் கண மாகக் கூறப்படும்; இவற்றின் க்வாதத்தை உபயோகித்தால் சர்க்கரா, அச் மரீ, மூத்திரக்ருச்சிரம், மூத்திராகாதம் [2] என்கிற மூத்திர வியாதிகளை யும், ஸகல வாதரோகங்களையும் போக்கும். 104—106½.

**ஏலாதி க்வாதம்**—ஏலக்காய், அதிமதுரம், நெரிஞ்சி, அரேணுகம் ஆமணக்குவேர், ஆடாதோடை, திப்பிலி, கல்லுருவி இவற்றைச் சேர்த்து நன்றாக க்வாதம் செய்து, சிலாஜது பஸ்பமும் சேர்த்து உட்கொண்டால் சர்க்கரா, அச்மரீ, மூத்திர க்ருச்சிரம் இவை தீரும். 107, 108.

**கோக்ஷுர க்வாதம்.**—நெரிஞ்சியை ஸமூலமாக க்வாதம்செய்து சர்க்கரை, தேன் இவற்றைச் சேர்த்து உட்கொள்ள மூத்திர க்ருச்சிரங் களும், உஷ்ணவாதமும் [3] நிவ்ருத்தியாகும். 109.

**த்ரிபலாதி க்வாதம், நான்காவது.**—த்ரிபலை, மரமஞ்சள், கோ ளரக்கிழங்கு, தேவதாரு இவற்றின் க்வாதம் தேன் கலந்து உட்கொள் ளப்படுமானால் பிரமேஹங்களைப் போக்கும். 109½.

---

1. 'வீரதரு' அல்லது 'வீரதரம்' என்று விழலுக்குப் பெயர். சேங்கொட்டை மரம், ஒரு வகை பில்வம், மருதை இவற்றிற்கும் பெயர்.

2. சர்க்கரா, அச்மரீ முதலியதைப்பற்றி 68-ம் பக்கத்தில் விவ ரம் காண்க.

3. உஷ்ணவாதம்—52. 5 வது பக்கங்களைப் பார்க்க.

**வத்ஸகாதி க்வாதம், இரண்டாவது.**—வெட்பாலரிசி, த்ரிபலை மரமஞ்சள், கோரைக்கிழங்கு, கொடிமாதளை இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயத்திலும் தேன் கலந்து உட்கொண்டால் பிரமேஹங்கள் தீரும். 110.

**த்ரிபலாதி க்வாதம், ஐந்தாவது.**—த்ரிபலை, கோரைக்கிழங்கு, மரமஞ்சள், பேய்த்தும்மட்டி இவற்றைக் கஷாயமிட்டு, மஞ்சட்பொடியைத் தூவி யுபயோகித்தால் ஸகலவித பிரமேஹங்களும் நீங்கும். 111.

**தார்வ்யாதி க்வாதம்**:—மரமஞ்சள், இரஸாஞ்ஜநம்,[1] கோரைக்கிழங்கு, சேராங்கொட்டை,[2] பில்வம், ஆடாதோடை, நிலவேம்பு இவற்றைக் கஷாயமிட்டு வடிக்கட்டி, ஆறியபிறகு தேன் கலந்து உட்கொண்டால் மஞ்சள், வெண்மை, கறுப்பு, சிவப்பு இவ்வித நிறங்களுடன்கூடியதும் வெகு வேதனையைத் தருவதுமான பிரதரம் என்கிற பெரும்பாடு நிவ்ருத்தியாகும். 112½.

**ந்யக்ரோதாதி கண க்வாதம்.**—ஆல், பூவரசு, காட்டுமாமரம், வஞ்சி, இலந்தை, படுகரணை, அதிமதுரம், ப்ரியாளம், வெள்ளிலோத்தி, உதியமரம், அத்தி, அரசு, இலுப்பை, கல்லாலை, யானைகொந்தி, தும்பை, சிறுநாவல், பெருநாவல், மா, கடுக்காய், கடம்பு, மருதமரம், சேராங்கொட்டை இவற்றின் கூட்டுக்கு 'ந்யக்ரோதாதி கணம்' என்று பெயர்; இவையனைத்தையுமோ அல்லது இவற்றுள் கிடைக்கக்கூடியவைகளையோ சேர்த்து க்வாதம் செய்து உபயோகிக்கலாம். க்ராஹி என்கிற குணம் இக்கஷாயத்திற்கு மிகுதியா

---

1. இரஸாஞ்ஜநம்—காசதுத்தம் அல்லது பாற்றுத்தம் என்று சிலர் கூறுகின்றனர். [மரமஞ்சளைக் கஷாயம்போல் காய்ச்சி அதிலிருந்து ஸத்துவம்போல எடுக்கப்படும் ஒருவித அஞ்ஜநம் இரஸாஞ்ஜநம் எனப்படுகிறது; ஆனால் மரமஞ்சளும் இக்கஷாய முறையில் தனியாக்க் கூறப்பட்டிருப்பதால், இரஸாஞ்ஜநம் என்பது வேறொரு பொருளாகவே இருக்கவேண்டும்.]

2. இங்கு சேராங்கொட்டையை முதலில் சுத்தி செய்தே ஒளஷத முறையில் சேர்க்கவேண்டுமென்பதை வைத்தியர் நினைவில் வைக்கவேண்டும். [கொட்டைகளை சாணிப்பாலில் மூன்று நாள் ஊறவைத்து, கழுவி, பிறகு புதிய சாணிப்பாலில் இரண்டு

யுண்டு; வ்ரண்யமாகவும்[1] உபயோகமாகும்; ஒடிந்துபோன அவய வங்களைக் கூட்டி அங்குள்ள விரணத்தையும் ஆற்றும்; யோநி ஸம் பந்தமான தோஷங்கள், அழற்சி, மேஹோரோகம், 2 மேஹரோகங் கள், விஷஸம்பந்தமான கோளாறுகள் இவற்றையும் நீக்கும். 133—116½:

**பில்வாவதி க்வாதம், மூன்றாவது:—** பில்வம், முன்னை, பெரு வாகை, பெருங்குமிழன், பாதிரி இவற்றைக் கஷாயமிட்டு அதில் தேன் கலந்து உட்கொள்ள மேஹோ தோஷம் தீரும். 117½.

**ஆறாவது த்ரிபலா க்வாதம் முதலியது,—** த்ரிபலாக்வாதத்தில் தேன் சேர்த்து உட்கொண்டாலும் மேஹோரோகம் தீரும்; ஜலத்தை மட்டும் கொதிக்கவைத்து ஆற்றி, அதில் தேனைச் சேர்த்து உட் கொண்டாலும் மேஹோரோகம் குணமாகும். 118½.

**சவ்யாதி க்வாதம்:—** சவ்வியம், சித்திரமூலம், சுக்கு, தேவ தாரு இவற்றைச் சேர்த்துக் கஷாயமிட்டு, இவதை வேர்ப்பொடி யைத் தூவி, பசுமூத்திரம் சேர்த்து உபயோகித்தால் மஹோதரம் முதலிய வயிற்றைப்பற்றிய நோய்களெல்லாம் தீரும். 119½.

**புநர்நவாதி க்வாதம் இரண்டாவது:—** சாறணை, சித்தில், தேவ தாரு, கடுக்காய், சுக்கு, இவற்றைக்கொண்டு பக்குவம் செய்த க்வாதத் தில் பசு மூத்திரம் சேர்த்து, குங்கிலியத் தூளையும் தூவி உபயோகித் தால் உடலெல்லாம் வியாபித்துள்ள வீக்கமும், மஹோதரம் முதலிய வயிற்றைப் பற்றிய வியாதிகளும் நீங்கும். 120½.

**ஹரீதக்யாதி க்வாதம் மூன்றாவது:—** கடுக்காய், செம்மரம் இவ ற்றை க்வாதம் செய்து, யவக்ஷாரம், திப்பிலி இவற்றைப் பொடித் துச் சேர்த்து விடியற்காலத்தில் உட்கொண்டுவந்தால், யக்ருத் தரம், 3, ப்லீஹோதரம் 4, குன்மம், மஹோதரம் இவை நிவ்ருத்தி யாகும். 121½.

---

மூன்று யாமங்கள் கொதிக்கவைத்து பிறகு நன்றாகக் கழுவி உலர் த்தி யெடுக்கவும்.]

1. வ்ரண்யம்— விரணங்களை ஆற்றும் குணம்.
2. மேஹோரோகம்— 55-வது பக்கம் பார்க்க.
3. யக்ருதுதரம்— கல்லீரல் வீங்கிப்போயுண்டாகும் வியாதி.
4. ப்லீஹோதரம்—மண்ணீரல் வீங்கிப்போயுண்டாகும் வியாதி.

புநர்நவாதி க்வாதம், மூன்றாவது:— சாறணை, மரமஞ்சள், மஞ்சள், சுக்கு, கடுக்காய், சிற்றில், சித்திரமூலம், கண்டுபாரங்கி, தேவதாரு இவைகளைக்கொண்டு பக்குவம் செய்த க்வாதமானது கை, கால், வயிறு, முகம் இவற்றிற் பரவிய வீக்கத்தைப் போக்கும். 122, 123.

த்ரிபலா க்வாதம், ஏழாவது:— த்ரிபலையினால் பக்குவஞ்செய்த க்வாதத்தில் பசுமூத்திரம் சேர்த்து உட்கொள்ள வாத கபங்களாலான அண்ட வீக்கம் குணமாகும். 124.

ராஸ்நாதி க்வாதம், மூன்றாவது:— சிற்றரத்தை, சிற்றில், சிற்றாமுட்டி, அதிமதுரம், நெரிஞ்சி, ஆமணக்குவேர் இவற்றைக் கஷாயமிட்டு, ஆமணக்கெண்ணெயைச் சேர்த்து, உபயோகித்தால் அந்த்ர வ்ருத்தி யென்னும் பீஜத்திலுண்டாகும் குடலிறக்கத்தைப் போக்கும். 125.

காஞ்சநார க்வாதம் முதலியது:— செம்மந்தாரப் பட்டையின் க்வாதத்தை சுக்குப்பொடியுடன் உபயோகித்தாலும், மாவலிங்கம் பட்டையின் க்வாதத்தில் தேன் கலந்துபயோகித்தாலும் கண்டமாலை தீரும். 126.

சாகோட க்வாதம்:— பிராய்மரப்பட்டையின் க்வாதத்தைப் பசு மூத்திரத்துடன் உட்கொண்டால் யானைக்கால் தீரும்; மேதோ ரோகமும் நிவ்ருத்தியாகும். 127.

நான்காம் புநர்நவாதி க்வாதமும் சிக்ருக்வாதமும்:— சாறணை, மாவலிங்கை இவற்றின் க்வாதம் அந்தர்வித்ரதிகளைப் போக்கும், முருங்கப்பட்டையின் க்வாதத்தில் பெருங்காயம், இந்துப்பு இவற்றைப் பொடித்துச் சேர்த்து உட்கொண்டாலும் அந்தர்வித்ரதி[1] நிவாரணமாகும். 128.

வருணாதி கண க்வாதம்:— வருணாதிகணக்வாதத்தில் ஊஷகாதி கணத்தின்[2] கல்கத்தைச் சேர்த்து, பக்குவமாகாமல் நடுநிலைமையி

1. அந்தர் வித்ரதி—இதைப்பற்றி 17-வது பக்கம் பார்க்க.

2. ஊஷகாதிகணம்—பூநீறு, மயில்துத்தம், பெருங்காயம், பசுமையான அன்னபேதி, வெண்மையான அன்னபேதி, இந்துப்பு, சிலாஜது இவற்றின் சேர்க்கை.

லிருக்கும் அந்தர்வித்ரதியை குணப்படுத்துவதற்காக உட்கொள்ள லாம். வருணாதி கணமாவது:— மாவலிங்கை, கொக்குமந்தாரை, பில்வம், நாயுருவி, சித்திரமூலம், முன்னை, அரணி, வெண் முருங்கை, கறுமுருங்கை, சிறுவழுதுணை, கண்டங்கத்திரி, செங்குறிஞ்சி, வெண் குறிஞ்சி, கறுங்குறிஞ்சி, மருள், ஆடுதீண்டாப்பாளை, நிலவேம்பு, வேலிப்பருத்தி, கோவை, புங்கு, தண்ணீர் விட்டான் இவைகளே யாம்; இந்த கணத்திலுல் பக்குவமான க்வாதம் அந்தர்வித்ரதியைப் போக்குவதோடு கபத்தின் கோளாறுகளையும், மேதோரோகத்தை யும், குன்மத்தையும், தலைநோயையும் நிவ்ருத்திசெய்யும். 129—132.

கதிராதி க்வாதம்:—கருங்காலி, த்ரிபலை இவற்றின் க்வாதத் தில் எருமை நெய்யும் வாய்விடங்கப் பொடியும் சேர்த்து உபயோகித் தால் பகந்தரம் தீரும். 133.

படோலாதி க்வாதம், ஐந்தாவது:—பேய்ப்புடல், த்ரிபலை, வேம்பு, கருங்காலி, திணிசை இவைகளை க்வாதம் செய்து, குங்கிலியம் சேர்த்துபயோகிக்க ஸகலவித உபதம்சங்களும் குணமாகும். 134.

குடூச்யாதி க்வதாம், ஏழாவது:— சிந்திற்கொடி, ஆமணக்கம் வேர், ஆடாதோடை இவற்றின் க்வாதத்தில் ஆமணக்கெண்ணெ யைச் சேர்த்து உட்கொண்டால் தேஹமெங்கும் பரவியிருக்கும் வாத ரக்தம் தீரும். 135.

படோலாதி க்வாதம், ஆறுவது:— பேய்ப்புடல், த்ரிபலை, கடுக ரோகிணி, சிந்திற்கொடி, தண்ணீர் விட்டான் இவற்றின் க்வாதத்தை யுட்கொண்டால் அழற்சியுடன் கூடிய வாதரக்தம் போகும். 136.

தாத்ரியாதி க்வதாம்:— நெல்லிப்பருப்பு, காசுக்கட்டி[1] இவற்றின் க்வாதத்தில் காட்டுஜீரகப் பொடியைச் சேர்த்து[2] தினந்தோறும் உட்கொண்டு, பத்தியமான உணவுகளையும் புஜித்து வந்தால் வெண் குஷ்டம் தீரும். 137.

மஞ்ஜிஷ்டாதி க்வாதம்:— மஞ்ஜிஷ்டி, த்ரிபலை, கடுகரோகிணி,

---

1. 'கதிரஸாரத்தை' காசுக்கட்டியென்றும், சிலர் கருங்காலிப் பிசினென்றும் கூறுவர்.

2. அவல்குஜம் என்பதை காட்டு ஜீரகம் (vernomia anthelmintica) என்றும், கார்ப்போகரிசியென்றும்கூறுவார். ஆட்லாங்கொடி யென்று கூறுவது முண்டு.

வசம்பு, மரமஞ்சள், சீந்தில், வேப்பு இவற்றின் கஷாயம் வாதரக்தத்தைப் போக்கும்; சிரங்குகள், காபாலிகமென்கிற குஷ்டரோய், ரக்த மண்டலமென்னும் குஷ்டம் இவைகளும் குணமாகும். 138½.

**மஞ்ஜிஷ்டாதிகஷாய க்வாதம்**:—மஞ்ஜிஷ்டி, கோரைக்கிழங்கு, குடசப்பாலையிலை, சீந்தில், கோஷ்டம், சுக்கு, கண்டுபாரங்கி, கண்டங்கத்திரி, வசம்பு, வேப்பு, மஞ்சள், மரமஞ்சள், த்ரிபலை, பேய்ப்புடல், கடுகரோணி, மருள், வாய்விடங்கம், தினிசை, சித்திரமூலம், தண்ணீர்விட்டான், கொன்றை, [1] திப்பிலி, வெட்பாலரிசி, ஆடாதோடை, கரிசிலாங்கண்ணி, தேவதாரு, வட்டத்திருப்பி, கருங்காலி, செஞ்சந்தனம், சிவதை, மாவலிங்கை, நிலவேபபு, கார்ப்பொகரிசி, பச்சிலை, பிராய், மஹாநிம்பம்,[2] புங்கு, அதிவிடயம், குருவேர், தும்மட்டி, அறுகம்புல், நன்னாரி, பர்ப்பாடகம் இவற்றின் சேர்க்கைக்கு "மஞ்ஜிஷ்டாதி கணம்" என்று பெயர்; இக்கணத்திற்கூறியுள்ள பதார்த்தங்களைச்சேர்த்து பக்குவம் செய்த க்வாதத்தை திப்பிலிப்பொடியையும், குங்கிலியப்பொடியையும்சேர்த்து உட்கொண்டால் பதினெட்டு விதமான குஷ்டங்கள், வாதரக்தம், அர்திதம், உபதம்சம், யானைக்கால், ப்ரஸுப்தியென்னும் உணர்ச்சியின்மை, பார்ச்வவாயு, மேதோரோகம், நேத்திரரோகங்கள் இவை குணமாகும். 139—144½.

**ஷடங்க க்வாதம்**:—த்ரிபலை, நிலவேப்பு, மஞ்சள், வேப்பு, சீந்தில், வெல்லம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த கஷாயம் 'ஷடங்க க்வாதம்' எனப்படும்; இது தலை, புருவம், கன்னம், காது இவற்றிலுண்டாகும் வலி, ஒற்றைத்தலைவலி, ஸூர்யாவர்த்தம், சங்ககம், தந்தபாதம், மற்றும் சில பல்நோய்கள், இராக்கண், படலரோகங்கள், சுக்லம்,[3] மற்றுமுள்ள கண்ணோய்கள் இவற்றை நிவ்ருத்தி செய்யவல்லது 145—147.

**வரஸாதி க்வாதம், ஐந்தாவது**:—ஆடாதோடை, சுக்கு, சீந்தில்,

---

1. 'த்ராயமாணு' என்பதை ஹிமாலயத்திலுண்டாகும் அப்பெயர்கொண்ட செடியென்று சிலரும், கழற்சிச்செடியென்று சிலரும் கூறுவர். கொன்றையென்றும் பொதுவாகக் கூறப்படும்.

2. மஹாநிம்பம்—ஒருவித வேம்பு. (நூற்றுக்கணக்கான வயதுள்ள வேப்பமரமென்று கூறுகிறார்கள்.)

3. இங்கும் இனி மற்ற விடங்களிலும் குறிக்கப்படும் வியாதிகளின் விவரங்களை பூர்வ கண்டத்தில் 7-வது அத்தியாயத்தில் அந்தந்த தலையங்கங்களின் கீழும், டிப்பணியிலும் காண்க.

மரமஞ்சள்; செஞ்சந்தனம், சித்திரமூலம், நிலவேம்பு, வேம்பு, கடுகரோகிணீ, பேய்ப்புடல், த்ரிபலை, கோரைக்கிழங்கு, யவதானியம், வெட்பாலரிசி, குடசப்பாலையிலை இவற்றின் க்வாதம் ஸகல நேத்திர ரோகங்களையும் போக்கும்; மேலும் தொண்டைக்கம்மல், பீநஸம், ச்வாஸரோகம், உரக்ஷதம் இவ்வியாதிகளும் குணமாகும். 148, 149.

**குடூச்சியாதி க்வாதம், எட்டாவது:**—சீந்திற்கொடி, த்ரிபலை இவற்றை க்வாதம் செய்து திப்பிலிப் பொடியையும் சேர்த்து தேன் கலந்து தினந்தோறும் உட்கொள்ள ஸகல நேத்திரரோகங்களும் நீங்கும். 150.

**அச்வத்தாதி க்வாதம்:**—அரசு, அத்தி, பூவரசு, ஆல், நீர்வஞ்சி இவற்றின் க்வாதத்தை விரணங்களைக் கழுவ உபயோகிக்கலாம்; இதனால் ஸாதாரண விரணங்கள், வீக்கம், உபதம்சம் இவையும் நிவ்ருத்தியாகும். 151.

## ப்ரமத்யா முதலிய கஷாய வகைகள்.

**ப்ரமத்யா முறை:**—ஏதேனும் ஒரு பலம் சரக்கைச் சூர்ணம் செய்து, எட்டு பங்கு ஜலத்தில க்வாதம்போல் காய்ச்சி யெடுக்கவும்; இதற்கு 'ப்ரமத்யா' எனப் பெயர். இதை உபயோகிக்கவேண்டிய பொதுப் பிரமாணம் இரண்டு பலம். 152.

**முஸ்தாதி ப்ரமாத்யா:**—கோரைக் கிழங்கு, வெட்பாலரிசி இவ்விரண்டையும் சேர்த்து ப்ரமத்யா என்கிற கஞ்சிபோன்ற கஷாயமாகப் பக்குவம் செய்யவும்; இதை ஆறவைத்து, பிறகு தேன் சேர்த்து இரண்டு பலம் அளவில் உட்கொண்டால் இரக்தத்துடன் கூடிய அதிஸாரம் நீங்கும். 153.

**யவாகூ முறை:**-நாலு பலங்கொண்ட உணவு அல்லது ஔஷதச் சரக்கை அறுபத்துநாலு பலங்கொண்ட ஜலத்தில் சேர்த்து, அரைவாசி குறையுமளவும் காய்ச்சி யெடுத்துக் கொள்ளப்படும் குழம்பான ஒருவித திரவம் 'யாவகூ' எனப்படும். 154.

**ஆம்ராத்வகாதி யவாகூ:**—மாம்பட்டை, ஆம்ராதமரப்பட்டை,

---

1. ஆம்ராதகம்—தமிழில் மரிமாஞ்செடி யென்கிறார்கள். ஆங்கிலத்தில் Spondias Mangifera என்றும் வைத்யக சப்தஸிந்து முதலியதில் கூறப்படுகிறது.

நாவற்பட்டை இவற்றைக் கஷாயமிட்டு, அதில் சம்பா அரிசியை உடைத்துச் சேர்த்து யவாகூவாகப் பக்குவம் செய்து உட்கொள்ளலாம்; இதை யுபயோகித்தால் கிரஹணீரோகம் தீரும். 155.

**யூஷம் செய்யும் முறை:**—ஒரு கஷாயத்தில் சேர்க்க வேண்டிய பிரதான வஸ்து ஒரு பலமும், சுக்கு, திப்பிலி இவை அரைக்கால் பலமும், ஒரு பிரஸ்த்தப் பிரமாணங்கொண்ட ஜலத்தில் சேர்த்து, காய்ச்சி யெடுத்துக்கொள்ளப்படும் ஒருவித கஞ்சி 'யூஷம்' எனப்படும். 156.

**ஸப்தமுஷ்டிக யூஷம்:**—கொள், யவதானியம், இலந்தம் பழம், முள்ளங்கி, கிரந்திதகரம், சுக்கு, கொத்தமல்லி விதை இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த யூஷத்தை யுபயோகித்தால் கபம், வாதங்களின் கோளாறுகள், ஸந்நிபாத ஜ்வரம், ஆமவாதம் இவை தீரும்; தொண்டை, வாய், மார்பு இவற்றிலுள்ள மலங்களை வெளிப்படுத்தி அவற்றிற்கும் சுத்தியைத் தரும்; இவ்வஸ்துக்களால் பக்குவம் செய்யப்படும் கஞ்சிபோன்ற கஷாயத்திற்கு "ஸப்தமுஷ்டிகயூஷம்" என்று பெயர். 157, 158.

**பேயா:**—ஒரு பலங்கொண்ட ஏதேனும் பதார்த்தத்தைப் பொடித்து, அறுபத்திநாலு பலம் ஜலத்தில் பக்குவம் செய்து, அரை வாசி குறையும்படி காய்ச்சி யெடுத்து, உணவு முதலியதுடன் உட்கொள்ளச் செய்யலாம்; அதை 'பேயா' எனக் கூறுவர். 159.

**உசீராதி பேயா:**—வெட்டிவேர், பர்ப்பாடகம், விளாமிச்சை வேர், கோரைக்கிழங்கு, சுக்கு, சந்தனம் இவற்றால் பேயாவைப் பக்குவம் செய்து, குளிர்ந்த பிறகு, தாஹமும் ஜ்வரமும் நிவ்ருத்தியாவதற்கு உபயோகிக்கலாம். 160.

**உஷ்ணோதகம்:**—ஜலத்தை எட்டில் ஒரு பங்காகவாவது, நாலில் ஒரு பங்காகவாவது, அரைவாசியாகவாவது, கொதிவரும் வரையிலுமாவது காய்ச்சி யெடுக்க அது 'உஷ்ணோதகம்' எனப்படும். உஷ்ண ஜலத்தை இரவில் பருகிவர கபவிகாரம், ஆமவாதம், மேதோரோகம், காஸம், ச்வாஸம், ஜ்வரம் இவை நீங்கும்; மூத்திரப்பையிலுள்ள தோஷங்களையும் போக்கும்; மூத்திரத்தையும் தாராளமாக வெளிப்படுத்தும்; தீபநசக்தியும் இதற்குண்டாம். 161, 162.

**க்ஷீரபாகவிதி:**—ஏதேனும் ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து பாலைப் பக்குவம் செய்யவேண்டுமானால், அப்பொழுது ஔஷதச் சரக்குகள் எவ்வளவு சேர்க்கப்படுமோ அவற்றிற்கு எட்டு மடங்கு பாலும், பாலுக்கு நான்கு மடங்கு ஜலமும் சேர்த்து, எவ்வளவு பால் சேர்க்கப் பட்டிருக்கிறதோ அது மாத்திரம் மிகுந்திருக்குமாறு காய்ச்சி விடவும். ஔஷதங்கள் சேர்க்காமல் கேவலம் பாலை மாத்திரம் மேற்கூறியபடி ஜலம் சேர்த்துக் காய்ச்சி, அன்னம் முதலியதற்குப் பதிலாக அஜீர்ண வயிற்றுவலியில் உட்கொள்ளலாம். 163.

**பஞ்சமூலீ க்ஷீரம்:**—பஞ்சமூலங்களைச் [1] சேர்த்து முன்போல் பாலைப் பக்குவம் செய்து உட்கொண்டுவந்தால் அதுவே ஸகலவிதமான நாட்பட்ட ஜ்வரங்களையும் போக்குவதற்கு உத்தமமான ஔஷதமாகும்; ச்வாஸம், காஸம், தலைநோய், பக்கச்சூலை, பீநஸம் இவ்வுபத்திரவங்களுடன் கூடிய ஜ்வரமும் இதனால் நிவ்ருத்தியாகும். 164½.

**த்ரிகண்டகாதி க்ஷீரம்:**—சிறுவழுதுணை, சிறுகாஞ்சொறி, பூனைக்காலி, சிற்றாமுட்டி, கண்டங்கத்திரி, வெல்லம், சுக்கு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பாலானது சுரஜ்வரத்தைப் போக்குவதுடன் மலபந்தம், நீர்ச்சுருக்கு இவற்றையும் நீக்கும். 165½.

## அன்னம் பக்குவம் செய்யும் வகை

அப்பால் ரோகிகளுக்குத் தகுந்த அன்னங்களைப் பக்குவம் செய்யும் வகைகளைப்பற்றி இங்கு ஸங்கிரஹமாகக் கூறுகிறோம்:—

**யவாகூ அல்லது க்ருஸரா:**—அரிசி, பயறு, உளுந்து, எள் இவற்றில் எதையாவது எடுத்துப் பொடித்து, அப்பதார்த்தத்திற்கு ஆறுபங்கு ஜலம் சேர்த்து, சிறிது குழம்பாகக் காய்ச்சவேண்டும்; இதற்கு 'யவாகூ' அல்லது 'க்ருஸரா' எனப் பெயர். ரோகிகளுக்கு இவ்வுணவு அனுகூலமாயிருக்கும். யவாகூவானது க்ராஹி, பல்யம், தர்ப்பணம், வாதஹரம் என்கிற குணங்களுடையது. 166—167½.

**விலேபீ:**—முன்போலவே அரிசி முதலியதை யுபயோகித்து, அவற்றிற்கு நாலு பங்கு ஜலம் சேர்த்து, யவாகூவைவிட இன்னும்

---

1. சிறுமல்லி, பெருமல்லி, சிறுவழுதுணை, கண்டங்கத்திரி, நெரிஞ்சில் இவ்வைந்தும் 'பஞ்சமூலம்' எனப்படும்.

சிறிது கனமாகப் பக்குவம் செய்ய, அவ்வுணவு 'விலேபீ' என்று சொல்லப்படும்; இதற்கு ப்ருஹ்மணம், தர்ப்பணம், ஹ்ருத்யம், மதுரமாயிருப்பதால் பித்தஹரம் என்கிற குணங்களுண்டு. 168½.

**பேயாவும் யூஷமும்:**—அதிக திரவமாகவும் சொற்ப அவிழுள்ளதுமான பேயாவென்கிற மற்றொரு விதமான கஞ்சியுண்டு; முற்கூறிய அரிசி முதலிய பதார்த்தங்களில் ஏதேனுமொன்றை யெடுத்து, பதினாலு பங்கு ஜலத்தில் சேர்த்து, பக்குவம் செய்யவேண்டும்; யூஷமென்னும் கஞ்சி பேயாவைப் பார்க்கினும் சிறிது கனமாயிருக்கும். பேயா யூஷத்தினும் குணத்தில் இலகுவானது; கிராஹீ என்கிற குணமும், தாதுபுஷ்டியைத் தரும் சக்தியும் அதற்குண்டு; யூஷமும் சீக்கிரம் ஜீர்ணமாகக் கூடியவாறு அவ்வளவு இலகு குணமுள்ளதாகவும், பல்யம், கண்ட்யம்,[1] கபஹரம் என்கிற குணங்களுடன் கூடியதாகவும் இருக்கும். 169—170½.

**மண்டம்:**—நாலு பலம் அரிசியைப் பதினாலு மடங்கு ஜலத்தில் சேர்த்து பக்குவம் செய்து, அதிலிருந்து அவிழைத் தவிர்த்து கஞ்சியை மாத்திரம் வடித்துக்கொள்ளவேண்டும்; அவ்வாறு பதினாலுபங்கு ஜலம் சேர்த்து பக்குவம்செய்து அவிழில்லாமல் வடித்தெடுத்த கஞ்சியானது வெகு சீக்கிரத்தில் ஜீர்ணமாகக்கூடியது; மதுரமாகவுமிருக்கும். இதற்கு 'மண்டம்' எனப் பெயர்- இந்த மண்டத்தில் சுக்கு, இந்துப்பு இவற்றையும் சேர்த்துபயோகித்தால் சிறந்த பாசநமாகவும் தீபநமாகவு மிருக்கும். 171—172½.

**அஷ்டகுண மண்டம்:**—கொத்தமல்லி விதை, சுக்கு, திப்பிலி, மிளகு, இந்துப்பு இவற்றையும், மோரையும் மேற்கூறிய மண்டத்தில் சேர்த்து, பெருங்காயமும் எண்ணெயும் பொரித்துச் சேர்த்து பக்குவம் செய்தால் அதற்கு 'அஷ்டகுணமண்டம்' என்று பெயர்: இதற்கு தீபநம், வஸ்திஸம்சோதநம்[2], ரக்தவர்த்தநம் என்கிற குணங்களும்,

---

1. கண்ட்யம்—தொண்டைக்கம்மல் முதலியதைப் போக்கி, கண்டத்திற்குப லந்தரக்கூடியது.

2. வஸ்திஸம்சோதநம் — மூத்திரப்பையிலுள்ள தோஷங்களையும், மூத்திரம் சிக்கிக்கொள்வதையும் போக்கக்கூடியது. [தீபநம் முதலியவற்றைப்பற்றி பூர்வகண்டம், நான்காம் அத்தியாயம் பார்க்க.]

ஆயாஸத்தைத் தீர்த்து பலமுண்டாக்கும் சக்தியும், ஜ்வரஹரம், ஸந்நிபாதஹரம் எனகிற குணங்களும் உண்டு. 173—174½.

**வாட்யமண்டம்:**—யவதானியத்தை நன்ருகக் கழுவியுலர்த்தி, அப்பால் செவ்வனே வறுத்து, முன்போலவே பக்குவம் செய்தால் அதற்கு 'வாட்யமண்டம்' எனப் பெயர்; அதற்கு கபபித்தஹரம், கண்ட்யம், ரக்த்தபித்த சோதநம் என்கிற குணங்களுண்டு. 175½.

**லாஜமண்டம்:**—நெற்பொரிகளாலாவது, வறுத்த அரிசியினலாவது முன்போல் பக்குவம் செய்தால் அதற்கு 'லாஜமண்டம்' என்று பெயர்; இதற்கும் கப பித்தஹரம், க்ராஹீ என்கிற குணங்களும், தாஹம், ஜ்வரம் இவற்றைப் போக்குந் தன்மையும் உண்டு. 176½.

---

## மூன்ருவது அத்தியாயம்.

---

### பாண்ட கல்பனே.

**பாண்டம்.**—கஷாயத்திற்குத் தேவையான பதார்த்தம் ஒரு பலம் எடுத்து, நன்ருக இடித்து, அதில் நாலு பலம் கொதிக்கும் ஜலத்தைச் சேர்த்து, சிறிது மூடிவைத்து, வஸ்திரத்திஞல் மட்பாத்திரத்தில் வடிக் கட்டவேண்டும். இது 'பாண்டம்' அல்லது 'சூர்ணத் திரவம்' எனப்படும். அதை உட்கொள்ள வேண்டிய பொதுப் பிரமாணம் இரண்டு பலம். க்வாதத்தில் சேர்த்த மாதிரியாகவே பாண்டத்திலும் தேன், சர்க்கரை, வெல்லம் இவற்றைச் சேர்த்துக் கொள்ளலாம். 1, 2.

**மதூக புஷ்பாதி பாண்டம்:**—இலுப்பைப்பூ, அதிமதுரம், சந்தனம், ஈச்சம் பழம், தாமரைத்தண்டு, தாமரைப்பூ, வெள்ளிலோத்தி, பெருங்குமிழன், நாககேஸரம், த்ரிபலே, நன்னரி, திராக்ஷை, நெற்பொரி, இவற்றை இடித்து, வெந்நீரில் சேர்த்து, சிறிது நேரத்திற் கெல்லாம் வடிக்கட்டி, சர்க்கரையும், தேனும் கலந்து உட்கொள்ளலாம்; இது 'மதூகபுஷ்பாதி பாண்டம்' எனப்படும். அல்லது மேற்

கூறிய பதார்த்தங்களைச் சேர்த்தே சீதகஷாயமும் [1] பக்குவம்பண்ணி உட்கொள்ளக்கூடும். இவ்வஸ்துக்களை இவ்வாறு பாண்டமாகவோ சீதகஷாயமாகவோ பக்குவம்செய்து உபயோகிப்பதால் வாதபித்த ஜ்வரம், சரீர வேக்காடு, நாவறட்சி, மூர்ச்சை, மனக்கோளாறு, தலைச் சுற்றல், இரத்தபித்தம், வெறி இவை நிவ்ருத்தியாவது நிச்சயம். 3—5

**ஆம்ரகில்லயாதி பாண்டம்.**—மாங்கொழுந்து, நாவற்கொழுந்து, ஆலம்விழுது, வெட்டிவேர் இவற்றைக்கொண்டு பக்குவம் செய்த பாண்டத்தில் தேன் சேர்த்து உட்கொண்டால் ஜ்வரம் தணியும்; நாவறட்சி, வாந்தி, அதிஸாரம், பிரபலமான மூர்ச்சை இவையும் குணமாகும். $6\frac{1}{2}$.

**மதூக புஷ்பாதி பாண்டம், இரண்டாவது.**—இலுப்பைப்பூ, பெருங்குமிழன், செஞ்சந்தனம், வெட்டிவேர், கொத்தமல்லி விதை, திராக்ஷை இவற்றால் பாண்டம் பக்குவம் செய்து, ஆறிய பிறகு சர்க்கரையும் சேர்த்து உபயோகிக்கலாம்; இது நாவறட்சி, பித்தப்பிரகோபம், சரீரவேக்காடு, மூர்ச்சை இவற்றைப்போக்கும். 7, 8.

## மந்தங்கள்.[2]

**மந்த கல்பனை.**—மந்தம் என்கிற பாகமும் ஒரு விதத்தில் பாண்டத்தைச் சேர்ந்ததேயாம்; ஆகவே அவ்விஷயமும் இவ்வத்தியாயத்திலேயே கூறப்படுகின்றது. பக்குவம் செய்யவேண்டிய பதார்த்தத்தைப் பொடிசெய்து, ஒரு பலம் வஸ்துவுக்கு நான்கு பலம் குளிர்ந்த ஜலம் சேர்த்து, இவற்றை ஒரு மட்பாத்திரத்தில் நன்றாகக் கடைய வேண்டும்; மந்தத்தைப் பொதுவாக இரண்டு பலம் அளவில் உட்கொள்ளலாம். $9\frac{1}{2}$.

**கர்ஜூராதி மந்தம்.**—பேரீச்சங்காய், மாதளம்பழம், திராக்ஷை, புளி, புளியாரத்தை, நெல்லிக்கனி, ஈச்சம்பழம் இவற்றால் பக்குவம் செய்த மந்தம் மதுபானத்தினு லுண்டாகும் எவ்வித விகாரங்களையும் போக்கும். $10\frac{1}{2}$.

---

1. சீதகஷாயம்—இதற்கே ஹிமம் என்று பெயர். அடுத்த அத்தியாயத்தில் விவரம் காண்க.

2. கடைந்து பக்குவம் செய்யப்படுவதால் மந்தங்கள் எனப்படுகின்றன.

**மஸூராதி மந்தம்.**—சிறுகடலைமாவில் தேனையும், மாதளம் பழச்சாற்றையும் விட்டுக் கடைந்து உட்கொள்வதால் ஸந்நிபாதத்தினு லுண்டான வாந்தியும் சீக்கிரத்தில் நிவ்ருத்தியாகும். 11½.

**யவ மந்தம்.**—வாற்கோதுமை மாவில் நெய்யும் குளிர்ந்த ஜல மும் சேர்த்துக் கடைந்து அதிகத் திரவமாகாமலும், அதிக கட்டியா யில்லாமலும் பக்குவம் செய்து உட்கொள்ள நாவறட்சி, தேகவெக்காடு, இரத்தபித்தம் இவை தீரும். 12½.

---

## நான்காவது அத்தியாயம்.

### ஹிம கல்பனை.

**ஹிமம் அல்லது சீதகஷாயம்** :—கஷாயத்திற்குபயோகமான பதார்த்தங்களைப் பொடித்து, ஒரு பலம் பதார்த்தத்துக்கு ஆறு பலம் வீதம் ஜலம் சேர்த்து, இரவில் ஊறவைத்து எடுக்கப்படும் கஷாயம் 'ஹிமம்' என்று கூறப்படும்; இதற்கு 'சீதகஷாயம்' என்றும் பெயர். 1 பெரும்பாலும் எல்லா ஹிமகஷாயங்களையும் உட்கொள்வதற்குப் பொதுப் பிரமாணம் பாண்டத்திற்குக் கூறியிருப்பது போலவே என்ற றியவும். 1½.

**ஆம்ராதிஹிமம்.**—மாம்பட்டை, நாவற்பட்டை, மருதம்பட்டை இவற்றை இடித்து, இரவில் ஜலத்தில் சேர்த்துவைத்து, விடியற் காலத்தில் தேன் கலந்து உட்கொள்ள இரத்தபித்தம் தீரும். 2½.

**மரிசாதி ஹிமம்.**—மிளகு, அதிமதுரம், பேயகத்திக் கொழுந்து, கருநெய்தல் இவற்றைக் கொண்டு பக்குவம்செய்த ஹிமகஷாயம் நாவறட்சியையும் வாந்தியையும் போக்கும். 3½.

**நீலோத்பலாதி ஹிமம்.**—கருநெய்தல், சிற்றுமுட்டி, திராக்ஷை, இலுப்பைப்பூ, அதிமதுரம், வெட்டிவேர், அல்லிக்கிழங்கு, பெருங்குமிழன், ஈச்சம்பழம் இவற்றினுலான ஹிமமானது வாதபித்த

1. அக்னியிலேற்றக் காய்ச்சாமல் குளிர்ந்த ஜலத்திலேயே பக்குவம் செய்யப்படுவதால் இது 'ஹிமம்' என்றும், 'சீதகஷாயம்' என்றும் வழங்கபபடுகிறது.

ஜ்வரங்களைப் போக்கும்; வாய்ப்பிதற்றல், தலைச்சுற்றல், வாந்தி, மூர்ச்சை, நாவறட்சி இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 4—5½.

**அம்ருதா ஹிமம்:**—சீந்திற் கொடியினாலான ஹிமத்தைப் பருக நாட்பட்ட ஜ்வரம் நிவ்ருத்தியாகுமெனக் கூறப்படுகிறது. 6.

**வாஸா ஹிமம்:**—ஆடாதோடையின் ஹிமகஷாயமானது காஸம், இரத்தபித்தம், ஜ்வரம் இவற்றைப் போக்கும். 6½.

**தான்யக ஹிமம்:**—கொத்தமல்லி விதையினாலாகிய ஹிமத்தைச் சர்க்கரை சேர்த்து, விடியற்காலத்திலுட்கொள்ள சரீரத்தினுட்புறத்தி லுண்டாகும், வேக்காடு, நாவறட்சி இவை குணமாவதுடன், குடல், செவி, நாசி முதலியவற்றில் சேர்ந்துள்ள தோஷங்கள் நீங்கி அவ்வவ யவங்கள் சுத்தமாகும். 7½.

**தான்யகாதி ஹிமம், இரண்டாவது:**—கொத்தமல்லி விதை, நெல்லிப்பருப்பு, ஆடாதோடை, திராக்ஷை, பர்ப்பாடகம் இவற்றின் ஹிமமானது இரத்தபித்தம், ஜ்வரம், நாவறட்சி, க்ஷயம் இவற்றைப் போக்கும். 8½.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

---

### கல்க கல்பனை

**கல்கம்:**—ஈரமான அல்லது உலர்ந்த வஸ்துக்களைக் கல்லில் அரைத்தெடுத்தால் அது 'கல்கம்' எனப்படும், இதற்கே 'ப்ரக்ஷேபம்,' 'ஆவாபம்' என்றும் பெயர்களுண்டு; கல்கங்களைப் பொதுவாக கால் பலம் அளவில் ஜலத்துடன் உட்கொள்ளலாம். 1.

**கல்கத்தில் சேர்க்கக்கூடிய பதார்த்தங்களின் அளவுகள்:**—கல்கத்தில் தேன், நெய், எண்ணெய் இவற்றை இரு மடங்காகச் சேர்க்க வேண்டும்; சர்க்கரை, வெல்லம் இவற்றைக் கல்கத்திற்கு ஸமமெடையாகச் சேர்க்கவேண்டும்; வேறு திரவ பதார்த்தங்களை கல்கத்தினும் நான்கு மடங்காகச் சேர்க்கலாம். 2.

**பிப்பலீவர்த்தமாநகம்:**—ஒரு தினத்தில் மூன்று திப்பிலி

களை அரைத்து உட்கொள்ளலாம்; இரண்டாம் நாள் ஆறு திப்பிலி களையும், மூன்றும் நாள் ஒன்பது திப்பிலிகளையும் கல்கமாகச் செய்து உபயோகிக்கலாம்; இவ்விதமே பத்தாவது நாள் வரையில் தினத்திற்கு மூன்று திப்பிலி விதமாக உயர்த்திக்கொண்டே வரவேண்டும்; சிலர் தினம் ஒன்றுக்கு ஐந்து திப்பிலிகள் விதமும், சிலர் எழு திப்பிலிகள் விதமும் பத்து நாள் வரையில் அதிகப்படுத்தி வரலாம். இதை உப யோகிப்பதை நிறுத்த வேண்டுமானாலும், முதலில் உபயோகித்த கிரமப் படியே தினம் ஒன்றுக்கு மூன்று திப்பிலி விதமாகவோ, ஐந்து திப்பிலி விதமாகவோ, எழு திப்பிலி விதமாகவோ முறையே குறைத்துக்கொண் டுவரவேண்டும். இவ்விதம் முதல்பத்து நாட்கள் வரையில் தினந் தோறும் மூன்று மூன்றாகவோ, ஐந்தைந்தாகவோ திப்பிலிகளை அதிக மாயுபயோகித்து வந்து, அப்பால் பத்து நாட்கள் வரையில் கிரமமாகக் குறைத்து, இவ்வௌஷதப் பிரயோகத்தை இருபது நாட்களில் முடிக்கலாம்; இவ்வித முறைக்கு 'பிப்பலீ வர்த்தமானகம்' என்று பெயர். இதனால் பாண்டு ரோகம், வாதரக்தம்1, காஸம், ச்வாஸம், அரோசகம், ஜ்வரம், மஹோதரம், அர்சஸ், க்ஷயம், கபத்தின் கோளாறு கள், வாதரோகம், உரோக்கிரஹம் இவை நிவ்ருத்தியாகும். 3-4.

நிம்ப பத்ர கல்கம்:—வேப்பிலையை அரைத்து, அக்கல்கத்தை சர்மத்தின்மேல் தடவினால் விரணங்களிலுள்ள தோஷங்களைப்போக்கி அவற்றை ஆற்றும். இதே கல்கத்தை உட்கொண்டால் வாந்தி, குஷ்டரோகம், பித்தச்லேஷ்மங்களுடைய கோளாறுகள், கிருமிகள் இவை தீரும். 5½.

மஹா நிம்ப ஜடாகல்கம்:—மிகவும் முதிர்ந்த வேப்பம் வேரின் பட்டையை யெடுத்து கல்கம் செய்துபயோகித்தால் க்ருத்ரஸீ என்கிற வாதரோகம்2 குணமாகும். 6.

ரஸோநகல்கம்:—வெங்காயத்தை மாத்திரம் கல்கமாகச்செய்து, நல்லெண்ணெயோடு கலந்து உட்கொள்ள உக்கிரமான வாதரோகங் களும், விஷமஜ்வரங்களும் போகும். 7.

---

1. வாதரக்தம்—65-ம் பக்கம் பார்க்க.
2. க்ருத்ரஸீ—66-ம் பக்கத்தில் (22) என்கிற குறிப்பைப் பார்க்க.

ரஸோநாதி கல்கம் இரண்டாவது:—நன்கு முதிர்ந்த வெங்காயத்தின் மேலுள்ள புறணிகளை விலக்கிப் பிளந்து, மத்தியிலுள்ள முளையையும் விலக்கி, அதற்குள்ள துர்நாற்றத்தைப் பொக்குவதற்காக இரவில் புளித்த மோரில் ஊறவைத்து, மறு நாள் அரைத்து, அட்டுப்பு, ஓமம், பொரித்த பெருங்காயம், இந்துப்பு, திப்பிலி, சுக்கு, மிளகு, ஜீரகம் இவற்றை ஸமஎடையெடுத்து சூர்ணம் செய்து, முற் கூறிய கல்கத்துக்கு ஐந்திலொரு பங்கு சூர்ணத்தை அக்கல்கத்துடன் கூட்டி, வேளைக்குக் கால் பலம் வீதம் உட்கொள்ளலாம்; இதனால் ஜாடராக்னி விருத்தியாகும்; ஸ்த்ரீகளுக்கு மாதவிடாயிலுண்டாகும் கோளாறுகளும் நீங்கும்; தினந்தோறும் இக்கல்கத்தை யுட்கொள்கையில் ஏரண்ட மூலக்வாதத்தை[1] அநுபானமாகப் பருகிவந்தால் ஸர்வாங்கவாதரோகம், ஏகாங்க வாதரோகம், அர்திதம், அபதந்த்ரகம், அபஸ்மாரம், உன்மாதம், ஊருஸ்தம்பம், க்ருத்ரஸீ, மார்வலி, இடுப்புவலி, வயிற்றுவலி,[2] கிருமிரோகம் இவைகள் தீரும். அஜீர்ண முண்டாகக்கூடிய உணவு முதலியவை, வெயில், கோபித்தல், அதிக ஜலபானம், பால், வெல்லம் இவையனைத்தையும் ரஸோநாதி கல்க முபயோகிப்பவன் எப்பொழுதும் விலக்கிவிட வேண்டும்; மதுபானம், மாம்ஸ போஜனம், புளிப்பான உணவுகள் இவை பிரதிதினமும் உபயோகிக்கத்தகுந்தவையாம். 8-15.

பிப்பல்யாதி கல்கம்:—திப்பிலி, மோடி, சுத்தி செய்த சேராங்கொட்டை இவற்றின் கல்கத்தைத் தேனுடன் உபயோகித்தால் ஊருஸ்தம்பம் தீரும். 16.

விஷ்ணுக்ராந்த ஜடா கல்கம்:—விஷ்ணுக்கிராந்தி வேரின் கல்கத்தை சர்க்கரை, தேன், நெய் இவற்றில் கலந்துட்கொண்டு வந்தால் ஏழு நாட்களில் பரிணாமசூலை நிவ்ருத்தியாகும். 17.

சுண்ட்யாதிகல்கம்:—சுக்கு, எள், வெல்லம் இவற்றின் கல்கத்

1. ஏரண்ட மூலக்வாதம்—114-வது பக்கம் பார்க்க.

2. இங்கு கூறப்பட்டுள்ள வாதரோகங்களின் விவரங்களை பூர்வகண்டம் 7-வது அத்தியாயத்தில் வாதரோக ப்ரகாரணத்திற் காண்க.

தைப் பாலுடன் உட்கொண்டால் பரிணாமசூலையும் ஆமவாதமும் குண மாகும். 18.

**அபாமார்கபீஜ கல்கம்:**—நாயுருவிவிதைகளின் கல்கத்தை அரிசி கழுவிய நீருடன் உட்கொண்டு வந்தால் இரக்தார்சஸ் என்னும் மூலரோகம் நிச்சயமாய் நிவ்ருத்தியாகும். 19.

**பதரீ மூலாதி கல்கம்:**—இலந்தைவேர் கல்கத்தையும், எள்ளின் கல்கத்தையும் கலந்து தேனையும் பாலையும் சேர்த்து உபயோகிக்க இரத் தாதிஸாரம் தீரும். 20.

**லாக்ஷா கல்கம்:**—செவ்வரக்கை கல்கம் செய்து, கூஷ்மாண்ட ரஸத்துடன் கால் பலம் அளவில் உட்கொண்டால் இரத்தக்குறைவு, உரக்ஷதம், க்ஷயரோகம் இவை நிவாரணமாகும். 21.

**தண்டுலீயஜடாகல்கம்:**—முள்ளுக்கீரையின் வேரை கல்கம் செய்து, அத்துடன் பால்துத்தமும் தேனும் கலந்து அரிசி கழுவிய நீரோடு உட்கொண்டால் மாதவிடாயில் உண்டாகும் அதிகமான இரத் தப்பெருக்கை நிவ்ருத்தி செய்யும். 22.

**அங்கோலமூல கல்கம்:**—அழிஞ்சில் வேரின் கல்கத்தைத் தேன் கலந்து அரிசி கழுவிய நீரோடு உபயோகித்தால் அதிஸாரம் குணமாகு மென்றும், விஷஸம்பந்தமான தீங்குகளைப்போக்குமென்றும் அறியப் படுகிறது. 23.

**வந்த்யாகர்க்கோடகீகல்கம் முதலியது:**—பேய்த்தும்மட்டி வேர், பாதிரி வேர், பில்வவேர் இம்மூன்றில் ஏதேனும் ஒன்றை கல்கமா கச்செய்து, நெய்யுடன் உபயோகித்தால் ஸ்த்தாவரம் ஜங்கமம் என்கிற இரண்டுவித விஷங்களாலுண்டாகும்[1] தீங்குகள் நிவாரணமாகும். 24.

**அபயாதி கல்கம்:**—கடுக்காய், இந்துப்பு, திப்பிலி, சுக்கு இவற் றின் கல்கத்தை யுபயோகித்தால் ஸந்நிபாதத்தினாலுண்டாகும் கெடுதி கள் தீரும். 24½.

**அபயாதி கல்கம், இரண்டாவது:**—கடுக்காய், இந்துப்பு, சுக்கு இம்மூன்றையும் கல்கமாகச் செய்துகொள்ளலாம். இதற்கு தீபந பாசந குணங்களுண்டு. 25.

---

1. ஸ்த்தாவர ஜங்கம விஷங்கள்—91-வது பக்கம் பார்க்க.

த்ரிவ்ருதாதி கல்கம்:—கருஞ்சிவிதைவேர், பலாசம்விதை, குராசானியோமம், கம்பில்லம் என்கிற ஒருவித சிவந்த தாதுப்பொருள், வாய்விடங்கம், வெல்லம் இவற்றை ஸமபாகமாகச் சேர்த்து கல்கமாகச் செய்து, புளித்த மோரோடு உட்கொள்ளலாம்; இதனால் வயிற்றில் சேர்ந்துள்ள எல்லா கிருமிகளும் ஒழியும். 26½.

நவநீதாதிகல்கம்:—வெண்ணெயையும் எள்ளையும் சேர்த்து கல்கம் செய்துபயோகித்தாலும், வெண்ணெய், சர்க்கரை, நாககேஸரம் இவற்றின் கல்கத்தையுட்கொண்டாலும் இரத்தார்சஸ் என்னும் மூல ரோகம் தீரும். 27½.

சுண்டீசலாடு கல்கம் முதலியது:—இஞ்சியின் கல்கத்தைக் கடலைப்பருப்பின் யூஷத்துடன் உட்கொண்டாலும், கண்டங்கத்திரிக்காயின் கல்கத்தை மோருடன் உட்கொண்டாலும் கிரஹணீ ரோகம் நிவ்ருத்தியாகும். 28½.

---

# ஆறாவது அத்தியாயம்.

---

## சூர்ண கல்பனை.

சூர்ணம்:—நன்கு உலர்த்தி யெடுத்த வஸ்துக்களை நன்றாகப் பொடி செய்து வஸ்திரகாளிதம் பண்ணி யெடுக்க அது 'சூர்ணம்' எனப்படும்; அதற்கே ரஜஸ், க்ஷோதம் என்றும் பெயர். சூர்ணங்களை யுபயோகிக்கும் பொதுப் பிரமாணம் கால் பலமாம். 1.

சூர்ணத்தில் சேர்க்கக்கூடிய பதார்த்தங்களின் பொது அளவு:—சூர்ணத்தில் வெல்லத்தை ஸமயெடையாகவும், சர்க்கரையை இரண்டு மடங்காகவும் சேர்க்கவேண்டும்; சூர்ணங்களில் பெருங்காயத்தைப் பொரித்துச் சேர்த்தால் உபயோகிப்பவருக்குக் குமட்டல் உண்டாகாமலிருக்கும். 2.

சூர்ணங்களுக்கு அநுபானம் பாவனை முதலியன:—சூர்ணங்களை லேஹ்யம்போல் உட்கொள்ள வேண்டுமானால், அவற்றுடன்

---

1. கம்பில்லத்தை டாக்டர் நாட்கர்னி என்பவர் குங்குமம் என்று எழுதுகிறார். குங்குமப்பூ என்று அவரது கருத்துப் போலும்.

நெய் முதலிய எந்தத் திரவபதார்த்தங்களேயும் இரண்டு மடங்காக உபயோகிக்க வேண்டும்; சூர்ணங்களை திரவ பதார்த்தங்களில் கரைத்துப் பருகவேண்டுமானுல், அத்திரவ பதார்த்தக்களைச் சூர்ண ங்களினும் நான்கு மடங்கு அதிகமா யுபயோகிக்க வேண்டும். சூர்ணம், லேஹ்யம், குளிகை யென்னும் மாத்திரைகள், கல்கம் இவற்றிற்கு அநுபானமாக உபயோகிக்கும் திரவ பதார்த்தங்களை வாதரோகங்களில் மூன்று பலமாகவும், பித்த ரோகங்களில் இரண்டு பலமாகவும், கபரோகங்களில் ஒரு பலமாகவும் எடுத்துக்கொள்ள வெண்டும். தண்ணீரில் விடப்பட்ட தைலமானது நொடிப்பொழுதில் அந் நீரிலெங்கும் பரவி விடுவதுபோல் ஒளஷதமும் அநுபான பலத்தினுல் அங்கங்களில் நன்கு வியாபிக்கின்றது. சூர்ணங்களை சில திரவபதார்த்தங்களில் ஊறவைப்பதுண்டு; அதற்கு பாவனையெனப் பெயர்; பாவனை செய்வதற்கான சூர்ணமனைத்தும் அமிழ்ந்து ஊறக்கூடிய அளவான திரவத்தில் சேர்க்கப்படவேண்டும்; இதுதான் சூர்ணங்களை பாவனை செய்வதற்கான பொதுப் பிரமாணமாம். 3—6.

**ஆமலகாதி சூர்ணம்:**—நெல்லிக்காய், சித்திரமூலம், கடுக்காய், திப்பிலி, இந்துப்பு இவற்றைக் கூட்டி சூர்ணம் செய்யவும். இது ஸர்வ ஜ்வரங்களேயும் போக்கும்; நாக்கில் அரோசகத்தை நிவ்ருத்தி செய்யும்; கபஹரமாகவும், பேதநமாகவும், தீபந பாசந மாகவும் வேலை செய்யும். 7½.

**பிப்பலீ சூர்ணம்:**—திப்பிலியை மாத்திரம் சூர்ணம் செய்து, தேன் கலந்து லேஹ்யம்போல் உட்கொள்ளவும்; இதனுல் காஸம், ஜ்வரம், விக்கல், ச்வாஸம், ப்லீஹரோகம் இவை தீரும்; கண்டத்திற்கு நல்ல வலிமையைத் தரும். பாலர்களுக்கு மேற்கூறிய ரோகங்களில் இந்த பிப்பலீ சூர்ணத்தை உபயோகிக்கலாம். 8½.

**த்ரிபலா சூர்ணம்:**—ஒரு கடுக்காய், இரண்டு தான்றிக்காய், நான்கு நெல்லிக்காய் இவற்றின் கூட்டுக்கு 'த்ரிபலை' எனப் பெயர். இந்த த்ரிபலையை சூர்ணம் செய்து உபயோகித்தால் மேஹரோகங்கள் நிவ்ருத்தியாகும். வீக்கம், விஷமஜ்வரம், குஷ்டம் இவையும் போகும்; தீபநம், கபஹரம், பித்தஹரம், இரஸாயநம் என்கிற குணங்

களும் இதற்குண்டு. இதே சூர்ணம் நெய் அல்லது தேனுடன் கலந்து உபயோகிக்க நேத்திர ரோகங்களையும் போக்கும். 9—11.

**த்ரியூஷண சூர்ணம்**:—திப்பிலி, மிளகு, சுக்கு இவற்றின் கூட்டுக்கு 'த்ரியூஷணம்' அல்லது 'த்ரிகடு' எனப் பெயர். இச் சூர்ணம் மேஹரோகம், குஷ்டம், பீநஸம், அரோசகம், ஆமதோஷம், மேஹரோகம், குன்மம், தொண்டையைப்பற்றியவியாதிகள் இவற்றைப் போக்கும். கபஹரம்,தீபனம் என்கிற குணங்களும் இதற்குண்டு. 12½.

**பஞ்சகோல சூர்ணம்**.—திப்பிலி, சவ்வியம், சுக்கு, மோடி, சித்திரமூலம் இவ்வைந்தின் கூட்டுக்கும் 'பஞ்சகோலம்' என்று பெயர். இப்பஞ்சகோல சூர்ணமானது வயிற்றுப் பொருமல், ப்லீஹரோகம், குன்மம், வயிற்றுவலி, கபரோகங்கள், மஹோதரம் இவற்றை குணப்படுத்தும்; ருசிகரம், பாசந தீபநம் என்கிற குணங்களுமுண்டு. 13,14.

**த்ரிஜாத-சதுர்ஜாத சூர்ணம்**.— ஏலக்காய், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி இவற்றின் கூட்டுக்கு "த்ரிகந்தம்" அல்லது "த்ரிஜாதம்" என்றும், இம்மூன்று சரக்குகளோடு நாககேஸரம் சேர்ந்தால் "சதுர்ஜாதம்" என்றும் பெயர். த்ரிகந்தத்தையாவது, சதுர்ஜாதகத்தையாவது சூர்ணம் செய்துபயோகித்தால் சரீரத்திற்கு நல்ல நிறத்தைக் கொடுக்கும் ; அரோசகத்தைப் போக்கும் ; விஷங்களையும், கபரோகங்களையும் நிவ்ருத்தி செய்யும் ; இக் கூட்டுகளுக்கு ரூக்ஷம், உஷ்ணம், இலகு, தீக்ஷ்ணம் என்கிற குணங்களும்,[1] பித்தத்தை அபிவ்ருத்தி செய்யும் தன்மையும் உண்டு. 15½.

**ஜீவநீயகண சூர்ணம்** :—காகோலீ, க்ஷீரகாகோலீ, ஜீவகம், ரிஷபகம், மேதா, மஹாமேதா, ஜீவந்தி, மதுகம், முத்கபர்ணீ, மாஷபர்ணீ என்கிற இவற்றின் கூட்டுக்கு 'ஜீவநீய கணம்'[2] என்று

---

1. ரூக்ஷம் முதலிய விஷயங்களைப்பற்றி 11-ம் பக்கம், 'குணங்கள்' என்பதைப் பார்க்க.

2. ஜீவநீயகணத்தின் பதார்த்தங்களுக்கு இதர பாஷைகளில் பெயர் கிடைப்பதில்லை ; இப்பதார்த்தங்கள் கிடைப்பதும் அரிது. [ஜீவகம்-திருநீற்றுப் பாலை, ரிஷபகம்-கதிர்ப்பச்சை, காகோலீ-இரளி, க்ஷீரகாகோலீ-வெளுத்த இரளி, முத்கபர்ணீ-நரிப்பயறு, மாஷபர்ணீ-பெருவீடு கொள்ளி என்று சிலர்.]

பெயர். இந்த கணத்திற்கு மதுரமான சுவை, கர்ப்போத்பாதகசக்தி, குருகுணம், ஸ்தந்யத்தை யுற்பத்தி செய்யுந்தன்மை, ப்ருஹ்மணம், வ்ருஷ்யம், ஸ்நிக்த்தம், சீதம் என்னும் குணங்களுமுண்டு; ஆகவே இவற்றின் சூர்ணம் நாவறட்சி, இரத்தபித்தம், க்ஷதகாஸம், க்ஷயம், ஜ்வரம், சரீரதாபம், வாதரோகங்கள் இவைகளைப் போக்கும். 16—18½.

**அஷ்டவர்க சூர்ணம்:**—மேதா, மஹாமேதா, காகோலீ, க்ஷீரகாகோலீ, ஜீவகம், ரிஷபகம், ருத்தி, வ்ருத்தி இவற்றின் கூட்டுக்கு 'அஷ்டவர்கம்' என்று பெயர். இவ்வஷ்டவர்கத்தின் சூர்ணத்திற்கும் ஜீவநீயகணத்திற்குள்ள குணங்களேயாம். 19, 20.

**பஞ்சலவண சூர்ணம்:**—இந்துப்பு, சவுட்டுப்பு, அட்டுப்பு, கறியுப்பு, விளையுப்பு இவ்வைந்துக்கும் சேர்ந்து 'பஞ்சலவணம்' எனப் பெயர். இவற்றுள் இந்துப்பு மாத்திரம் 'ஏகலவணம்' என்றும், இந்துப்பு சவுட்டுப்பு இரண்டும் 'த்விலவணம' என்றும், அவ்விரண்டுடன் அட்டுப்பையும் சேர்த்தால் 'த்ரிலவணம்' என்றும், த்ரிலவணத்துடன் கறியுப்பையும் சேர்த்தால் 'சதுர்லவணம்' என்றும் முறையே பெயர் வழங்கப்படும். இவற்றுள் இந்துப்பு முக்கியமான லவணமாகும்; ஏதேனும் ஔஷத முறைகளில் விவரம் கூறாமல் உப்பைச் சேர்க்க வேண்டுமென்று கூறியிருந்தால் இந்துப்புதான் சேர்க்கக்கூடியதாம். பஞ்சலவணங்களைச் சேர்த்து செய்யப்பட்ட சூர்ணத்திற்கு சிறிது மதுரமான சுவை, ஸ்நிக்த்தம், ஸூக்ஷ்மம், உஷ்ணவீர்யம், தீபநம், தீக்ஷ்ணம் என்கிற குணங்களுண்டு. ஆகவே இச்சூர்ணத்தை யுபயோகித்தால் சரீரவன்மை சிறிது குறைவடையும். இது கபம், பித்தம் இத்தோஷங்களை விருத்தி செய்யும். மல மூத்திரங்களையும நன்றாக வெளிப்படுத்தும. 21—23.

**க்ஷாரத்வய சூர்ணம்:**—ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், இவ்விரண்டும் 'க்ஷாரத்வயம்' எனப்படும். இவ்விரண்டும் அக்னிக்கு ஸமானமான குணங்களுடையவையாம். இவ்விரண்டையுந் தவிர வேறு சில க்ஷாரவகைகளுமுண்டு. இவையனைத்தும் குன்மரோகம், அர்சோரோகம், கிரஹணீரோகம், கிருமிரோகம், சர்க்கரா, அச்மரீ யென்னும் மூத்திர ரோகங்கள் இவற்றைப் போக்கும் தன்மையையும், மலத்தை மெதுவாக வெளிப்படுத்தல், பாசநம் என்கிற குணங்களையும் உடையன

வாம் ; முறைதவறி யுபயோகித்தால் இவை புருஷருக்குள்ள ஆண் மையைப் போக்கிவிடும். 24, 25.

**ஸுதர்சன சூர்ணம்:**—த்ரிபலே, மஞ்சள், மரமஞ்சள், கண்டங் கத்திரி, சிறுவழுதுணை, கிச்சிலிக்கிழங்கு, த்ரியூஷணம், கிரந்திதக ரம், மருளங்கிழங்கு, சீந்தில், காஞ்சொறி, கடுகிரோகிணீ, பர்ப்பாட கம், கோரைக்கிழங்கு, கழற்சிக்காய், வெட்டிவேர், வேம்பு, அல்லிக் கிழங்கு, அதிமதுரம், வெட்பாலரிசி, குராசானியோமம், குடசப் பாலே, கண்டுபாரங்கி, முருங்கவிதை, பூநீறு, வசம்பு, கருவாப்பட்டை, தாமரைக்கிழங்கு, குருவேர், வெண்சந்தனம், அதிவிடயம், சிற்று முட்டி, சிறுமல்லி, பெருமல்லி, வாய்விடங்கம், தகரவிதை, சித்திர மூலம், தேவதாரு, சவ்வியம், பேய்ப்புடல், ஜீவகம், ரிஷபகம், இல வங்கம், மூங்கிலுப்பு, வெண்தாமரை, காகோலீ, ஜாதிபத்திரி, தாளிசப் பத்திரி இவையனைத்தையும் ஸமயெடைபாகச் சேர்த்து சூர்ணம் செய் யவும். இச்சூர்ணம் அனைத்துக்கும் பாதி பாகம் நிலவேம்புச் சூர்ணத்தையும் சேர்த்துக் கலக்கவேண்டும். இது 'ஸுதர்சன சூர்ணம்' எனப்படும். இந்த சூர்ணம் ஸந்நிபாத தோஷம், த்வந்த்வ தோஷம் இவற்றாலுண்டாகும் ஜ்வரங்கள், ஆகந்துகமென்னும் பூதா வேசாதிகளாலுண்டாகும் ஜ்வரம், தாதுகத ஜ்வரங்கள், அந்யேத் யுஷ்கம் முதலிய விஷம ஜ்வரங்கள், மனதின் கோளாறுகளா லுண் டாகும் ஜ்வரங்கள், குளிர் ஜ்வரம், சோம்பல் அல்லது திமிர், தலைச் சுற்றல், நாவறட்சி, ச்வாஸம், காஸம், பாண்டுரோகம், இருதயத்தைப் பற்றிய ரோகம், காமாலே, இடுப்புவலி, முதுகுவலி, முழங்கால்வலி, பக்கச்சூலே இவையனைதையும் போக்கும். இந்த சூர்ணத்தை குளிர்ந்த ஜலத்துடன் உட்கொள்வது நலம். ஸுதர்சனமென்னும் சக்கிராயுதமானது அஸுரர் அனைவரையும் அழிப்பதற்கு ஏற்ற கருவியாயிருந்ததுபோல், ஸகல ஜ்வரங்களையும் அகற்றுவதற்கு இச் சூர்ணம் தகுந்த ஸாதநமாயிருக்கின்றது. 26—36.

**த்ரிபலாதி சூர்ணம், இரண்டாவது.**—த்ரிபலே, திப்பிலி இவற் றைச் சூர்ணம் செய்து, தேன் சேர்த்து லேஹ்யம்போல் உட்கொள்ள காஸம், ச்வாஸம், ஜ்வரம் இவை நீங்கும்; தீபநம், ரேசநம் என்கிற குணங்களும் உண்டு. 37-

**கட்பலாதி சூர்ணம்:**—சிறுதேக்கு, கோரைக்கிழங்கு, கடுக ரோகிணீ, கிச்சிலிக்கிழங்கு, கர்க்காடகச்ருங்கி, தாமரைக்கிழங்கு இவற்றின் சூர்ணத்தைத் தேனுடனாவது இஞ்சிச் சாற்றோடாவது கலந்து உட்கொள்ளலாம்; இச்சூர்ணம் தொண்டைக்கு நல்ல வன்மையைத் தரும்; ஜ்வரம், காஸம், ச்வாஸம், அரோசகம், வாதரோகங்கள், வாந்தி, வயிற்றுவலி, க்ஷயம் இவ்வியாதிகளும் போகும். 38, 39.

**கட்பலாதி சூர்ணம், இரண்டாவது:**—சிறுதேக்கு, தாமரைக் கிழங்கு, கர்க்காடகச்ருங்கி, கோரைக்கிழங்கு, த்ரிகடு, கிச்சிலிக் கிழங்கு இவற்றைத் தனித்தனியாகவோ ஒருமிக்கவோ சூர்ணம் செய்து தேன் அல்லது இஞ்சி ஸ்வரஸத்தில் குழைத்து உட்கொள்ளலாம்; இவ்விதம் செய்தால் கபம், வயிற்றுவலி, மேஹரோகம், அரோசகம், வாந்தி, காஸம், ச்வாஸம், க்ஷயம் இவை குணமாகும். 40, 41.

**கட்பலாதி சூர்ணம், மூன்றாவது:**—சிறுதேக்கு, தாமரைக்கிழங்கு, திப்பிலி, கர்க்காடகச்ருங்கி இவற்றின் சூர்ணத்தைத் தேனில் குழைத்து லேஹ்யம்போல் உட்கொள்ள ச்வாஸம், காஸம், ஜ்வரம் இவையும், மற்றுமுள்ள கபரோகங்களும் தீரும். 42.

**கர்க்காடக ச்ருங்யாதி சூர்ணம்:**—கர்க்காடகச்ருங்கி, அதிவிடயம், திப்பிலி இவற்றின் சூர்ணத்தைத் தேனில் குழைத்து குழந்தைகளுக்குக் கொடுக்க, காஸம், ஜ்வரம், வாந்தி இவை நிவ்ருத்தியாகும். அல்லது அதிவிடயத்தை மத்திரம் சூர்ணம்செய்து தேனுடன் கொடுத்தாலும் அப்பயனுண்டாகும். 43.

**யவக்ஷாராதி சூர்ணம்:**—யவக்ஷாரம், அதிவிடயம். கர்க்காடகச்ருங்கி, திப்பிலி, தாமரைக்கிழங்கு இவற்றின் சூர்ணத்தைத் தேனில் குழைத்துக் கொடுத்தால் குழந்தைகளுக்கு உண்டாகும் ஐந்து வித காஸங்களும்[1] போகும். 44.

**சுண்ட்யாதி சூர்ணம்.**—சுக்கு, அதிவிடயம், பெருங்காயம், கோரைக்கிழங்கு, குடசப்பாலை, சித்திரமூலம் இவற்றின் சூர்ணத்தை உஷ்ண ஜலத்துடன் உட்கொண்டால் அஜீர்ணத்தினாலுண்டாகும் அதிஸாரம் தீரும். 45.

---

1. ஐந்துவித காஸங்கள்—44-வது பக்கத்தில் 'காஸம்' என்கிற தலையங்கத்தைப் பார்க்க.

ஹரீதக்யாதி சூர்ணம்:—கடுக்காய், அதிவிடயம், இந்துப்பு, சவுட்டுப்பு, வசம்பு, பெருங்காயம் இவற்றைச் சூர்ணம்செய்து உஷ்ண ஜலத்துடன் உட்கொள்ளவும்; தீபநம், க்ராஹி என்னும் குணங்கள் இதற்குண்டு; ஆகவே இது ஆமாதிஸாரத்தை நிவ்ருத்தி செய்யக் கூடியது. $46\frac{1}{2}$.

இலகு கங்காதர சூர்ணம் :—கோரைக்கிழங்கு, வெட்பாலரிசி, பில்வவேர், வெள்ளிலோத்திப்பட்டை, இலவம்பிசின், காட்டாத்திப்பூ இவற்றைச் சூர்ணம் செய்து, புளித்த மோர் வெல்லம் இவற்றில் ஏதேனும் ஒன்றுடன் உட்கொள்ளலாம். இந்த சூர்ணத்திற்கு க்ராஹிகுணம் விசேஷமாயுண்டு ; ஆகையினால் ஸகலவித அதிஸாரங்களையும், சீதபேதியையும் நிவ்ருத்தி செய்ய இது ஏற்ற ஔஷதம்; இதற்கு "இலகு கங்காதரசூர்ணம்" என்று பெயர். $47\text{-}48\frac{1}{2}$.

வ்ருத்த கங்காதர சூர்ணம் —கோரைக்கிழங்கு, பெருவாகை, சுக்கு, காட்டாத்திப்பூ, வெள்ளிலோத்தி, குருவேர், பில்வம், இலவம் பிசின், வட்டத்திருப்பி, வெட்பாலரிசி, குடசப்பாலையிலை, மாம்பருப்பு, அதிவிடயம், வறட்சுண்டி[1] இவற்றைச் சூர்ணம்செய்து தேன் அல்லது அரிசி கழுவிய ஜலத்துடன் உட்கொள்க; இதற்கும் க்ராஹி யென்கிற குணம் அதிகமாயுண்டு; இந்த சூர்ணம் ப்ரவாஹிகா, ஸகலவிதமான அதிஸாரங்கள், க்ரஹணீ இவற்றை சீக்கிரத்தில் ஸ்வஸ்த்தம் செய்ய வல்லது. அதிக உபத்திரவகரமான அதிஸார ரோகத்திற்கு இது மிகவும் சிறந்த ஔஷதம். இதற்கு "வ்ருத்தகங்காதர சூர்ணம்" என்று பெயர். $49\text{—}51\frac{1}{2}$.

மரிசாதி சூர்ணம்:—மிளகு, சித்திரமூலம், சவுட்டுப்பு இவற்றின் சூர்ணத்தைப் புளித்த மோரோடு தினந்தோறும் உட்கொள்பவனுக்கு கிரஹணீரோகம் நிவ்ருத்தியாகும்; மஹோதரம், ப்லீஹோதரம், அக்னிமாந்தியம், குன்மம், அர்சஸ் இவையும் குணமாகும். 52, 53.

கபித்தாஷ்டக சூர்ணம்:—உலர்ந்த விளாம்பழம் எட்டு பாகம், உலர்ந்த மாதளை, உலர்ந்த புளியம்பழம், உலர்ந்த பில்வப்பழம், காட்டாத்திப்பூ, ஓமம், திப்பிலி இவற்றில் ஒவ்வொன்றும் மும்மூன்று பாகம், மிளகு, ஜீரகம், கொத்தமல்லி விதை, கிரந்திதகரம், விளா

1. 'லஜ்ஜாலு' என்பதை வறட்சுண்டி யென்றும், தொட்டாற்சுணங்கி யென்றும் வழங்குவர்.

மிச்சை வேர், சவுட்டுப்பு, குராசானி யோமம், சதுர்ஜாதம், சித்திர மூலம், சுக்கு இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாகம்; இவற்றை நன்றாய் சூர்ணம் செய்து, ஆறு பாகம் சர்க்கரை சேர்த்து, தொண்டை வியாதிகள், அதிஸாரம், க்ஷயம், குன்மம், கிரஹணீ இந்த வியாதிகளில் உபயோகிக்கலாம்; இதற்கு 'கபித்தாஷ்டக சூர்ணம்' [1] எனப் பெயர். 54--57.

தாடிமாஷ்டக சூர்ணம்:—உலர்ந்த மாதளம்பழம் இரண்டு பலம், கற்கண்டு எட்டு பலம், த்ரிகந்தம் ஒரு பலம், த்ரிகடு மூன்று பலம், இவையனைத்தையும் சேர்த்து இடித்துச்செய்யப்படும் சூர்ணம் 'தாடிமாஷ்டகம்' என்று சொல்லப்படும்; இந்த சூர்ணம் நாக்குக்கு நற்சுவையைத் தரும்; தீபநம், கண்ட்யம், க்ராஹி என்கிற குணங்களும், காஸம் ஜ்வரம் இவற்றை ஸ்வஸ்த்தம் செய்யும் தன்மையும் உடையது. 58, 59.

தாடிமாஷ்டகசூர்ணம், இரண்டாவது:—உலர்ந்த மாதளம் பழம் எட்டு பலம், திப்பிலி, மோடி, குராசானி யோமம், மிளகு, கொத்தமல்லி விதை, ஜீரகம், சுக்கு இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம், மூங்கிலுப்பு கால் பலம், கருவாப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஏலக்காய், நாககேஸரம் இவை ஒவ்வொன்றும் அரைக்கால் பலம்; இவற்றையெல்லாம் ஒன்றாகச் சூர்ணம் செய்து, அதில் எட்டு பலம் சர்க்கரையும் கலந்து உபயோகிக்கவும்; இதற்கும் 'தாடிமாஷ்டக சூர்ணம்' எனப்பெயர். அதிஸாரம் க்ஷயம், குன்மம், கிரஹணீ, தொண்டைக் கம்மல், அக்னிமாந்த்யம், பீநஸம், காஸம் இவற்றைப் போக்கும். 60—62½.

பிப்பல்யாதிசூர்ணம், இரண்டாவது:—திப்பிலி, கண்டங்கத்திரி, சிறுவழுதுணை, யவக்ஷாரம், குடசப்பாலை, சித்திரமூலம், நன்னாரி, வட்டத்திருப்பி, கிச்சிலிக்கிழங்கு, பஞ்சலவணம்; இவற்றின் சூர்ணத்தைத் தயிர், ஸுரை யென்னும் ஒருவித மத்தியம், வெந்நீர் இவற்றில் ஏதேனும் ஒன்றோடு உட்கொள்ளலாம்; இதனால் வாதரோகங்களும், கிரஹணீ தோஷமும் தீரும். 63, 64.

இலவங்காதி சூர்ணம்:—இலவங்கம், கர்ப்பூரம், ஏலம், இலவங்கப்

1. கபித்தம்—விளாம்பழம்; இந்த யோகத்தில் விளாம்பழம் மற்றவைகளைவிட எட்டுமடங்கு சேர்க்கப்படுவதால் 'கபித்தாஷ்டகம்' என்று இதற்குப் பெயர் வந்தது.

பட்டை, நாககேஸரம், ஜாதிக்காய், வெட்டிவேர், சுக்கு, கருஞ்ஜீரகம், அகிற்கட்டை, மூங்கிலுப்பு, ஜடாமாம்ஸீ, கருநெய்தல், திப்பிலி, சந்தனம், கிரந்திதகரம், குருவேர், தக்கோலம் இவ்வனைத்தையும் ஸமவெடை சேர்த்து சூர்ணம் செய்து, சூர்ணத்தில் பாதி பாகம் சர்க்கரையும் கலந்து உபயோகிக்கவும். இதற்கு 'இலவங்காதி சூர்ணம்' எனப் பெயர். இது பசியை உத்தீபநம் செய்யும்; மனதுக்கு உத்ஸாஹமூட்டும்; அரோசகம், ஸந்நிபாத தோஷம், இருதயத்தைப்பற்றிய வியாதிகள், கண்டதோஷங்கள், காஸம், விக்கல், பீநஸம், க்ஷயம், தமகச்வாஸம், அதிஸாரம், உரக்ஷதம், பிரமேஹம், குன்மம், கிரஹணீ இவற்றைப்போக்கும். வ்ருஷ்யம் என்கிற குணமும், பலத்தை விருத்தி செய்யும் சக்தியுமுண்டு. 65—69½.

ஜாதீபலாதி சூர்ணம்:—ஜாதிக்காய், இலவங்கம், ஏலக்காய், இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை, நாககேஸரம், கர்ப்பூரம், சந்தனம், எள், மூங்கிலுப்பு, கிரந்திதகரம், நெல்லிப்பருப்பு, தாளிசப்பத்திரி, திப்பிலி, கடுக்காய், சோம்பு, சித்திரமூலம், சுக்கு வாய்விடங்கம், மிளகு இவற்றை ஸம வெடை சேர்த்து சூர்ணம் செய்து, சுத்தி செய்த கஞ்ஜாவையும் மற்றச்சரக்குகளுக்கு ஸமமாகக் கலந்து சூர்ணம் எவ்வளவோ அவ்வளவு சர்க்கரையும் சேர்த்து, அதைக் கால் பலம் எடை தேனில் குழைத்து உட்கொள்ளச்செய்யலாம்; இது கிரஹணீ ரோகம், காஸம், ச்வாஸம், அரோசகம், க்ஷயம், வாதரோகங்கள், கபரோகங்கள், ப்ரதிச்யாயம் இவ்வியாதிகளை யெல்லாம் சீக்கிரத்தில் போக்கிவிடும். 70—74.

மஹாகாண்டவ சூர்ணம்:—மிளகு, நாககேஸரம், தாளிசப்பத்திரி, பஞ்சலவணம் இவற்றில் ஒவ்வொரு பாகம்; மோடி, சித்திரமூலம், இலவங்கப்பட்டை, திப்பிலி, உலர்ந்த புளி, ஜீரகம் இவை ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பாகம்; கொத்தமல்லி விதை, புளிவஞ்சி, சுக்கு, ஏலக்காய், இலந்தம்பழம், ஓமம், கோரைக்கிழங்கு இவை ஒவ்வொன்றும் மூன்று பாகம்; இவையனைத்திலும் நாலில் ஒரு பங்கு மாதளம்பழம் சேர்த்து இடித்து, சூர்ணத்தில் சரிபாதி சர்க்கரையும் கலந்து உபயோகிக்கலாம்; இதற்கு 'மஹாகாண்டவ சூர்ணம்' எனப் பெயர். நாக்குக்கு நற்சுவை யளிப்பதற்கு இது சிறந்த ஔஷதம்; இருதயத்திற்கு வலிவைத் தரும்; தீபனகுண

மூண்டு ; காஸம், அதிஸாரம், கண்டரோகங்கள், மஹோதரம் முத லிய உதரத்தைப் பற்றிய வியாதிகள், மூகரோகங்கள், விஷூசி, வயிற்றுப் பொருமல், அர்சஸ், குன்மம், கிருமி ரோகம், ஐந்து வித மான சர்த்திகள், ச்வாஸம் இவைகளையும் இச்சூர்ணம் ஸ்வஸ்த்தம் பண்ணும். 75—80.

**நாராயண சூர்ணம்:**—சித்திரமூலம், த்ரிபலை, த்ரிகடு, ஜீரகம், வசம்பு, கொட்டைக் கரந்தை, குராசானி யோமம், மோடி, சதளுப்பி, இராமதுளஸி,[1] ஓமம், கிச்சிலிக்கிழங்கு, கொத்தமல்லி விதை, வாய் விடங்கம், சோம்பு, நாககேஸரம், தாமரைக்கிழங்கு, யவக்ஷாரம், ஸர்ஜ க்ஷாரம், பஞ்சலவணம், கோஷ்டம் இவைகளை ஸமவெடையாகவும், பேய்த்தும்மட்டியை இரண்டு பங்காகவும், கருஞ்சிவதை, நேபாளம் இரண்டையும் மூன்று பங்காகவும், இலைக்கள்ளி நான்கு பங்காகவும் சேர்த்து சூர்ணம் செய்யவும்; பாசநம், ஸ்நேஹநம் இக்குணமுள்ள[2] ஔஷதங்களால் ரோகியின் குடலை ஸ்நிக்த்தமாகச் செய்து, மேற் கூறிய சூர்ணத்தை விரேசனத்திற்காகக் கொடுப்பது நலம் ; இதை ஹ்ருத்ரோகம், பாண்டுரோகம், குஷ்டம், கிரஹணீ, களக்ரஹம், காஸம், ச்வாஸம், பகந்தரம், அக்னி மாந்தியம், ஜ்வரம் இவற்றில் அததற்குத் தகுந்த அநுபானத்துடன் உட்கொள்ளலாம் ; மேலும் வயிற்றுப் பொருமலில் ஸுரை யென்னும் மத்யத்தோடும், குன்மத் தில் இலந்தம்பழ க்வாதத்துடனும், மலபந்தத்தில் தயிரின் மேலுள்ள தெளிவு நீரோடும், அஜீர்ணத்தில் உஷ்ண ஜலத்தோடும், ஆஸனக் கடுப்பில் புளியம்பழரஸத்துடனும், மஹோதரம் முதலிய வயிற் றைப்பற்றிய வியாதிகளில் ஒட்டகத்தின் பாலோடு அல்லது பசுவின் மோருடனும், வாதரோகங்களில் அன்னத்தின் புளித்த நீரோடும், அர்சோ ரோகத்தில் மாதளம்பழச் சாற்றோடும், இரண்டு விதமான விஷங்களிலும் நெய்யுடனும் இச்சூர்ணத்தை யுட்கொள்ளலாம் ;

1. "அஜகந்தா" என்பதை இராமதுளஸி அல்லது எலுமிச்சந் துளஸி (Ocimum gratissimum) என்று சிலரும், வேளை யென்று சிலரும் கூறுவர்.

2. ஸ்நேஹநங்கள், ஸ்நேஹ விதிகள் இவற்றின் விவரங்களை உத்தரகண்டம் முதல் அத்தியாயத்திற் காணலாம்.

இது மற்றும் பல ரோகங்களையும் போக்கக்கூடியது; இதற்கு 'நாராயண சூர்ணம்' எனப் பெயர். 81—89.

ஹபுஷாதி சூர்ணம்:—கொட்டைக்கரந்தை, த்ரிபலை, கழற்சிக் காய், திப்பிலி, பிரம்மதண்டு, சிவதைவேர், இலைக்கள்ளி, கடுகரோகிணீ, வசம்பு, அவுரி, இந்துப்பு, கிருஷ்ணலவணம், கரியுப்பு இவற்றின் சூர்ணத்தை உஷ்ணஜலம், பசு மூத்திரம், மாதளம்பழ ஸ்வரஸம், த்ரிபலா க்வாதம், மாம்ஸ ரஸம் இவற்றில் ஏதேனும் ஒன்றோடு உட்கொள்ளலாம்; இதனால் அஜீர்ணம், ப்லீஹோதரம், குன்மம், சோதை, அர்சஸ், ஹலீமகம், காமாலை, பாண்டு, குஷ்டம், வயிற்றுப் பொருமல் இவைகள் தீரும். 90—92½.

பஞ்ச ஸம சூர்ணம்:—சுக்கு, கடுக்காய், திப்பிலி, சிவதை வேர், சவுட்டுப்பு இவற்றை ஸமயெடையாகச் சேர்த்து சூர்ணம் செய்யவும்; இதற்கு 'பஞ்ச ஸம சூர்ணம்' என்று பெயர்; இது வயிற்றுவலி, வயிற்றுப் பொருமல், மஹோதரம், அர்சஸ், ஆமவாதம் இவற்றைப் போக்கும். 93—94½.

பிப்பல்யாதி சூர்ணம், மூன்றாவது:—கால் பலம் திப்பிலியும் ஒரு பலம் கற்கண்டும் சேர்த்து சூர்ணம் செய்யவும்; அச்சூர்ணத்தை கால் பலம் அளவில் தேனில் குழைத்து உட்கொள்ளவும்; இதனால் வயிற்றுப் பொருமல், மலபந்தம், மஹோதரம், கபரோகங்கள், சூலை இவை ஸ்வஸ்த்தமாகும். 95—96½.

லவணத்ரயாதி சூர்ணம்:—இந்துப்பு, அட்டுப்பு, சவுட்டுப்பு, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், குப்பைமேனி, சதகுப்பை, வசம்பு, ஓமம், இராமதுளஸி, கொட்டைக்கரந்தை, ஜீரகம், கருஞ்ஜீரகம், மிளகு, மோடி, திப்பிலி, யானைத்திப்பிலி, பெருங்காயம், இங்குபத்திரி, கிச்சிலிக்கிழங்கு, வட்டத்திருப்பி, சிற்றேலம், சுக்கு, சித்திரமூலம், சவ்வியம், வாய்விடங்கம், புளிவஞ்சி, மாதளம்பழம், புளி, சிவதைவேர், நேபாளம், தண்ணீர்விட்டான்கிழங்கு, பேய்த்தும்மட்டி, கண்டுபாரங்கி, தேவதாரு, குராசானியோமம், கொத்தமல்லிவிதை, முருங்கை, தாமரைக் கிழங்கு, இலந்தம்பழம், கடுக்காய் இவையனைத்தையும் ஸம பாகமாகச் சேர்த்து சூர்ணம் செய்து, இஞ்சிஸ்வரஸ

த்திலும், கொம்மட்டிமாதளம்பழஸ்வரஸத்திலும் தனித்தனியாக பாவனை செய்து, நெய், நன்றாகப் பழகிய மத்யம், உஷ்ணஜலம், இலந்தங்கொட்டையின் க்வாதம், மோர், ஒட்டைப் பால், புளித்த அன்னரஸம் இவற்றுள் ஏதேனும் ஒன்றோடு அதை உட்கொள்ளலாம் ; இதனால் யக்ருதுதரம், ப்லீஹோதரம்,[1] இடுப்புவலி, ஆஸனக் கடுப்பு, வயிற்று நோய்கள், ஹ்ருத்ரோகம், அர்சஸ், மலபந்தம், அக்னிமாந்தியம், குன்மம், விக்கல், வயிற்றுப் பொருமல், ச்வாஸகாஸம் இவை நன்றாக ஸ்வஸ்த்தமாகும் ; மேற்கூறிய பதார்த்தங்களைக் கொண்டே க்ருதமும்[2] பக்குவம் செயது முற்கூறிய வியாதிகளில் உபயோகிக்கலாம். 97—104½.

தும்புரீவாதி சூர்ணம் :—முருங்கவிதை, த்ரிலவணம், குராசானி யோமம், தாமரைக்கிழங்கு, யவக்ஷாரம், கடுக்காய், பெருங்காயம், வாய்விடங்கம் இவை ஒவ்வொன்றும் ஸமபாகம் ; சிவதை வேர் மூன்றுபாகம் ; இவற்றை நன்றாகச் சூர்ணம் செய்து உஷ்ண ஜலத்தோடாவது, யவதான்ய க்வாதத்துடனாவது உட்கொள்ளவும் ; இதனால் ஸகலவிதமான சூலைகளும், குன்மம், வயிற்றுப் பொருமல், மஹோதரம் இவையும் தீரும். 105—107.

சித்ரகாதி சூர்ணம்:—சித்ரமூலம், சுக்கு, பெருங்காயம், திப்பிலி, மோடி, சவ்வியம், ஓமம், மிளகு இவை ஒவ்வொன்றும் கால்பலம்; சவுட்டுப்பு, யவக்ஷாரம், இந்துப்பு, ஸர்ஜக்ஷாரம், வளையலுப்பு, அட்டுப்பு, கரியுப்பு இவை ஒவ்வொன்றும் அரைக்கால் பலம்; இவற்றை ஒருமிக்கச் சேர்த்து சூர்ணம் செய்து கொம்மட்டி மாதளம் பழ ரஸத்திலாவது, மாதளம்பழ ரஸத்திலாவது பாவனை செய்து, வெயிலில் உலர்த்தியெடுக்கவும். இந்த சூர்ணமானது குன்மம், கிரஹணீ ரோகம், ஆமவாதம், அக்னிமாந்தியம், கபப்பிரகோபம், அரோசகம் இவற்றைப் போக்கும். 108—111.

---

1. ப்லீஹோதரம், யக்ருதுதரம் இவற்றைப்பற்றி 51-ம் பக்கம் உதரரோகம் என்கிற தலையங்கமுள்ள வரிகளைப் பார்க்க.

2. க்ருதம் பக்குவம் செய்வதைப்பற்றி உத்தரகண்டத்தில் ஸ்நேஹவிதிகளைச் சொல்லும் முதல் அத்தியாயத்தைப் பார்க்க.

**படபாநல சூர்ணம்** :—இந்துப்பு ஒருபாகம், மோடி, இரண்டு பாகம், திப்பிலி மூன்றுபாகம், சவ்வியம் நான்கு பாகம், சித்ரமூலம் ஐந்து பாகம், சுக்கு ஆறு பாகம், கடுக்காய் ஏழு பாகம் சேர்த்து சூர்ணம் செய்யவும் ; இதற்கு 'படபாநல சூர்ணம்' என்று பெயர்; இது நன்றாக அக்னி தீபநம் செய்யும். 112½.

**அஜமோதாதி சூர்ணம்**:—ஓமம், வாய்விடங்கம், இந்துப்பு, தேவதாரு, சித்திரமூலம், மோடி, சதகுப்பி, திப்பிலி, மிளகு, இவை ஒவ்வொன்றும் கால் பலமும், கடுக்காய் ஒன்றேகால் பலமும், நிலக்கடம்பு இரண்டரைப் பலமும், சுக்கு இரண்டரைப் பலமும் சேர்த்து சூர்ணம் செய்து உஷ்ண ஜலத்துடன் உட்கொள்ளவும்; ஸர்வாங்க சோதை, ஆமவாதம், கீல்வாயு, க்ருத்ரஸீ, இடுப்புவலி, பக்கவலி, ஆஸனக்கடுப்பு, தூநீ, ப்ரதிதூநீ, விச்வாசீ, கபரோகங்கள் இவை இவ்வௌஷதத்தால் தீரும். இந்த சூர்ணம் எவ்வளவு எடை யிருக்கின்றதோ அவ்வளவு எடை வெல்லம் சேர்த்து மாத்திரைகளாகவும் செய்து உபயோகிக்கலாம். 113—117½.

**இரண்டாம் சுண்ட்யாதி சூர்ணம்**:—சுக்கு, சவுட்டுப்பு, பெருங்காயம், மாதளை, புளிவஞ்சி இவற்றின் சூர்ணத்தை உஷ்ண ஜலத்துடன் உட்கொள்வதால் ச்வாஸமும், ஹ்ருத்ரோகமும் நிவ்ருத்தி யாகும். 118½.

**ஹிங்க்வாதி சூர்ணம் அல்லது குளிகை**:—பெருங்காயம், வட்டத்திருப்பி, கடுக்காய், கொத்தமல்லி விதை, மாதளை, சித்திரமூலம், கிச்சிலிக் கிழங்கு, ஓமம், த்கரிடு, கொட்டைக்கரந்தை, புளிவஞ்சி, இராம துளஸி, புளி, ஜீரகம், தாமரைக் கிழங்கு, வசம்பு, சவியம், க்ஷாரத்வயம், பஞ்சலவணம் இவற்றைச் சூர்ணம் செய்யவும். இந்த சூர்ணத்தை ஆஹார முண்பதற்கு முன்பாவது, ஆஹார முண்ணும்பொழுது நடுவிலாவது உபயோகிக்கலாம். பழைய மத்யம், மோர், உஷ்ணஜலம் இவற்றுள் ஏதேனும் ஒன்றை அநுபானமாய் உபயோகிக்கலாம். இதனால் வாத கபங்களாலுண்டான குன்மம், ஹ்ருத்ரோகம், அஷ்டீலா, வஸ்திசூலை, பார்ச்வசூலை, யோநிசூலை, ஆஸனக்கடுப்பு, மூத்திரக்ருச்சிரம், வயிற்றுப் பொருமல், பாண்டு ரோகம், அரோசகம், விக்கல், கல்லீரலையும் மண்ணீரலையும் பற்றிய

வியாதிகள், காஸம், ச்வாஸம், களக்ரஹம், கிரஹணீ, அர்சஸ் இவற்றைப் போக்கும். இதே சூர்ணத்தை கொம்மட்டிமாதுலையின் ஸ்வரஸத்தில் பாவனை செய்து, மாத்திரைகளாகவும் பக்குவம் செய்து உபயோகித்தால் வாதஜ்வரம், கபஜ்வரம் இவையும் ஸ்வஸ்த்தமாகும். 119—125.

**யவாநீகாண்டவ சூர்ணம்:**—குராசாணி யோமம், மாதுளை, சுக்கு, புளி, புளிவஞ்சி, இலந்தம்பழம் இவை ஒவ்வொன்றும் கால் பலம், மிளகு மூவிசம்பலம், திப்பிலி அரையே அரைக்கால் பலம், இலவங்கப்பட்டை, சவுட்டுப்பு, கொத்தமல்லி விதை, ஜீரகம் இவை ஒவ்வொன்றும் அரைக்கால் பலம் சேர்த்து சூர்ணம் செய்து, நான்கு பலம் சாக்கரையையும் கலந்து விடவும். இது 'யவாநீ காண்டவ சூர்ணம்' எனப்படும். இந்த சூர்ணம் பாண்டுரோகம், ஹ்ருத்ரோகம், கிரஹஜ்வரம், வாந்தி, க்ஷயம், அதிஸாரம், ப்லீஹோதரம், வயிற்றுப் பொருமல், மலபந்தம், அரோசகம், வயிற்று வலி, அக்னிமந்தியம், அர்சஸ், நாக்கு-தொண்டைகளில் உண்டாகும் வியாதிகள் இவற்றை ஸ்வஸ்த்தம் செய்யும். 126—129½.

**தாளீசாதி சூர்ணமும் குளிகையும்.**—தாளிசப்பத்திரி ஒரு பங்கு, மிளகு இரண்டு பங்கு, சுக்கு மூன்று பங்கு, திப்பிலி நான்கு பங்கு, மூங்கிலுப்பு ஐந்து பங்கு, ஏலக்காயும் இலவங்கப்பட்டையும் தனித்தனியே அரைப் பங்கும் சேர்த்து சூர்ணம் செய்து முப்பத்திரண்டு பங்கு சர்க்கரையும் கலக்கவேண்டும்; இது 'தாளீசாதி சூர்ணம்' எனப்படும்; இச்சூர்ணத்திற்கு பாசனசக்தி யுண்டு; அரோசகத்தைப் போக்கும்; காஸம், ச்வாஸம், ஜ்வரம், வாந்தி, அதிஸாரம். க்ஷயம், வயிற்றுப் பொருமல், ப்லீஹோதரம், கிரஹணீ, பாண்டுரோகம் இவற்றையும் போக்கும். சர்க்கரையைக் காய்ச்சி பாகு செய்து அதில் சூர்ணத்தையும் கலந்து மாத்திரையாகச் செய்தும் உபயோகிக்கலாம். 130—133½.

**ஸிதோபலாதி சூர்ணம்:**—கற்கண்டு பதினாறு பங்கும், மூங்கிலுப்பு எட்டு பங்கும், திப்பிலி நாலு பங்கும், ஏலக்காய் இரண்டு பங்கும், இலவங்கப்பட்டை ஒரு பங்கும் சேர்த்து சூர்ணம் செய்யவும். இதற்கு 'ஸிதோபலாதி சூர்ணம்' எனப் பெயர்; இதை தேன் அல்லது நெய்யோடு கலந்து உட்கொள்ளலாம்; இவ்வௌஷதம் ச்வாஸம்,

காஸம், க்ஷயம், கை கால் எரித்தல், அக்னிமாந்தியம், நாக்கின் திமிர், பார்ச்வசூலை, அரோசகம், ஜ்வரம், இரத்தபித்தம் இவற்றை சீக்கிரத்தில் ஸ்வஸ்த்தம் செய்யும். 134—137.

பாஸ்கரலவண சூர்ணம்:—கறியுப்பு எட்டு பங்கு, சவுட்டுப்பு ஐந்து பங்கு, அட்டுப்பு, இந்துப்பு, கொத்தமல்லி விதை, திப்பிலி, மோடி, கருஞ்ஜீரகம், இலவங்கப்பத்திரி, நாகசேஸரம், தாளிசப்பத்திரி, புளிவஞ்சி இவை ஒவ்வொன்றும் இரண்டிரண்டு பங்கு, மிளகு, ஜீரகம், சுக்கு இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பங்கு, மாதளை நான்கு பங்கு, இலவங்கப்பட்டை, ஏலம் இரண்டும் தனித்தனியே அரைப் பங்கு, இவற்றையெல்லாம் சேர்த்து செய்யப்பட்ட சூர்ணம் 'பாஸ்கரலவணம்' என்று வழங்கப்படும். இந்தச் சூர்ணத்தை அரைக் கால் பலம் வீதம் புளித்த அன்ன ரஸத்திலாவது, மோரிலாவது, ஸுரை யென்னும் மத்தியத்திலாவது, அல்லது ஆஸவங்களிலாவது கலந்து உட்கொள்ளலாம்; இவ்வௌஷதம் வாதகபங்களினாலுண்டாகும் குன்மங்கள், ப்லீஹோதரம், மஹோதரம், க்ஷயம், அர்சஸ், கிரஹணீ, குஷ்டம், மலபந்தம், பகந்தரம், சோகை, சூலை, ச்வாஸகாஸ ,ஆமவாதம் ஹ்ருத்ரோகம், அக்னிமாந்தியம் இவற்றைப்போக்கும்; தீபநபாசநகுணங்கள் இதற்கு விசேஷமாயுண்டு; ஸகல ஜனங்களுடைய நன்மையின் பொருட்டு முன்பு பாஸ்கரனால் இவ்வௌஷதம் கண்டறியப்பட்டது. 138—144.

ஏலாதி சூர்ணம்:—ஏலக்காய், ஞாழல், கோரைக்கிழங்கு, இலந்தங்கொட்டை, திப்பிலி, வெண்சந்தனம், நெற்பொரி, இலவங்கம், நாகசேஸரம் இவையனைத்தையும் சூர்ணம்செய்து சர்க்கரை சேர்த்து, தேனில் குழைத்து உட்கொள்ள, ஸந்நிபாதத்தினாலுண்டாகும் வாந்தியானது வெகு சீக்கிரத்தில் நின்றுவிடும். 145,146.

வ்யாக்ரியாதி சூர்ணம்:—கண்டங்கத்திரி, ஜீரகம், நெல்லிக்காய் இம்மூன்றையும் சூர்ணம் செய்து தேனிற் குழைத்து உபயோகிக்க ஊர்த்வச்வாஸம், மஹாச்வாஸம் இவை உடனே சமனமாகும். 147.

பஞ்ச நிம்ப சூர்ணம்:—வேப்பமரத்தின் வேர், இலை, புஷ்பம், பழம், பட்டை இவற்றை மும்மூன்று பலம் எடுத்து சூர்ணம் செய்ய

வும்; லோஹபஸ்மம்,[1] கடுக்காய், தகரவிதை, சித்திரமூலம், சேராங் கொட்டை, வாய்விடங்கம், நெல்லிக்காய், மஞ்சள், திப்பிலி, மிளகு, சுக்கு, ஆடலாங்கொடி, பச்சிலை, நெரிஞ்சில், சர்க்கரை இவை ஒவ் வொன்றும் ஒவ்வொருபலம் எடுத்து அனைத்தையும் ஒன்றாகக் கூட்டி, கரிசலாங் கண்ணிச் சாற்றில் முதலில் பாவனை செய்து, அப்பால் கருங்காலி, தினிசை இவற்றை எட்டுமடங்கு ஜலத்தில் சேர்த்து, எட் டில் ஒரு பாகமாகக் காய்ச்சி, அதில் மேற்கூறிய சூர்ணத்தை மீண்டும் பாவனை செய்யவும். அதில் சூர்ணமெல்லாம் ஊறி உலர்ந்த பிறகு, அதைக் கால் பலம் அளவில் கருங்காலி தினிசை இவற்றின் கஷாய யத்தோடாவது, பாலுடனாவது உட்கொண்டு வரலாம்; இது சிறந் தரஸாயனமாகும்; ஒரு மாதகாலம் உபயோகிக்க ஸகல குஷ்டங்களும் சாந்தமாகக்கூடும்; அநேகவித இதர ரோகங்களும் நிவ்ருத்தியாகும். இது 'பஞ்சநிம்ப சூர்ணம்' என்று கூறப்படும். 148—153.

சதாவர்யாதி சூர்ணம்:—தண்ணீர்விட்டான், நெரிஞ்சில், பூனைக் காலி விதை, பீர்க்கு, பேராமுட்டி, நீர்முள்ளிவிதை இவற்றைச் சூர்ணம் செய்து, இரவில் பசும்பாலுடன் உட்கொள்ளலாம், இந்தச் சூர்ணத்தின்பிரபாவத்தினால் புருஷருக்கு ஸ்த்ரீகளிடம் பிரவ்ருத்திக்க விசேஷ திறமையுண்டாகும். 154,155.

அச்வகந்தாதி சூர்ணம்;—அமுக்கிறாங்கிழங்கு பத்து பலமும், கடற்பாலை [2] பத்து பலமும் சேர்த்து சூர்ணம் செய்து, நெய் வைத்துப் பழகிய மட்பாத்திரத்தில் எடுத்து வைத்து, கால்பலம் அளவில் பாலோடு உட்கொள்ள, முன்போலவே ஆண்மையதிகமாகும். ஸ்த்ரீகளிடஞ்சேரா மல், இவ்வௌஷதத்தை யுட்கொண்டு வருபவன் நரைதிரை யேது மின்றி வெகு திட சரீரியாய் வாழ்வான். 156,157.

முஸலீ கந்தாதி சூர்ணம்:—நிலப்பனங்கிழங்கின் சூர்ணம், சீந் திற்கொடியின் ஸத்துவம், நீர்வஞ்சிக்கொடி [3], நெரிஞ்சில், இலவம்

---

1. லோஹபஸ்மம்:—இதைப்பற்றி இதே கண்டத்தில் பதினோ ராவது அத்தியாயத்தில் 44-வது ச்லோகம் முதல் 51-வது ச்லோகத் தின் மொழிபெயர்ப்பு வரையில் விவரம் காண்க.

2. 'வ்ருத்ததாருகம்' என்பதை கடற்பாலை யென்று சிலரும் செம் புளிச்சை யென்று வேறு சிலரும் கூறுவர்.

3. 'வாநீர' என்கிற பாடத்தில் நீர் வஞ்சி யென்றும்; 'வாநரீ' என்கிற பாடத்தில் பூனைக்காலி யென்றும் பொருள்.

பின், சர்க்கரை, நெல்லிக்கனி இவற்றின் சூர்ணம் அனைத்தையும் ஒன்று சேர்த்து நெய் அல்லது பாலுடன் உட்கொண்டால் சிற்றின்பத்திற்கு வேண்டிய சக்தியுண்டாகும். 158½.

சித்திரகாதி சூர்ணம், இரண்டாவது:— சித்திரமூலம், த்ரிபலை, கோரைக் கிழங்கு, வாய்விடங்கம், த்ரிகடு இவற்றை ஸமஎடையாகச் சேர்த்து, லோஹபஸ்மம் ஒன்பதில் ஒரு பங்காகக் கலந்து, தேன் அல்லது நெய்யோடு உட்கொள்ளலாம். இதற்கும் பசுமூத்திரம்அல்லது மோர் அநுபானமாக உபயோகிக்கக்கூடியதாம்; உக்கிரமான பாண்டுரோகம், ஹ்ருத்ரோகம், பகந்தரம், சோகை, குஷ்டம், மஹோதரம், அர்சஸ், அக்னிமாந்தியம், அரோசகம், கிருமிகள் இவற்றை இச்சூர்ணம் ஸ்வஸ்தம் செய்யும். 159—161½.

ஆகாரகரபாதி சூர்ணம்:— அக்கராகாரம், சுக்கு, தக்கோலம், குங்குமப்பூ, திப்பிலி, ஜாதிக்காய், இலவங்கம், சந்தனம் இவை ஒவ்வொன்றும் கால்பலம், அபினி ஒரு பலம் சேர்த்து சூர்ணம் செய்துவிடவும். இந்த சூர்ணத்தை ஒரு மாஷப்பிரமாணம் [1] தேனோடு கலந்து இரவில் உட்கொள்ளலாம்; இது சுக்ரத்தை ஸ்தம்பநம் செய்யும்; புருஷருக்கும் ஸ்த்ரீகளுக்கும் அன்னியோன்னியம் ப்ரீதியை யுண்டு பண்ணும். 162—164½.

---

# ஏழாவது அத்தியாயம்.

---

## குளிகா கல்பனை.

குளிகை:— இனி குளிகைகள் செய்யும் வகை கூறப்படுகிறது; குளிகைக்கே வடகம், வடி, மோதகம், வடிகா, பிண்டி, குடம், வர்த்தி என்று வேறு பெயர்களுண்டு. வெல்லம், சர்க்கரை, மைஸாக்ஷி இவற்றில் ஏதாவது ஒன்றை அக்னியின் மீதேற்றி இளகச்செய்து, அதில் அவசியமான சரக்குகளின் சூர்ணத்தைச் சேர்த்து, கிளறி குளிகை செய்யலாம். சில ஸமயம் மைஸாக்ஷியைக் காய்ச்

1. மாஷப்பிரமாணம்:—4-ம் பக்கம்பார்க்க.

சாமலே, தேன் முதலிய திரவ பதார்த்தங்களைச் சேர்த்து குளிகை செய்யலாம். 1—3.

குளிகைகளில் சேர்க்கக்கூடிய பதார்த்தங்களின் அளவு முதலியன:—குளிகைகளில் சர்க்கரை சேர்க்க வேண்டி வந்தால், அதைச் சூர்ணத்தினும் நான்கு மடங்காகச் சேர்க்கவேண்டும்; வெல்லமானால் இரண்டு மடங்கும், மைஸாக்ஷி, தேன் இவற்றை ஸம பாகமாகவும், இதர திரவ பதார்த்தங்களை இரண்டு மடங்காகவும் சேர்க்கவேண்டும். அவரவருடைய சரீர பலத்திற்குத்தகுந்தவாறு கர்ஷப்பிரமாணத்திற்கு அதிகப்படாமல் குளிகைகளுக்கு அளவுகள் ஏற்படுத்தவேண்டும். 4—5.

பாஹுசால குடம்:—பேய்த்தும்மட்டி, கோரைக்கிழங்கு, சுக்கு, நேபாளம், கடுக்காய், சிவதைவேர், கிச்சிலிக்கிழங்கு, வாய்விடங்கம், நெரிஞ்சில், சித்திரமூலம், வாலுழுவை இவற்றில்ஒவ்வொன்றும் அரை பலமும், கருணைக்கிழங்கு எட்டு பலமும், கடற்பாலை நாலு பலமும், சேராங்கொட்டை நாலு பலமும் சேர்த்து க்வாதம் காய்ச்சவேண்டும்; இந்த க்வாதத்திற்கு ஜலம் ஒரு த்ரோணம் சேர்த்து, அதை நாலில் ஒருபங்காகச் சுண்டக்காய்ச்சவும். கஷாயச் சரக்குகளின் மொத்த எடைக்கு மூன்று மடங்கு வெல்லம் சேர்த்து, மறுபடியும் தீயிலேற்றிக் கிளறவேண்டும்; சூர்ணமும் கஷாயமும் ஒன்றாகக் கலந்து பக்குவமாகிற ஸமயத்தில் சித்திரமூலம், சிவதைவேர், நேபாளம், வாலுழுவை இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலமும், த்ரிகடு, ஏலம், மிளகு, இலவங்கப்பட்டை இவை ஒவ்வொன்றும் மும்மூன்று பலமும் சேர்த்து பக்குவம்செய்து இறக்கிவிடவும்; சிறிது ஆறியவுடனே ஒரு பிரஸ்த்தப் பிரமாணம் தேனையும் சேர்த்து அனைத்தையும் ஒன்றாகக் கலந்து குளிகைகளாகச் செய்துவிடவும்; இது மிகவும் குணத்திற்சிறந்த குளிகையென்று வைத்தியர்களால் கொண்டாடப்படுகிறது; இதற்கு, 'பாஹுசாலகுடம்' என்று பெயர்; இவ்வௌஷதம் ஸகலவிதமான அர்சோரோகங்கள், குன்மம், வாத ஸம்பந்தமான உதரரோகம், ஆமவாதம், பிரதிச்யாயம், கிரஹணி, க்ஷயரோகம், பீநஸம், ஹலீமகம், பாண்டு ரோகம், பிரமேஹம் இவற்றைப்போக்கும்; இது சிறந்த இரஸாயனமுமாகும். 6—12½.

**மரிசாதி குளிகை:**—மிளகு கர்ஷப்பிரமாணம், திப்பிலி கர்ஷப் பிரமாணம், யவக்ஷாரம் அரை கர்ஷம், மாதளை இரண்டு கர்ஷம் இவற்றைச் சூர்ணம் செய்து, எட்டு கர்ஷங்கொண்ட வெல்லத்துடன் கலந்து, ஒவ்வொரு சாணப்பிரமாணமாக குளிகைகள் உருட்டலாம்; இந்த குளிகையை வாயில் அடக்கிக்கொண்டிருந்தால் எவ்வித காஸமும் தீரும். 13—15.

**சுண்ட்யாதி குளிகை:**—சுக்கு, கடுக்காய், வெல்லம், கோரைக் கிழங்கு இவற்றையாவது, தான்றிக்காயை மாத்திரமாவது குளிகை செய்து வாயில் அடக்கிக்கொண்டிருந்தால் எல்லா ச்வாஸ-காஸங்களும் குறையும். 16.

**ஆமலகாதி குளிகை:**—நெல்லிப்பருப்பு, தாமரைக்கிழங்கு, கோஷ்டம், நெற்பொரி, ஆலம்விழுது இவற்றை அரைத்துத் தேன் விட்டு குளிகைகளாகச் செய்து, வாயில் அடக்கிக்கொண்டு வந்தால் மிகுந்த நாவறட்சி நிவ்ருத்தியாகும். $17\frac{1}{2}$.

**ஸஞ்ஜீவநீ குளிகை:**—வாய்விடங்கம், சுக்கு, திப்பிலி, கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய், வசம்பு, சீந்திற்கொடி, சேராங்கொட்டை, நாபி இவற்றை ஸமவெடையாகச் சேர்த்து, பசுமூத்திரத்திலால் அரைத்து, குன்று மணியளவில் குளிகை செய்யவும். இந்த மாத்திரையை இஞ்சி ஸ்வரஸத்துடன் உட்கொள்ளலாம். அஜீர்ணத்திலும் குன்மத்திலும் ஒரு குளிகையும், விஷூசியில் இரண்டு குளிகைகளும், ஸர்ப்பம் கடித்தால் மூன்று குளிகைகளும், ஸந்நிபாதரோகங்களில் நான்கு குளிகைகளும் உட்கொள்ளலாம்; இது மனிதரை அபாயகரமான நிலையிலிருந்து உயிர்ப்பிக்கும் சக்தியுடையதாகையால் 'ஸஞ்ஜீவநீ குளிகை' என்று வழங்கப்படும். 18—21.

**வ்யோஷாதி குளிகை:**-த்ரிகடு, புளிவஞ்சி, சவியம், தாளிசப்பத்ரி, சித்திரமூலம், ஜீரகம், புளி ஒவ்வொன்றும் கர்ஷ பரிமாணமும், இலவங்கப்பட்டை, ஏலக்காய், இலவங்கப்பத்திரி இவை ஒவ்வொன்றும் மூன்று சாணபரிமாணமும், வெல்லம் ஐந்துபலமும் சேர்த்து செய்யப்படும் மாத்திரை 'வ்யோஷாதி குளிகை' 1 எனப்படும். இது ஆமதோஷமுள்ள பீநஸரோகம், ச்வாஸகாஸம், அரோசகம், தொண்டைக்கம்மல், ப்ரதிச்யாயம் இவற்றைப் போக்கும். $22—23\frac{1}{2}$.

---

1. வ்யோஷம்—த்ரியூஷணம் அல்லது த்ரிகடு.

சுண்டீ குளிகை முதலியது:—சுக்கு, வெல்லம் இவ்விரண்டையும் மாத்திரையாகச்செய்து ஆமதோஷங்களிலும், திப்பிலி, வெல்லம் இரண்டையும் குளிகை செய்து அஜீர்ணரோகத்திலும், ஜீரகம், வெல்லம் இவ்விரண்டையும் சேர்த்து குளிகை செய்து மூத்திர க்ருச்சிர ரோகத்திலும், கடுக்காய், வெல்லம் இவ்விரண்டையும் குளிகை செய்து அர்சோரோகத்திலும் உபயோகிக்கலாம். 24½.

வ்ருத்ததாரிவாதி குளிகை:—கடற்பாலை, சேராங்கொட்டை, சுக்கு இவற்றின் சூர்ணத்துடன் வெல்லம் சேர்த்து மாத்திரை செய்துபயோகிக்க ஆறுவித அர்சோரோகங்களும் போகும். 25½.

ஸூரணாதி குளிகை:—உலர்ந்த கருணைக்கிழங்கு முப்பத்திரண்டு பாகம், சித்திரமூலம் பதினாறு பாகம், சுக்கு நான்கு பாகம், மிளகு இரண்டு பாகம் இவற்றைச் சூர்ணம் செய்யவும்; இவற்றிற்குப்போதுமான அளவு வெல்லம் சேர்த்து குளிகை செய்து அர்சோரோகத்தில் உபயோகிக்கலாம். 26—27½.

இரண்டாம் ஸூரணாதி குளிகை:—கருணைக்கிழங்கு, கடற்பாலை இவ்விரண்டும் தனித்தனியே பதினாறு பங்கு, விலப்பனங்கிழங்கு, சித்திரமூலம் இவை தனித்தனியே எட்டு பங்கு, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், வாய்விடங்கம், சுக்கு, திப்பிலி, சேராங்கொட்டை, மோடி, தாளிசப்பத்திரி இவை ஒவ்வொன்றும் நான்கு பங்கு, இலவங்கப்பட்டை, ஏலம், மிளகு இவை ஒவ்வொன்றும் இரண்டு பங்கு; இவற்றையெல்லாம் சேர்த்து சூர்ணம் செய்து, எல்லாவற்றிற்கும் இரண்டு மடங்கு வெல்லம் சேர்த்து இடித்து குளிகைகள் செய்யவும். இந்த மாத்திரைக்கு தீபனசக்தி விசேஷமாயுண்டு; அர்சஸ், வாதகபங்களாலுண்டான கிரஹணீரோகம், ச்வாஸம், காஸம், க்ஷயரோகம், ப்லீஹரோகம், யானைக்கால், சோதை, விக்கல், மேஹரோகம், பகந்தரம், மயிர் நரைத்தல் இவற்றையும் போக்கும்; வ்ருஷ்யம், இரஸாயனம், மேத்யம்,1 என்கிற குணங்களும் உண்டு. 28—33.

த்ரிபலாதி குளிகை:—த்ரிபலை, த்ரிகடு, சவியம், மோடி, சித்

1. வ்ருஷ்யம்:—வாஜீகரம் என்று கூறப்படும் குணம். இரஸாயனம், வாஜீகரம் என்கிற விஷயங்களைப்பற்றி 20-வது பக்கம் பார்க்க. மேத்யம்—புத்தியை வ்ருத்தி செய்யக்கூடிய குணம்.

திரமூலம், தேவதாரு, சுத்தி செய்த பொன்னிமிளை,[1] இலவங்கப்பட்டை, மரமஞ்சள், கோரைக்கிழங்கு, வாய்விடங்கம் இவை ஒவ்வொன்றும் கால் பலம், இவையனைத்துக்கும் இருமடங்கு சுத்தி செய்த மண்டூரம்[2] சேர்த்து, எல்லாவற்றையும் எட்டு மடங்கு பசுமூத்திரத்திலிட்டு, அடுப்பிலேற்றி பக்குவம் செய்து, குளிகைகள் செய்யவும். இவ்வௌஷதம் காமாலை, பாண்டுரோகம், மேஹரோகம், அர்சோரோகம்,சோகை, குஷ்டம், கபரோகங்கள், ஊருஸ்தம்பம், அஜீர்ணம், ப்லீஹரோகம் இவற்றை ஸ்வஸ்த்தம் செய்யும். 34—36½.

பிப்பல்யாதி குளிகை:—தேன் ஒரு பங்கு, நெய் இரண்டு பங்கு, திப்பிலி நாலு பங்கு, சர்க்கரை எட்டு பங்கு, பால் பதினாறு பங்கு, சதுர்ஜாதகம்[3] ஒரு பங்கு இவையனைத்தையும் சேர்த்து அக்னியிலேற்றி பக்குவம்செய்து மாத்திரைகளாக உருட்டவும். இந்த குளிகை தாதுக்களைப்பற்றிய ஸகல ஜ்வரங்கள், ச்வாஸகாஸம், பாண்டு ரோகம் தாதுக்களின் க்ஷீணம், அக்னிமாந்த்யம் இவற்றைப்போக்கும். 37—39.

சந்திரப்ரபா குளிகை:—கார்ப்போகரிசி, வசம்பு, கோரைக்கிழங்கு, நிலவேம்பு, சீந்தில், தேவதாரு, மஞ்சள், அதிவிடயம், மரமஞ்சள், மோடி, சித்திரமூலம், கொத்தமல்லிவிதை, த்ரிபலை, சவியம், வாய்விடங்கம், ஆனைத்திப்பிலி, த்ரிகடு, பொன்னிமளை, க்ஷாரத்வயம், இலவணத்ரயம் இவற்றில் ஒவ்வொன்றும் சாணமெடைப்பு, சிவதைவேர், நேர்வாளம், இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை, ஏலம், மூங்கிலரிசி இவை ஒவ்வொன்றும் கால் பலமும், அபஸ்மம் அரைப்லமும், சர்க்கரை ஒரு பலமும், சிலாஜது இரண்டு பலமும், மைசாக்ஷி இரண்டு பலமும் சேர்த்து சூர்ணம் செய்து, சிறிது ஜலம் விட்டு அரைத்து மாத்திரைகள் செய்யவும்; இதற்கு 'சந்திரப்ரபா குளிகை' என்று பெயர். இது ஸர்வ ரோகங்களைப் போக்கக்கூடியது; விசேஷமாக இருபதுவித பிரமேஹங்கள், மூத்திர க்ருச்சிரம்,

1. பொன்னிமிளையென்னும் ஸ்வர்ணமாக்ஷிகத்தின் சுத்திமுதலியவைகளைப்பற்றி இதேகண்டத்தில் 11வது அத்தியாயத்தில் விவரம் பார்க்க.

2. மண்டூரம்—11-வது அத்தியாயத்தில் விவரம் காண்க.

3. சதுர்ஜாதம்—8-வது பக்கம் பார்க்க.

மூத்திராகாதம், அச்மரீரோகம், மலபந்தம், வயிற்றுப் பொருமல், வயிற்றுவலி, மேஹரோகத்தினாலுண்டாகும் கிரந்திகள், அர்புதம், அண்டவ்ருத்தி, பாண்டுரோகம், காமாலை, ஹலீமகம், குடலிறக்கம், இடுப்புவலி, ச்வாஸகாஸம், விசர்ச்சிகை யென்னும் சர்மவியாதி, குஷ்டம், அர்சஸ், சொறி, ப்லீஹரோகம், பகந்தரம், தந்தரோகம், நேத்திரரோகம், ஸ்த்ரீகளுக்குண்டாகும் மாதவிடாய் ஸம்பந்தமான வியாதிகள், புருடருக்கு சுக்லத்தைப் பற்றிய வியாதிகள், அக்னிமாந்த்யம், அரோசகம், ஸந்நிபாத ஸம்பந்தமான வியாதிகள் இவற்றைப் போக்கும். பல்யம், வ்ருஷ்யம், இரஸாயநம் என்கிற குணங்களும் இதற்கு உண்டு. இச்சந்திர ப்ரபா குளிகையில் கர்ஷமென்கிற அளவு நான்கு சாணங்கொண்டதாம். 40—49.

காங்காயந குளிகை:—குராசாணியோமம், ஜீரகம், கொத்தமல்லி விதை, மிளகு, வெண் காக்கட்டான், ஓமம், கருஞ்சீரகம் இவை ஒவ்வொன்றும் க ல் பலம், பெருங்காயம் ஆறு சாணம், க்ஷாரத்வயம், பஞ்ச லவணம், சிவதைவேர் இவை தனித்தனியே அரைப்பலம், நேபாளம், கிச்சிலிக்கிழங்கு, அல்லிக்கிழங்கு, வாய்விடங்கம், மாதளம்பழம், கடுக்காய், சித்திரமூலம், புளிவஞ்சி, சுக்கு இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் சேர்த்து, நன்கு சூர்ணம் செய்து, கொடி மாதளம்பழச்சாறும் சேர்த்து அரைத்து குளிகைகள் செய்யவும். நெய், பால், மத்தியங்கள், மோர் முதலிய புளிப்பான வஸ்துக்கள், உஷ்ணஜலம் இவற்றில் ஏதேனும் ஒன்றை இந்த மாத்திரைக்கு அநுபானமாகக் கொள்ளலாம். இந்த குளிகை 'காங்காயநர்' என்கிற முனிவரால் செய்யப்பட்டு, குணத்திற் சிறந்ததென்று கூறப்பட்டுள்ளது. குன்மரோகங்களைப் போக்குவதற்கு இது மிக உபயோகமானது. மத்தியங்களுடன் உபயோகித்தால் வாத குன்மத்தையும், பசும்பாலோடு உபயோகித்தால் பித்த குன்மத்தையும், பசு மூத்திரத்துடனுபயோகித்தால் கப குன்மத்தையும், தசமூல க்வாதத்துடன் உபயோகித்தால் ஸந்நிபாத குன்மத்தையும், ஒட்டகப்பாலுடன் உட்கொண்டால் ஸ்த்ரீகளுக்குண்டாகும் இரத்த குன்மத்தையும் போக்கும்; இருதயத்தைப் பற்றிய வியாதிகள், கிரஹணீ, வயிற்றுநோய், வயிற்றுக் கிருமிகள், அர்சஸ் இவைகளும் தீரும். 50—55½.

**யோகராஜகுக்குலு:**—சுக்கு, மோடி, திப்பிலி, சவியம், சித்திரமூலம், பொரித்த காயம், ஓமம், கடுகு, ஜீரகம், கருஞ்ஜீரகம், அரேணுகம், குடசப்பாலை, வட்டத்திருப்பி, வாய்விடங்கம், ஆனைத்திப்பிலி, கடுகரோகிணீ, அதிவிடயம், கண்டுபாரங்கி, மருளங்கிழங்கு, வசம்பு இவ்விருபது சரக்குகளில் ஒவ்வொன்றும் சாண பரிமாணம்; இவையனைத்துக்கும் இரண்டு மடங்கு த்ரிபலை, இவற்றையெல்லாம் சூர்ணம் செய்து, இவையெல்லாவற்றிற்கும் ஸமயெடை மைசாக்ஷி சேர்த்து, அடுப்பிலேற்றி பக்குவம் செய்து பாகுபோல் வருகையில், வங்கபஸ்மம், நாகபஸ்மம், வெள்ளிபஸ்மம், காந்தபஸ்மம், அப்ரகபஸ்மம், மண்டூரபஸ்மம், இரஸஸிந்தூரம், இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் கலந்து, அனைத்தையும் ஒரு பிண்டமாகச் செய்து, நெய் வைத்திருந்த ஒரு பாத்திரத்தில் சேர்த்து, சிறிது ஆறியபின் ஒவ்வொரு சாண யெடையுள்ள மாத்திரைகளாக உருட்டவும்; இது 'யோகராஜ குக்குலு'[1] என்று சொல்லப்படும். ஸந்நிபாத வியாதிகளைப் போக்குவதிலும், இரஸாயநம் என்கிற குணத்திலும் இது பெயர் போனது. இவ்வௌஷத முபயோகிக்கையில் புணர்ச்சி, ஸாதாரண ஆஹாரவகைகள், பானவகைகள் இவற்றைப் பரிஹரிக்க வேண்டுமென்கிற நியமமில்லை. ஸகல விதமான வாதரோகங்கள், குஷ்டரோகம், அர்சஸ், கிரஹணீ, பிரமேஹம், வாதரக்தம், வயிற்று நோய், பகந்தரம், உதாவர்த்தம், க்ஷயம், குன்மம், அபஸ்மாரம், உரோக்கிரஹம் என்கிற மார்பிடிப்பு, அக்னி மாந்த்யம், ச்வாஸகாஸம், அரோசகம், புருடருக்குண்டாகும் சுக்லதோஷம், ஸ்த்ரீகளுக்கு மாதவிடாயிலுண்டாகும் தோஷம் இவற்றை ஸ்வஸ்த்தம் செய்யும்; மலட்டுத் தன்மையைப் போக்கிக் கருத்தரிக்கச் செய்யும் குணமும் இதற்குண்டு. புருடருக்கு ஆண்மைக்குறைவையும் அகற்றும். யோகராஜகுக்குலுவை ராஸ்நாதிக்வாதத்துடன்[2] உபயோகித்தால் பலவிதமான வாதரோகங்களும், காகோலீக்வாதத்துடன் உட்கொண்

---

1. மைசாக்ஷி யென்னும் குங்கிலியம் சேர்த்து செய்யப்படும் குளிகைகள் 'குக்குலு' என்று வழங்கப்படும்.

2. இங்கு குறிப்பிடப்பட்டுள்ள கஷாய வகைகளின் விவரங்களை 'க்வாதகல்பனை' அத்தியாயத்திற் பார்க்க.

டால் பித்தரோகங்களும், ஆரக்வதாதி க்வாதத்துடன் உட்கொண்டால் கபரோகங்களும், தார்வ்யாதி க்வாதத்தோடு உபயோகித்தால் மேஹரோகங்களும், பசு மூத்திரத்தோடு உட்கொண்டால் பாண்டு ரோகமும், தேனோடு உட்கொண்டால் மேதோரோகமும், வேப்பம் பட்டைக் கஷாயத்துடன் உபயோகித்தால் குஷ்டரோகமும், குடூச்யாதி க்வாதத்துடன் உபயோகித்தால் வாதரக்தமும், பிப்பல்யாதி க்வாதத்தோடு உபயோகித்தால் சோதையென்னும் சோகை, வயிற்று வலி இவையும், படோலாதி க்வாதத்துடன் உபயோகித்தால் எலி விஷமும், த்ரிபலாக்வாதத்துடனுட்கொண்டால் உக்கிரமான கண்ணோயும், புனர்நவாதி க்வாதத்துடன் உட்கொண்டால் ஸகலவிதமான உதரரோகங்களும் நிவ்ருத்தியாகும். 56—69½.

கைசோரிக குக்குலு:—மூன்று பிரஸ்த்தம் த்ரிபலையையும், ஒரு பிரஸ்த்தம் சீந்திற்கொடியையும் நன்றாக இடித்து, இரும்புப் பாத்திரத்திலிட்டு, ஒன்றரை த்ரோணப்பிரமாணம் ஜலம் சேர்த்து, அரைவாசி ஜலம் வற்றும்வரையில் காய்ச்சி வடிக்கட்டிவிடவும்; பிறகு அக்கஷாயத்தை அதே பாத்திரத்திலிட்டு ஒரு பிரஸ்த்தப் பிரமாணம் சுத்தமான மைசாக்ஷியைச் சேர்த்துக் கரண்டியினால் அடிக்கடியும் கிளறிக்கொண்டே காய்ச்சவும்; வெல்லப்பாகுபோல் குழைந்துவரும் ஸமயத்தில் இரண்டு பலம் த்ரிபலை, ஒரு பலம் சீந்திற்கொடி, ஒன்றரைப்பலம் த்ரிகடு, அரைப்பலம் வாய்விடங்கம், கால்பலம் நேர்வாளம், கால்பலம் சிவதை வேர் இவற்றை நன்கு சூர்ணம் செய்து சேர்த்து, அனைத்தையும் ஒன்றாகக் கிளறி உருட்டி, ஒரு நெய்ப்பாத்திரத்தில் சேர்த்து, சாணப்பிரமாணங்கொண்ட மாத்திரைகளாகச் செய்யவும். இந்த மாத்திரைகளை அந்தந்த தோஷ நிலைமையறிந்து பெரும்பாலும் எல்லா வியாதிகளிலும் உபயோகிக்கலாம். இதற்கு உஷ்ண ஜலத்தையாவது, இளஞ்சூடான பாலையாவது, மஞ்ஜிஷ்டாதி க்வாதத்தையாவது முறைப்படி அநுபானமாயுட்கொள்ளலாம். 'கைசோரிக குக்குலு' எனப்படும் இந்த குளிகை ஸகல குஷ்டங்கள், ஸந்திபாத வாதரக்தம், எல்லாவிதமான விரணங்கள், குன்மங்கள், பிரமேஹ பிடகைகள், பிரமேஹம், உதரரோகம், அக்னிமாந்த்யம், காஸம், சோதை, பாண்டு இவற்றை ஸ்வஸ்த்தம் செய்யும். இதை தினம்

தோறும் சிறிது உபயோகித்துவந்தால் இரஸாயநமாகவும் இருக்கும். சரீரத்திற்குக் காந்தியைத் தரும். வாஸாதி க்வாதத்துடன் உட்கொண்டால் நேத்திர ரோகங்களையும், வருணாதிக்வாதத்துடன் உட்கொண்டால் குன்மம் முதலிய வியாதிகளையும், கதிரக்வாதத்துடன் உபயோகித்தால் விரணங்கள் குஷ்டங்கள் முதலானவற்றையும் போக்கும். கைஸாக்ஷி சேர்ந்த இவ்வித ஔஷதமுபயோகிக்கும் போது புளிப்பான பதார்த்தங்கள், தீக்ஷ்ண பதார்த்தங்கள், அஜீர்ணமுண்டுபண்ணக்கூடிய பதார்த்தங்கள், புணர்ச்சி, சிரமமுண்டாக்கக் கூடிய வேலைகள், வெயில், மத்தியம், கோபம் இவற்றை விலக்கி விடவேண்டும். 70—81.

**த்ரிபலாதி குக்குலு:**—த்ரிபலா சூர்ணம் மூன்று பலம், திப்பிலி சூர்ணம் ஒருபலம், மைசாக்ஷி ஐந்துபலம் இவையனைத்தையும் ஒன்றாகக் கலந்து இடித்து, குளிகைகளாய் உருட்டி, அவரவரது ஜாடராக்னியின் பலத்திற்குத் தகுந்தவாறு உபயோகிக்கலாம். இது பகந்தரம், குன்மம், சோதை, அர்சஸ் இவற்றைப் போக்கும். 82, 83.

**கோக்ஷுராதிகுக்குலு:**—இருபத்தெட்டு பலம் நெரிஞ்சியை ஆறுமடங்கு ஜலத்திலிட்டுக் காய்ச்சி, பாதி ஜலம் வற்றிப்போனதும் வடிகட்டி, அக்கஷாயத்தில் ஏழு பலம் மைசாக்ஷி சேர்த்து பக்குவம் செய்து, வெல்லப்பாகுபோல் வரும்பொழுது த்ரிகடு, த்ரிபலை, கோரைக்கிழங்கு இவற்றில் ஒவ்வொன்றையும் ஏழு பலம் எடை சூர்ணஞ்செய்து, அதில் கலந்து, மாத்திரைகளாய் உருட்டவும். இதையுட்கொண்டால் பிரமேஹம், மூத்திரக்ருச்சிரம், பிரதரமென்னும் பெரும்பாடு, மூத்திராகாதம், வாதரக்தம், வாதரோகங்கள், சுக்லதோஷம், அச்மரீ இவை குணமாகும். 84—87.

**த்ரிபலாதி குளிகை, இரண்டாவது:**—த்ரிபலை எட்டு பலம், சுத்தமான சேராங்கொட்டை நான்கு பலம், கார்போகரிசி ஐந்து பலம், வாய்விடங்கம் நான்கு பலம், அயபஸ்மம், சிவதைவேர், மைசாக்ஷி, சிலாஜது இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம், அல்லிக்கிழங்கு எட்டு பலம், சித்திரமூலம் அரைப்பலம், மிளகு அரைக்கால் பலம், சுக்கு, திப்பிலி, கோரைக்கிழங்கு, இலவங்கப்பட்டை, ஏலம், இலவங்கப்பத்திரி, குங்குமப்பூ ஒவ்வொன்றும் காணெடை; இவ்வனைத்தையும்

சூர்ணம் செய்து, இவற்றிற்கு ஸமயெடை கற்கண்டை பாகு செய்து, அதில் மேற்கூறிய சூர்ணத்தைப் போட்டு, நன்றாகக் கிளறி மாத்திரைகளாய் உருட்டவும். இதை அவரவரது சரீரக் கூறுபாட்டுக்கேற்றவளவு உபயோகித்து வந்தால் அகில குஷ்டங்கள், ஸந்நிபாத வியாதிகள், பகந்தரம், ப்லீஹவ்ருத்தி, குன்மம், நாக்கு உள் தலை தொண்டை இவற்றிலுண்டாகும் வியாதிகள், சிரஸ் நேத்திரம் புருவம் இவற்றிலுண்டாகும் ரோகங்கள், இடுப்புவலி முதலியவை தீரும். நாபிக்குக் கீழுள்ள அவயவங்களில் வியாதி கண்டால் ஆஹாரமுண்பதற்கு முன்பும், வயிற்றிலுண்டான வியாதிகளுக்கு உணவின் இடையிலும், மார்புக்கு மேற்புறத்து அவயவங்களில் வியாதி கண்டால் ஆஹார முண்டபிறகும் இவ்வௌஷதத்தை யுட்கொள்ள வேண்டும். 88—94½.

காஞ்சநார குக்குலு:— செம்மந்தாரப்பட்டை இருபத்தைந்து பலம், த்ரிபலை ஆறுபலம், த்ரிகடு மூன்று பலம், மாவலிங்கம் பழம் ஒரு பலம், ஏலக்காய், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு கர்ஷம், இவையனைத்தையும் சேர்த்து சூர்ணம் செய்யவும்; இவை யெல்லாவற்றிற்கும் ஸமயெடையாக கைசாக்ஷி சேர்த்து, அனைத்தையும் ஒன்றாயிடித்து, சாணமெடையில் குளிகைகள் செய்யவும். இதை தினந்தோறும் காலையில் உட்கொண்டுவரலாம். உக்கிரமான கண்டமாலை, அபசி, அர்புதம், கிரந்திகள், விரணங்கள், குன்மம், குஷ்டம், பகந்தரம் இவற்றைப் போக்கும். கொட்டைக் கரந்தையின் க்வாதத்தையாவது, கருங்காலி மரப்பட்டையின் க்வாதத்தையாவது, கடுக்காயின் கஷாயத்தையாவது, உஷ்ணஜலத்தையாவது இவ்வௌஷதத்திற்கு அநுபானமாகக் கொள்ளலாம். 95—100.

மாஷாதி குளிகை.— உளுந்து, கோதுமை, திப்பிலி, வாற்கோதுமை, சம்பா அரிசி இவற்றை உமி நீக்கித் தனித்தனியே சூர்ணம் செய்து, ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு பலம் எடுத்து ஒன்றாகக் கலந்து, அனைத்திலும் அரைவாசி நெய் சேர்த்துப் பொரித்து, பிறகு சூர்ணமனைத்துக்கும் ஸமமாக கற்கண்டையும், இரண்டு மடங்கு ஜலத்தையும் சேர்த்து, சிறுகச் சிறுகத் தீயிட்டு பக்குவம் செய்யவும்.

நன்றாகப் பக்குவமான பின்பு மாத்திரைகளாய் உருட்டவும். இதில் ஒரு பல மருந்தை நான்கு மடங்கு பாலுடன் மாலை நேரத்தில் தினந்தோறும் உட்கொண்டு வரலாம். இதை புட்கொள்வதால் ஆண்மை யதிகரிக்கும்; சிற்றின்பங்களில் விசேஷமாய் பிரவ்ருத்தித்தாலும் பலங்குன்றாது. இவ்வௌஷதமுபயோகிக்கையில் உப்பையும், புளிப்பையும் விலக்கிவிடவேண்டும். 101—105.

---

## எட்டாவது அத்தியாயம்.

---

### லேஹ்ய கல்பனை.

லேஹ்யமும் அதன் பரிமாணமும்:—க்வாதம் முதலியதை [1] மீண்டும் காய்ச்சி பக்குவம் செய்வதால் திரண்டு கனமாக வரும் பாகமானது லேஹ்யமெனப்படும்; இதற்கே ரஸக்ரியை, அவலேஹம், லேஹம் என்றும் பெயர். லேஹ்யங்களை உட்கொள்வதற்குப் பொதுவான பரிமாணம் ஒரு பலமாம். 1.

லேஹ்யத்தில் சேர்க்கவேண்டிய வஸ்துக்களின் பிரமாணங்கள்:— லேஹ்யத்தில் சர்க்கரை சேர்க்க வேண்டுமானால், அதில் உபயோகிக்கப்படும் சூர்ணத்தைக் காட்டிலும் நான்கு மடங்கும், வெல்லமானால் இரு மடங்கும், திரவபதார்த்தங்கள் [2] நான்கு மடங்கும் உபயோகிக்கப்படவேண்டும்; லேஹ்ய பாகங்களுக்கு எங்கும் இதுவே பொதுப் பிரமாணமாகும். 2.

லேஹ்ய பாகத்தின் அறிகுறிகள்:— லேஹ்யம் நன்கு பக்குவமாகிற நிலைமைக்கு வந்ததானால், அதன் இளகிய பாகானது நூல் போல் இழுபடும்; அதை ஜலத்திலிட்டால் அமிழ்ந்துவிடும்; விரல்களால் அழுத்தினால் சிறிது உரப்பாயிருப்பதுடன், அதில் அங்குலிகளிலுள்ள இரேகைகளின் முத்திரையும் பதியும்; அதில் சேர்க்கப்

---

1. இங்கு க்வாதம் முதலியது என்று ஸ்வரஸம், கல்கம், க்வாதம், பாண்டம், ஹிமம் என்கிற ஐந்துவித கஷாயங்களும் குறிக்கப்படுகின்றன.

2. திரவபதார்த்தங்கள் - பால், தேன், நெய் முதலியவை.

படும் சரக்குகளுக்குள்ள சுவையும் மணமும் நிறமும் நன்கு காணப் படும். 3.

லேஹ்யத்திற்கு அநுபானங்கள்:— பால், கருப்பஞ்சாறு, பஞ்ச மூலகஷாயத்திலுண்டான யூஷம், 1 வாஸாக்வாதம் 2 இவை பொதுவாக லேஹ்யங்களுக்குச் சிறந்த அனுபானங்களாகும். 4.

கண்டகார்யாதி அவலேஹம்:— ஒரு த்ரோணபரிமாணம்[3] கொண்ட ஜலத்தில் நூறு பலம் கண்டங்கத்திரியைச் சேர்த்து க்வா தம் காய்ச்சவும்; முன் சேர்த்த ஜலத்தில் நாலிலொரு பாகம் மிகுந் திருக்கையில், அதில் அடியில் வரும் சரக்குகளைச் சூர்ணம் செய்து சேர்க்கவேண்டும்:— சீந்திற்கொடி, சவியம், சித்திரமூலம், கோரைக் கிழங்கு, கர்க்கடச்ருங்கி, த்ரிகடு, காஞ்சொறி, கண்டுபாரங்கி, சிற்ற ரத்தை, கச்சோரம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம்; சர்க் கரை இருபத்தைந்து பலம்; நெய், நல்லெண்ணெய் தனித்தனியே எட்டு பலம்; இவற்றைச் சேர்த்து லேஹ்யமாகச் செய்து ஆறிய பிறகு தேன் எட்டு பலமும், மூங்கிலுப்பின் சூர்ணம் நான்கு பலமும், திப்பிலிப்பொடி நான்கு பலமும் சேர்த்து, நல்ல மட்பாத்திரத்தில் வைத்திருக்கவும். இந்த லேஹ்யம் விக்கல், ச்வாஸரோகம் இவற்றை நன்றாகப் போக்கும். 5—9.

ச்யவநப்ராசாவலேஹம்.— பாதிரி, அகில், பெருங்குமிழன், பில்வம், பெருமரம், நெரிஞ்சில், சிறுமல்லி, பெருமல்லி, கண்டங் கத்திரி, சிறுவழுதுணை, திப்பிலி, கர்க்கடகசருங்கி, திராக்ஷை, சீந் தில், கடுக்காய், சிற்றுமுட்டி, கீழாநெல்லி, ஆடாதோடை, ருத்தி, ஜீவந்தி, கச்சோரம், ஜீவகம், ரிஷபகம், கோரைக்கிழங்கு, அல்லிக் கிழங்கு, சிறுகோவை, நரிப்பயறு, பெருவிடுகொள்ளி, நிலப்பூசனிக் கிழங்கு, சாறணை, காகோலீ, க்ஷீரகாகோலீ, தாமரை, மேதா, மஹா மேதா, சிற்றேலம், அகருக்கட்டை, சந்தனம் இவற்றில் ஒவ்வொரு

1. பஞ்சமூலம்—123-வது பக்கம் டிப்பணியிலும், யூஷம் என் பதைப்பற்றி 122-வது பக்கத்திலும் விவரம் காண்க.

2. வாஸா க்வாதம்—111-வது பக்கத்தில் 'கேவல வாஸா க்வாதம்' என்பதைப் பார்க்க.

3. த்ரோணம்—4-வது பக்கம் பார்க்க.

பலமெடுத்து, இடித்து, ஒரு பாத்திரத்தில் த்ரோணபரிமாணம் ஜலத்தில் சேர்த்து, இவற்றுடன் ஐந்நூறு நெல்லிக்கனிகளையும் போட்டு பக்குவம் செய்து, எட்டிலொரு பங்காகச் சுண்டும்படி கஷாயம் காய்ச்சி, அதிலுள்ள நெல்லிக்கனிகளைப் பிளந்து கொட்டைகளை யெடுத்து, வஸ்திரத்திலிட்டு நன்றாகப் பிழிந்து, அந்தத் திப்பியை ஏழு பலம் நெய்யில் சேர்த்து, சிறுகச் சிறுக அக்கினியில் வறுத்தெடுத்து, முற்கூறிய க்வாதத்தை வடிக்கட்டி இதில் சேர்த்து, ஐம்பது பலம் கற்கண்டையும் அத்துடன் கூட்டி லேஹ்யபாகமாகச் செய்ய வேண்டும்; அப்பால் திப்பிலி இரண்டு பலம், மூங்கிலுப்பு நான்கு பலம், இலவங்கப்பட்டை, ஏலம், இலவங்கப்பத்திரி, நாககேஸரம் இவை ஒவ்வொன்றும் மூன்று சாணமெடை; இவற்றை நன்கு சூர்ணம் செய்து, மேற்கூறிய லேஹ்யத்தில் சேர்த்துக் கலந்து, ஆறு பலம் தேனையும் விட்டுக் கிளறவேண்டும். இவ்வாறு ச்யவனர் என்கிற இருஷியினால் கூறப்பட்ட இந்த லேஹ்யம் 'ச்யவனப்ராசம்' ம் என்று வழங்கப்படுகிறது. க்ஷயரோகத்தினால் பீடிக்கப்படுபவர், தமது ஜீர்ண சக்திக்கேற்றவாறு தகுந்த அளவுகளில் இந்த அவலேஹத்தை இரஸாயனமாக உட்கொள்ளலாம்; இதை பாலர், வயது முதிர்ந்தவர், உரக்ஷதரோகிகள். ஸ்த்ரீ ஸம்பர்கத்தினால் தாதுக்ஷீணமடைந்தவர், இருதயரோகமுள்ளவர், ஸ்வரம் க்ஷீணித்தவர் இவர்களும் உபயோகிக்க நற்குணமுண்டாகும்; காஸம், ச்வாஸம், நாவறட்சி, வாதரக்தம், உரோக்ரஹமென்னும் மார்ப்பிடிப்பு, வாதபித்த தோஷம், சுக்ல மூத்திரதோஷம் இவற்றையும் போக்கும். இதை உபயோகிப்பவனுக்கு புத்தியும் தீக்ஷணமாகும். ஞாபகசக்தி அதிகரிக்கும், புருஷனுக்கு வேண்டிய தாதுவும் புஷ்டியடையும், சரீர நிறத்திற்கு ஒரு வித தெளிவும் காந்தியும் உண்டாகும்; அஜீர்ணமென்பது அப்புருடனுக்குண்டாகாது. 10—21½.

கூஷ்மாண்ட லேஹ்யம்:— நீற்றுப்பூசுணிக்காய்களை யுடைத்து உட்புறத்து விதைகளை விலக்கிவிட்டு, நூறுபலம் கதுப்பை யெடுத்து, சிறு துண்டுகளாக நறுக்கி, அதில் இருமடங்கு ஜலம் சேர்த்து, அந்த ஜலம் பாதி சுண்டிப்போகு மளவும் காய்ச்சி, அப்பூசுணித் துண்டுகளை கனமான வஸ்திரத்திலிட்டுப் பிழிந்து, வெயிலில் சிறிது

உலர்த்தி, கத்திமுனையினால் அவற்றை நன்ருகக் கொத்தி, வாயகன்ற தாம்ர பாத்திரத்தில் சேர்த்து, அதில் எட்டு பலம் நெய் ஊற்றி சிறிது வறுக்கவேண்டும்; பிறகு முன் பிழிந்தெடுத்த பூசணிச்சாற்றையும் இதில் ஊற்றி, நூறு பலம் கற்கண்டையும் சேர்த்து, அனைத்தையும் ஒன்ருகப் பக்குவம் செய்யவும்; அவை நன்கு பக்குவமாய் வரும் ஸமயத்தில் திப்பிலி, சுக்கு, ஜீரகம் இவற்றை இரண்டிரண்டு பலமும், கொத்தமல்லி விதை, இலவங்கப்பத்திரி, ஏலம், மிளகு, இலவங்கப்பட்டை இவற்றில் ஒவ்வொன்றையும் அரைப்பலமும் கூட்டி, சூர்ணம் செய்து சேர்க்கவேண்டும்; பிறகு நான்கு பலம் தேன் சேர்த்து, நன்ருகக் கிளறிவிடவும். இது 'கூஷ்மாண்டாவலேஹம்' எனப்படும். அவரவரது ஜீர்ணசக்திக்கேற்றவாறு இந்த லேஹ்யத்தைத் தகுந்த அளவில் உட்கொள்ளவேண்டும். இரக்தபித்தம், க்ஷயம், ஜ்வரம், சரீர இளைப்பு, நாவறட்சி, தலைச்சுற்றல், வாந்தி, ச்வாஸகாஸம், க்ஷதகாஸம் இவை தீரும்; பாலருக்கும் விருத்தருக்குங்கூட இதைக் கொடுக்கலாம். அல்லாமலும் மார்புக்குண்டான தளர்ச்சியைப் போக்கி, வன்மையையு முண்டுபண்ணும்; வ்ருஷ்யம், ப்ருஹ்மணம், பல்யம் என்கிற குணங்களும் இவ்வௌஷதத்திற்குண்டு. 22—28½.

ஸூரண லேஹ்யம்:—கூஷ்மாண்ட லேஹ்யத்திற்குக் கூறிய முறைப்படியே காருங்கருணைக்கிழங்கையும் சமைத்து லேஹ்யமாகச் செய்யலாம்; இந்த லேஹ்யம் அர்சஸ், ஆமவாதம், அக்னிமாந்த்யம் இவற்றைப் போக்கும். 29½.

அகஸ்தியஹரீதகீ லேஹ்யம்:—சிறந்த கடுக்காய்கள் நூறு, வாற்கோதுமை ஓர் ஆடகம்[1], தசமூலம்[2] இருபது பலம், சித்திரமூலம், யானைத்திப்பிலி, நாயுருவி, கச்சோரம், காஞ்சொறி, சங்கங்குப்பி, கண்டுபாரங்கி, மோடி, சிற்ருமுட்டி, தாமரைக்கிழங்கு இவை தனித்தனியே இரண்டிரண்டுபலம், இவற்றை ஐந்து ஆடகங்கொண்ட ஜலத்தில் சேர்த்து, அதிலுள்ள யவதானியம் நன்கு சமையலானதாகத் தெரிந்தவுடனே கஷாயத்தை வடிக்கட்டி, கடுக்காய்களை மட்டும் எடுத்து விதைநீக்கி மீண்டும் இக்கஷாயத்தில் சேர்த்து, நெய்

1. ஆடகம்,—4-வது பக்கத்தில் விவரம் காண்க.
2. தசமூலம்:—105-ம் பக்கம் பார்க்க.

எட்டு பலமும், நல்லெண்ணெய்எட்டு பலமும் அதிலூற்றி, நூறு பலம் வெல்லமும் சேர்த்து பக்குவம் செய்து, லேஹ்யபாகத்தில் இறக்கி விடவும்; அப்பால் அதில் தேன் நாலு பலமும், திப்பிலியின் சூர்ணம் நாலு பலமும் சேர்த்து விடவும். இந்த லேஹ்யத்துடன் அதிலடங்கிய கடுக்காயையும் ஒவ்வொன்று எடுத்து, தினந்தோறும் புஜித்து வரலாம். இதனால் க்ஷயம், காஸம், ஜ்வரம், ச்வாஸம், விக்கல், அர்சஸ், அரோசகம், பீநஸம், கிரஹணீ இவை நீங்கும்; தேஹத்தளர்ச்சி, மயிர் நரைத்தல் இவைகளுமுண்டாகாவண்ணம் தேஹத்திற்கு வன்மையும், அழகிய நிறமும் இதையுபயோகிப்பதாலேற்படும்; இந்த லேஹ்யம் புருடருக்குச் சிறந்த இரஸாயனமாகும். பெரும்பாலும் ஸர்வரோகங்களையும் நிவ்ருத்தி செய்வதற்காக அகஸ்திய முனிவரால் இது செய்யப்பட்டதாம்: 31—37.

குடஜாவலேஹம்;—நூறு பலம் வெட்பால மரப்பட்டையை ஒரு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து நான்கில் ஒருபாகம் ஜலம் மிகுந்திருக்குமாறு காய்ச்சி வடிக்கட்டி, முப்பது பலம் வெல்லம் சேர்த்துப் பாகுபோல் வருமளவும் கிளறிக்கொண்டே மீண்டும் காய்ச்சவும்; அப்பொழுது இரஸாஞ்ஜனம்,[1] இலவம்பிசின், த்ரிகடு, த்ரிபலை, நறுவிலி, சித்திரமூலம், வட்டத்திருப்பி, பில்வம், வெட்பாலரிசி, வசம்பு, சேராங்கொட்டை, அதிவிடயம், வாய்விடங்கம், முள்ளங்கி இவற்றை ஒவ்வொரு பலமெடுத்து சூர்ணம் செய்து, மேற்கூறிய அவலேஹத்தில் சேர்த்து, அத்துடன் நான்குபலம் நெய்யையும் ஊற்றி பக்குவம் செய்து இறக்கிவிடவும்; அப்பால் சிறிது ஆறியவுடனே நான்கு பலம் தேன் சேர்த்துக் கலந்து விடவும்; இந்த லேஹ்யத்தை உட்கொள்வதால் ஸகலவித அர்சோரோகங்களும் சீக்கிரத்தில் நிவ்ருத்தியாகும்; அர்சஸ்ஸாலுண்டாகிற இதர ரோகங்களும், அதிஸாரம், அரோசகம், கிரஹணீ, பாண்டுரோகம், இரக்தபித்தம், காமாலை, அம்லபித்தம், சோதையென்னும் சோகை, சரீர இளைப்பு, சீதபேதி இவைகளும் தீரும். இதற்கு அனுபானமாக நெய், மோர், பால், தயிர் இவற்றையாவது, நெய் ஜலம் இவ்விரண்டையுமாவது உபயோகிக்கலாம். உட்கொண்ட ஔஷதம் நன்கு ஜீர்ணமானதும் சரீரம் நன்

1- இரஸாஜஞ்நம்:—116-ம் பக்கம் டிப்பணியைப் பார்க்க.

ருக ஏற்றுக்கொள்ளக்கூடிய உணவுகளை உசிதப்படி புஜித்துவர வேண்டும். 38—44½.

குடஜாவலேஹம், இரண்டாவது:—வெட்பால மரத்தின் நூறு பலங்கொண்ட பசுமையான பட்டையை ஒரு த்ரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; அக்கஷாயம் நான்கில் ஒரு பாகமாகக் காய்ந்ததும் வடிக்கட்டி, பிறகு தொட்டாற்சுணங்கி, காட்டாத்திப்பூ, பில்வப் பட்டை, வட்டத்திருப்பி, இலவம்பிசின், கோரைக்கிழங்கு, அதிவிடயம் இவற்றை ஒவ்வொரு பலமெடுத்து சூர்ணம் செய்து, அக்காஷயத்தில் சேர்த்து, மறுபடியும் கரண்டியில் குழம்பாகப்பற்றிக்கொள்ளும் வரையில் பக்குவம் செய்யவேண்டும். இந்த அவலேஹத்தை, ஜலத்துடனாவது, ஆட்டுப்பாலுடனாவது, பாலேட்டோடாவது உட்கொள்ள, பற்பல நிறமானதும் வேதனையுண்டு பண்ணுவதுமான கடுமையான அதிஸாரங்களும், ரக்தப்ரதரமென்னும் பெரும்பாடும், ஸகலவித அர்சோரோகக்களும், சீதபேதியும் தீரும். 45—48½.

---

## ஒன்பதாவது அத்தியாயம்.

---

### ஸ்நேஹ கல்பனை

ஸ்நேஹபாகத்திற்கு ஸாமான்ய விதி:—க்ருதமாவது² தைலமாவது பக்குவம் செய்யப்படவேண்டுமானால், அதில் சேர்க்கப்படும் கல்கத்திரவ்யங்களினும்³ க்ருதம் அல்லது தைலத்தை நான்கு மடங்கும், தைலம் அல்லது க்ருதத்தினும் ஜலத்தை நான்கு மடங்கும் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும்; இத்தைலத்தை அல்லது க்ருதத்தை ஒரு பலம் பரிமாணத்தில் பொதுவாக உட்கொள்ளலாம்; அல்லது

---

1. ஸ்நேஹம்—நெய், தைலம் முதலிய எண்ணெய்ப்பொருட்களின் பொதுப் பெயர்.

2. க்ருதம்:—நெய்.

3. கல்கம்:—க்ருதம், தைலம் முதலியவற்றைக் கஷாயாதிகளில் பக்குவம் செய்கையில், அவற்றின் குணத்தை அதிகப்படுத்துவதற்காகத் தைலாதிகளில் சூர்ணமாகவோ அல்லது ஈரமாகவே இடித்தோ சேர்க்கப்படும் வஸ்துக்களின் கூட்டு.

கஷாயத்திலிடவேண்டிய ஔஷதச்சரக்குகள் ஒரு பங்கானால், அதற்கு நாலு பங்கு ஜலம் சேர்த்து, நாலில் ஒரு பங்காகக்காய்ச்சி, அக்கஷாயத்தைக்கொண்டும் ஸ்நேஹங்களைப் பக்குவம் செய்யலாம். 1,2.

ஸ்நேஹபாகத்தில் விசேஷ விதிகள்:—கஷாயமிடக்கூடிய சரக்குகள், அவற்றின் தன்மைகளைப்பற்றி மிருது பதார்த்தங்கள், கடின பதார்த்தங்கள், அதிகடின பதார்த்தங்கள், மத்திம பதார்த்தங்கள் என்று நாலுவிதமாகப் பகுக்கப்பட்டுள. அவற்றுள் மிருதுவான பதார்த்தங்களிடவேண்டிய கஷாயத்தில் அப்பதார்த்தங்களினும் ஜலம் நாலுபங்கும், கடின பதார்த்தங்களுக்கு எட்டு பங்கு ஜலமும், அதிகடினபதார்த்தங்களுக்குப் பதினாறுபங்கு ஜலமும் சேர்க்கப்பட வேண்டும்; மிருதுவுமல்லாமல் கடினமுமாகாத மத்திமமான வஸ்துக்களுக்கும் எட்டு மடங்கு ஜலந்தான் சேர்க்கவேண்டும். கஷாயத்தில் சேர்க்க வேண்டிய வஸ்துக்கள் கால் பலம் முதல் ஒரு பலத்திற்கு மேற்படாத்தையாயிருந்தால், ஜலத்தை அவற்றிற்குப் பதினாறு மடங்காகச் சேர்க்க வேண்டும்; ஒரு பலத்திற்கு மேல் நாலு பலத்திற்கு மேற்படாமலிருந்தால் எட்டு பங்கு ஜலமும், ஒரு பிரஸ்த்தம் முதல் ஒரு காரீவரையில்[1], நாலுபங்கு ஜலமும் சேர்க்கவேண்டும். கேவலம் ஜலத்தைக்கொண்டோ, க்வாதங்களைக்கொண்டோ, ஸ்வரஸங்களைக்கொண்டோ ஸ்நேஹம் பக்குவம் செய்ய வேண்டுமென்று கூறப்படுமிடத்து, அவற்றில் கல்கத்தை முறையே ஸ்நேஹத்தினும் நாலிலொரு பங்கு, ஆறிலொரு பங்கு, எட்டிலொருபங்கு இவ்வாறாகச் சேர்க்கவேண்டும். எந்த ஸ்நேஹபாகத்தில் தயிர், பால், மாம்ஸரஸம், மோர் இவற்றில் ஏதேனும் சேர்க்கப்படுகிறதோ அதில் கல்கத்தை ஸ்நேஹத்தினும் எட்டில் ஒரு பங்காகச் சேர்க்கவும்; இவ்வாறு பால் முதலியவற்றாலேயே பக்குவம் பண்ணப்படும் ஸ்நேஹங்களில் கல்க பதார்த்தங்கள் நன்கு பக்

1, காரீ:—நாலாயிரத்துத் தொண்ணூற்றாறு பலம். [நாலு பலங்களுக்கு மேற்பட்டு ஒரு பிரஸ்த்தத்திற்கு அதிகப்படாத கஷாயத்திரவ்யங்களுக்கு எவ்வளவு ஜலம் சேர்த்து பக்குவம் செய்ய வேண்டுமென்பது கூறப்படாவிடினும், இதற்குக் கீழ் 4 மடங்கும், இதற்கு மேல் 8-மடங்கும் ஜலம் சேர்க்க வேண்டுமென்று குறிக்கப்பட்டிருப்பதை நோக்கி, இவற்றிற்கு மத்திமமாக 6-பங்கு ஜலம் சேர்க்கவேண்டுமென்பது கருத்தாம்.]

குவமாவதற்காக நாலு பங்கு ஜலமும் சேர்க்கப்படுவது அவசியம். எந்த ஸ்நேஹங்களை ஐந்துவிதங்களுக்குக் குறையாத திரவபதார்த்தங்கள் சேர்த்து பக்குவம் பண்ணவேண்டுமென்று கூறப்படுகிறதோ, அவற்றில் ஒவ்வொரு திரவபதார்த்தத்தையும் ஸ்நேஹத்திற்கு ஸமான அளவில் சேர்க்கவேண்டும்; திரவபதார்த்தங்கள் ஐந்துவிதங்களுக்குக் குறைவாக இருந்தால், அவற்றை ஸ்நேஹத்தினும் நாலு மடங்காகச் சேர்க்கலாம். ஜலம் குறிப்பிடப்படாமல் வேறு திரவபதார்த்தத்தால் ஒரு ஸ்நேஹம் பக்குவம் பண்ணப்படுமாறு கூறியிருந்தால் ஸ்நேஹம் நன்கு பக்குவமாவதற்காக அதில் நாலு மடங்கு ஜலத்தைச் சேர்ப்பதுடன், கல்கத்தையும் ஜலம் விட்டுப் பிசைந்து உபயோகிக்கவேண்டும். ஒரு ஸ்நேஹபாகத்திற்கு க்வாதம் மாத்திரம் இன்ன சரக்குகளால் பக்குவம் செய்யப்படவேண்டுமென்று கூறி, கல்கம் முதலியது கூறப்படாமலிருந்தால், அதில் க்வாதத்திற்கு உபயோகித்த வஸ்துக்களையே கல்கமாகவும் சேர்க்கவேண்டும். கல்கமே சேர்க்காமல் ஸ்நேஹபாகம் செய்வதானால், அந்த ஸ்நேஹத்தை ஸ்வரஸம் முதலிய ஏதேனும் திரவபதார்த்தத்தில் தனியாகப் பக்குவம் செய்யவேண்டும்; ஆனால் ஏதேனும் திரவபதார்த்தத்தால் மட்டும் பக்குவம் பண்ணப்படும் அவ்வித ஸ்நேஹபாகத்தில் ஏதாவது புஷ்பவகைகளையே கல்கமாக உபயோகிக்கவேண்டியிருந்தால், அப்பொழுது அந்த ஸ்நேஹத்தில் நாலுபங்கு ஜலமும் சேர்த்து பக்குவம் பண்ணவேண்டும்; அவ்வாறு ஸ்நேஹங்களில் புஷ்பகல்கம் சேர்க்கவேண்டுமானால், அக்கல்கத்தை ஸ்நேஹத்தினும் எட்டில் ஒரு பங்காகச் சேர்க்கவும். 3—11½.

**ஸ்நேஹம் பக்குவமானதின் அறிகுறிகள்:**—ஸ்நேஹத்திலிட்ட கல்கத்தில் சிறிதளவு எடுத்து விரல்களால் உருட்டினால் அக்கல்கம் திரிபோல் உருண்டுவரும்; அதை அக்னியிலிட்டால் சுடர் சுடரென்கிற சப்தமிராது; ஸ்நேஹங்கள் பக்குவமாய் விட்டதற்கு இவை பொதுக்குறிகளாம்; மேலும் அதில் சேர்க்கப்பட்டுள்ள ஸ்நேஹம், கல்கத்திரவ்யங்கள் இவற்றிற்கு இயற்கையான மணம், நிறம், சுவை இவைகளும் ஸ்நேஹம் நன்கு பக்குவமான ஸமயத்தில் வெளிப்படையாகத் தெரியவரும். ஆனால் தைலபாகத்தில் நன்கு பக்குவமாகிற ஸமயத்தில் நுரையுண்டாய் தைலத்திற்கு வாஸனை முதலியது தோன்றும்; க்ருதபாகத்தில் பக்குவமான ஸமயத்தில் நுரைகளுண்டாய்,

பிறகு அவை அடங்கி க்ருதம் தெளிவாகவும் வாஸனை முதலியதுடைய தாகவும் காணப்படும். 12—13½.

**மூன்றுவிதமான ஸ்நேஹபாகம்:**—ஸ்நேஹபாகம் மிருது, மத்திமம், கடினம் என மூன்று வகைப்படும். அவற்றுள் சிறிது கஷாய முதலியவற்றின் இரஸத்துடன் கூடிய கல்கமுடையதான ஸ்நேஹ பாகம் மிருதுபாகமென்றும், இரஸமேயில்லாமல் சிறிது மெதுவாயுள்ள கல்கத்துடன் கூடிய ஸ்நேஹபாகம் மத்திமபாகமென்றும், சிறிது உரப்பான கல்கமுள்ள ஸ்நேஹபாகம் கடினபாகமென்றும் கூறப்படும். 14—15½.

**உபயோகிக்கத்தகாத ஸ்நேஹபாகங்கள்:**—தக்த்தபாகமென்றும், ஆமபாகமென்றும் ஔஷதமாக உபயோகிக்கத்தகாத இரண்டு வித ஸ்நேஹபாகங்களுண்டு; கடினபாகத்திற்கு மேல் முறியுந்தன்மையடைந்தால் அது தக்த்தபாகம் என்றும், மிருது பாகத்திற்கும் குறைவான பாகம் ஆமபாகம் என்றும் கருதப்படும். இவற்றுள் தக்த்தபாகமடைந்த ஸ்நேஹம் தாபத்தையுண்டாக்குவதுடன், பெரும்பாலும் பயனற்றதாகவுமிருக்கும்; ஆமபாகமான ஸ்நேஹம் வீர்யமற்றதாகவும், குருகுணமுள்ளதாகவும், ஆகவே அக்னிமாந்த்யமுண்டுபண்ணக் கூடியதாகவுமிருக்கும். 16½.

**பாகபேதத்தினால் உபயோக பேதம்:**—முற்கூறிய மூன்றுவித ஸ்நேஹபாகங்களுள் மிருதுபாகமாகச் செய்த ஸ்நேஹம் நஸ்யகர்மத்திலும், மத்திமபாகமான ஸ்நேஹம் ஸகலவிதமான சிகித்ஸைகளிலும், கடினபாகமான ஸ்நேஹம் அப்யங்கத்திலு முபயோகமாகும்; ரோகம் முதலியவற்றின் நிலைமைக்கேற்றவாறு இவற்றில் எது எவருக்கு ஏற்றதென்று வைத்தியர் நிச்சயித்துக்கொள்ள வேண்டும். 17½.

**ஸ்நேஹங்கள் பழகவேண்டும்.**—க்ருதம், தைலம், லேஹ்யம் முதலானவற்றை ஒரு தினத்திலேயே பக்குவம் செய்து உபயோகித்து விடக்கூடாது; இவற்றைச் சில நாள் பழகவைத்து உபயோகித்தால் விசேஷ குணங்களைத் தரும். 18½.

## க்ருதங்கள்:

**பிப்பல்யாதி க்ருதம்:**—திப்பிலி, மோடி, சவியம், சித்திரமூலம், சுக்கு, இந்துப்பு இவற்றில் ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம் சேர்த்து

ஒரு பிரஸ்த்தம் நெய்யை அதற்கு நாலு பங்கு பாலில் கலந்து பக்குவம் செய்யவும்; இந்த க்ருதம் ப்லீஹரோகங்கள், விஷமஜ்வரங்கள், அக்னி மாந்த்யம், அரோசகம் இவற்றைப் போக்கும். 19—20½.

சாங்கேரீ க்ருதம்:—திப்பிலி, மோடி, சித்திரமூலம், யானைத்திப்பிலி, நெரிஞ்சில், சுக்கு, கொத்தமல்லி விதை, வட்டத்திருப்பி, பில்வ வேர்ப்பட்டை, குராசாணியோமம் இவற்றை ஒவ்வொரு பலம் இடித்துச் சேர்த்து, அறுபத்திநாலுபலம் நெய் ஊற்றி, நெய்க்கு நாலுமடங்கு புளியாரையின் ஸ்வரஸத்தையும், நாலுமடங்கு தயிரையும் சேர்த்து, சிறுகச் சிறுக க்ருதத்தைப் பக்குவம் செய்யவேண்டும்; இது 'சாங்கேரீ க்ருதம்' எனப்படுகிறது. இந்த க்ருதம் கபவாதங்கள், க்ரஹணீரோகம், அர்சஸ், வயிற்றுப் பொருமல், குதம் நெகிழுதல், மூத்ர க்ருச்சிரம், சீதபேதி இவற்றைப் போக்குவதில் வெகு சிறந்த ஔஷதம். 21—24½.

மஸூராதி க்ருதம்:—நூறு பலம் சிறு கடலையை ஒரு த்ரோண பரிமாணங்கொண்ட ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒருபங்கு கஷாயமாகக் காய்ச்சி, பில்வவேர் எட்டு பலமும், நெய் பதினாறு பலமும் சேர்த்து பக்குவம் செய்யவும்; இது ஸகலவிதமான அதிஸாரங்கள், க்ரஹணீ, சீதபேதி இவற்றைப் போக்கும். 25—26¼.

காமதேவ க்ருதம்:—அமுக்கிராங்கிழங்கு நூறு பலம், நெரிஞ்சில் ஐம்பது பலம், சிற்றாமுட்டி, சீந்திற்கொடி, சிறுமல்லி, நிலப்பனங்கிழங்கு, தண்ணீர்விட்டாங் கிழங்கு, சாறணை, அரசம்பட்டை, சுக்கு, குமிழம்பழம், தாமரைக்கிழங்கு, உளுந்து இவை ஒவ்வொன்றும் பத்து பலம், இவற்றை நான்கு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்காக வற்றக் காய்ச்சி, அதில் ஜீவநீயகணம்[1], கோஷ்டம், அல்லிக்கிழங்கு, செஞ்சந்தனம், இலவங்கப்பத்திரி, திப்பிலி, திராக்ஷை, காஞ்சொறிக்காய், கருநெய்தல், சிறுநாகப்பூ, நாட்டு நன்னாரி, சீமை நன்னாரி, சிற்றாமுட்டி, பேராமுட்டி, இவற்றைத் தனித்தனியே கால் பலம் இடித்து, இரண்டு பலம் சர்க்கரையும் கூட்டி, நாமக் கரும்பின் சாற்றில் ஓர் ஆடகமும், நெய் ஓர் ஆடகமும் சேர்த்து, சிறுகத் தீயிட்டு பக்குவம் செய்யவேண்டும். இந்த க்ருதம் இரத்தபித்தம், உரக்ஷதம், ஹலீ

1. ஜீவநீயகணம்:—134-வது பக்கம் பார்க்க.

மகம், பாண்டு, ஸ்வரபேதம், வாதரக்தம், மூத்திர க்ருச்சிரம், பார்ச்வ சூலை, காமாலை, சுக்ரம் க்ஷீணித்தல், மாரெரிவு, சரீரமெலிவு, ஓஜஸ் க்ஷயித்தல் இவற்றைப் போக்கும்; கருத்தரிக்காத ஸ்திரீகளுக்கு கருப்பம் தரிக்கும் சக்தியையும், புருடருக்கு சுக்லத்தையும் உண்டு பண்ணும்; இருதயத்துக்கும் மற்ற அங்கங்களுக்கும் பலத்தை விருத்திபண்ணும் சிறந்த இரஸாயனம்; "காமதேவக்ருதம்" என்று இதன் பெயர். 27—35.

த்ரிபலாதி க்ருதம்:—த்ரிபலை, மஞ்சள், மரமஞ்சள், தக்கோலம், நாட்டு நன்னாரி, சீமை நன்னாரி, ஞாழல், சிறு மல்லிகை, பெருமல்லிகை, தேவதாரு, ஏலவாலுகமென்கிற கந்தத்திரவ்யம், கிரந்திதகரம், தும்மட்டி, கோஷ்டம், மாதளை, நாககேஸரம், கருநெய்தல், ஏலம், மஞ்ஜிஷ்டி, வாய்விடங்கம், கோஷ்டம், அல்லிக் கிழங்கு, இலவங்கம், சந்தனம், தாளிச்சபத்திரி, கண்டங்கத்திரி இவற்றில் ஒவ்வொன்றிலும் கால் பலம் இடித்துச் சேர்த்து, இவையனைத்துக்கும் நாலு மடங்கு ஜலம் சேர்த்து, கஷாயமாகப் பக்குவம் செய்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யை அதில் சேர்த்துக் காய்ச்சவேண்டும். இந்த க்ருதத்தை அபஸ்மாரம், ஜ்வரம், க்ஷயம், உன்மாதம், வாதரக்தம், காஸம், அக்னி மாந்த்யம், பிரதிச்யாயம், இடுப்புவலி, த்ருதீயகஜ்வரம், சாதுர்த்திக ஜ்வரம், மூத்திர க்ருச்சிரம், விஸர்ப்பம், சொறி, சிரங்குகள், பாண்டுரோகம், ஸ்த்தாவர ஜங்கமவிஷங்களாலுண்டாகும் தீங்குகள், பிரமேஹ ரோகங்கள் இவற்றில் உபயோகிக்கலாம்; ஸ்திரீகளுக்கு மலட்டுத் தன்மையைப் போக்கவும், பூதங்கள், யக்ஷர்கள், இராக்ஷஸர் இவற்றாலுண்டாகும் சங்கைகளை அகற்றவும் ஏற்றதாகும். 36—41.

அம்ருதாதி க்ருதம்:—சீந்திற்கொடியைக் கஷாயமிட்டு, அக்கஷாயத்தில் அக்கொடியையே சூர்ணம் செய்து கல்கமாகச் சேர்த்து, பாலூற்றி, நெய்யையும் சேர்த்து பக்குவம் செய்யலாம். இந்த க்ருதம் வாதரக்தத்தை சீக்கிரத்தில் போக்கும்; மிகவும் முதிர்ந்துபோன குஷ்டத்தையும் சமனம் செய்யும். 42.

மஹாதிக்தக க்ருதம்:—ஏழிலம்பாலை, அதிவிடயம், கொன்றை, கடுகரோகிணீ, வட்டத்திருப்பி, கோரைக்கிழங்கு, வெட்டிவேர், த்ரிபலை, பர்ப்பாடகம், பேய்ப்புடல், வேம்பு, மஞ்ஜிஷ்டி, திப்பிலி, அல்

லிக்கிழங்கு, கிச்சிலிக்கிழங்கு, சந்தனம், காஞ்சொறி, தும்மட்டி, பேய்த் தும்மட்டி, மஞ்சள், மரமஞ்சள், சீந்தில், நாட்டு நன்னாரி, சீமை நன்னாரி, பெருங்குரும்பை, ஆடாதோடை, தண்ணீர்விட்டான்கிழங்கு, கழற்சிக்காய், வாலுளுவை, அதிமதுரம், நிலவேம்பு இவை ஒவ்வொன்றும் கால்பலமெடை, நெய் இவையனைத்தினும் நாலு பங்கு, நெல்லிக் கனியின் ஸ்வரஸம் நெய்யைக்காட்டிலும் இரண்டு மடங்கு; ஜலம் எட்டு பங்கு ; இவ்விதமாக மேற்படி வஸ்துக்களைச் சேர்த்து க்ருதம் பக்குவம் செய்யவேண்டும். இதை வாதரக்தம், குஷ்டம், இரத்த பித்தம், இரத்தார்சஸ், பாண்டுரோகம், இருதயரோகம், குன்மம், விஸர்ப்பம், பெரும்பாடு, கண்டமாலை, க்ஷுத்ரரோகங்கள், ஜ்வரங்கள் இப்பிணிகளிலு பயோகிக்கலாம். இதற்கு 'மஹாதிக்தக க்ருதம்' எனப் பெயர். 43—48.

காஸீஸாதி க்ருதம்:—அன்னபேதி, மஞ்சள், மரமஞ்சள், கோரைக்கிழங்கு, தாளகம், மனச்சிலை, கம்பில்லகம், கந்தகம், வாய் விடங்கம், குங்கிலியம், தேன்மெழுகு, வெண்கடுகு, இரஸாஞ்ஜனம், ஸிந்தூரம், கருங்காலி, வேப்பிலை, புங்கையிலை, நன்னாரி, வசம்பு, மஞ்ஜிஷ்டி, அதிமதுரம், ஜடாமாம்ஸீ, காட்டுவாகை, வெள்ளிலோத்தி, அல்லிக்கிழங்கு, கடுக்காய், தகரவிதை இவற்றில் ஒவ்வொன்றிலும் கால் பலம் எடுத்து சூர்ணம் செய்து, அச்சூர்ணத்தை ஒரு தாமிர பாத்திரத்திலிட்டு, முப்பது பலம் நெய் சேர்த்து, வெயிலில் ஏழு நாள் வைத்திருக்கவும். இந்த க்ருதத்தை குஷ்டம், தத்ரு என்னும் படை, சொறி சிரங்குகள், சூகதோஷங்கள், விஸர்ப்பம், வாதரக்தத்தினுலுண்டாகும் விஸ்போடமென்னும் கொப்புளம், மண்டை வெடிப்பு, உபதம்சம், நாடீவ்ரணம், கெட்டுப்போன இதர விரணங்கள், ஸீக்கம், பகந்தரம், லூதா என்னும் சிலந்தியினுலுண்டாகும் விரண விசேஷங்கள், இவற்றைப் போக்குவதற்கு உபயோகித்துக்கொள்ளலாம்; இது விரணங்களிலுண்டான தோஷங்களையகற்றி அவற்றை சீக்கிரம் ஆறவும் செய்யும்; பிறகு சர்மத்திற்கு நல்ல நிறத்தையும் உண்டுபண்ணும். 49—55.

---

1. இங்கு கூறப்பட்டுள்ள தாளகம் முதலியதை சுத்தி செய்து சேர்க்கவேண்டும் தாளகம், மனச்சிலை முதலிய தாதுப்பொருட்களின் சுத்திமுறை முதலியவைகளைப்பற்றிய விவரங்களை இதே கண்டத்தில் 11-வது அத்தியாயத்திற் காண்க.

**ஜாத்யாதி க்ருதம்:**—ஜாதிக்காய், வேப்பு, பேய்ப்புடல், மஞ்சள், மரமஞ்சள், கடுகரோகிணி, மஞ்ஜிஷ்டி, அதிமதுரம், தேன்மெழுகு, புங்கை, வெட்டி வேர், நன்னாரி, மயில்துத்தம் இவற்றைப் பொடித்து நெய்யிற் கலக்கி, அக்னியிலேற்றி பக்குவம் செய்யவும். மர்ம ஸ்தா னங்களை ஆச்ரயித்துண்டாகுபவையும், துர்நீரைப் பெருக்குபவை யும், வெகு ஆழமாக வியாபித்திருப்பவையும், மிக வலியுண்டுபண்ணுப வையுமான விரணங்கள் யாவும் இந்த க்ருதத்தைப் பூசுவதால் ஆறி விடும். 56—57½.

**பிந்து க்ருதம்:**—சித்திரமூலம், சங்கங்குப்பி, கடுக்காய், கம்பில் லம், கருஞ்சிவதை, வெண்சிவதை, கடற்பாலை, கொன்றை, வாளம், பீர்க்கு, தேவதாளீ, அவுரி, வெண்காக்கணம், பொன்னூலங்காய், மோடி, வாய்விடங்கம், கடுகரோகுணீ, பிரம்மதண்டு இவற்றில் கால் கால் பலம் பொடித்தெடுத்து, எருக்கம்பால் இரண்டு பலம், கள்ளிப் பால் ஆறு பலம், நெய் பதினாறு பலம் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த நெய்யை ஒவ்வொரு பலமாக உபயோகிக்க குன்மம், குஷ்டம், சூலம், உதாவர்த்தம், வீக்கம், வயிற்றுப்பொருமல், பகந்தரம், எட்டு வித உதரரோகங்கள் இவை நிவ்ருத்தியாகும்; பசும்பால், ஒட்டைப் பால், கொள்ளுக்கஷாயம், உஷ்ணஜலம் இவற்றுள் ஏதேனுமொன் றை மேற்படி க்ருதத்திற்கு அனுபானமாக உபயோகிக்கலாம்; இதில் ஒவ்வொரு பிந்து உட்கொள்கையிலும் ஒவ்வொரு முறை விரேசன மாகும். பிந்து க்ருதமெனப்படும் இவ்வௌஷதத்தை நாபியில் தட விளுலும் பேதியாகும், 58—63½.

**த்ரிபலாக்ருதம், இரண்டாவது:**—த்ரிபலையின் கஷாயம், ஆடா தோடையின் ஸ்வரஸம், கரிசிலாங்கண்ணிச்சாறு, ஆட்டுப்பால், நெய் இவை ஒவ்வோரு பிரஸ்த்தம் சேர்த்து, அதில் த்ரிபலை, திப்பிலி, திராக்ஷை, சந்தனம், இந்துப்பு, சிற்றாமுட்டி, காகோலீ, க்ஷீரகா கோலீ, மேதா, மஹாமேதா, மிளகு, சுக்கு, சர்க்கரை, வெண்தா மரை, செந்தாமரை, சாறடை, மஞ்சள், மரமஞ்சள், அதிமதுரம் ஒவ் வொன்றையும் கால் பலம் எடை இடித்து கல்கமாகச் சேர்த்து பக்கு வம் செய்யவும். இதை யுபயோகித்தால் இரவில் கண்தெரியாமை, நகுலாந்த்யம், சொறி சிரங்கு, பில்லம், கண்ணில் நீர்வடிதல், படலம்,

திமிரம், அஜகம்[1] முதலான கொடிய நேத்திர ரோகங்களும் நீங்கும்; இந்த க்ருதம் பானம் செய்வதற்கும், நஸ்யமிடுவதற்கும் மிகவும் உபயோகமானது. 64—69.

கௌராதி க்ருதம்:—மஞ்சள், மரமஞ்சள், சிற்றுமல்லி, மருளங்கிழங்கு, நன்னாரி, வெண்சந்தனம், செஞ்சந்தனம், சீந்தில், அதிமதுரம், அல்லிக்கிழங்கு, நாககேஸரம், தாமரை, நெய்தல், வெட்டிவேர், மேதா, த்ரிபலை, பஞ்சவல்கலங்கள்[2] இவற்றைச் சூர்ணம் செய்து, ஒவ்வொன்றிலும் கால்பலவெடையெடுத்து, ஒரு பிரஸ்த்தம் நெய்யைப் பக்குவம் செய்யவும். இதை யுபயோகிப்பதால் விஸர்ப்பரோகம், லூதாவென்னும் சிலந்தி விரணம், கொப்புளங்கள், விஷப்பற்றுகள், குளவி கொட்டுவதாலுண்டாகும் விரணங்கள் முதலியவை தீரும். இது 'கௌராதி க்ருதம்' எனப்படும். 70—72.

பலாதி க்ருதம்:—சிற்றுமுட்டி, அதிமதுரம், சிற்றரத்தை, தசமூலம், த்ரிபலை இவற்றில் இரண்டிரண்டு பலமெடுத்து, ஒரு த்ரோண ஜலத்தில் சேர்த்து, மயிலின் இறகுகள், பித்தம், குடல், கல்லீரல், கால்கள், மூக்கு இவற்றை விலக்கி மற்ற உடல்களையும் அதில் சேர்த்து, நாலில் ஒரு பங்காகக் காய்ச்சி, ஸமபாகம் பால் சேர்த்து, ஒரு படி நெய்யையும், ஜீவநீயகண வஸ்துக்களைத் தனித்தனியே கால் பலம் கல்கமாகவும் சேர்த்து பக்குவம் செய்யவும். இந்த க்ருதம் தலைநோய், மந்யாஸ்தம்பம், இடுப்புவலி, அர்திதம், காது நாசி நேத்திரம் நாக்கு தொண்டை இவற்றிலுண்டாகும் நோய்கள் முதலானவைகளைப் போக்கும்; இந்த க்ருதம் பருகுவதற்கும், நஸ்யமிடுவதற்கும் அப்யங்கத்திற்கும், காதிலிடுவதற்கும் உபயோகிக்கக்கூடியது. ஹேமந்தருது, சிசிரருது, வஸந்தருது இவ்வித சீதகாலங்களிலும் உபயோகிக்கத்தகுந்தது. 73—76½.

பல்க்ருதம்:—த்ரிபலை, அதிமதுரம், கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், கடுகரோகிணீ, வாய்விடங்கம், திப்பிலி, கோரைக்கிழங்கு, தும்

---

1. நகுலாந்த்யம் முதல் அஜகம் வரையிலுமுள்ள ரோகங்களின் விவரங்களைப்பற்றி 76-ம் பக்கம் முதல் 81-ம் பக்கம் வரையிலுமுள்ள நேத்திரரோக வகைகளைப் பார்க்க.

2. ஆல், அத்தி, அரசு, பூவரசு, கல்லால் இவற்றின் பட்டைகள் 'பஞ்சவல்கலம்' எனப்படும்.

மட்டி, சிறுதேக்கு, வசம்பு, மேதா, மஹாமேதா, காகோலீ, க்ஷீரகாகோலீ, நாட்டு நன்னாரி, சீமை நன்னாரி, ஞாழல், சதகுப்பை, காயம், சிற்றரத்தை, வெண்சந்தனம், இரத்தசந்தனம், இலவங்கம், மூங்கிலுப்பு, தாமரை, சர்க்கரை, ஓமம், வாளம், கண்டங்கத்திரி வேர் இவற்றைப் பொடித்து கல்கமாகச் செய்து, உயிருடனுள்ள கன்றுக்குட்டியுடன் கூடியதும் ஒரே நிறமானதுமான பசுவின் பாலினின்றுமெடுத்த நெய்யில் ஒரு பிரஸ்த்த பரிமாணமும், அதற்கு நாலு மடங்கு பாலும் ஒரு மட்பாத்திரத்திலாவது தாமிர பாத்திலாவது சேர்த்து, நல்ல திதியில், புஷ்யநக்ஷத்திரத்துடன் கூடிய சுபதினத்தில், காட்டு, வறட்டிகளைக்கொண்டு தீயிட்டெரிக்கவேண்டும். அப்பால் நல்ல தினத்தில் இதை உட்கொண்டால் புருஷருக்கும் ஸ்த்ரீகளுக்கும் தாதுபுஷ்டியுண்டாகும் ; மலட்டுத்தனமும் நிவ்ருத்தியாகும் ; மதியும் மேன்மையடையும் ; அடிக்கடி அற்பாயுளான குழந்தைகளைப் பெறுபவள் இவ்வௌஷதத்தை யுட்கொண்டால் சதாயுஸ்ஸாக ஜீவிக்கக் கூடியவனும் மிக மேதாவியுமான புத்திரனைப் பெறுவள் ; பரத்வாஜ முனிவரால் மொழியப்பட்ட இந்த க்ருதமானது 'பலருக்தம்' என்று வழங்கப்படும். 77 - 84½.

வ்ருஷாதி க்ருதம்:—ஆடாதோடை, வேம்பு, சீந்தில், கண்டங்கத்திரி, பேய்ப்புடல் இவற்றைக் கஷாயமிட்டு வடிக்கட்டி, நெய் சேர்த்து, மேற்கூறிய கஷாய சரக்குகளையே கல்கமாகவும் சேர்த்து பக்குவம் செய்து உட்கொள்ள விஷமஜ்வரங்கள், பாண்டுரோகம், குஷ்டம், விஸர்ப்பம், வயிற்றுக்கிருமிகள், அர்சோரோகம் இவை ஸ்வஸ்த்தமாகும். 85,86.

**பல க்ருதம், இரண்டாவது:**—மருதோன்றி, செங்குறிஞ்சி, த்ரிபலை, சீந்திற்கொடி, சாறடை, பலாசு, மஞ்சள், மரமஞ்சள், சிற்றரத்தை, மேதா, தண்ணீர்விட்டான் இவற்றைக் கல்கமாக இடித்துச் சேர்த்து, ஒரு பிரஸ்தம் நெய்யை நாலு மணங்கு பாலில் சேர்த்து பக்குவம் செய்து உபயோகிக்கலாம். யோநிசூலை, பரிப்லுதம், உபப்லுதம், வாமநம், அந்தர்முகம், பித்தயோநி, விப்லுதம், ஷண்டிதம்[1]

1. பரிப்லுதம் முதலிய யோனி விகாரங்களைப் பற்றி 83-வது பக்கம் பார்க்க.

ஆகிய கோளாறடைந்த யோனிகள் யற்கை நிலைமையடைந்து மீண்டும் ஸ்த்ரீ கர்ப்பந்தரிக்கத் தகுந்தவளாவாள். இந்த இரண்டாவது 'பலக்ருதமானது' யோனிதோஷங்களைப் போக்குவதற்காகவே ஏற்பட்டது. 87—90.

## தைலங்கள்.

லாக்ஷா தைலம்:—ஓர் ஆடகப்பிரமாணம் செவ்வரக்கை, நாலு பங்கு ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்கு மிகும்படிக் காய்ச்சி க்வாதம் செய்யவும்; அதில் ஒரு பிரஸ்த்தப்பிரமாணம் நல்லெண்ணெயும், ஓர் ஆடகம் பசுந்தயிரின் தெளிவு நீரும் சேர்த்து, சதகுப்பை, அமுக்கிரங்கிழங்கு, மஞ்சள், தேவதாரு, கடுகரோகிணீ, அரேணுகம், மருளங்கிழங்கு, கோஷ்டம், அதிமதுரம், சந்தனம், கோரைக்கிழங்கு, சிற்றரத்தை இவற்றில் ஒவ்வொன்றிலும் கால் பலமெடுத்து சூர்ணம் செய்து மேற்படி தைலத்தில் சேர்த்து, சிறுகச் சிறுக தீயிட்டெரிக்கவும். இந்த தைலத்தை வடிக்கட்டி அப்யங்கம் செய்து வந்தால் ஸகல விஷமஜ்வரங்களும், காஸம், ச்வாஸம், பிரதிச்யாயம், கழுத்துப்பிடிப்பு, இடுப்புப் பிடிப்பு, வாதரோகங்கள், பித்தரோகங்கள், அபஸ்மாரரோகம், உன்மாதம், யக்ஷராக்ஷஸர்களால் நேரிடும் காற்று சங்கையென்னும் வியாதிகள், சொறி சிரங்குகள், வயிற்றுநோய், அங்கங்களில் பல காரணங்களாலுண்டாகும் துர்நாற்றம், அவயவங்களில் திடீரென்றுண்டாகும் துடிப்புகள் முதலியவையும் நிவ்ருத்தியாகும்; கர்ப்பிணிகள் இத்தைலத்தைக்கொண்டு அப்யங்கம் செய்துகொண்டால் அவர்களுடைய கர்ப்பம் நன்கு புஷ்டியடையும். 91—96.

அங்காரக தைலம்:—பெருங்குரும்பை, அரக்கு, மஞ்சள், மரமஞ்சள், மஞ்ஜிஷ்டி, தும்மட்டி, கண்டங்கத்திரி, இந்துப்பு, கோஷ்டம், சிற்றரத்தை, ஜடாமாம்ஸி, தண்ணீர்விட்டான் இவற்றில் ஒவ்வொன்றிலும் ஒரு பலப்பிரமாணம் சேர்த்து, இவற்றை ஓர் ஆடகப்பிரமாணம் காடியில் சேர்த்து, ஒரு பிரஸ்த்தம் தைலத்தைக் காய்ச்சியெடுக்கவும்; இதற்கு 'அங்காரகதைலம்' எனப் பெயர்; இத்தைலம் ஸகலவித ஜ்வரங்களையும் போக்கும். 97,98.

நாராயண தைலம்:—அமுக்கிரங்கிழங்கு, சிற்ருமுட்டி, பில்வவேர், பாதிரி, சிறுவழுதுணை, கண்டங்கத்திரி, நெரிஞ்சில், போ

முட்டி, வேம்பு, பெருவாகை, சாறடை, முதியாற் கூந்தல், அகில் இவற்றைத் தனித்தனியே பத்து பலமெடுத்து, நாலு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்காகக் காய்ச்சி வடிகட்டி, அதில் ஓர் ஆடகப்பிரமாணம் நல்லெண்ணெயும், தண்ணீர்விட்டான் கிழங்கின் சாறு ஓர் ஆடகமும், தைலத்திற்கு நாலுபங்கு பாலும் சேர்த்து, அப்பால் கோஷ்டம், ஏலம், சந்தனம், பெருங்குரும்பை, வசம்பு, ஜடாமாம்ஸி, இந்துப்பு, அமுக்கிரங்கிழங்கு, சிற்றரத்தை, சிற்றுமுட்டி, சதகுப்பை, தேவதாரு, சிறுமல்லிகை, பெருமல்லிகை, கிரந்திதகரம், இவற்றில் இரண்டிரண்டு பலம் பொடித்து கல்கமாகச் சேர்த்து, தைலத்தைப் பக்குவம் செய்யவும். அத்தைலத்தை நஸ்யமிடுவதற்கும், அப்யங்கத்திற்கும், பானம் பண்ணுவதற்கும், வஸ்தி செய்வதற்கும் உபயோகிக்கலாம். இதனால் பார்ச்வவாயு, ஹநுஸ்தம்பம், மந்யாஸ்தம்பம், களக்ரஹம், பொட்டைத்தலை, செவிட்டுத்தனம், கால் நடக்கமுடியாமற் போய்விடுதல், கடிக்ரஹம், சரீரம் மெலிவுறுதல், இந்த்ரியங்கள் மந்தமாய் விடுதல், இரத்தக்ஷயம், சுக்ரக்ஷயம், க்ஷயரோகம், ஜ்வரம், அந்த்ரவ்ருத்தி, அண்டரோகம், தந்தரோகங்கள், சிரோக்ரஹம், பார்ச்வசூலை, மொண்டியாய்விடுதல், புத்தி மந்தப்படுதல், க்ருத்ரஸி இவை முதலிய அனேகவித வாதரோகங்களும் சாந்தமாகும்; இதனுடைய பிரபாவத்தினால் மலட்டுத்தன்மையும் நீங்கி ஸ்த்ரீ குழந்தையைப்பெறுவள். இந்தத் தைலத்தை யுபயோகித்துவந்தால் மனிதர் மட்டுமேயல்ல, யானை, குதிரை முதலிய மிருகஜாதிகளும் மேற்கூறிய பிணிகளிலிருந்து விடுபட்டு ஸௌக்கியமடையும். துஷ்ட அஸுரரை நாராயணன் நாசமாக்கியதுபோல், வாதரோகங்களை அடியோடு அகற்றுவதற்கு இத்தைலம் உத்தமௌஷதமாகும். 99—108½.

**வாருணீ தைலம்:**—அருகம் புற்களின் வடபுறமாயோடும் வேர்களைக் களைந்து, அதில் மூன்று பலமெடுத்து இடித்து, பன்னிரண்டு பலம் தைலத்தை அதில் சேர்த்து ஒரு க்ஷணநேரம் காய்ச்சவும். பன்னிரண்டு உளுந்தெடை தைலத்தைச் சேர்த்துக்கொண்டு புஜித்துவர கைநடுக்கம், தலைநடுக்கம், மந்யாவென்னும் கழுத்திலுள்ள நாடியின் தளர்ச்சியாலுண்டாகும் கழுத்தின் நடுக்கம் இவையனைத்தும் தீரும். 109—110½.

பலா தைலம்:—சிற்றுமுட்டி வேர்க்கஷாயம், தசமூல க்வாதம், கொள்ளுக்கஷாயம், யவதானிய க்வாதம், இலந்தங்கொட்டையின் க்வாதம், பால் இவற்றில் ஒவ்வொன்றையும் எவ்வெட்டு பாகமும், தைலம் ஒரு பாகமும் சேர்த்து, ஜீவநீயகணம், தண்ணீர்விட்டான், தேவதாரு, மஞ்ஜிஷ்டி, கோஷ்டம், கல்மரம், கிராந்திதகரம், அகில், இந்துப்பு, வசம்பு, சாரடை, ஜடாமாம்ஸி, நாட்டு நன்னாரி, சீமை நன்னாரி, இலவங்கப்பத்திரி, சதகுப்பி, அமுக்கிறுங்கிழங்கு, ஏலம் இவற்றையெல்லாம் இடித்து கல்கமா யுபயோகித்து, தைலத்தைப் பக்குவம் செய்யவும். கருத்தரிக்காத ஸ்த்ரீகளுக்கும், க்ஷயம் க்ஷீணித்த புருடருக்கும், வியாயாமமென்னும் அதிகமான தேஹப் பயிற்சியினால் மெலிந்துபோன சரீரமுடையவருக்கும், பிரஸவித்த ஸ்திரீகளுக்கும் இத்தைலம் மிக உபயோகமானது ; ஸுகிகளுக்கும் அரசருக்கும் இத்தைலம் ஏற்றது ; ஸகல வாத ரோகங்களையும் போக்கும் ; இதற்கு 'பலாதைலம்' எனப் பெயர். 111—116.

ப்ரஸாரிணீ தைலம்:—நூறு பலம் முதியார்கூந்தலை ஒரு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்காகக் காய்ச்சி, அதற்கு ஸமமாகத் தயிரும், தைலமும், காடியும், தைலத்தினும் நாலு பங்கு பாலும் சேர்த்து, அதிமதுரம், மோடி, சித்திரமூலம், இந்துப்பு, வசம்பு, முதியார்கூந்தல், தேவதாரு, சிற்றரத்தை, யானைத்திப்பிலி, சேராங்கொட்டை, சதகுப்பி, ஜடாமாம்ஸி இந்த கல்கதிரவ்யங்களையெல்லாம் இடித்துத் தைலத்தினும் எட்டிலொரு பங்காகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இத்தைலம் வாதரோகங்கள், கபத்தினாலுண்டாகும் ரோகங்கள், கூன்விழுதல், முடவனாகுதல், க்ரத்ரஸீ, அர்திதம், ஹநுஸ்தம்பம், இடுப்புவலி, கழுத்துப்பிடிப்பு, மற்றுமுள்ள விஷமமான வாத ரோகங்கள் இவை யனைத்தையும் சீக்கிரத்தில் போக்கும். 117—121½.

மாஷ தைலம்:—உளுந்து, யவதானியம், ஆழிவிதை, கண்டங்கத்திரி, பூனைக்காலி, மருதோன்றி, நெரிஞ்சில், பெருவாகை இவ்வொவ்வொன்றையும் எவ்வேழு பலமெடுத்து, நாலுமடங்கு ஜலம் சேர்த்து, நாலில் ஒரு பங்காகக் காய்ச்சி யெடுக்கவும். பருத்திக்கொட்டை, இலந்தங்கொட்டை, சணல்விதை, கொள் ஒவ்வொன்றை

யும் பதினான்கு பலமாக நாலு பங்கு ஜலத்திலிட்டு, நாலிலொரு பங்கு மிகும்படி காய்ச்சி யெடுத்துக் கொள்ளவும்; ஒரு பிரஸ்த்தம் ஆட்டிறைச்சியை அறுபத்துநாலு பலம் ஜலத்தில் போட்டு, அதையும் நாலிலொரு பாகம் குறையுமாறு பக்குவம் செய்தெடுக்கவும்; இந்த க்வாதங்களை யெல்லாம் ஒன்றாகக் கூட்டி, ஒரு பிரஸ்த்தம் நல்லெண்ணெய் சேர்த்து, சிந்தில், கோஷ்டம், சுக்கு, சிற்றரத்தை, சாறணை, ஆமணக்கு, திப்பிலி, சதகுப்பை, சிற்றாமுட்டி, முதியார் கூந்தல், ஜடாமாம்ஸி, கடுகரோகிணீ இவ்வொவ்வொன்றிலும் அரைப்பலமெடுத்து சூர்ணம் செய்து, மேற்படி தைலத்திலிட்டு சிறுகச்சிறுகத் தீயிட்டெரித்துப் பக்குவம் செய்யவும். இத் தைலம், க்ரீவாஸ்தம்பம், அபபாஹுகம் பார்ச்வவார்யுவு, ஆக்ஷேபகம், ஊருஸ்தம்பம், அபதாநகம், கை கால்களின் நடுக்கம், தலை நடுக்கம், விச்வாசீ முதலிய வாதரோகங்களைப் போக்கும். இதற்கு 'மாஷதைலம்' எனப் பெயர். 122—130.

சதாவரீ தைலம்:—தண்ணீர் விட்டாங் கிழங்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, சிறுமல்லி, பெருமல்லி, ஆமணக்கு, அமுக்கிராங் கிழங்கு, நெரிஞ்சில், பில்வவேர், காவட்டம்புல், மகுதோன்றி இவ்வற்றில் ஒவ்வொன்றிலும் ஒன்றரைப் பலமெடுத்து, அனைத்தையும் நாலுபங்கு ஜலத்தில் சேர்த்து, நாலிலொரு பங்காகக் காய்ச்சி, அதில் ஒரு பிரஸ்த்தம் தைலமும் ஒரு பிரஸ்த்தம் பாலும், ஒரு பிரஸ்த்தம் தண்ணீர் விட்டாங்கிழங்கின் சாறும், ஒரு பிரஸ்த்தம் ஜலமும் சேர்த்து, தண்ணீர் விட்டாங்கிழங்கு, தேவதாரு, ஜடாமாம்ஸி, கிரந்திதகரம், சந்தனம், சதகுப்பை, சிற்றாமுட்டி, கோஷ்டம், ஏலம், கல்மரம், நெய்தல், ருத்தி, மேதா, அதிமதுரம், காகோலீ, ஜீவகம் இவற்றை கால் கால் பலம் விதமெடுத்து சூர்ணம் செய்து கல்கமாகச் சேர்த்து, பசுஞ்சாணத்தினாலான வறட்டிகளிட்டு எரித்து பக்குவம் செய்யவும். இத்தைலத்தை யுபயோகித்தால் புருடனுக்கு வீர்யவ்ருத்தி யுண்டாகும்; ஸ்த்ரீகளுக்கும் கருப்பையைப் பற்றிய கோளாறுகள் கழிந்து கருத்தரிக்கும் நிலையுமேற்படும்; யோனியிலுண்டாகும் சூலையும் நிவ்ருத்தியாகும்; மேலும் சரீரம் முடியவுமுண்டாகும் வலியும் தலைவலியும் போகும்; காமாலை, பாண்டுரோகம், க்ருத்ரிமவிஷஸம்பந்தத்தினாலுண்டாகும் வியாதிகள், க்ருத்ரவஸீ, ப்லீஹரோகம், க்ஷயம், மேஹ

ரோகங்கள், தண்டாபதானகம், தாபத்துடன் கூடிய வாதரக்தம், வாதபித்தம், அர்திதம், இரக்த ப்ரதரமென்னும் பெரும்பாடு, வயிற்றுப் பொருமல், இரத்தபித்தம் இவற்றையும் இத்தைலம் நிவ்ருத்தி செய்யும். 'சதாவரீதைலம்' என்னும் இம்முறை கிருஷ்ணுத்ரேயரால் கூறப்பட்டது. தைலம் பக்குவம் செய்வதற்கு முன், 'ஓம் நாராயண்யை ஸ்வாஹா' என்கிற மந்திரத்தைச் சொல்லி, வடக்குமுகமாய் நின்றுகொண்டு கருங்காலி மரத்திஞல் செய்த கோடரியைக்கொண்டு மூலிகைகளை வெட்டி யெடுக்கவும்; "ஓம் ஸர்வவ்யாதிவிநாசிந்யை ஸ்வாஹா" என்கிற மந்திரத்தையும் சொல்லிக்கொண்டே மூலிகைகளைப் பிடுங்கவும். "ஓம் குமார ஜீவிந்யை ஸ்வாஹா" என்கிற மந்திரத்தை யோதி ஓஷதிகளைப் பக்குவம் செய்யவும். 131—139.

காஸீஸாதி தைலம்:—அன்னபேதி, நீர்த்திப்பிலி, கோஷ்டம், சுக்கு, திப்பிலி, இந்துப்பு, மனச்சிலே, அலரி, வாய்விடங்கம், சித்திரமூலம், ஆடாதோடை, நேபாளம், பீர்க்கம்விதை, நாககேஸரம், தாளகம் இவற்றில் கால் பலமெடையெடுத்து இடித்து, கல்கமாகச் செய்து ஒரு பிரஸ்த்தம் தைலத்தைப் பக்குவம் செய்யவும்; இதில் கள்ளிப்பால் இரண்டு பலமும், எருக்கம்பால் இரண்டு பலமும், தைலத்திற்கு நாலு மடங்கு பசு மூத்திரமும் சேர்த்து எரித்துத் தைலத்தைத் தயார் செய்து கொள்ளவும். அர்சஸ்ஸுகளை அகற்ற கரநாதன் என்பவரால் இத்தைல முறை கூறப்பட்டது ; இதை அர்சஸ்ஸென்னும் மூல முளைகளின்மேல் தடவ, அவை க்ஷாரத்திஞல் எரிக்கப்பட்டவை போல் உதிர்ந்துவிடும்; ஆஞல் இது குதத்வாரத்திலடங்கிய சர்மம் முதலியவற்றிற்கு யாதொரு தீங்கையு முண்டுபண்ணுமல், க்ஷாரத்திஞல் நிறைவேற்றப்படும் குணங்களை யுண்டுபண்ணி பிணியாளிக்கு ஸௌக்கியத்தைத் தரும். 140—143½.

பிண்ட தைலம்:—மஞ்ஜிஷ்டி, நன்ஞரி, மட்டிப்பால், அதிமதுரம், தேன்மெழுகு இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம், ஆமணக்கெண்ணெய் இருபது பலம் சேர்த்துத் தைலத்தைப் பக்குவம் செய்யலாம்; இது 'பிண்ட தைலம்' எனப்படும்; இத்தைலம் வாதரக்தத்தைப் போக்கும். 144½.

அர்க்க தைலம்:—எருக்கிலேயிலிருந்து சாறு பிழிந்து அச்சாற்றில் மஞ்சளைச் சூர்ணம் செய்து சேர்த்து, கடுகெண்ணெயையும் கூட்டி

பக்குவம் செய்யப்படும் தைலத்தைத் தடவிவந்தால் சிரங்கு, அரைக் கடுவான், சொறி முதலிய சர்ம வியாதிகள் நீங்கும். 145½.

**மரிசாதி தைலம்:**—மிளகு, தாளகம், சிவதைவேர், செஞ்சந்தனம், கோரைக்கிழங்கு, மனச்சிலை, ஜடாமாம்ஸீ, மஞ்சள், மரமஞ்சள், தேவதாரு, தும்மட்டி, அலரி, கோஷ்டம், எருக்கம்பால், ஒவ்வொன்றும் கால் பலமும், அரைப்பலம் நாபியும், ஒரு பிரஸ்தம் கடுகெண்ணெயும், இவையனைத்துக்கும் இருமடங்கு பசு மூத்திரமும், இருமடங்கு ஜலமும் சேர்த்து பக்குவம் செய்து, வெண்குஷ்டம், குஷ்டம், புண்டரீகமென்னும் படை, தலையிலுண்டாகும் சிரங்குகள், ஸாதாரண சிரங்குகள், இரத்த தோஷத்தினாலுண்டாகும் சர்மவியாதி, சொறி இவற்றில் இத்தைலத்தை யுபயோகிக்கலாம். இது 'மரிசாதி தைலம்' எனப்படும். 146—150.

**த்ரிபலாதி தைலம்:**—த்ரிபலை, வேம்பு, நிலவேம்பு, மஞ்சள், மரமஞ்சள், செஞ்சந்தனம் இவற்றால் பக்குவம் செய்யப்பட்ட தைலத்தை சிரஸிலுண்டாகும் சில விரணங்களைப் போக்க அப்யங்கம் செய்துகொள்ளலாம். 151.

**நிம்ப தைலம்**—வேப்பங்கொட்டைகளைக் கரிசிலாங்கண்ணிச் சாற்றில் பாவனை செய்து, அவ்வாறே தினிசயிலைச் சாற்றிலும் அவற்றை மீண்டும் பாவனை செய்து, அவ்வித்துக்களை நசுக்கி, அவற்றிலிருந்து எடுக்கப்படும் தைலத்தை நஸ்யமா யுபயோகிக்க அகாலத்திலுண்டாகும் நரைத்தலைப் போக்கும்; இத்தைலமுபயோகிக்கையில் பாலையும் அன்னத்தையுமே ஆஹாரமா யுட்கொள்ளவேண்டும். 152½.

**யஷ்ட்யாதி தைலம்.**—அதிமதுரம், பால், புதிய நெல்லிக்கனி இவற்றை க்வாதம் செய்து, அதில் தைலத்தைப் பக்குவம் செய்யவும். இதை நஸ்யகர்மத்தி லுபயோகிக்கத் தலைமயிர்களையும், தாடி மீசைகளையும் கருநிறமாகச் செய்யும். 153½.

**குஞ்ஜாதி தைலம்:**—புங்கை, சித்திரமூலம், ஜாதிக்காய், அலரி இவற்றைச் சேர்த்து க்வாதம் செய்து, அதில் தைலம் பக்குவம் செய்யலாம். மேற்கூறிய பதார்த்தங்களையே இத்தைலத்தில் கல்கமாகவும் உபயோகிக்கவேண்டும். இத்தைலத்தை அப்யங்கம் செய்துகொள்ள இந்த்ரலுப்தம்' என்னும் மயிர்களுதிரும் ரோகம் தீரும். 154½.

நீலீந்யாதி தைலம்:—அவுரி, தாழைவேர், கரிசிலாங்கண்ணி, மருதோன்றி, மருதம்பூ, வேங்கைமரத்தின் புஷ்பம், திப்பிலி, எள், கிரந்திதகரம், தாமரையின் கிழங்கு கொடி இலை புஷ்பம், அபப்ஸ்மம், ஞாழல், மாதளையின் பட்டை, சீந்தில், த்ரிபலை, தாமரையோடையி லுள்ள உலர்ந்த சேறு இவை ஒவ்வொன்றும் கால் பலமெடை சேர்த்து கல்கமாகச் செய்யவேண்டும்; முதலில் த்ரிபலாதி க்வாதத்திலும், கரிசிலாங்கண்ணிச்சாற்றிலும் தைலத்தைக் காய்ச்சி, பிறகு அவுரி முதலியதாலான கல்கத்தை அதில் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும். இத்தைலம் மயிர்களை உதிரவிடாமல் கருநிறமாகச் செழிக்கச் செய்யும்; அகாலத்திலுண்டாகும் நரைத்தலையும் போக்கும்; தலையிலுண்டாகும் வெடிப்புகளையும், உபஜிஹ்வாரோகத்தையும் குணமாக்கும். 155—158½.

ப்ருங்கராஜ தைலம்:—கரிசிலாங்கண்ணிச் சாற்றுடன் தைலம் சேர்த்துக் காய்ச்சி, அதில் இரும்புக்கிட்டம், த்ரிபலை, நன்னாரி இவற்றைக் கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யலாம். இத்தைலத்தால் வெடிப்பு, அகாலத்திலேற்படும் நரைத்தல், சொறி, சிரங்கு, மயிருதிர்தல் இவை நிவ்ருத்தியாகும். 159, 160.

இரிமேதாதி தைலம்:—நூறு பலம் வெள்வேலம்பட்டையை இடித்து, ஒரு திரோணம் ஜலத்தில் பக்குவம் செய்யவும்; அதை நாலில் ஒருபாகமாகச் சுண்டக் காய்ச்சி, வடிக்கட்டி யெடுத்துக்கொண்டு, இரண்டு பிரஸ்த்தங்கொண்ட தைலத்தைச் சேர்த்து, பிறகு வெள்வேலம்பட்டை, இலவங்கம், காவிக்கல், அகில், தாமரைக்கிழங்கு, மஞ்ஜிஷ்டி, வெள்ளிலோத்தி, இலுப்பை, செவ்வரக்கு, ஆல், கோரைக்கிழங்கு, இலவங்கப்பட்டை, ஜாதிக்காய், கர்ப்பூரம், தக்கோலம், கருங்காலி, சந்தனம், காட்டாத்திப்பூ, சிற்றேலம், நாககேஸரம், சிறுதேக்கு இவற்றில் ஒவ்வொன்றிலும் கால் பலமெடையெடுத்து, கல்கமாகச் செய்து தைலத்தில் சேர்த்து பக்குவம் செய்யவும். இத்தைலத்தை யுபயோகித்தால் வாயிலுண்டாகும் புண்கள், தசைகள் கெட்டுப்போதல், நரைத்தல், பல் சொத்தைப்பிடித்தல், பல்லில் த்வாரம் விழுதல், பல் கருநிறங்கொள்ளல், பல் சிலிர்த்தல், பல்லில் சீழ்க்கட்டியுண்டாதல், பற்களில் கிருமியுண்டாதல், பற்களில் துர்நாற்ற மேற்படுதல்

நாக்கு, தவடை, உதடுகள் இவற்றிலுண்டாகும் வியாதிகள் இவை யனைத்தும் தீரும். 161—165½.

ஜாதீபல்லவாதி தைலம்:—ஜாதி, வேம்பு, பேய்ப்புடல், பச்சிலை இவற்றின் தளிர்கள், தேன்மெழுகு, அதிமதுரம், கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், கடுகரோகிணீ, மஞ்ஜிஷ்டி, தாமரைக்கிழங்கு, வெள்ளி லோத்தி, கடுக்காய், கருநெய்தல், மயில்துத்தம், நன்னாரி, பச்சிலையின் வித்து இவற்றை ஸமவெடையாகச்சேர்த்து இடித்து கஷாயம் செய்து, அதில் தைலம் பக்குவம் செய்யவும். நாடீவ்ரணம், கொப்புளம், சொறி, சிரங்கு, ஸத்யோவிரணம், நகம், பற்கள் இவை தாக்குவதாலுண்டாகும் விரணம், மற்றும் கெட்டுப்போன விரணங்கள் இவற்றிலெல்லா முபயோகமாகும். 166—169½.

ஹிங்க்வாதி தைலம்:—காயம், தும்பில், [1] சுக்கு இவற்றைக் கடுகெண்ணெயில் சேர்த்துக் காய்ச்சவும். இத்தைலத்தைக் காதில் விட்டு வந்தால் காதுவலி நிவ்ருத்தியாகும். 170½.

பாலபில்வ தைலம்:—பில்வயிலைத்தளிர்களைப் பசுமூத்திரத்தில் அரைத்து, தைலத்தில் அக்கல்கத்தையும், ஆட்டுப்பாலையும், ஜலத்தையும் சேர்த்துக் காய்ச்சி, காதில் விட்டு வந்தால் செவிட்டுத்தன்மையும் போய்விடும். 171½.

பாலமூலகாதி தைலம்:—இளம் முள்ளங்கிக்கிழங்கு, கடலை முதலிய இரட்டைப்பிளவான பருப்புகளுள்ள சில தானியங்கள் இவற்றை எரித்தெடுக்கப்படும் க்ஷாரங்கள், ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், பஞ்ச லவணங்கள், பெருங்காயம், முருங்கை, சுக்கு, தேவதாரு, வசம்பு, கோஷ்டம், சதகுப்பி, மரமஞ்சள், கிரந்திதகரம், கோரைக்கிழங்கு இவற்றில் ஒவ்வொன்றிலும் கால் கால் பலமெடுத்து கல்கம் செய்து, ஒரு பிரஸ்த்தப் பிரமாணங்கொண்ட தைலத்திற் கலந்து, வாழை மரச்சாறு, மாதளஞ்சாறு, மதுஸூக்தமென்னும் ஒருவித காடி இவற்றைத் தைலத்திலும் நான்கு மடங்கு அதிகமாகச் சேர்த்துத் தைலம் காய்ச்சவும். காதில் சீழ்வடிதல், காதிரைச்சல், காதுவலி, செவிட்டுத்தனம், காதில் கிருமியுண்டாதல், மற்றுமுள்ள காதைப்பற்றிய வியாதி

1. தும்பில் என்பது அசோகமரத்தைச் சேர்ந்த ஒரு ஜாதி.

கள், முகத்திலுண்டாகும் நோய்கள் இவ்வனைத்தையும் இத்தைலம் நிவ்ருத்தி செய்யும். [எலுமிச்சம்பழரஸம் ஒரு பிரஸ்த்தம், தேன் நான்கு பலம், திப்பிலிப் பொடி ஒரு பலம் இவற்றை ஒரு மட்பாத்திரத்தில் ஒன்றாகச் சேர்த்து, பாத்திரத்தின் வாயை மூடி, தானியக் களஞ்சியத்தில் ஒரு மாதகாலம் வைத்தெடுத்தால் அது மதுஸூக்தம் எனப்படும்.] 172—177½.

**பாடாதி தைலம்:**—வட்டத்திருப்பி, மஞ்சள், மரமஞ்சள், பெருங்குரும்பை, திப்பிலி, ஜாதிமல்லியின் தளிர், நேபாளம் இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த தைலத்தை நஸ்யமிட்டால் நாட்பட்ட பீநஸரோகம் தீரும். 178½.

**குஷ்டாதி தைலம் அல்லது க்ருதம்:**—கோஷ்டம், பில்வவேர், திப்பிலி, சுக்கு, திராக்ஷை இவற்றைக் கஷாயமிட்டு, இப்பதார்த்தங்களையே கல்கமாகவும் சேர்த்து, தைலமாவது க்ருதமாவது பக்குவம் செய்து, அத்தைலம் அல்லது க்ருதத்தைக் கொண்டு நஸ்யமிட ஜலதோஷத்தினாலுண்டாகும் அதிக தும்மல் தணிந்துவிடும். 179½.

**வ்யாக்ரியாதி தைலம்:**—கண்டங்கத்திரி, நேபாளம், வசம்பு, முருங்கை, துளஸி, த்ரிகடு, இந்துப்பு இவற்றைக் கல்கமாகச்செய்து பக்குவம் செய்யப்படுகிற தைலத்தை நஸ்யமாக உபயோகித்தால் மூக்கில் சீழ்வடிந்து துர்நாற்ற மெடுப்பது நிவ்ருத்தியாகும்; இதனால் குடலின் பாசநசக்தியும் விருத்தியாகும். 180½.

**சிந்துதூமாதி தைலம்:**— ஒட்டடை, திப்பிலி, தேவதாரு, யவக்ஷாரம், மஞ்சள், இந்துப்பு, நாயுருவிவிதை இவற்றால் பக்குவம் செய்த தைலம் நாஸார்சஸ் என்னும் மூக்கிலுண்டாகும் வித்ரதியைப் போக்கும். 181½.

**வஜ்ரதைலம்:**—கள்ளிப்பால், எருக்கம்பால், ஊமத்தையிலைச் சாறு, சித்திரமூலத்தின் சாறு, எருமைச் சாணிப்பால் இவற்றைச் சமஎடை யெடுத்து, அனைத்துக்கும் ஸமமாக நல்லெண்ணெய் சேர்த்து, தைலம் மட்டும் மிகும்படியாய் காய்ச்சி யெடுத்து, மறுபடியும் அத்தைலத்தை அதற்கு நாலு மடங்கு அளவான பசு மூத்திரத்தில் சேர்த்து, தைலம் மிகுமாறு பக்குவம் செய்தெடுக்கவும். பிறகு கந்தகம், சித்திரமூலம், மனச்சிலை, தாளகம், வாய்விடங்கம், அதிவிட

யம், வத்ஸநாபி, பேய்ச்சுரை, கோஷ்டம், வசம்பு, ஜடாமாம்ஸீ, த்ரிகடு, மரமஞ்சள், அதிமதுரம், ஸர்ஜக்ஷாரம், ஜீரகம், தேவதாரு இவற்றில் ஒவ்வொன்றிலும் கால்பலமெடுத்து சூர்ணம் செய்து எண்ணெயில் சேர்த்து பக்குவம் செய்யவேண்டும். இதற்கு வஜ்ர தைலம் எனப் பெயர். இதை அப்யங்கம் செய்துவந்தால் ஸகல குஷ்டங்களும் தீரும். 182—186.

காவீராதி தைலம்:—அலரிவேர், நேபாளம், சிவதைவேர் பீர்க்கு இவற்றை—வாழமரத்தை யுலர்த்தி எரித்தெடுத்த க்ஷாரம் கரைத்த ஜலத்தில் சேர்த்து, அதில் தைலம் காய்ச்சி, அத்தைலத்தை மயிர்களை உதிர்ப்பதற்கு உபயோகிக்கலாம். 187.

லாக்ஷா சந்தனாதித் தைலம்:—சந்தனம், வெட்டிவேர், நகமென்னும் கந்தத்ரவ்யம், மரமஞ்சள், அதிமதுரம், கல்மரம், தாமரைக் கிழங்கு, மஞ்ஜிஷ்டி, ஸரளமரப்பட்டை, தேவதாரு, குருவேர், ஏலக்காய், புங்கை, நாககேஸரம், இலவங்கப்பத்திரி, முறமென்கிற வாஸனை வஸ்து, ஜடாமாம்ஸீ, தக்கோலம், கோரைக்கிழங்கு, மஞ்சள், நன்னாரி, கடுகரோகிணீ, இலவங்கம், அகில், குங்குமப்பூ, இலவங்கப்பட்டை, அரேணுகம், நளி யென்னும் கந்தத் திரவ்யம் இவற்றை ஸமபாக மெடுத்துப் பொடித்து, தயிரின்மேலுள்ள தெளிவு நீர் எடுத்து, அதில் தைலத்தையும் முற்கூறிய வஸ்துக்களின் கல்கத்தையும் சேர்க்கவேண்டும்; தயிரின் தெளிவு நீர் தைலத்தினும் நாலுமடங்கு அதிகமாயிருக்கவேண்டும்; அத்தைலத்திற்கு ஸமான பாகம் செவ்வரக்குக் கஷாயமும் சேர்க்கவேண்டும். இத்தைலம் கிரஹ தோஷங்களைப் போக்கும்; பலத்தை விருத்தி செய்யும்; அபஸ்மாரம், ஜ்வரம், உன்மாதம், பேய் பிசாசு முதலியவற்றையும் அகற்றும்; ஆயுளை விருத்தி செய்யும்; சரீரத்திற்கு புஷ்டியைத் தரும்; வசீகரணம் செய்வதில் உத்த மௌஷதம்; விசேஷமாக க்ஷயரோகம், இரத்த பித்தம் இவற்றைப் போக்கும். 188—191½.

வசாதி தைலம்:—வசம்பு, கச்சோரம், மஞ்சள், மரமஞ்சள், தேவதாரு, சுக்கு, கடுக்காய், அதிவிடயம், கோரைக்கிழங்கு, வாலுளுவை இவை ஒவ்வொன்றும் பத்து பல மெடுத்து, நான்கு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து க்வாதம் செய்யவும்; இதில் தகரயிலைச்

சாற்றையும் சேர்த்து, கடுகெண்ணெயை ஊற்றிச் சிறுகச் சிறுக எரித்தல் போடவும். நாலில் ஒரு பங்காக வற்றியிருக்கையில் சிறிதளவு வில்துாரத்தைச் சேர்த்து இறக்கிவிடவும். இத்தைலம் கடுந்துயரளிக்கும் கண்டமாலையை நிவ்ருத்தி செய்யும். 192 — 194½.

**நிர்குண்டியாதி தைலம்:**—கருநொச்சியிலைச் சாற்றில் தைலம் சேர்த்துக் காய்ச்சி, அதில் சிவனார் கிழங்கைப் பொடித்து கல்கமாகச் சேர்த்து பக்குவம் செய்யவும். இத்தைலத்தை நஸ்யமாக உபயோகித்தால் மிகவும் வருத்தந்தரும் கண்டமாலை தீரும். 195½.

---

## பத்தாவது அத்தியாயம்.

---

### ஸந்தாந விதி.[1]

**ஸந்தாந முறை:**—ஔஷதி வகைகளை சில திரவபதார்த்தங்களில் சில நாட்களளவும் சேர்த்து ஊறவைத்து, அப்பதார்த்தங்களிலிருந்து ஸத்துவங்களைக் கூட்டும் முறை 'ஸந்தாநம்' எனப்படும்; அவ்வித ஸந்தான முறையினால் ஆஸவம், அரிஷ்டம் முதலிய பல வேறு மது வகைகள் ஔஷதமாய் உபயோகப்படுமாறு பக்குவம் செய்யப்படும். 1.

**ஆஸவாரிஷ்டங்களின் பேதமும் பிரமாணமும்:**—ஔஷதி முதலியவற்றையும் ஜலத்தையும் காய்ச்சாமலே, ஔஷதிகளை ஜலத்தில் அப்படியே சேர்த்துப் பக்குவம் செய்யப்படும் மத்யம் 'ஆஸவம்' என்றும், ஔஷதிகளை ஜலத்தில் சேர்த்து க்வாதம் செய்து பக்குவம் செய்யப்படுவது 'அரிஷ்டம்' என்றும் வழங்கப்படும். இவற்றை உட்கொள்வதற்குப் பொதுவாக ஏற்பட்ட அளவு ஒரு பலமாம். 2.

---

1. மூலிகை முதலியவற்றை ஏதேனும் தகுந்த திரவ பதார்த்தங்களில் சேர்த்து வெகு நாள் புளிக்கவைத்தும், வாலை முதலியவற்றின் மூலமாய் ஆவியாக இறக்கியும் பலவகைகளில் பக்குவம் செய்யப்படும் மது இனங்களின் பாகமுறை 'ஸந்தாநவிதி' என்று கூறப்படும்.

**ஆஸவாரிஷ்டங்களில் வஸ்துக்களைச் சேர்க்கவேண்டியதில் பொதுப் பிரமாணம்:**—ஆஸவாரிஷ்டங்களில் வஸ்துக்கள் சேர்க்கவேண்டிய அளவுகள் கூறப்படாதவிடத்து அடியில் வருமாறு பதார்த்தங்களைச் சேர்க்கவேண்டும்:—திரவ பதார்த்தம் ஒரு த்ரோணமானால் வெல்லம் நூறுபலம், தேன் ஐம்பது பலம், மற்ற கல்கவகைகள் வெல்லத்தில் பத்திலொரு பங்கு. 3

**சீதரஸ சீது:**—இனிய சுவையுள்ள மூலிகை முதலியவற்றைக் காய்ச்சாமலே ஜலத்தில் ஊறவைத்து பக்குவம் செய்யப்படும் மத்யம் 'சீதரஸ சீது' என்று சொல்லப்படும். 3½.

**பக்வரஸ சீது:**—நன்றாகச் சமையல் செய்த இனிய சுவையுள்ள மூலிகைகளாலும் திரவ பதார்த்தத்தாலும் பக்குவம் செய்யப்படுகிற மத்யம் 'பக்வரஸ சீது' என்று வழங்கப்படும். 4.

**ஸுரை:**—அரிசியினாலான அன்னத்தை மீண்டும் சமைத்து அதிலிருந்து பக்குவம்செய்து இறக்கப்படும் ஒருவித மதுவை 'ஸுரை' என்று கூறுவர். 4½.

**ப்ரஸந்நா, காதம்பரீ, ஜகலம், மேதகம், கிண்வகம்:**—ஸுரையினுடைய மேற்புறத்தில் தெளிவாக வருவது 'ஸுராமண்டம்' அல்லது 'ப்ரஸந்நா' என்று கூறப்படும். ஸுராமண்டத்தை வேறொரு பாத்திரத்தில் இறுத்துக்கொண்டால் அதற்கடியில் சிறிது தடிப்பாயிருக்கும் பாகம் 'காதாம்பரீ' என்றும், அதற்கும்அடியில் சிறிது குழம்பியிருக்கும் திரவபாகம் 'ஜகலம்' என்றும், அதற்கும் கீழ் மிகவும் கனமாகத் தங்கியிருப்பது 'மேதகம்' என்றும் சொல்லப்படும். மேதகத்தைப் பக்குவஞ்செய்து ஸாரத்தை நீக்கியபின் அடியில் தங்குகிற திப்பியான பாகம் 'கிண்வகம்' எனப்படும். 5—6.

**வாருணீ:**—பனை, கர்ஜூரம் இவை முதலியவற்றின் சாற்றைக் கொண்டு ஸந்தானம் செய்யப்படுவதாலுண்டாகும் மதுவை 'வாருணீ' என்பார்கள். 6½.

**ஸுக்தம்:**—ஏதேனும் திரவபதார்த்தத்தில் கிழங்குகள், வேர்கள், கனிவர்க்கங்கள் முதலியவற்றையும், ஸ்நேஹ வர்க்கங்களையும், உப்பு வகைகளையும் சேர்த்து பக்குவம் செய்யப்படும் ஒருவித மத்யமானது 'ஸுக்தம்' எனப்படும். 7½.

**சுக்ரம்:**—தேனாவது, இனிய சுவையுள்ள வேறு திரவபதார்த்தமாவது பதனழிந்து புளித்துப் போனபின்பு அதை மத்யம்போல் ஸந்தானம் செய்ய அது 'சுக்ரம்' அல்லது 'சுக்தம்' எனப்படும். 8½.

**குடஸூக்தம் முதலியது:**—வெல்லம் கலந்த ஜலம், தைலம், கிழங்குகள், வேர்கள், கனிவர்க்கங்கள் இவற்றைச் சேர்த்து ஸந்தானம் செய்யப்பெற்ற புளிப்பான ஒருவகை மத்யத்திற்கு 'குடஸூக்தம்' என்று பெயர். இவ்விதமே கருப்பஞ் சாற்றைக்கொண்டு செய்யப்படுவதற்கு 'இக்ஷுஸூக்தம்' என்றும், திராக்ஷையைக்கொண்டு செய்யப்படுவதற்கு 'திராக்ஷாஸூக்தம்' என்றும் பெயர். 9,10.

**துஷாம்பு:**—யவதானியங்களை உடைத்து, அப்படியே உமியுடன் சமைக்காமல் ஜலத்தில் ஊறவைத்து ஸந்தானம் செய்யப்படுவது 'துஷாம்பு' என்று வழங்கப்படும். 10½.

**ஸௌவீரம்:**—யவதானியங்களை உடைத்து உமிநீக்கி சமைத்து ஸந்தானம் செய்ய 'ஸௌவீரம்' என்கிற மது உண்டாகும். 11.

**காஞ்ஜிகம்:**—பெருங்கடலை, கொத்தமல்லிவிதை இவற்றை க்வாதம் செய்து, அதின்மேல் படர்ந்துவரும் ஏடு முதலியவற்றை யெடுத்து ஸந்தானம்செய்து 'காஞ்ஜிகம்' என்கிற மத்யம் பக்குவம் செய்யப்படும். 11½.

**சண்டாகீ:**—முள்ளங்கி, கடுகு முதலியவற்றைச் சேர்த்து ஸந்தானம் செய்து 'சண்டாகீ' என்கிற மத்யம் உண்டாக்கப்படும். 12.

**உசீராஸவம்:**—வெட்டிவேர், குருவேர், அல்லிக்கிழங்கு, பெருங்குமிழன், கருநெய்தல், ஞாழல், தாமரைக்கிழங்கு, வெள்ளிலோத்தி, மஞ்ஜிஷ்டி, காஞ்சொறி, வட்டத்திருப்பி, நிலவேம்பு, கடுகரோகிணீ, ஆல், அத்தி, கச்சோரம், பர்ப்பாடகம், வெண்தாமரை, பேய்ப்புடல், நாககேஸரம், நாவல்பிசின், இலவம்பிசின் இவை ஒவ்வொன்றையும் ஒவ்வொரு பலமெடுத்து நன்கு சூர்ணம் செய்து, இருபது பலம் திராக்ஷை, பதினாறு பலம் காட்டாத்திப் பூ இவற்றையும், இரண்டுத்ரோணம் ஜலத்தில் சேர்த்து, சர்க்கரை நூறுபலம், தேன் நூறுபலம் இவற்றையும் சேர்த்து, ஜடாமாம்ஸி, மிளகு இவற்றை யெரித்துண்டாகும் புகையினால் ஸம்ஸ்காரம் செய்யப்பட்ட ஒரு மட்பாத்திரத்தில் அதை ஊற்றி, ஒரு மாதகாலம் மூடிவைத்திருந்து பிறகு எடுத்து

வடிக்கட்டி உபயோகிக்கவும். இது 'உசிராஸவம்' எனப்படும். இரத்த பித்தம், பாண்டு, குஷ்டம், பிரமேஹம், அர்சஸ், கிருமிரோகம், சோகை இவற்றைப்போக்குவதற்கு இது ஏற்ற ஔஷதமாம். 13—17½.

**குமார்யாஸவம்:**—பூச்சி முதலியவற்றால் எரிக்கப்படாமல் நன்கு வளர்ந்த சோற்றுக் கற்றாழைகளை யிடித்து ஸ்வரஸம் பிழிந்து, அதில் ஒரு த்ரோணம் சாற்றை நெய்யிட்டுப் பழகிய கல் அல்லது மண் மய மான பாத்திரத்தில் சேர்க்கவும்; தேன் ஐம்பது பலமும், சுத்தி செய்த அயம் ஐம்பது பலமும் அதில் கலக்கவேண்டும்; த்ரிகடு, இலவங்கம், சதுர்ஜாதம், 1 சித்திரமூலம், மோடி, வாய்விடங்கம், யானைத்திப்பிலி, சவியம், கொட்டைக்கரந்தை, கொத்துமல்லிவிதை, கமுகு, கடுகரோ கிணீ, கோரைக்கிழங்கு, த்ரிபலை, சிற்றரத்தை, தேவதாரு, மஞ்சள், மரமஞ்சள், பெருங்குரும்பை, திராக்ஷை, நேபாளம், தாமரைக்கிழங்கு, சிற்றாமுட்டி, பேராமுட்டி, பூனைக்காலி, த்ரிகண்டகம் 2 சதகுப்பி இங்கு பத்ரி, அக்காரகாரம், செந்நெல், இங்குணப்பட்டை, சாறணை, வெள்ளைச்சாறணை, வெள்ளிலோத்தி, பொன்னிமிளை இவற்றில் ஒவ் வொன்றிலும் அரைப் பலமும், காட்டாத்திப்பூ எட்டு பலமும் சேர்த்து ஆஸவம் பக்குவம் செய்யவும். இதைச் சரீரகூறுபாடு, வயதின் அளவு ஆகியவற்றைக் கவனித்து இரண்டு பலமாவது, ஒரு பலமாவது, அரைப் பலமாவது உட்கொள்ளக் கொடுக்கலாம். இது பலம், பசி, தேக நிறம் இவற்றை விருத்தி செய்யும். ப்ருஹ்மணம், ரோசனம், வ்ருஷ்யம் என் கிற குணங்கள் இதற்கு அதிகமாயுண்டு. பரிணமசூலை, எட்டு வித மான உதரரோகங்கள், உக்கிரமான க்ஷயரோகம், இருபது விதமான மேஹரோகங்கள், உதாவர்த்தம், அபஸ்மாரம், மூத்திர க்ருச்சிரம், சுக்ர தோஷம், அச்மரீரோகம், க்ருமிரோகம், இரத்தபித்தம் இவற்றை நிச் சயமாய் நிவ்ருத்திசெய்யும். 18—27½.

**பிப்பல்யாத்யாஸவம்:**—திப்பிலி, மிளகு, சவியம், மஞ்சள், சித்திரமூலம், கோரைக்கிழங்கு, வாய்விடங்கம், கமுகு, வெள்ளி

1. சதுர்ஜாதம் 134-ம் பக்கம் பார்க்க.

2. கண்டங்கத்திரி, சிறுகாஞ்சொறி நெரிஞ்சில் இம்மூன்றுக் கும் த்ரிகண்டகம் எனப் பெயர்.

லோத்தி, வட்டத்திருப்பி, நெல்லிக்கனி, சிற்றேலம், வெட்டிவேர், சந்தனம், கோஷ்டம், இலவங்கம், கிரந்திதகரம், ஜடாமாம்ஸீ, இலவங்கப்பட்டை, ஏலம், இலவங்கப்பத்திரி, ஞாழல், நாகேஸரம், இவற்றில் ஒவ்வொன்றையும் அரைப் பலமெடை யெடுத்து சூர்ணம் செய்து, இரண்டு திரோணம் ஜலத்தில் சேர்த்து, முன்னூறு பலம் வெல்லத்தையும், பத்து பலம் காட்டாத்திப் பூவையும், அறுபது பலம் திராக்ஷையையும் ஒருமிக்க ஒரு மட்பாத்திரத்தில் சேர்த்து வைக்க வேண்டும்; பிறகு அப்பதார்த்தங்களின் ஸத்துவம் அனைத்தும் ஜலத்தில் கலந்துவிட்டதாகத் தெரிந்தவுடன் வடிக்கட்டி, ரோகிகளுக்கு உபயோகித்து வரலாம். வைத்தியர்கள் ரோகிகளின் ஜீர்ணசக்தியைக் கண்டறிந்து அவரவருக்கு ஏற்றவிதமான அளவில் இதை உபயோகிக்கச் செய்யவேண்டும். இது பிப்பல்யாத்யாஸவமென்று சொல்லப்படும்; இதை க்ஷயரோகம், குன்மம், மஹோதரம், சரீர மெலிவு, கிரஹணீ, பாண்டுரோகம், அர்சஸ் இவற்றில் உபயோகிக்க நற்குணம் பிறக்கும். 28—33.

லோஹாஸவம்:—நன்கு சூர்ணம்செய்த அயம், த்ரிகடு, த்ரிபலை, குராசாணியோமம், வாய்விடங்கம், கோரைக்கிழங்கு, சித்திரமூலம் இவை ஒவ்வொன்றும் நான்கு பலம், காட்டாத்திப்பூ இருபது பலம், வெல்லம் நூறு பலம், ஜலம் இரண்டு திரோணம் இவையனைத்தையும் நெய் வைத்துப் பழகிய ஒரு மட்பாத்திரத்தில் சேர்த்து, வாயை மட்சீலை செய்து ஒரு மாதகாலம் வைத்திருக்கவும். இது 'லோஹாஸவம்' எனப்படும். இது நன்கு பசியை உத்தீபனம் செய்யவல்லது; பாண்டு, உடல்வீக்கம், குன்மம், உதர வியாதிகள், அர்சஸ், குஷ்டம், மண்ணீரலின் வீக்கம், சொறி, இருமல், ச்வாஸம், பகந்தரம், அரோசகம், கிரஹணீ, இருதய வியாதிகள் இவற்றையும் நிவ்ருத்தி செய்யும். 34—38.

**திராக்ஷாரிஷ்டம்**:—நூறு பலம் திராக்ஷையை நான்கு திரோணம் ஜலத்தில் சேர்த்து க்வாதமாகக் காய்ச்சவும்; அதில் சேர்த்த ஜலம் ஒரு திரோணமாக வற்றிய பின்பு, அதை ஆற்றி வடிக்கட்டி, நெய் வைத்துப் பழகிய ஒரு பாண்டத்தில் ஊற்றி அடியில் வரும் கல்கங்களைச் சேர்க்கவேண்டும்:—தேன் நூறுபலம், தக்கோலம், இல

வங்கம், ஜாதிக்காய், மிளகு, இலவங்கப்பட்டை, ஏலம், இலவங்கப் பத்திரி, நாககேஸரம், திப்பிலி, சித்திரமூலம், சவியம், மோடி, அரே ணுகம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம், இவற்றை இடித்து மேற்கூறிய கஷாயத்தில் சேர்க்கவும்; இதை வைத்துப் பக்குவம் செய் வதற்கு உபயோகப்படும் பானையை சந்தனம், அகில் இவற்றால் புகையிட்டு, கர்ப்பூரம் தடவியும் ஸம்ஸ்காரம் செய்வது நலம். இவ் வௌஷதம் கிரஹணீ ரோகத்தைப் போக்கி அக்னிதீபனம் செய்யும்; அர்சஸ், உதராவர்த்தம், குன்மம், வயிற்றுக் கிருமிகள், குஷ்டம், பற் பலவிதமான விரணங்கள், நேத்திரரோகம், தலைவலி முதலிய சிரஸ் ஸைப்பற்றிய வியாதிகள், தொண்டையிலுண்டாகும் வியாதிகள் இவற் றைப் போக்கும். 39—43½.

குடஜாரிஷ்டம்:—வெட்பாலை வேர் நூறு பலம், திராக்ஷை ஐம் பது பலம், இலுப்பைப்பூ பத்து பலம், பெருங்குமிழம்பூ பத்து பலம், இவற்றை நான்கு த்ரோணம் ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சவும்; ஜலம் நாலில் ஒரு பங்காக வற்றிய பிறகு, இருபது பலம் காட்டாத்திப் பூவையும் நூறு பலம் வெல்லத்தையும் சேர்த்து, மட்பாத்திரத்தில் ஒரு மாதகாலம் வைத்திருந்து எடுக்கவும். இது குடஜாரிஷ்டம் எனப்படும். ஸகல ஜ்வரங்களிலும் உபயோகிக்க இது நல்ல ஔஷ தம்; அக்னி தீபனமும் செய்யும். 44—46½.

விடங்காரிஷ்டம்:—வாய்விடங்கம், கிரந்திதகரம், சிற்றரத்தை, வெட்பாலரிசி, இலவங்கப்பட்டை, ஜாதிக்காய், வட்டத்திருப்பி, சிற் றேலம், நெல்லிக்கனி இவற்றில் ஒவ்வொன்றிலும் ஐந்து பலம் எடுத் துப் பொடித்து, எட்டு த்ரோண ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, அக் கஷாயத்தை எட்டில் ஒரு பாகமாகச் சுண்டவைத்து, வடிக்கட்டி, ஆறிய பின்பு, முன்னூறு பலம் தேன், இருபது பலம் காட்டத்திப்பூ, இரண்டு பலம் த்ரிஜாதகம்,[1] ஞாழல், நாககேஸரம், வெள்ளிலோத்தி ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம், த்ரிகடு எட்டு பலம் இவற்றைச் சூர் ணம் செய்து, மேற்கூறிய கஷாயத்தில் சேர்த்து, இவையனைத்தை யும் நெய் வைத்துப் பழகிய பாண்டத்தில் சேர்த்து ஒரு மாதகாலம் மூடிவைத்து, அப்பால் வடிக்கட்டி எடுத்து, மிகத்துன்பமளிக்கும்

1. 'த்ரிஜாதகம்' 134-ம் பக்கத்தில் விவரம் பார்க்க.

வித்ரதி, ஊருஸ்தம்பம், அச்மரீ, மேஹம், ப்ரத்யஷ்டீலா, பகந்தரம், கண்டமாலை, ஹநுஸ்தம்பம் இவ்வற்றில் உபயோகிக்க நற்குணமுண்டாகும். இதற்கு 'விடங்காரிஷ்டம்' எனப் பெயர். 47—52.

**தேவதார்வாத்யரிஷ்டம்:**—தேவதாரு ஐம்பது பலம், ஆடாதோடை இருபது பலம், மஞ்ஜிஷ்டி, வாலுளுவை, நேபாளம், கிரந்திதகரம், மஞ்சள், மரமஞ்சள், சிற்றரத்தை, வாய்விடங்கம், கோரைக் கிழங்கு, காட்டுவாகை, கருங்காலி, மருதை இவற்றில் ஒவ்வொன்றும் பத்து பலம், குராசாணியோமம், வெட்பாலரிசி, சந்தனம், சீந்தில், கடுகரோகிணீ, சித்திரமூலம் இவை ஒவ்வொன்றும் எட்டு பலம், இவையனைத்தையும் எட்டு திரோணம் ஜலத்தில் சேர்த்து, ஒரு திரோணமாகக் காய்ச்சி, வடிக்கட்டி, ஆறியபின்னர் காட்டாத்திப்பூ பதினாறு பலம், தேன் முன்னூறு பலம், த்ரிகடு இரண்டு பலம், த்ரிஜாதம் நான்குபலம், ஞாழல் நான்கு பலம், நாககேஸரம் இரண்டு பலம் இவ்வனைத்தையும் சூர்ணம் செய்து கஷாயத்தில் சேர்த்து, அவற்றை நெய் வைத்துப் பழகிய பாண்டத்தில் ஒருமாதம் வைத்திருந்து, பிறகு எடுத்து வடிக்கட்டி உபயோகிக்கவும்; இது கஷ்ட ஸாத்யமான பிரமேஹரோகம், வாதரோகங்கள், கிரஹணீ, அர்சஸ், மூத்திரக்ருச்சிரம், சொறி, சிரங்கு, குஷ்டம் இவற்றைப் போக்கும். இதற்கு 'தேவதார்வாத்யாரிஷ்டம்' எனப் பெயர். 53—59.

**கதிராரிஷ்டம்:**—கருங்காலிபட்டை ஐம்பது பலம், தேவதாரு ஐம்பது பலம், ஆட்லாங்கொடி பன்னிரண்டு பலம், மரமஞ்சள் இருபது பலம், த்ரிபலை இருபது பலம், இவற்றை எட்டு திரோணம் ஜலத்தில் சேர்த்து ஒரு திரோணமாகக் காய்ச்சி, வடிக்கட்டி, ஆறியபிறகு, அதில் இருநூறு பலம் தேன் சேர்த்து, ஐம்பது பலம் சர்க்கரை, இருபது பலம் காட்டாத்திப்பூ, தக்கோலம் நாககேஸரம், ஜாதிக்காய், இலவங்கம், ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி இவை ஒவ்வொரு பலம், திப்பிலி நான்கு பலம், இவற்றை நெய் வைத்துப் பழகிய ஒரு மட்பாத்திரத்தில் ஒருமாதம் வைத்திருந்து பிறகு உபயோகிக்கலாம். இதனால் மஹாகுஷ்டம், இருதயத்தைப் பற்றிய வியாதிகள், பாண்டுரோகம், அர்புதம், குன்மம், கிரந்தி, கிருமிரோகம், காஸம், ச்வாஸம், ப்லீஹமென்னும் மண்ணீரலின் வீக்கம் இவை நிவ்ருத்தியாகும். இது 'கதிராரிஷ்டம்' எனப்படும். 60—65.

**பப்பூலாரிஷ்டம்:** - இரு நூறு பலம் கருவேலம் பட்டையை நான்கு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து, ஒரு திரோணம் மிகும்படியாகக் காய்ச்சவும். பிறகு அக்கஷாயம் ஆறியபிறகு முன்னூறு பலம் வெல்லம், பதினாறு பலம் காட்டாத்திப்பூ, திப்பிலி, ஜாதிக்காய், தக்கோலம், ஏலம், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி இவை வகைக்கு இரண்டு பலம், நாககேஸரம், இலவங்கம், மிளகு இவை ஒவ்வொரு பலம், இவ்வனைத்தையும் ஒரு மாதம் மட்பாத்திரத்தில் வைத்திருந்து, அப்பால் எடுத்து வடிக்கட்டி யுபயோகிக்கலாம். இதற்கு 'பப்பூலாரிஷ்டம்' என்று பெயர். இதனால் க்ஷயம், குஷ்டம், அதிஸாரம், ப்ரமேஹம், ச்வாஸகாஸம் இவை தீரும். 66—68½.

**திராக்ஷாரிஷ்டம், இரண்டாவது:**—ஐம்பது பலம் திராக்ஷையை இரண்டு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து,நாலில் ஒரு பங்கு மிகும்படி க்வாதப்செய்து வடிக்கட்டி ஆறியபிறகு, வெல்லம் இருநூறு பலம், இலவங்கப்பட்டை, ஏல , இலவங்கப்பத்திரி, நாககேஸரம், ஞாழல்,மிளகு, திப்பிலி, வாய்விடங்கம் இவை ஒவ்வொருபலம், இவற்றைச் சூர்ணம் செய்து அனைத்தையும் மேற்கூறிய க்வாதத்தில் சேர்த்து, நன்றாகக் கலக்கி, ஒரு மாதம் மூடிவைத்து, வடிக்கட்டி அந்த அரிஷ்டத்தை உட்கொள்ளவும். இவ்வௌஷதம் உரக்ஷதம், க்ஷயம், காஸ ச்வாஸம், தொண்டையிலுண்டாகும் வியாதிகள் முதலியவற்றைப் போக்கும்; சரீரத்தில் சேர்ந்துள்ள கெட்ட மலங்களையும் வெளிப்படுத்தும்; தேஹத்திற்கு வன்மையை யுண்டாக்கும். இதற்கு 'திராக்ஷாரிஷ்டம்' எனப் பெயர். 69—72½.

**ரோஹிதகாரிஷ்டம்:**—நூறு பலம் செம்மரப் பட்டையை நான்கு திரோணம் ஜலத்தில் சேர்த்து, நாலிலொரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி, ஆற்றி வடிக்கட்டிய பின், வெல்லம் இருநூறு பலம், காட்டாத்திப்பூ பதினாறு பலம், பஞ்சகோலம்,[1] த்ரிஜாதம், த்ரிபலை இவை ஒவ்வொரு பலம், இவற்றைச் சூர்ணம் செய்து க்வாதத்தில் சேர்த்து ஒரு மாதம் வைத்திருந்து, அப்பால் வடிக்கட்டி யுபயோகிக்கவும்; இதனால் அர்சஸ், கிரஹணீ, பாண்டு, இருதயத்தைப் பற்றிய வியாதி, ப்லீஹரோகம், குன்மம், மஹோதரம் முதலிய வயிற்றைப்

1. பஞ்சகோலம் 134-ம் பக்கம் பார்க்க.

பற்றிய ரோகங்கள், குஷ்டம், சோகை, அரோசகம் இவை நிவ்ருத்தி யாகும். இது 'ரோஹிதகாரிஷ்டம்' எனப்படும். 73—76½.

தசமூலாரிஷ்டம்:—சிறு மல்லிகை, பெருமல்லிகை, கண்டங்கத் திரி, சிறுவழுதுணை, நெரிஞ்சில், பில்வம், தழுதாழை, வாகை, பாதிரி, பெருங்குமிழ் இவை 'தசமூலம்' எனப்படும். இத்தசமூலத்தில் வகைக்கு ஐந்து பலம், சித்திரமூலம் இருபத்தைந்து பலம், தாமரைக் கிழங்கு இருபத்தைந்து பலம், வெள்ளிலோத்தி இருபது பலம், சீந் தில் இருபது பலம், நெல்லிக்கனி பதினாறு பலம், காஞ்சொறி பன் னிரண்டு பலம், கருங்காலி, உளுந்து, கடுக்காய் வகைக்கு எட்டு பலம், கோஷ்டம், மஞ்ஜிஷ்டி, தேவதாரு, வாய்விடங்கம், அதிமதுரம், கண்டு பாரங்கி, விளாம்பழம், தான்றிக்காய், வெள்ளைச்சாறணை, சவியம், ஜடாமாம்ஸி, ஞாழல், நன்னாரி, கருஞ்ஜீரகம், சிவதைவேர், அரேணு கம், சிற்றரத்தை, திப்பிலி, கமுகு, கச்சோரம், மஞ்சள், சதகுப்பி, அல்லிக்கிழங்கு, நாககேஸரம், கோரைக்கிழங்கு, வாலுளுவை, கர்க் காடகச்ருங்கி, ஜீவகம், ரிஷபகம், மேதா, மஹாமேதா, காகோலீ, க்ஷீரகாகோலீ, ருத்தி, வ்ருத்தி இவற்றில் வகைக்கு இரண்டு பலம்; இச்சரக்குகளை எட்டு மடங்கு ஜலத்தில் சேர்த்து, நாலில் ஒரு பங்கு மிகும்படியாகக் காய்ச்சி, ஒரு மட்பாத்திரத்தில் சேர்த்து வைக்கவும்; அறுபத்து நான்கு பலம் திராக்ஷையை அதற்கு நாலு மடங்கு ஜலத்தில் சேர்த் துக் காய்ச்சி, முக்கால் பாகமாக வற்றவைத்து ஆற்றி முற்கூறிய கஷா யத்துடன் கலக்கவும்; பிறகு முப்பத்திரண்டு பலம் தேனையும், நானூறு பலம் வெல்லத்தையும் அதில் சேர்த்துக் கலக்கவும்; அப் பால் முப்பது பலம் காட்டாத்திப்பூ, தக்கோலம், வேட்டிவேர், சந்த னம், ஜாதிக்காய், இலவங்கம், இலவங்கப்பட்டை, ஏலம், இலவங்கப் பத்திரி, நாககேஸரம், திப்பிலி இவற்றை வகைக்கு இரண்டு பலம் எடுத்து சூர்ணம் செய்து கல்கமாகச் சேர்க்கவும்; இதில் ஒரு சாணை மெடை கஸ்தூரியும் சேர்க்கவேண்டும். இவை யடங்கிய பாண் டத்தை பூமியில் புதைத்துவைத்து, பதார்த்தங்களிலுள்ள ஸத்துவம் அனைத்தும் கஷாயத்தில் ஊறிய பிறகு, பாத்திரத்தை வெளியி லெடுத்து, அதிலுள்ள திரவபாகத்தை வடித்துக்கொண்டு, அதில் தேற்றாங்கொட்டையைச் சிறிது தேய்த்து, கலக்கமான பாகம் அடி

யில் தங்கிவிட, மேலே நிற்கும் தெளிவான பாகத்தை வடித்தெடுத்து உபயோகிக்கவும். இதை கிரஹணீரோகர், சுவாஸம், காஸம், அரோசகம், குன்மம், பகந்தரம், வாதவியாதிகள், க்ஷயம், வாந்தி, பாண்டு ரோகம், காமாலை, குஷ்டம், அர்சஸ், மேஹரோகங்கள், அக்னிமாந்த்யம், மஹோதரம் முதலிய வயிற்றைப்பற்றிய ரோகங்கள், சர்க்கரை யென்னும் சிறு கல்லுகளுண்டாகும் மூத்திரரோகம், மூத்திரக்ருச்சிரம் என்கிற நீர்ச்சுருக்கு, தாதுக்கள் க்ஷீணமாவது இவ்வித வியாதிகளில் உபயோகிக்கலாம்; இவ்வௌஷதம் மெலிந்து போனவருக்கு புஷ்டியைத் தரும்; மலட்டுத்தனத்தையும் நிவ்ருத்தி செய்யும்; சரீர நிறம் அல்லது ஒளியையும், தேஹபலத்தையும், சுக்லதாதுவையும் செழிப்பிக்கவல்லது. இது 'தசமூலாரிஷ்டம்' எனப்படும். 77—82.

## பதினோராவது அத்தியாயம்.

### தாது சுத்தி முறை [1]

**ஸப்த தாதுக்கள்:**—பொன், வெள்ளி, பித்தளை, செம்பு, நாகம், வங்கம் அல்லது வெள்ளீயம், இரும்பு அல்லது எஃகு இவ்வேழும் 'ஸப்த தாதுக்கள்' ஆம். இவற்றைச் சுத்தி செய்து ஔஷதங்களில் உபயோகிக்கவேண்டும். 1.

**பொன் முதலியவற்றின் சுத்தி:**—பொன், வெள்ளி, பித்தளை, செம்பு, இரும்பு இவற்றை வெகு மெல்லிய தகடுகளாய் அடித்து, அக்னியிலிட்டுப் பழுக்கக் காய்ச்சி, நல்லெண்ணெய், மோர், காடி, பசு மூத்திரம், கொள்ளுக்கஷாயம் இவற்றில் ஒவ்வொன்றிலும் மும் மூன்று முறை தோய்த்தெடுக்கவும். பொன் முதலிய லோஹங்கள் இவ்வாறு செய்வதால் சுத்தியாய் விடுகின்றன. 2, 3.

---

1. பொன், வெள்ளி, செம்பு முதலிய லோஹங்கள் 'தாதுக்கள்' என்றும் கூறப்படும். கந்தகம், சிலாஜது முதலிய கனிஜ வர்க்கங்களும் தாதுவர்க்கத்தில் சேர்ந்தவையென்று சில சாஸ்திரஞ்ஞரது கொள்கை. ஆகிலும் அவற்றை சார்ங்கதரன் முதலியவர்கள் இரஸவர்க்கங்களிலேயே சேர்த்திருக்கின்றனர்.

**நாக-வங்கங்களின் சுத்தி:**—நாகம், வங்கம் இவ்விரண்டையும் தனித் தனியாக உருக்கி எருக்கம்பாலில் தோய்க்கவேண்டும்; இவ்விதம் மூன்று முறை செய்தால் அவை சுத்தமாகும். 4.

**ஸ்வர்ண பஸ்ம முறைகள்:**— (1) ஒரு பங்கு பொன்னையும் இரண்டு பங்கு பாதரஸத்தையும்[1] சிறிது காடிவிட்டு அரைத்து குளிகை மாதிரியாக உருட்டவும். பிறகு ஒரு அகலில் இக்குளிகையை வைத்து, ஸமஎடை கந்தகத்தை இதற்குக் கீழும் மேலும் சேர்த்து, மற்றொரு அகலால் மூடி, சுற்றிலும் சீலை மண்ணிட்டு, முப்பது வறட்டிகளைக் கொண்டு புடம்போடவும்; இவ்வாறு பதினான்கு முறை செய்ய ஸ்வர்ணம் நிருத்தமாக[2] பஸ்மமாய்விடும்; ஒவ்வொரு முறை புடம்போடுகையிலும் முன்மாதிரியே கந்தகம் சேர்த்துவர வேண்டியது அவசியம். (2) பொன்னை உருக்கி, அதற்குப் பதினாறில் ஒரு பங்கு நாகம் சேர்த்து சூர்ணம் செய்து, காடி விட்டு அரைத்து, குளிகைபோல் உருட்டவும்; அக்குளிகைக்கு ஸமஎடை கந்தகத்தைக் கீழும் மேலும் சேர்த்து, ஓர் அகலில் வைத்து, மேலே மற்றொரு அகலை மூடி, சுற்றிலும் சீலைமண் செய்து, இருபது வறட்டிகளைக் கொண்டு புடமிடவும்; இவ்வாறு ஏழு புடங்களிட ஸ்வர்ணம் நிருத்தமாக பஸ்மமாய்விடும். (3) இரஸம், கந்தகம் இரண்டையும் ஸமஎடை சேர்த்து, செம்மந்தாரையின் சாற்றால் அரைத்து அந்த கஜ்ஜளியை[3] வெகு மெல்லிய ரேக்குகளாகச் செய்த ஸ்வர்ணத்தின் மேல்—ரேக்குகள் எவ்வளவு கனமோ அவ்வளவு கனமாகத்—

---

1. ஸ்வர்ணம் முதலியவற்றைப் பஸ்மம் செய்தவற்காகவும், அல்லது வேறு விதமாகப் பக்குவம் செய்வதற்காகவும் உபயோகிக்கப்படும் இரஸம் கந்தகம் முதலியவற்றையும் சுத்தி செய்தே உபயோகிக்க வேண்டும். இவற்றின் சுத்தி முறைகளைப் பற்றி அடுத்த 12-வது அத்தியாயத்தில் விவரம் காணலாம்.

2. நிருத்தம் என்றால்—பஸ்மமாகச் செய்யப்பட்ட தாதுவை எவ்வுபாயத்தினாலும் அந்த நிலைமையிலிருந்து பிரித்தெடுக்கக் கூடாமை; இதுவே அபுநர்ப்பவம் என்றும் கூறப்படும்.

3. இரஸம், கந்தகம் இரண்டையும் சேர்த்து அரைத்தால் கறுத்த மைபோல் மாறிவிடும்; அது கஜ்ஜளி யெனப்படும்.

தடவி, செம்மந்தாரைப் பட்டையை அரைத்து அதனால் இரண்டு மூசைகள் செய்து, அவற்றுள் கஜ்ஜளி தடவிய பொன் ரேக்குகளை அடைத்து, பிறகு மண்ணாலாகிய மூசைக்குள் மேற்கூறிய மூசையை அடக்கி, சுற்றிலும் சீலைமண் செய்து உலர்த்தி, வறட்டிகளைக்கொண்டு கடுந்தீயிட்டெரிக்கவும். இவ்விதமே மூன்று புடங்கள் போட ஸ்வர்ணம் நன்கு பஸ்மமாகும். இந்தப் பஸ்மத்தை எவ்வித ரோகங்களிலும் உபயோகிக்கலாம். (4) செம்மந்தாரையைப் போல் சிவனார் கிழங்கைக் கொண்டும், பெருங்குரும்பையைக் கொண்டும், மனச்சிலையைக் கொண்டும் புடம்போட ஸ்வர்ணம் பஸ்மமாகும். (5) மனச்சிலை, ஈயலிங்காம் இவ்விரண்டையும் ஸமஎடை யெடுத்து, எருக்கம் பாலை விட்டுக் குழம்பாய் அரைத்து, பாவனை செய்யவேண்டும்; பாவனை செய்கையில் வெயிலில் உலர்த்தி வரவேண்டும்; ஏழு முறை பாவனை செய்து உலர்த்திய பிறகு, இந்த கல்கத்திற்கு ஸமஎடை ஸ்வர்ணத்தை உருக்கி அத்துடன் சேர்க்கவும். ஸ்வாணமும் கல்கமும் ஒன்றாகக் கூடி உருகும்படி மறுபடியும் கடுந்தீயிட்டு எரிக்கவேண்டும்; இவ்விதமே அதேவிதமான கல்கத்தை மூன்று முறை சேர்த்து ஸ்வர்ணத்தை உருக்கிவர பஸ்மமாகும். (6) மாடப்புறாவின் அல்லது கோழியின் மலத்தைத் தங்க ரேக்குகளில் நன்றாகப் பூசி, ரேக்குகளுக்கு அடியிலும் மேலும் ஸமஎடையாக கந்தகத்தைப் பொடித்துச் சேர்த்து, ஓர் அகலில் வைத்து, மற்றொரு அகலால் மூடி, சீலைமண் செய்து, ஐந்து வறட்டிகளைக் கொண்டு குக்குடபுடம்[1] போடவும். இவ்வாறு ஒன்பது குக்குட புடங்களிட்ட பிறகு முப்பது வறட்டிகள் வைத்து மஹாபுடம்[2] ஒரு முறை போடவேண்டும். இவ்விதம் செய்ய ஸ்வர்ணம் பஸ்மமாய்விடும். 5—19.

---

1. பதினாறு அங்குல அகலமும், பதினாறு அங்குலநீளமும், பதினாறு அங்குல ஆழமுமுள்ள பள்ளத்தில், கீழும் மேலும் வறட்டிகளை அடுக்கி, நடுவில் புடமிடவேண்டிய வஸ்துவை வைத்துப் போடப்படும் புடம் 'குக்குடபுடம்' எனப்படும்.

2. இரண்டு கஜம் அகலம், இரண்டு கஜம் நீளம், இரண்டு கஜம் ஆழமுமுள்ள பள்ளத்தில், ஆயிரம் வறட்டிகளுக் கிடையில் போடப்படும் புடம் 'மஹாபுடம்' என்று சொல்லப்படும்.

**ஸ்வர்ணத்தின் குணங்கள்:**—முற்கூறியவாறு ஏதேனும் ஒரு வகையில் பக்குவம் செய்த ஸ்வர்ணத்திற்கு இனிப்பு அல்லது கசப்பான சுவையும், ஸ்நிக்த்தம், சீதம், குரு, விஷக்னம், இரஸாயனம் என்கிற குணங்களும், புத்தி, ஞாபகசக்தி முதலியவற்றை விருத்தி செய்யும் தன்மையும் உண்டு. 20.

**ரஜதபஸ்ம முறைகள்:**—(1) மெல்லிய தகடுகளாக அடித்த ஒரு பங்கு வெள்ளியின்மேல் ஏதேனும் அம்லத்தினால் ஒரு யாம காலம் ஆட்டிய மூன்று பங்கு தாளக கல்கத்தைத் தடவி, அவற்றை மூசைகளினுள் அடைத்து, முப்பது வறட்டிகளைக் கொண்டு புடமிடவும். புடத்திலிருந்தெடுத்து மறுபடியும் தாளக கல்கத்தை முன்போலவே தடவி மூசையிலிட்டு புடம் போடவும்; இவ்வாறு பதினான்கு புடங்களிட வெள்ளி பஸ்மமாய்விடும். (2) பொன்னிமிளையைக் கள்ளிப்பால் விட்டு அரைத்து, வெள்ளி ரேக்குகளில் தடவி, தாளகத்தைக் கொண்டு புடமிட்டதுபோலவே பதினான்கு முறை புடம்போட பஸ்மமாகும்.[1] 21—24.

**தாம்ர பஸ்மம்:**—தாம்ரத்தை மெல்லிய ரேக்குகளாக அடித்து, ஏதேனும் புளிப்பு வகைகளில் சேர்த்து, மூன்று நாட்கள் எரித்து ஆவியில் பாகஞ்செய்து, பிறகு அத்தகடுகளைக் கல்வத்திலிட்டு, அவற்றிற்கு நாலில் ஒரு பங்கு இரஸம் சேர்த்துக் காடிவிட்டு அரைக்கவும்; பிறகு எலும்ிச்சம்பழரஸம் முதலிய ஏதேனும் அம்லத்தினால் அரைத்த இரு மடங்கு கந்தகத்தை அத்தகடுகளின்மேல் பூசி, அவற்றை கோளம் போல் உருட்டவும்; பிறகு பொன்னாங்கண்ணியையாவது, புளியாரையையாவது, வெள்ளைச்சாறடையையாவது அரைத்து, அக்

---

1. கீழே ஸ்வர்ணத்திற்கு புடம் முதலியது கூறியபிறகு, அதன் குணங்கள் சுருக்கமாய் விவரிக்கப்பட்டன; அதுபோலவே வெள்ளி முதலிய சிலவற்றிற்கும் குணம் கூறப்படவில்லை யாதலால், டிப்பணியில் அவ்வித தாதுக்களின் குணங்கள் கூறப்படுகின்றன:—

வெள்ளிக்கு—ஸ்நிக்த்தம், துவர்ப்பு அல்லது புளிப்பு, ஜீர்ணமான பின்பு மதுரமாக மாறுதல், வாத பித்த ஹரம், சரீரத்திற்கு வன்மையைத் தருதல், விஷக்னம் முதலியவை குணங்களாம்.

கல்கத்தைத் தாம்ரகோளத்தின்மேல் சுற்றிலும் ஒரு அங்குலம் கனம் பூசவேண்டும்; அது சிறிது உலர்ந்ததும், ஒரு சிறிய மட்பாத்திரத்தினுள் வைத்து, அப்பாத்திரத்தை மற்றொரு பெரிய பாத்திரத்தினுள் வைத்துச் சுற்றிலும் மணலைப் பரப்பி, பாத்திரத்தின் வாயை ஒரு அகலால்மூடி, சாம்பர் உப்பு இவ்விரண்டையும் ஜலம் விட்டரைத்து, அதனால் அப்பாத்திரத்திற்கும் அகலுக்கும் இடையிலுள்ள சந்துகளை அடைத்து, அடுப்பில் ஏற்றி, முதலில் சிறு தீயிட்டு கிரமமாக அதைக் கடுந்தீகொண்டு நான்கு யாமகாலம் எரித்துத் தீயிலிருந்து இறக்கி, ஆறிய பிறகு உள்ளடங்கிய தாம்ரம் முதலியதையெடுத்து, கருணைக்கிழங்கின் சாற்றைவிட்டு ஒரு நாள் அரைத்து, கோளமாகச் செய்து, அந்த கோளத்தினுள் அரைவாசி கந்தகத்தைச் சிறிது நெய்விட்டு அரைத்து ஒரு மூசையில் அடைத்து, கஜபுடம்[1] இட்டு எரிக்கவேண்டும். அது தானாகவே ஆறியபின்பு மூசையிலடங்கிய தாம்ர பஸ்மத்தை யெடுத்துக் கொள்ளவும். இது ரோகிகளுக்கு உபயோகிக்கக் கூடியவாறு விசித்தமாயிருக்கும். ஸாதாரண தாம்ரத்தைப்போல் இது வாந்தி, தலைச்சுற்றல், தளர்ச்சி, மயக்கம் முதலிய துர்க்குணங்களைச் சிறிதுமுண்டு பண்ணாது.[2] 25—32.

ஆர பஸ்மமும், காம்ஸ்ய பஸ்மமும்[3]:—காடி முதலியவற்றால் சுத்தி செய்த பித்தளையை வெகு மெல்லிய ரேக்குகளாகச் செய்து

---

1. அகலத்தில் $13\frac{3}{4}$ கஜமும், நீளத்தில் $13\frac{3}{4}$ கஜமும், ஆழத்தில் $13\frac{3}{4}$ கஜமுமுள்ள ஒரு குண்டத்தில், முக்கால்பாகம் வரையில் வறட்டிகளை யடுக்கி, அதன்மேல் புடம் போடவேண்டிய பாண்டத்தை அமர்த்தி, அதன்மேல் பள்ளத்தின் வாயளவும் வறட்டிகளிட்டு போடப்படுவது 'கஜபுடம்' எனப்படும். சிலர் இரண்டுமுழ கன விஸ்தீர்ணமுள்ள பள்ளத்திலிடப்படுவதை கஜபுடம் என்பார்கள்.

2. தாம்ரபஸ்மத்தின் குணங்கள்:—சிறிது இனிப்பும் துவர்ப்புமுள்ளது; வயிற்றில் ஜீர்ணமாகும்போது கசப்பு அல்லது கார்ப்பாக மாறும்; கபம், பித்தம் இவற்றாலுண்டாகும் கோளாறுகள் நிவ்ருத்தியாகும்; குன்மம், குஷ்டம், மூலரோகம், சோகை, பாண்டு, மஹோதரம், பித்தமயக்கம் முதலியதைப் போக்கும். பலமுடபண்ணும்.

3. ஆரபஸ்மம்—பித்தளை பஸ்மம். காம்ஸ்ய பஸ்மம்—வெண்கல பஸ்மம்.

கொண்டு, அதற்குச் சமஎடையான கந்தகத்தை எருக்கம்பால் விட்டு அரைத்து, அதைப் பித்தளை ரேக்குகளின்மேல் தடவி, அத்தகடுகளை ஒரு மூசையிலடைத்து கஜபுடத்தில் எரிக்கவும்; இவ்வாறு இரண்டு முறை புடம்போட பித்தளை பஸ்மமாய்விடும்.[1] பித்தளைக்குக் கூறிய முறைப்படியே வெண்கலத்தையும் புடம்போட்டு பஸ்மம் செய்யலாம்[2]. 33—34½.

**தாம்ரம், பித்தளை, வெண்கலம் மூன்றையும் பஸ்மம் செய்ய மற்றொரு முறை:**—தாம்ரம், பித்தளை, வெண்கலம் இவற்றின் தகடுகளின்மேல், அவற்றிற்குச் சமஎடை கந்தகத்தை எருக்கம்பால், ஆலம்பால், சொக்கிமிலைச்சாறு, பழமுண்ணிப் பாலையின் சாறு இவற்றால் அரைத்துத் தடவி முன்போல் புடமிட்டால் அம்மூன்று லோஹங்களும் பஸ்மமாகும்; 35½.

**நாகபஸ்ம முறைகள்:**—(1) சுத்தமான நாகத்தின்மேல் வெற்றிலைச் சாற்றாலரைத்த மனச்சிலையைத் தடவி, முப்பத்திரண்டு புடம் போட நிருத்தமாக பஸ்மமாகும். (2) சுத்தமான நாகத்தை ஒரு மட்பாத்திரத்திலிட்டு உருக்கி, அரசம்பட்டை, புளியம்பட்டை இவற்றை நாகத்திற்கு நாலில் ஒரு பங்கு சேர்த்து இரும்புத்துடுப்பால் கிளற வேண்டும். ஒரு யாமநேரத்தில் நாகம் அப்பட்டைகளின் சாம்பரோடு கலந்து சூர்ணமாய்விடும். பிறகு அந்த நாகத்திற்குச் சமஎடை மனச்சிலையைச் சேர்த்து, காடி விட்டு இரண்டையும் அரைத்துப் புடம் போடவும்; புடம் ஆறிய பின்பு நாகத்தை யெடுத்து மீண்டும் அவ்விதமே மனச்சிலை சேர்த்து காடி விட்டரைத்து புடம் போடவேண்டும். இவ்விதமாக அறுபது புடமிட்டால் நாகம் பஸ்மமாகும்[3]. 36-39½.

---

1. பஸ்மமான பித்தளையின் குணங்கள்:—ரூக்ஷம், க்ருமிஹரம், விஷஹரம், வ்ருஷ்யம், இரஸாயனம் என்னும் குணங்களும், வாதரோகங்கள், பாண்டு, ப்லீஹரோகம் இவற்றைப் போக்கும் தன்மையும் இதற்கு உண்டு.

2. வெண்கலத்தின் குணங்கள்:—பஸ்மமானபின் கசப்பாயிருக்கும்; உஷ்ணவீர்யம்; வாந்தியை யுண்டுபண்ணும். நேத்திரரோகங்களில் உபயோகிக்க உதவும். தீபனமாகவும் பாசனமாகவும் வேலை செய்யும்.

3. நாகத்தின் குணங்கள் :—உஷ்ணவீர்யம், கப-வாதஹரம், குருகுணம், லேகநம், இரஸாயனம், சுக்ரலம், ஆகவே சரீரபலத்தை விருத்தி செய்யக் கூடியது. [நாகம்—காரீயம் அல்லது வீஸம்.]

**வங்கபஸ்மம்:**—ஒரு மட்பாத்திரத்தில் வங்கத்தை உருக்கி, அதற்கு நாலில் ஒரு பங்கு புளியம்பட்டையும் அரசம் பட்டையும் சேர்த்து, இருப்புத் துடுப்பால் கிளறி வர, இரண்டு யாமத்தில் பொடியாய் விடும். அப்பால் அச்சூர்ணத்திற்கு ஸமஎடை தாளகம் சேர்த்து, காடி விட்டு அரைத்து, அகல்களில் வைத்து ஸீலமண்செய்து, கஜ புடத்தில் எரிக்கவும்; மறுபடியும் அதில் பத்திலொரு பங்கு தாளகம் சேர்த்துக் காடியினால் ஒரு யாமநேரம் ஆட்டி புடமிடவும். இவ்வாறு பத்து புடங்களிட வங்கம்[1] பஸ்மமாகும். 40—43.

**அயபஸ்ம முறைகள்:**—(1) சுத்திசெய்த மெல்லிய அயப் பொடிகளைச் சிந்திற் கொடியின் சாறு விட்டரைத்து, மூன்று புடம் போடவும். சோற்றுக் கற்றாழையின் சாற்றால் அவ்விதமே அரைத்து மூன்று புடம் போடவேண்டும். வெள்ளைச் சாறடைச் சாற்றால் அதை மீண்டும் அரைத்து ஆறு புடங்களிடவும். இவ்விதம் செய்தால் அயம் அல்லது எஃகு பஸ்மமாய்விடும். (2) எஃகு அல்லது அயப்பொடிக்குப் பன்னிரண்டில் ஒரு பாகம் லிங்கம் சேர்த்து, சோற்றுக் கற்றாழைச் சாற்றால் இரண்டு யாமமளவும் அரைத்து புடமிடவும். இவ்விதம் ஏழு புடங்களிட அயம் அல்லது எஃகு பஸ்மமாகும். (3) வெள்ளைச் சாறடைச் சாற்றாலும், சிந்திற்கொடியின் சாற்றாலும், முலைப்பாலாலும், எருக்கம்பாலாலும் அயத்தை அரைத்து முன்போலவே புடம்போட நன்கு பஸ்மமாகும். (4) ஒருபங்கு இரஸம், இரண்டு பங்கு கந்தகம் இரண்டையும் ஒன்றாகக் கலந்து அரைத்து கஜ்ஜளியாகச் செய்து, இவ்விரண்டுக்கும் ஸமஎடை அயச்சூர்ணத்தைச் சேர்த்து, சோற்றுக் கற்றாழைச் சாற்றால் இரண்டு யாமமளவும் அரைத்து, ஒரு கோளம்போல் அவற்றை யுருட்டி, ஒரு தாம்ரபாத்திரத்தில் வைத்து வெயிலில் சற்று நேரம் உலர்த்தி, ஆமணக்கிலைகளால் அதைச் சுற்றி, மீண்டும் அரை யாமகாலம் வெயிலில் வைக்க நன்கு சூடுகொள்ளும்; பிறகு அதை அப்படியே தானியக் களஞ்சியத்தில்

---

1. வங்கத்தின் குணங்கள்:—சிறிது உப்பும் காரமும் கசப்பும் கலந்த சுவையுள்ளது; ரூக்ஷம், கபஹரம், பித்தஹரம், க்ருமிஹரம்; பாண்டு, மேஹரோகம் இவற்றைப் போக்கும்; லேகநம், இரஸாயனம் என்கிற குணங்களுமுண்டு; [வங்கம்—வெள்ளீயம் அல்லது தகரம்.]

புதைத்து, அதன்மேல் ஒரு அகலை மூடி, அதற்குமேல் தானியத்தைப் பரப்பிவிடவும்; பிறகு மூன்று நாட்கள் கழித்து அதையெடுத்து கல்வத்திலிட்டு அரைத்து, வஸ்திரகாளிதம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்ய ஜலத்தில் மிதக்குமாறு அயம் பஸ்மமாகும்.[1] 44—51.

**எல்லா தாதுக்களையும் புடமிட பொதுமுறை :**—அயபஸ்மத்தைப் பக்குவம் செய்ய முற்கூறிய நான்காவது முறையை யனுஸரித்து, ஸ்வர்ணம் முதலிய எல்லா லோஹங்களையுமே பஸ்மம் செய்யலாம். மேலும் மனச்சிலை, கந்தகம், எருக்கம்பால் இம் மூன்றையும் அரைத்து ஸ்வர்ணம் முதலிய எந்த தாதுக்களின்மேலும் தடவி பன்னிரண்டு புடங்களிட அவை பஸ்மமாய்விடும். 52½.

## உபதாதுக்கள்.

**ஸப்த உபதாதுக்கள் :**—சிமிளை, மயில்துத்தம், அப்ரகம், நீலாஞ்ஜனம், மனச்சிலை, தாளகம், ரஸகம் என்கிற இவ்வேழும் உபதாதுக்கள் என்று கூறப்படுகின்றன.[2] 53½.

**ஸ்வர்ணமாக்ஷிக சுத்தி :**—பொன்னிமிளை மூன்று பாகம், இந்துப்பு ஒரு பாகம்; இவற்றைக் கொடிமாதளம்பழச் சாற்றிலாவது, எலுமிச்சம்பழச் சாற்றிலாவது சேர்த்து, அடுப்பிலேற்றி பக்குவம் செய்யவும். இதை ஒரு இரும்புப் பாத்திரத்தில் சேர்த்து நன்றாகக் கிளறிக்கொண்டே பக்குவம் செய்யவேண்டும். பாத்திரம் சிவந்துவரும் ஸமயத்தில் அதை இறக்கி விடலாம். இவ்விதம் செய்தால் ஸ்வர்ண மாக்ஷிக மென்னும் பொன்னிமிளை சுத்தியாய்விடும். 54—55½.

**ஸ்வர்ணமாக்ஷிக பஸ்மம் :**—சுத்தியான பொன்னிமிளையைக் கொள்ளின் கஷாயத்தினாலாவது, எண்ணெயினாலாவது, மோரைக்

---

1. அயத்தின் குணங்கள் :—சுவையில் துவர்ப்பு; சில முறைகளில் கசப்பாயுமிருக்கும்; உஷ்ண வீர்யம், ரூக்ஷம், கப-பித்த ஹரம்; சோகை, பாண்டு, குஷ்டம், அர்சஸ், பிரமேஹம், வயிற்றுவலி, முதலியதைப் போக்கும்; சிறந்த இரஸாயனமாகவும் உபயோகப்படும்.

2. பொன்னிமிளை, வெள்ளிமிளை, மயில்துத்தம், வெண்கலம், ஈயம், விந்தூரம், சிலாஜது இவற்றை ஸப்த உப தாதுக்கள் என்று வேறு சிலர் வழங்குவர்.

கொண்டாவது, வெள்ளாட்டு மூத்திரத்திலாவது அரைத்துப் புடம் போட பஸ்மமாகும். 1 56½.

**துத்த சுத்தி:**—துத்தத்தை வெள்ளரிக்காயின் சாற்றாலும், சிறு குறிஞ்சாவின் சாற்றாலும், எலுமிச்சம் பழ ரஸத்திலும் ஒவ்வொரு நாள் பாவனை செய்து, கடும் வெயிலில் வைத்து ஸூர்யபுடம் போட்டால் சுத்தமாகும். அல்லது பூனை, புறா, இவற்றின் மலத்தினால் மயில் துத்தத்தை அரைத்துவிட்டால் சுத்தமாகும். 57, 58.

**துத்த பஸ்மம்:**—அவ்விதம் சுத்திசெய்த மயில்துத்தத்துடன் அதற்குப் பத்தில் ஒரு பங்கு வெண்காரம் சேர்த்து அரைத்து ஒரு புடமிடவும்; பிறகு தயிரால் ஆட்டி ஒரு புடமும், தேன்விட்டு அரைத்து ஒரு புடமும் போடவேண்டும். இப்படிச் செய்தால் துத்தம் நன்கு பஸ்மமாகும்.2 59.

**அப்ரக சுத்தி:**—கிருஷ்ணாப்ரகம் என்கிற கருநிறமான அப்ரகத்தை அக்னியிலிட்டு ஊதி யெடுத்து, பாலில் சேர்த்து, அவற்றை மெல்லிய தளங்களாகப் பிளந்து, முள்ளுக்கீரையின் சாற்றிலும், காடியிலும் தனித்தனியே எட்டு யாமம்வரையில் பாவனை செய்ய அப்ரகம் சுத்தமாகும். 60.

**அப்ரக பஸ்மமுறைகள்:**—(1) அப்பால் அதை தானியாப்ரகம் செய்து உலர்த்தி, பிறகு எருக்கம்பால் சேர்த்து ஒரு நாள் முழுவதும் அரைத்து, எல்லாவற்றையும் சக்கரம்போல் அடை தட்டவும்.

---

1. மாக்ஷிகத்தின் குணங்கள்:—சுவையில் முதலில் மதுரமாயும் அப்பால் சிறிது காரமும் கசப்பும் கலந்ததாயும் இருக்கும்; உஷ்ண வீர்யம்; கபஹரம்; அர்சஸ், சோகை, மஹோதரம் முதலிய வயிற்றைப் பற்றிய வியாதிகள், மூத்திர வியாதிகள், அக்னிமாந்த்யம் முதலியவற்றில் உபயோகிக்கக் கூடியது. விஷஹரம், வ்ருஷ்யம் என்கிற குணங்களு முண்டு.

2. துத்தத்தின் குணங்கள்:—துவர்ப்பும் சிறிது காரமுமான சுவையுள்ளது: உஷ்ண வீர்யம்; லேகநம், ஆகவே வமனமுண்டாக்கும்; விஷ ஸம்பந்தமான தோஷங்களி லுபயோகிக்கத் தகுந்தது. வெண்குஷ்டம், நேத்திரரோகம் இவற்றிலும் உபயோகமாகும்.

அதை எருக்கிலைகளால் சுற்றி கஜபுடத்தில் எரிக்கவும். இவ்வித மாகவே மறுபடியும் அரைத்து ஏழு முறை புடம் போடவேண்டும். அதற்குப் பிறகு ஆலம் விழுதுகளின் க்வாதத்தினால் மூன்று முறை அரைத்து மூன்று புடம் போடவும். இவ்வாறு செய்ய அப்ரகம் நன்கு பஸ்மமாகும். இதை அநுபானங்களின் முறைகளைக்கொண்டு பல வித ரோகங்களில் உபயோகிக்கலாம். இவ்விதமாக பஸ்மமான அப்ர கம் சீக்கிரம் கிழத்தனமுண்டாகாமல் சரீரத்தை திடமாகச் செய்யும். (2) சுத்தமான தான்யாப்ரகத்தையும்[1], அதற்கு ஆறிலொரு பங்கு சுக்கையும், அவ்வளவு கோரைக் கிழங்கையும் சேர்த்து, காடி விட்டு ஒருநாள் அரைக்கவேண்டும். மற்றொரு நாள் சித்திரமூல ஸ்வரஸம் அல்லது சித்திரமூலக் கஷாயத்தினால் அவற்றை அரைத்து கஜபுடம் போடவேண்டும். அதை யெடுத்து மீண்டும் த்ரிபலாக்வாதத்தினால் மூன்று முறை அரைத்து முன்போல் மூன்றுமுறை புடம் போடவும். பிறகு சிற்றாமுட்டி, பசுமூத்திரம், நிலப்பனங்கிழங்கு, துளஸி, கரு ணைக்கிழங்கு இவற்றின் சாற்றால் தனித்தனி மூன்று முறை ஆட்டி மும்மூன்று புடங்களிடவேண்டும். இவ்விதம் பக்குவம் செய்ய அப்ர கம் நன்றாக பஸ்மமாகும்.[2] 61—67½.

நீலாஞ்ஜனம் முதலியவற்றின் சுத்தி:—நீலாஞ்ஜனக் கற்களை சூர்ணம் செய்து, எலுமிச்சம்பழ ரஸத்தில் சேர்த்து ஒரு நாள் வெயி

---

1. அப்ரகத்தை நன்கு பொடித்து, சுணையுள்ள நெல்லுடன் கலந்து, ஒரு வஸ்திரத்திற் கட்டி, ஒரு வாயகன்ற பாத்திரத்தில் ஏதே னும் காடி அல்லது புளித்த அரிசி கழுவிய நீரை வார்த்து, அதில் அப்ரகப் பொடியும் நெல்லுமடங்கிய வஸ்திரத்தின் மேற் புறத்தைப் பிசைந்து அலசவும்; அப்பொழுது வெகு நுண்ணிய பொடிகளாக அப்ரகம் வஸ்திரத்தின் த்வாரங்களால் வெளிவரும். அது தான் **தான்யாப்ரகம்** எனப்படும். மிக்க மிருதுவான (வெண்ணெய் போன்ற), தான்யாப்ரகமே **நவநீதாப்ரகம்** எனப்படும்.

2. அப்ரகபஸ்ம குணங்கள்:—பிரமேஹம், க்ஷயம், பாண்டு, கிரஹணீ இவற்றில் உபயோகிக்கலாம்; அந்தந்த அநுபானங்களைக் கொண்டு குஷ்டம், ச்வாஸம், காஸம், மஹோதரம் முதலிய ரோகங் களிலும் உபயோகிக்கக்கூடும்.

யில் வைத்து பாவனை செய்ய, அவை சுத்தமாகும். இவ்விதமாகவே கைரிகமென்னும் சாவிக்கல், அன்னபேதி, வெண்காரம், பலகறை, துவரீ அல்லது ஸௌராஷ்ட்ர ம்ருத்திகை, சங்கு, கங்குஷ்டமென்னும் ஒருவித சாவி இவைகளையும் சுத்திசெய்யலாம்.[1] 68—69½.

மனச்சிலா சுத்தி:—மனச்சிலையை டோலாயந்திரத்தில்[2] கட்டி, மூன்று நாட்கள் வெள்ளாட்டு மூத்திரங்கொண்டு பாகம் செய்து, பிறகு ஆட்டின் பித்த நீரில் ஒரு தடவை பாவனை செய்ய மனச்சிலை சுத்தியடையும்[3]. 70½.

தாளக சுத்தி:—தாளகத்தை நன்கு சூர்ணம் செய்து டோலா யந்திரத்தில் கட்டி, காஞ்ஜிகமென்னும் காடியிலிட்டு ஒரு யாமம் பக்குவம் செய்து, அப்பால் பூசணிக்காய் ரஸத்திலும், பிறகு நல்லெண்

---

1. கைரிகம் முதலியவற்றின் பாக விஷயங்களை இச்சிறு ஸங்கிரஹ கிரந்தத்தில் விவரிக்காவிடினும், நீலாஞ்ஜனத்தைப் போலவே சுத்தி செய்யக்கூடியவை யென்கிற ஒரு ஸம்பந்தத்தைக் கொண்டு அவையும் இங்கு கிரஹிக்கப்பட்டனவாம். [நீலாஞ்ஜனத்தை பஸ்மம் செய்வதில்லை; ஆகிலும் மனச்சிலையிலிருந்து ஸத்துவமெடுப்பது போல் இதிலிருந்தும் ஸத்துவமெடுக்கக்கூடும். நீலாஞ்ஜனத்தின் குணங்கள்:—சீதவீர்யம், நேத்திர ரோகங்களில் உபயோகிக்கக் கூடியது, விஷஹரம், கபவாதஹரம்.]

2. டோலா யந்திரம்:—சுத்தி செய்யவேண்டிய வஸ்துவை ஒரு வஸ்திரத்தில் கட்டி, ஏதேனும் திரவ பதார்த்தத்துடன் கூடிய ஒரு பாத்திரத்தின் முகத்தில் குறுக்காக ஒரு கொம்பை வைத்து அதில் அவ்வஸ்திரத்தைக் கட்டி பாத்திரத்தினுள் தொங்கவிட்டு, எரித்தல் போட்டு அதிலிருந்தெழும் ஆவியில் அவ்வஸ்துக்களைச் சுத்தி செய்வதற்கான இவ்வகையானது 'டோலாயந்திரம்' எனப்படுகின்றது.

3. மனச்சிலை முதலியவற்றிலிருந்து ஸத்துவமெடுக்கும் முறை பிறகு சுருக்கமாகக் கூறப்படுகிறது. மனச்சிலையின் குணங்கள்:— காரமும் கசப்புங்கலந்த சுவையுள்ளது; உஷ்ணவீர்யம், விஷஹரம்; சர்மரோகங்களைப் போக்கும்; கபஹரம், வாதஹரம், அக்னிமாந்தியத்தையும் அகற்றும்.

ணையிலும், பிறகு த்ரிபலா க்வாதத்திலும் அவ்விதமே பக்குவம் செய்ய அது சுத்தமாகும்[1]. 71—72½.

இரஸக சுத்தி:—இரஸகமென்னும் சிறிது கடினமான ஒரு வகை வெண் தாதுவைப் பசு மூத்திரத்தில் ஏழு நாள் டோலா யந்திரத்தைக் கொண்டு பக்குவம் செய்ய சுத்தியாகும்.[2] பிறகு எல்லா வேலைகளிலும் உபயோகிக்கலாம். 73½.

தாதுக்களின் ஸத்வபாதநம்:—செவ்வரக்கு, மத்ஸியம், ஆட்டுப் பால், வெண்காரம், மான் கொம்பு, எள்ளுப் பிண்ணாக்கு, கடுகு, முருங் கப்பட்டை, குன்றுமணிவேர், வெல்லம், இந்துப்பு, கம்பளம், வாற் கோதுமை, கடுகரோகிணீ, நெய், தேன் இவற்றுள் கிடைக்கக்கூடிய பதார்த்தங்களுடன் முற்கூறிய உபதாதுக்களைக் கலந்து, அவற்றை மூசையில் சேர்த்துக் கடுஞ்சூட்டில் எரிக்க அவற்றிலிருந்து வெகு துல் லியமான ஸத்துவம் வெளியாகும்.[3] 74—76.

## இரத்தினங்கள்.

வஜ்ர சுத்தி:—வஜ்ரம் அல்லது வைரமென்னும் இரத்தினத்தை கண்டங்கத்திரி வேரைப் பிளந்து அதனுள் மறைத்து வைத்து, ஒரு வஸ்திரத்தில் கட்டி, கொள், கோத்ரவம் இவற்றின் கஷாயத்தில் டோலா யந்திரத்தைக் கொண்டு மூன்று நாட்களளவும் பக்குவம் செய் யவும். இவ்வாறு பக்குவம் செய்த வைரத்தைக் காய்ச்சிக் காய்ச்சிக் கழுதை மூத்திரத்திற் போடவும்; அவ்விதம் இருபத்தோருமுறை செய்ய வஜ்ரம் நன்கு சுத்தமாகும். 77—78.

வஜ்ர பஸ்மம்:—(1) சிறிது தாளகத்தை மூட்டுப் பூச்சிகளின் இரத்தத்தால் அரைத்து, கோளமாகச் செய்து, அதனுட்புறத்தில் சுத்தி செய்த வஜ்ரத்தை மறைத்து வைத்து, அக்கினியில் வைத்து

1. தாளக குணங்கள்:—காரமான சுவையுள்ளது; உஷ்ணவீர் யம், ஸ்நிக்த்தம், குஷ்டஹரம், விஷஹரம்; சர்மரோகங்களை நீக்கும், வாதரோகங்களைப் போக்கும்.

2. இரஸகத்தின் குணங்கள்:—ஸகல மேஹங்களிலும், நேத்திர ரோகங்களிலும் உபயோகிக்கலாம்.

3. ஸத்துவம்:—பஸ்மத்தினும் அதிக வீர்யமுள்ள ஒருவித பாகம்; வெண்மையாகவும், தளதளப்பாகவும் இருக்கும்.

ஊதவும்; அந்த கோளம் நன்கு எரிந்து அக்னிவர்ணமாயிருக்கையில், குதிரையின் சிறுநீரில் தோய்க்கவும். மீண்டும் முன்போலவே தாளகத்தை கோளம் செய்து அதில் வஜ்ரத்தை யடக்கி புடம் போடவேண்டும். இவ்விதமாக இருபத்தோருமுறை எரித்தெடுக்க வஜ்ரம் பஸ்மமாகும். (2) அல்லது பெருங்காயம், இந்துப்பு, கொள் இவற்றை ஜலத்தில் சேர்த்துக் காய்ச்சி, வஜ்ரத்தை அக்னியிலிட்டுப் பழுக்கக் காய்ச்சி, மேற்கூறிய கஷாயத்தில் சேர்க்கவும்; இவ்விதமாக இருபத்தோரு தடவை செய்ய வஜ்ரம் பஸ்மமாகும். (3) அல்லது ஒரு வெண்கலப் பாத்திரத்தில் தவளையைப் பிடித்துவைக்க, அது பயத்திஞல் மூத்திரமிடும்; அதில் வஜ்ரத்தைக் காய்ச்சிக் காய்ச்சி பலமுறை தோய்க்க பஸ்மமாகும்[1]. 79—83.

வைக்ராந்த சுத்தி முதலியது:—வைக்ராந்தத்தையும் வஜ்ரத்தைப் போலவே சுத்தி செய்யலாம். கருடப் பச்சைக் கல்லையும் வைடூர்யத்தையும் இவ்விதமே சுத்தி செய்யலாம். அதை மறுபடியும் அக்னியில் காய்ச்சிக் காய்ச்சி குதிரை மூத்திரத்தில் தோய்க்கவும்; இவ்விதம் பதிஞன்கு முறை செய்து, அப்பால் சிறுகுறிஞ்சாவின் வேர், இலை, தண்டு, புஷ்பம், காய் இவ்வனைத்தையும் கல்கம்போல் அரைத்து, அக்கல்கத்திஞள் அவ்வைக்ராந்தத்தை மறைத்து, மூசையிஞள் அடக்கம் செய்து, புடம் போடவும் இவ்வாறு ஏழு தடவை புடம்போட வைக்ராந்தம் பஸ்மமாகும். இந்த பஸ்மத்தை வஜ்ரபஸ்மத்திற்குப் பதிலாகவும் உபயோகிக்கலாம்[2]. 84—85½.

நல்முத்து முதலியவற்றின் சுத்தி:—தழுதாழையின் ஸ்வரஸத்தில் நல்முத்து, பவளம், மற்றுமுள்ள இரத்தினங்கள் இவற்றை டோலாயந்திரத்திற்கட்டி ஒரு யாமகாலம் ஆவியிற் பக்குவம் செய்ய அவை நன்கு சுத்தியாகும். 86½.

---

1. வஜ்ரத்தின் குணங்கள்:—பல்யம், ஆயுஷ்யம், வ்ருஷ்யம், இரஸாயனம், பருஹ்மணம்; அதிகமாஞல் விஷகுணத்தைக் காட்டும்.

2. வைக்ராந்தத்தின் குணங்கள்:—மேஹரோகம், க்ஷயம், கிரஹணீ, காஸம் முதலியவற்றைப் போக்கும்; வ்ருஷ்யம், இரஸாயனம், பல்யம், தீபநம். வஜ்ரத்திற்குக் கூறிய மற்ற குணங்களும் இதற்குண்டு. [வைக்ராந்தம் என்பது ஸ்படிகம்போன்ற ஒருவித கல்.]

நல்முத்து முதலியவற்றின் பஸ்மம்:—சோற்றுக் கற்றாழையின் சாறு, முள்ளுக்கீரையின் சாறு, முலைப்பால் இவற்றைக்கொண்டு நல்முத்து, பவளம் முதலிய இரத்தினங்களை நன்றாக அரைத்து ஏழு தடவை புடம்போட, அந்தந்த இரத்தினமும் அதததற்கேற்ற நிறத்துடன் பஸ்மமாகும். இதற்குமுன் ஸ்வர்ணமாக்ஷிகத்திற்குக் கூறிய விதமாக நல்முத்து முதலியவற்றையும் பஸ்மம் செய்யலாம். அல்லது வஜ்ரத்தைப்போலவே ஸகல இரத்தினங்களையும் சுத்தி செய்து பஸ்மம் செய்யலாம்.[1] 87—89½.

சிலாஜது சுத்தி:—கோடை காலங்களில் மலைப்பிராந்தங்களிலிருந்து உருகி வெளிவரும் சிலாஜதுவை எடுத்துவந்து, பசும்பால், த்ரிபலாக்வாதம், கரிசிலாங் கண்ணிச்சாறு இவற்றால் ஒவ்வொரு நாள் அரைத்து வெயிலில் உலர்த்தி புலர்த்தி யெடுத்தால் சிலாஜது சுத்தமாகும். 90, 91.

சிலாஜது பஸ்மம்:—சிலை யுருவமான சிலாஜதுவைச் சிறு சிறு துண்டுகளாகப் பொடித்து, மிகவும் சூடான ஜலத்தில் சேர்த்து ஒரு யாமகாலம் வைத்திருந்து, அப்பால் நன்றாக அரைத்துக் கடைந்து, வடிகட்டி, அந்த ஜலத்தை ஒரு மட்பாத்திரத்தில் எடுத்து வெயிலில் வைத்திருக்கவும்; பிறகு அதன் மேற்புறத்திலுள்ள குழம்பான பாகத்தை வடித்தெடுத்து மீண்டும் வெயிலில் வைக்கவேண்டும். இவ்வாறு இரண்டு மாத காலம் மேன்மேலும் வடித்து வெயிலில் வைத்து வந்தால் ஔஷதமாய் உபயோகிக்கத்தகுந்த நிலைமை சிலாஜதுவுக்கு உண்டாகும். இவ்வித சிலாஜதுவை நெருப்பில் சேர்த்தால் லிங்கம் போல் உருகி மேலெழுந்துவரும்; புகை சிறிதும் இராது. பாத்திரத்தின் அடியில் தங்கியிருக்கும் அம்சத்தையும் அநேகமுறை ஜலத்தில்

1. நல்முத்தின் குணங்கள்:—சுவையில் மதுரம், சீதவீர்யம், நேத்திர ரோகங்களைப் போக்கும்; விஷஹரம்; க்ஷயரோகம், வாயிலுண்டாகும் புண் முதலியவற்றையும் போக்கும்; பலம் தேஹபுஷ்டி இவற்றையும் தரும்; பித்தத்தையும் போக்கும். பவளத்தின் குணங்கள்:—கபம் முதலிய தோஷங்களை நெகிழச் செய்து வெளிப்படுத்தும்; நேத்திர தோஷங்களைப் போக்கும்; க்ஷயம், இரத்தபித்தம், காஸம் இவற்றை நிவ்ருத்தி செய்யும்; தீபநம் பாசநம் என்கிற குணங்களுமுண்டு.

கலக்கி வெயிலில் வைத்துவர அதுவும் ஔஷத முறைக்கு உபயோகமாகும்.[1] 92—96½.

மண்டூரம்;—தான்றிமரக் கட்டைகளிட்டு எரிக்கப்படும் அக்னியில் இரும்புக்கிட்டத்தைப் பழுக்கக் காய்ச்சி, பசுமூத்திரத்தில் தோய்க்கவும். இவ்விதம் ஏழுதடவை செய்தபின் அதை நன்றாகப் பொடி செய்து, இரு மடங்கு த்ரிபலாக்வாதத்தில் சேர்த்துக் கலக்கி, அப்பால் தீயிலேற்றி வருக்க அக்கிட்டம் கருஞ்சிவப்பான ஸிந்தூரமாய் மாறும். இதை 'மண்டூரம்' என்பார்கள்.[2] 97—98½.

க்ஷார கல்பனை.

இரண்டுவித க்ஷாரமுறை:—க்ஷாரம் செய்வதற்கு உபயோகமான விருக்ஷங்களின் கட்டைகளை உலர்த்தி நெருப்பிட்டு எரிக்கவும்; அக்கினி அவிந்துபோனதும் அவற்றின் பஸ்மங்களை யெடுத்து ஒரு மட்பாத்திரத்தில் நாலு பங்கு ஜலமிட்டு, அதில் அந்தச் சாம்பலைச் சேர்த்துக் கரைத்து ஓர் இரவெல்லாம் அவ்விதமே வைத்திருந்து, மறு நாட் காலையில் மேலே தெளிந்திருக்கும் ஜலத்தை மட்டும் வடித்துக்கொண்டு ஜலம் முடியவும் சுண்டிப்போகும் வரையில் காய்ச்ச வேண்டும்; பிறகு பாத்திரத்தினுள் சுற்றிலும் படிந்திருக்கும் வெண்ணிறமான சூர்ணம் போலிருக்கும் உப்புகளைச் சுரண்டி யெடுத்துக் கொள்ளவும். அடியில் மிகுந்து நிற்கும் குழம்பு போன்ற ஒருவித உப்புநீரையும் மற்றொரு பாத்திரத்தில் பிரத்தியேகமாய் எடுத்துவைக்கவும். இவ்விருவித க்ஷாரங்களில் சூர்ணம் போலிருப்பது சர்மம் முதலியவற்றைச் சில வியாதிகளில் மேலே உபயோகித்துச் சுடுவதற்கும், திரவமான க்ஷாரம் அவசியமான ஸமயங்களில் ஜலம் முதலி

1. சிலாஜது குணங்கள்:—சுவையில் கைப்பும் சிறிது காரமும் கலந்திருக்கும்; உஷ்ணவீர்யம், இரஸாயநம்; மேஹம், உன்மாதம், அச்மரீ, வீக்கம், அபஸ்மாரம், க்ஷயம், மஹோதரம், அர்சஸ், மூத்திரப் பையிலுண்டாகும் வியாதிகள் இவற்றை நிவ்ருத்தி செய்யும்.

2. மண்டூரத்தின் குணங்கள்:—பாண்டு, மேஹம், ஆமவாத மென்னும் கீல் வாயு, வாதரக்தம், குன்மம், வயிற்றுக் கிருமிகள், சோகை இவற்றை நிவ்ருத்தி செய்யும்; சரீரத்திற்கு வன்மையை யுண்டாக்கிக் கிழத்தனத்தினால் நேரிடும் பலக்குறைவையும் தடுக்கும்.

யவைகளில் கலக்கி உட்கொள்வதற்கும் ஏற்றவையாம். விஷயமறிந்த வைத்தியர்கள் அந்தந்த ரோகங்களில் இந்த க்ஷாரங்களை யுபயோகிக்கலாம்.[1] 99—102.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

---

### இரஸங்கள்.

**பாரதத்தின் பிரபாவம்** :—பாதரஸம் எனப்படும் பாரதமானது ஸர்வ ரோகங்களையும் போக்க வல்லதெனவும், சரீரத்திற்குப் புஷ்டியை யுண்டுபண்ணுந் தன்மையதென்றும் முனிவர்களால் நன்கு மதிக்கப் பட்டிருக்கின்றது. இரஸசாஸ்திரத்தில் தேர்ச்சியடைந்த பண்டிதரால் முறை தவறாமல் இரஸம் பக்குவம் செய்யப்படுமானல், அதை யுபயோகிப்பவர் தேஹஸித்தி[2] யடையவும், எளிதில் லோஹஸித்தியை[3] நிறைவேற்றவும் கூடும்[1].

**இரஸம் முதலியவற்றிந்த பலவித பெயர்கள்**:—இரஸேந்த்ரம், பாரதம், ஸூதம், ஹரஜம், ஸூதகம், இரஸம், முகுந்தம் என்று

---

1. க்ஷாரம் என்றால் நீரடிமுத்து மரம் முதலியவற்றின் இலை தழைகளுடன்கூடிய கிளைகளை எரித்து, அவற்றின் சாம்பலை ஜலத்திற் கரைத்துக் காய்ச்சி யெடுக்கப்படும் மிகவும் தீக்ஷ்ணமான உப்பு. சுணை யுள்ள யவதானியம் முதலியவற்றின் முள் முதலானதையும் எரித்து க்ஷாரமென்னும் உப்பு எடுப்பதுண்டு. இவ் வுப்புகளையே தமிழில் கார மென்றும் கூறுவர். [தாதுக்களை ஔஷதமாய் உபயோகிப்பதற்கு அவற்றை பஸ்மம் செய்து உபயோகிப்பதுபோல், க்ஷாரமுறையிலும் சில மரங்களையும் சுணையுள்ள தானியம் முதலியவற்றையும் எரித்து பஸ்ம மாக்கி அவற்றிலிருந்து ஔஷதத்திற் குபயோகமான க்ஷாரம் என்னும் சத்து எடுக்கப்படுவதால் க்ஷார முறையும் இங்கு கூறப்பட்டது.]

2. தேஹஸித்தி—யோகத்தினால் உண்டாகக்கூடிய அணிமா, மஹிமா, கரிமா, இலகிமா, ப்ராப்தி, ப்ராகாம்யம், ஈசத்வம், வசித்வம் என்கிற அஷ்ட ஸித்திகள்.

3. லோஹஸித்தி—லோஹவர்க்கங்களை பஸ்மமாகவும் ஸத்துவ மாகவும் செய்வதற்கும், அவற்றைக்கொண்டு தாதுவாதம் முதலியதைச் செய்வதற்கும் ஏற்ற முறை.

ஔஷத முறைகளில் பாதரஸத்திற்குப் பல பெயர்கள் வழங்கப்படும். மேலும் இந்தப்பிரகரணத்தில் தாம்ரம், வெள்ளி, பித்தளை, நாகம், ஸ்வர்ணம், வங்கம், அயம், வெண்கலம், காந்தம் என்கிற ஒன்பது லோஹங்களும் சூர்யன், சந்திரன், அங்காரகன், புதன், பிருஹஸ்பதி, சுக்ரன், இராகு, கேது என்னும் ஒன்பது கிரஹங்களுடைய பெயர்களால் முறையே வழங்கப்பட்டு வரும். 2—3½.

**பாரத சுத்தி:**—கடுகு, வெள்ளுள்ளி இவற்றைக் கல்கமாக அரைத்து, அதனுல் மூசை செய்து, அம்மூசையினுள் பாரதத்தைச் சேர்த்து, மற்றொரு மூசையினுல் மூடி, வஸ்திரத்தில் கட்டி, டோல யந்திரத்தின் மூலமாய் காடியில் தொங்கவைத்து, மூன்று நாட்கள் தீயிட்டு அதன் ஆவியில் இரஸத்தைப் பக்குவம் செய்து, சோற்றுக் கற்றாழையின் சாற்றில் அதை ஒரு நாள் அரைக்கவும்; அப்படியே சித்திரமூலக் கஷாயத்தினுல் ஒரு தினமும், மணத்தக்காளியின் ஸ்வரஸத்தினுல் ஒரு தினமும், த்ரிபலாக்வாதத்தினுல் ஒரு தினமும் தனித்தனியே அறைத்து, பிறகு காடிகளைச் சேர்த்து நன்ருகக் கழுவி இரஸத்தை மட்டும் தனியாகப் பிரித்தெடுக்கவேண்டும். அப்பால் அப்பாரதத்தை கல்வத்திலிட்டு, பாதியளவு இந்துப்பையும் சேர்த்து, எலுமிச்சம்பழச் சாற்ருல் ஒரு நாள் முடிய இடைவிடாது அரைக்கவும். பிறகு வெள்ளுள்ளி, கடுகு, இந்துப்பு, நவஸாரம் இவற்றில் ஒவ்வொன்றையும் இரஸத்திற்கு ஸமானமாகச் சேர்த்து, காஞ்ஜிகமென்னும் காடியைச் சேர்த்து அரைத்து, அதை ஒரு சக்கரம போல் தட்டி, வெயிலில் உலர்த்தி, பெருங்காயத்தை அரைத்து அதன்மேல் தடவி, அதை ஒரு பாத்திரத்தில் வைத்து உப்பை நிரப்பி, மற்றொரு பாத்திரத்தை அதன் மேல் கவிழ்த்து மூடி, சுற்றிலும் சீலை மண் செய்து உலர்த்தி, அடுப்பிலேற்றி சிறுகச் சிறுகத் தீயிட்டு எரிக்கவும். அவ்வாறு எரிக்கையில் மேலே கவிழ்த்துள்ள பாத்திரத்தின் மீது குளிர்ந்த ஜலத்தை அடிக்கொரு முறை விட்டு வரவேண்டும். கிரமமாக அக்கினியையும் கடுஞ் ஜ்வாலையுடன் எரித்து வரவும். இவ்வாறு மூன்று யாமகாலம் எரித்து இரஸத்தை ஆவியாகச் செய்து மேலேயுள்ள பாத்திரத்தின் உட்புறத்தில் படியச் செய்யவேண்டும். இவ்விதம் செய்ய இரஸம் சுத்தமாகும். பிறகு

மேல் பாத்திரத்தை யெடுத்து அதனுள் படிந்திருக்கும் பாதரஸத்தை வழித்தெடுத்துக் கொள்ளவும்.[1] 4—12½.

கந்தக சுத்தி:—வாயகன்ற ஓர் இரும்புப் பாத்திரத்தில் நெய்யை ஊற்றி அடியில் தீயிட்டு எரிக்கவும். நெய் உருகிய பிறகு அதற்கு ஸமவெடை கந்தகத்தைப் பொடித்துச் சேர்த்து, அது நன்றாக நெய் யுடன் கலந்து உருகிய பிறகு மெதுவாகப் பாலில் ஊற்ற வேண்டும். இவ்விதம் செய்ய கந்தகம் சுத்தமாகும்.[2] 13, 14.

லிங்கத்திலிருந்து இரஸமெடுக்கும் முறை:—லிங்கத்தை[3] ஆட்டுப்பாலிலும், எலுமிச்சம்பழச்சாறு முதலிய அம்லவர்க்கங்களிலும் தனித் தனியே ஏழுமுறை பாவனை செய்ய அது நன்கு சுத்தியாகும். பிறகு எலுமிச்சப்பழ ரஸத்தினாலாவது, வேப்பிலைச்சாற்றினாலாவது, ஒரு யாமகாலம் ஆட்டி சிறிது உலர்த்தி, முன்பு பாதரஸத்திற்குக் கூறிய விதமாக ஊர்த்வபாதந யந்திரத்தில் வைத்து எரிக்கவும்; மேற் பாத்திரத்தினுள் சுத்தமான பாரதம் முன்போல் படிந்திருக்கும், அதை யெடுத்து ஔஷத முறைகளில் உபயோகிக்கலாம். 15—17.

---

1. அடிப்பாத்திரத்தில் இரஸம் முதலியதை வைத்து ஆவி யாக்கி, மேற்பாத்திரத்தில் படியச்செய்வதற்கான உபகரணம் **ஊர்த்வ பாதந யந்திரம்** எனப்படும்.

2. கந்தகத்தை உருக்கிப் பாலில் ஊற்றி பிறகு ஜலத்திற் கழுவி மீண்டும் ஏழு முறை அவ்விதமே நெய்யில் உருக்கிப் பாலில் சேர்த்தால் சுத்தமாகும். இவ்விதம் செய்வதுதான் ஸாதாரணமுறை.

3. லிங்கம்—இது ஹாலண்டு என்னும் உலாந்தா தேசத்தி லுண்டாவதால் உலாந்தாலிங்கம் என்றும், பவளம்போல் சென்னிற மாயிருப்பதால் பவளமனச்சிலை யென்றும், ஜாதிலிங்கமென்றும் தமி ழில் வழங்கப்படும்; ஸம்ஸ்கிருதத்தில் தரதம் என்றும், ஹிங்குளம் என்றும் கூறப்படும். இதிலிருந்து எடுக்கப்படும் பாரதம் **ஹிங்குளா க்ருஷ்ட ரஸம்** எனப்படும்.

**நவ விஷங்கள்:**—காலகூடம், 1 வத்ஸநாபம், 2 ச்ருங்ககம், 3 ப்ரதீபகம், 4 ஹாலாஹலம், 5 ப்ரஹ்மபுத்ரம், 6 ஹாரித்ரம் 7 ஸக்துகம் 8, ஸௌராஷ்ட்ரிகம்9 என்பவை 'நவ விஷங்கள்' எனப்படும். 18½.

1. காலகூடம்—இது ஒரு விஷவிருக்ஷத்தின் பிசின்; அவ்விருக்ஷம் அரசமரம்போன்ற உருவமுள்ளது. ச்ருங்கபேர க்ஷேத்திரத்திலும், கொங்கணதேசத்திலும், மலயபர்வதப்பிராந்தங்களிலும் உற்பத்தியாகுமாம். காலகூடமென்பதை கிழங்கு என்று சிலர்.

2. வத்ஸநாபம்—வத்ஸநாபியைப்போன்றது; ஆவாரயிலை போன்ற இலைகளுள்ளது; வத்ஸநாபச்செடியின் அருகில் இதர மரங்கள் விருத்தியாகமாட்டா. இதை இந்திரநாபம் என்றும் சிலர் கூறுவர்.

3. ச்ருங்ககம்—இதுவும் நாபியைப்போன்றதோர் கிழங்கு. இவ்விஷக் கிழங்கைப் பசுவின் கொம்பில் கட்டினால் அதன் பால் செந்நிறமாக அல்லது இரத்தமாக மாறிவிடுமெனக் கூறப்படுகிறது.

4. ப்ரதீபகம்—நிறத்தில் மிகச் சிவந்து அக்கினியைப்போல் பிரகாசமுள்ளதும், மிகவும் அழற்சியுண்டுபண்ணக் கூடியதுமான ஒரு வகையான கிழங்கு.

5. ஹாலாஹலம்—இவ்விருக்ஷத்தின் இலைகள் பனையோலையைப்போலிருக்கும்; புஷ்பங்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கும்; பசுவின் முலையைப்போல் காய்கள் காய்க்கும். இவ்விருக்ஷத்தின் கடுமையான வெக்காட்டினால் அருகிலுள்ள மரங்களும் புற்பூண்டுகளும் எரிந்துவிடும். ஹாலாஹலம் என்னும் இவ்விஷவிருக்ஷமானது கிஷ்கிந்தையிலும், ஹிமாலயத்திலும், தென்கடற்கரைகளின் சில பாகத்திலும், கொங்கண தேசத்திலும் உற்பத்தியாகுமாம்.

6. ப்ரஹ்மபுத்ரம்—இப்பெயர்கொண்ட கிழங்கு உள்ளும் புறமும் கபில நிறமானது. மலயபர்வதச்சாரலி லுற்பத்தியாகும்.

7. ஹாரித்ரம்—மஞ்சளைப் போன்ற ஒரு கிழங்கு.

8. ஸக்துகம்—பலவாறு முடிபோன்ற கணுக்களுடன் கூடிய இவ்விஷக் கிழங்கை உடைத்தால் உட்புறம் ஒருவித மாப்பசை போன்ற ஸத்துக்கள் நிரம்பியிருக்கும்,

9. ஸௌராஷ்ட்ரிகம்—இதுவும் நாபியைப் போன்றதாய் ஸௌராஷ்ட்ரதேசத்தில் உற்பத்தியாகக்கூடிய மிகக் கொடிய விஷகுணமுள்ள கிழங்கு.

ஸப்த உபவிஷங்கள்:—எருக்கு, இலைக்கள்ளி, ஊமத்தை, சிவனார்கிழங்கு, அலரி, குன்றுமணி, அபினி இவ்வேழும் 'ஸப்த உபவிஷங்கள்' எனப்படுகின்றன. 19½.

பாரதந்திற்கு தாதுக்ராஸ சக்தி- —மேற்கூறிய விஷவர்க்கங்களைச் சேர்த்து பாரதத்தை அரைக்க, அதில் சேர்ந்துள்ள கலப்பான தோஷங்கள் விலகி, அதற்கு ஒருவகையான முகமென்னும் தன்மையுண்டாய், எளிதில் தாது வர்க்கங்களையும் கிரஹித்துக்கொள்ளுவதற்கேற்ற குணமும் உண்டாகின்றது.[1] அல்லது த்ரிகடு, யவக்ஷாரம், ஸர்ஜக்ஷாரம், கடுகு, பஞ்சலவணம், வெள்ளுள்ளி, நவஸாரம், முருங்கை இவற்றை ஸமஎடையாகச் சேர்த்து, ஒரு மிக்க சூர்ணம்செய்து, எலுமிச்சம்பழச் சாற்றையாவது, கொடி யெலுமிச்சம்பழ ரஸத்தையாவது, கடிகளையாவது விட்டு, அக்னியின் மேலேற்றி, நன்றாகக் காய்ச்சிய கல்வத்தில் அனைத்தையும் மூன்று நாள் இடைவிடாமல் அரைத்து வந்தால் இரஸத்திற்கு தாதுவர்க்கங்களை கிரஹிப்பதற்கேற்ற முகமென்னும் தன்மையு உண்டாகும். 20—24.

கச்சபயந்திரமும் கந்தக ஜாரணமும்:—கந்தகத்துக்கு ஜாரணமும்[2] அதற்கான கச்சபயந்திரமுறையும் கூறப்படுகிறது. ஒரு பெரிய மட்பாத்திரத்தின் உட்புறத்தில் சுற்றிலும் சிறிய வரப்பு ஏற்படுத்தி, அதற்கடியில் ஜலம் சேர்த்து, அவ்வரம்பின்மேல் நிற்குமாறு ஓர் அகன்ற மண்ணாலாகிய அகலை இடையில் மூடியைப்போல் அமைத்து, அகலின் விளிம்பும் வரம்பின் முனையும் சேருமிடத்தில் சுற்றிலுமுள்ள த்வாரத்தைச் சுண்ணம் பூசி நன்றாக அடைத்துவிடவும். பிறகு அவ்வகலின்மேல் இரஸத்தைச் சேர்த்து இரஸத்திற்கு ஸமஎடை கந்தகத்தை அதன்மேல் பொடித்துச் சேர்க்கவேண்டும். பிறகு கீழுள்ள அகலுக்கு ஸமமாக அகன்ற மற்றொரு அகலை அதன்மேல் கவிழ்த்து மூடி, அதன்மேல் சாம்பரைப் பரப்பி, நாலைந்து வறட்டிகளை அதன்

---

1. ஸ்வர்ணம் முதலிய லோஹவர்க்கங்களை உறிஞ்சிக் கவர்ந்து கொண்டு தன்னுடன் லயப்படுத்துங் குணம் இரஸத்திற்கு சில ஸம்ஸ்காரங்களால் உண்டாகும்; அவ்விதமுண்டாகும் தன்மையை ரஸக்ராஸம் என்பார்கள்.

2. ஜாரணம் என்பது—ஒரு பதார்த்தத்திலுள்ள ஸாராம்சங்களை மற்றொரு பதார்த்தம் கவர்ந்து கொள்வது; ஸ்வர்ணம் முதலியதைக் கிரஹித்து அதன் ஸத்துவங்களை இரஸம் கவர்ந்து கொள்வது ஜாரணமாகும்.

மேல் அடுக்கி, அக்கினியை மூட்டி புடம்போடவும். அக்கினியெல்லாம் தானே அவிந்துபோனபின்னர் சாம்பர் முதலியவற்றை விலக்கிவிட்டு, ஜாரணமான கந்தகம் ஸம்பந்தித்த இரஸத்தையெடுத்து, மறுபடியும் முன்போலவே அவ்வளவு கந்தகத்துடன் கலந்து, மீண்டும் இவ்விதமே புடம்போட்டு எரிக்கவேண்டும். இவ்விதம் ஆறு முறை கந்தகம் சேர்த்துப் பக்குவம் செய்ய, ஆறு பங்கு கந்தகமும் இரஸத்துடன் ஒருமிக்கக் கலந்துவிடும். இதை ஜாரணம் என்பார்கள். இவ்வாறு கந்தகம் ஜாரணமான பாரதம் அக்னிதீபனம் செய்யவும், மற்றும் பல முறைகளில் உபயோகிக்கவும் தகுந்ததாகின்றது. இவ்விதம் ஆறு பங்கு கந்தகம் சேர்த்து பக்குவம் செய்யப்பட்ட பாரதம் 'ஷட்குண பலி ஜாரித ரஸம்' என்று வழங்கப்படுகின்றது. 25—28½.

இரஸ பஸ்ம முறைகள்:—(1) நவஸாரமென்னும் ஒட்டடை, இரஸம், உழமண்ணுப்பு, கந்தகம், நவஸாரம் இவற்றை ஸமபாகமாகச் சேர்த்து, ஏதேனும் புளிப்பு வஸ்துவால் ஒரு யாமம் அரைத்து, அவற்றை ஒரு கண்ணாடிக் குப்பியினுள் சேர்த்து சீலமண் செய்து, அதன் வாயையும் மூடி மண் பூசி உலர்த்தவும்; ஒரு மட்பானையின் அடியிற் சிறிய த்வாரமிட்டு, அதில் குப்பியை வைத்து, அக்குப்பியைச் சுற்றிலும் அதன் கழுத்து வரையில் மணலை நிரப்பி, அடுப்பிலேற்றி, சிறுகச் சிறுகத் தீயிட்டெரிக்கவேண்டும். பிறகு கிரமமாகக் கடுந்தீயிட்டு பன்னிரண்டு யாமங்களளவும் எரிக்க இரஸம் பஸ்மமாய்விடும். பிறகு தானே ஆறியபின்பு அக்குப்பியை உடைத்து, அதனுட்புறத்தில் மேற்புறமாகப் படிந்திருக்கும் கந்தகத்தின் அம்சங்களைப் பரிஹரித்து, அடியிலுள்ள இரஸ பஸ்மத்தையெடுத்து, அவசியமான காரியங்களில் உபயோகிக்கலாம். (2) நாயுருவி விதைகளையரைத்து இரண்டு மூசைகள் செய்யவும். அந்த மூசையினுள் இரஸத்தைச் சேர்த்து, பேயகத்தியின் பாலையும் அதில் கலந்து, தும்பைப்பூக்களையும், வாய்விடங்கத்தையும், கருங்காலிப் பட்டையையும் சூர்ணம்செய்து, இரஸத்திற்குக் கீழும் மேலும் சேர்த்து, மேலே மற்றொரு மூசையை மூடி, இடையிலுள்ள த்வாரத்தை மண்பூசி மறைத்து, மற்றொரு பெரிய மண்மூசையினுள் அதை வைத்துமூடி, அதற்கும் சீலை மண் செய்து உலர்த்தி, அப்பால் கஜபுடத்தில் எரிக்கவேண்டும்; இவ்விதம் ஒரு புடம்போட பாரதம் பஸ்மமாகும். (3) பேயத்திப்பால் விட்டு அரைத்த பெருங்காயத்தினால் இரண்டு மூசைகள் செய்து, இரஸத்தையும் பேயத்திப்பாலால் ஆட்டி, ஒரு மூசைக்குள் வைத்து, அதை மற்றொரு மூசையினால்

மூடி, அதைச் சுற்றிலுமுள்ள த்வாரங்களை நன்றாக அடைத்து, அதை மற்றொரு பெரிய மண்மூசையினுள் வைத்து சீலைமண் செய்து, மெதுவான ஒரு புடம்போட பாதரஸம் பஸ்மமாய்விடும். (4) பாதரஸத்தை வெற்றிலைச்சாற்றாலாட்டி, அதை வெள்ளரியின் கிழங்கு அல்லது வேரின் உள்ளே அடக்கி, மண்மூசையினுள் வைத்து, ஸாதாரணமாய் ஒரு முறை புடம் போட்டாலும் பஸ்மமாகும்.[1] 29—41.

**ஜ்வராங்குச ரஸம்; முதலாவது:**—மான் கொம்பைப் பொடித்து அதற்கு ஸமபாகம் பாரதம் சேர்த்து, சித்திரமூலரஸத்தினால் ஆட்டி, ஒரு மட்பாத்திரத்தில் சேர்த்து, அடுப்பிலேற்றி இரண்டு யாமம் எரிக்கவும். பிறகு மான் கொம்புக்கு எட்டில் ஒரு பங்கு த்ரிகடு சூர்ணம் சேர்த்து, இவைகளனைத்தையும் கல்வத்தில் அரைத்து வைத்துக்கொள்ளவும். இதில் நிஷ்கப்பிரமாணம் எடுத்து வெற்றிலைச்சாற்றுடன் உட்கொண்டு வர வாதஜ்வரம், பித்தஜ்வரம், மற்றும் அநேக வகையான ஜ்வரங்களும்தீரும்; இதற்கு 'ஜ்வராங்குசரஸம்' எனப்பெயர் 42—43½.

**ஜ்வராரி ரஸம்:**—பாதரஸம், இரஸகம், தாளகம், மயில்துத்தம், வெண்காரம், கந்தகம் இவ்வனைத்தையும் சுத்தமாய் ஸமபாகமாகக் கிரஹித்து, பாகலிலைச்சாற்றால் ஒரு நாள் அரைத்து, அக்கல்கத்தை ஒரு தாம்பிர பாத்திரத்தின் உட்புறத்தில் அரை அங்குல கனமாகத் தடவி, அப்பாத்திரத்தின் முகத்தை மூடி, வாலுகாயந்திரத்தில்[2] எரிக்கவேண்டும். அப்பாத்திரத்தின் முகத்தில் ஏதேனும் தானியங்

---

1. பாரத பஸ்ம குணங்களும் உபயோகமுறையும்—கிருமிஹரம், குஷ்டஹரம், ஆயுஷ்யம், பல்யம், மற்றும் அநேக வியாதிகளை அந்தந்த பதார்த்தங்களின் சேர்க்கையினால் போக்கக்கூடியது. வாதரோகங்களில் பாலுடனும், பித்தரோகங்களில் சர்க்கரையுடனும், கபரோகங்களில் திப்பிலி அல்லது சுக்குக் கஷாயத்துடனும், ஸாதாரண ஜ்வரங்களில் எலுமிச்சம் பழரஸத்தோடும், இரத்தப் பெருக்குகளில் தேனோடும், அதிஸாரங்களில் சிறுகீரையின் சாறு அல்லது தயிரோடும், கண்டுபாரங்கியின் சூர்ணத்துடன் வயிற்றுளைத்தல் முதலானவற்றிலும் இரஸபஸ்மத்தை உபயோகிக்கலாம்.

2. வாலுகாயந்திரம்:—இரஸம் முதலிய தாதுவர்க்கங்களை ஔஷதமாகச் செய்வதற்கு அவற்றை ஒரு குப்பியில் சேர்த்து, ஒரு மட்பாத்திரத்தில் அடியில் சிறிது மணலைப் போட்டு, அதன்மேல் குப்

கலை வைத்து அவை பொரியுமாகில், அப்பொழுது குப்பியினுள்ளிருக்கும் ஔஷதம் பக்குவமானதாய் அறிக. அப்பால் அக்கினியை அவித்துவிட்டு, அப்பாத்திரமும் அதனுள்ளிருக்கும் ஔஷதமும், தானாகவே ஆறிய பிறகு, பாத்திரத்தினுட்புறத்திலிருந்து ஔஷதத்தைச் சுரண்டியெடுத்துக்கொள்ளவும். அவ்வௌஷதம் 'ஜ்வராரி' என்று வழங்கப்படும். அதில் ஒரு மாஷப்பிரமாணம் எடுத்து வெற்றிலையினுள் வைத்து புஜிக்க அந்யேத்யுஷ்கம், த்ருதீயகம், சாதுர்த்திகம் முதலான விஷம ஜ்வரங்கள் தீரும். 44—48½.

சீதாரி ரஸம்:—தாளகம், மயில்துத்தம், செப்புப்பொடி, இரஸம், கந்தகம், மனச்சிலை இவற்றில் ஒவ்வொரு கர்ஷம் எடுத்து, த்ரிபலா க்வாதத்தினால் இவற்றை நன்றாய் அரைத்து, உருட்டி மூசைகளிற் சேர்த்து புடம் போடவும். பிறகு எருக்கம்பால், கள்ளிப்பால், நேபாள கஷாயம், கருஞ்சிவதைக் கஷாயம் இவற்றில் தனித்தனியே எவ்வேழு முறை பாவனை செய்யவும். ஐம்பது மிளகுகள், வெல்லம் ஒரு கர்ஷம், இரண்டு துளஸியிலைகள் இவற்றுடன் மேற்கூறிய பஸ்மத்தைக் கலந்து மூன்று தினங்கள் உட்கொள்ளவும். இதற்குப் பாலும் அன்னமும் கலந்து பத்தியமாயுபயோகிக்கலாம். முதலில் குளிர் வந்து அதன் பிறகுண்டாகும் ஜ்வரமும், முதலில் சூடு அதிகரித்து பிறகு சைத்யத்துடன் விருத்தியாகும் ஜ்வரமும், அந்யேத்யுஷ்கம், த்ருதீயகம், சாதுர்த்திகம் என்கிற ஜ்வரங்களும் நிவிருத்தியாகும். இதற்கு 'சீதாரிரஸம்' எனப்பெயர். 49—54.

ஜ்வரக்ன குடிகா:—சுத்தரஸம் ஒரு பாகம், சிற்றேலம், திப்பிலி, கடுக்காய், அக்கரகாரம், கடுகெண்ணெயினால் சுத்தம் செய்த கந்தகம், பேய்த்தும்மட்டிக்காய் இவை ஒவ்வொன்றும் நான்கு பாகம் சேர்த்து, சூர்ணம் செய்து, பேய்த்தும்மட்டியின் சாற்றால் ஒருமிக்க அரைத்து, உளுந்துபோன்ற மாத்திரைகளாய் உருட்டி, சீந்திற்கொடியின் ஸ்வரஸத்துடன் உபயோகித்து வர ஸர்வ ஜ்வரங்களும் நீங்கும். இது 'ஜ்வரக்ன குடிகா' என்று கூறப்படும். 55—57.

---

பியை வைத்து, சுற்றிலும் கழுத்து வரையில் மணல் சேர்த்து, மட்பானையின் அடியில் தீயிட்டு எரிப்பதற்கேற்ற உபகரணம் வாலுகா யந்திரம் என்றும், ஸிகதாயந்திரம் என்றும் கூறப்படும்.

லோகநாதரஸம், முதலாவது:—சுத்தமானதும் ஜாரணம் செய்து முகமுண்டாக்கப்பட்டதுமான பாரதம் இரண்டு பங்கு, சுத்த கந்தகம் இரண்டு பங்கு இவ்விரண்டையும் சேர்த்து கஜ்ஜளி 1 செய்யவும். பிறகு அக்கஜ்ஜளியை இரஸத்தினும் நான்கு மடங்கு அதிக அளவான பலகறைகளில் நிரப்பிவைக்கவும். அப்பால் ஒரு பாகம் வெண்காரம், உடைத்துப் பொடியாக்கிய சங்கம் எட்டு பங்கு இவ்வினைத்தையும் பசும்பால் விட்டரைத்து, உலர்த்தி, இச்சூர்ணமினைத்தையும் ஓர் அகலில் சேர்த்து, மற்றோர் அகலால் மூடி சீலை மண் செய்து, ஒரு முழம் ஆழமுள்ள பள்ளத்தில் வைத்து கஜபுடம் போடவும். அதை ஆறியபிறகு எடுத்து, அவற்றை அரைத்து, கிரமமாக இருபத்தொன்பது மிளகுகளுடன் ஆறு குஞ்ஜா ப்ரமாணங்கொண்ட இவ்வௌஷதத்தை நெய்யிற் கலந்து வாதரோகங்களிலும், வெண்ணெயிற் கலந்து பித்தரோகங்களிலும், கபத்திலுண்டாகும் வியாதிகளில் தேனோடும் கலந்து உட்கொண்டு வரலாம். அதிஸாரம், க்ஷயம், அரோசகம், கிரஹணீ, தேகமெலிவு, அக்னிமாந்தியம், காஸச்வாஸங்கள், குன்மம் இந்த ரோகங்களிலும் உபயோகிக்க நற்குணம் பிறக்கும். இவ்வௌஷதத்தை யுட்கொண்டதும் நெய்யும் அன்னமுமாகக் கலந்து மூன்று கவளம் புஜித்துவிட்டு, தலையணை யில்லாமல் மஞ்சத்தின் மீது சிறிது நேரம் மல்லாந்துப் படுத்திருக்கவும். பிறகு புளிப்பு ஸம்பந்தப்படாத ஆகாரங்களைப் புஜிக்கலாம்; அதாவது நெய், புளிக்காத தயிர், மதுர பதார்த்தங்கள், நெய்யிற் பக்குவம் செய்த ஜாங்கல மாம்ஸம் இவ்வித உணவுகள் உபயோகிக்கக் கூடியவையாம். பசி யுண்டானால், மாலை நேரத்தில் பாலும் அன்னமுமாய் உட்கொள்ளலாம். பயற்றம் பருப்பாலாகிய வடகங்களை நெய்யிற்பொறித்து அன்னத்திற்கு வியஞ்ஜனமாய் உபயோகிக்கலாம். நெய் தேய்த்து அப்யங்கம் செய்யலாம். அப்பொழுது எள்ளுப்பிண்ணாக்கு, நெல்லிப்பருப்பு இவற்றைத் தேய்த்து ஸ்நானம் செய்யவேண்டும்; இளஞ்சூடான ஜலத்தையே ஸ்நானத்திற்கு உபயோகிப்பது நலம். எண்ணெயை உபயோகிக்கவே கூடாது. மேலும் பில்வம், பாகல், கத்திரி, மத்ஸியம், புளி, மதுபானம், மற்றும் ஸந்தானம் 2 செய்த பானவகைகள், காயம், சுக்கு,

1. கஜ்ஜளி:—193-ம் பக்கத்தில் டிப்பணியில் விவரம் காண்க.
2. ஸந்தானம்:—இதைப்பற்றி 183-ம் பக்கம் பார்க்க.

உளுந்து, சிறுகடலை, பூசணி, கடுகு, காஞ்ஜிகமென்னும் காடி இவை முதலிய பதார்த்தங்களும், வியாயாமமென்னும் சிலம்பப்பயிற்சி முதலியதும், புணர்ச்சி, அகால நித்திரை, வெண்கலப் பாத்திரத்தில் போஜனம் இவை முதலியவைகளைப் பரிஹரிப்பதும் இவ்வௌஷத முபயோகிப்பதற்கான பத்திய முறையாம். இது 'லோகநாத ரஸம்' என்று கூறப்படும். சந்திரன் நன்கு செழித்து வளர்ந்த பௌர்ணமி திதியில், அல்லது சுக்ல க்ஷத்தில், வாரமும் நக்ஷத்திரமும் சுபமாயிருக்கையில் லோகநாதனைப் பூஜித்து, கன்னிகைக்கு அன்னமளித்து, சக்திக்கிடன்றவாறு தானமும் செய்த பிறகு, காலையில், லோகநாதமென்னும் இவ்வுத்தம ரஸௌஷதத்தை உட்கொள்ளவேண்டும். இவ்வௌஷத முபயோகிப்பதால் சரீரத்தில் தாபம் அதிகரிப்பதாகத் தோற்றுமாயின் அப்பொழுது சீந்திற்கொடியின் ஸத்துவத்தைச் சர்க்கரையோடு கலந்து உட்கொள்ளலாம்; மூங்கிலுப்பையும் பொடித்து அத்துடன் உபயோகிப்பது நலம். கர்ஜூரப்பழம், மாதளம்பழம், திராக்ஷை, கரும்பு இவற்றையும் புஜிக்கலாம். லோகநாதரஸத்தை அந்தந்த ரோகங்களில் அடியிற் கூறப்படும் அனுபானங்களுடன் உபயோகிக்கலாம்:—நாக்கு அரோசகமுள்ளதாயிருந்தால் கொத்தமல்லி விதையை நெய்யில் வறுத்து, சர்க்கரையுடன் அனுபானமாகக் கொடுக்கலாம். ஜ்வரம் உண்டாயிருக்கையில் கொத்தமல்லி விதை, சீந்திற்கொடி இவற்றை க்வாதம் செய்தாவது, வெட்டிவேர், ஆடாதோடை இவற்றைக் கஷாயமிட்டாவது அனுபானமாகக் கொடுக்கலாம். இக்கஷாயங்களுடன் சர்க்கரையும் சேர்க்கவேண்டும். இக்கஷாயங்களையே இரத்தபித்தம், க்ஷயரோகம், ச்வாஸம், காஸம், தொண்டைக்கம்மல் இவற்றிலும் அனுபானமாய் உபயோகிக்கலாம். நித்திரையின்மை, அதிஸாரம், கிரஹணீ, அக்னிமாந்தியம் இவற்றில் கஞ்ஜாவை வறுத்து சூர்ணம்செய்து தேனில் கலந்து இரவில் லோகநாதத்துடன் உட்கொள்ளச் செய்யலாம். வயிற்று வலி, அஜீர்ணம் இவற்றில் அட்டுப்பு, கடுக்காய், திப்பிலி, இவற்றின் சூர்ணத்தை உஷ்ண ஜலத்துடன் உபயோகிக்கலாம். ஜ்வரத்தில் திப்பிலிப்பொடியையும் தேனையும் கலந்து உட்கொள்வது நலம். ப்லீஹோதரமென்னும் மண்ணீரலின் வீக்கம், வாதரக்தம், சர்த்தியென்னும் வாந்தி, அர்சஸ், நாசியில் இரத்தம் கசிதல் என்னும் இவ்வியாதிகளில் மாத

ளம்பூ ரஸத்தை உட்கொள்ளக் கொடுக்கலாம். நாசியிலுண்டாகும் வியாதிகளில் லோகநாதத்துடன் சர்க்கரையையும் அருகம்புல் ரஸத்தையும் கலந்து நஸ்யமிடலாம். இலந்தங்கொட்டை, திப்பிலி, மயிலிறகு பஸ்மம், இவற்றைப் பொடித்துக் கூட்டி சர்க்கரையும் சேர்த்துத் தேனுடன் கலந்துட்கொள்ள வந்தி, விக்கல் இவை நிவ்ருத்தியாகும். மேற்கூறிய முறைகள் யாவும் லோகநாதத்திற்கு அனுபானமாவது போல ம்ருகாங்கம், ஹேமகர்ப்பம், மௌக்திகம் முதலிய போடலீரஸங்கள் அனைத்திற்குமே ஏற்றவையாம். பெரும்பாலும் அகில வியாதிகளையும் விலக்குவதற்கான 'லோகநாதம்' என்னும் இரஸௌஷத முறை இவ்வாறும். 58—82.

லோகநாதம், இரண்டாவது:—பலகறை பஸ்மத்தையும் மண்டூரத்தையும் நெய்யில் பாகம் செய்தெடுத்து, அவற்றிற்குச் சமயெடை மிளகுப்பொடி சேர்த்து, வெற்றிலைச்சாற்றில் பாவனை செய்து, அச்சூர்ணத்தில் ஒரு மாஷப்பிரமாணம் தேனுடனாவது வெண்ணெயுடனாவது ஒவ்வொரு யாமந்தோறும் உட்கொண்டு வந்தால் ஒரு மண்டலத்தில் க்ஷயரோகம் தீரும். இதுவும் 'லோகநாதம்' என்றே கூறப்படும். 83—84½.

ம்ருகாங்க போடலீரஸம்:—பூர்ஜமரப் பட்டையைப்போல் மெல்லிய தகடுகளாய் அடித்த ஸ்வர்ணத்தையும் ஸமயெடை பாரதத்தையும் கல்வத்திலிட்டு, மலையகத்தியின் ஸ்வரஸத்தினாலாவது, சித்திரமூல ஸ்வரஸத்தினாலாவது, சிவனார்கிழங்கின் சாற்றாலாவது பிஷ்டம் போலாகும் வரையில் அரைத்து, பிறகு ஸ்வர்ணத்திற்கு நாலில் ஒரு பங்கு வெண்காரமும், இரண்டு பங்கு நன்றாக அரைத்த நல் முத்துச் சூர்ணமும் சேர்த்து, எல்லாச் சரக்குகளுக்கும் ஸமயெடை கந்தகமும் கலந்து, அனைத்தையும் ஒருமிக்க அரைத்து, ஒரு உருண்டையாகச் செய்து வஸ்திரத்தில் வைத்துச் சுற்றி, அதன்மேல் மண் பூசி உலர்த்தி, ஓர் அகலில் வைத்து மற்றொரு அகலால் மூடி சீலை மண் செய்யவும். பிறகு அந்த ஸம்புடத்தை ஒரு விசாலமான மட்பாத்திரத்தில் வைத்து, சுற்றிலும் உப்பைக் கொட்டி, அப்பாத்திரத்தின் முகத்தை மூடி, சீலைமண்ணால் முத்திரையிட்டு, உலர்த்தி அநேகம் வறட்டிகளிட்டுப் புடம்போடவும். பின்னர் அப்பாத்திரம் முதலியது தானாகவே ஆறியதும் ஸம்புடத்திலுள்ள இரஸம் முதலியவற்

றை யெடுத்து, அதில் சேர்த்த பாதரஸத்திற்குச் சமயெடை கந்தகம் சேர்த்து, முன்போலவே கல்வத்திலிட்டு அரைத்து, அவ்விதமாகவே கஜபுடத்தில் எரிக்கவேண்டும். அப்பால் ஆறிய பிறகு ஔஷதத்தைப் புடத்திலிருந்து எடுத்துக்கொள்ளவும். இதை இரண்டு குஞ்ஜாப்பிர மாணத்தில் எட்டு மிளகுகளோடாவது மூன்று திப்பிலிகளுடனாவது வாத-பித்த-கபாதிகளின் நிலைமைகளையும் மற்றும் பிணியாளியின் தன்மைகளையும் அறிந்து ஏற்றவாறு உபயோகிக்கச் செய்யவும். மன திற் கவலையின்றி அமைதியாகவும் பரிசுத்தமாகவும் இருந்துகொண்டு லோகநாதரஸத்திற்குக் கூறிய பத்தியமுறைகளை யனுஸரித்தே இவ்வௌஷதத்தையும் உபயோகிக்கவேண்டும். கபத்தினாலுண்டா கும் கோளாறுகள், கிரஹணீ, காஸம், ச்வாஸம், க்ஷயம், அரோசகம், சரீரமெலிவு, பலமின்மை இவ்வனைத்தையும் தீர்க்கும். இந்த இர ஸௌஷதத்திற்கு 'மிருகாங்க போடலீ' என்று பெயர். 85—95.

ஹேமகர்ப்ப போடலீ ரஸம், முதல்:—பாரதம் ஒரு பங்கு, ஸ்வர்ணத் தகடு கால் பங்கு, இரண்டையும் சேர்த்து, பிஷ்டம்போல் அரைக்கவும். பிறகு அவற்றிற்கு இரண்டு பங்கு கந்தகம் சேர்த்து மலைகத்தியின் ஸ்வரஸத்தினால் ஆட்டி, கோளம்போல் செய்து, மூசைகளுக்குள் வைத்துச் சுற்றிலும் சந்துகளை யடைத்துவிட்டு, மூன்று நாட்கள் பூதரயந்திரத்தில் [1] எரிக்கவேண்டும். பிறகு மூசையி லிருந்து அவையனைத்தையும் எடுத்து, அவற்றிற்குச் சமயெடை கந் தகம் மறுபடியும் சேர்த்து, இஞ்சி ஸ்வரஸத்தினாலும், சித்திரமூல ஸ்வரஸத்தினாலும் அரைத்து, சிறிது மஞ்சள் நிறமான பருத்த பல கறைகளுக்குள் அவற்றை அடைத்துவிடவும். பிறகு அச்சோழிகளில் நிரப்பியுள்ள சரக்குகளுக்கு எட்டில் ஒரு பங்கு வெண்காரமும், அதில் பாதி நாபியும் சேர்த்து, கள்ளிப்பால் விட்டு அரைத்து, இக்கல் கத்தினால் சோழிகளிலுள்ள த்வாரங்களை மூடி, ஒரு மட்பாத்திரத்தி னுள் சுண்ணம் பூசி, அச்சோழிகளை அதனுள் வைத்து, அப்பாத்தி ரத்தின் வாயை மூடியிட்டுச் சிலைமண் செய்திடவும். பிறகு இதை

1. இரஸம் முதலிய சரக்குகளடங்கிய பாத்திரம் அல்லது மூசையை ஒரு சிறிய பள்ளத்தில் வைத்து, அதை முற்றிலும் மணலால் மூடி, சுற்றிலும் தீயிட்டு எரிக்கப்படும் முறைக்கு 'பூதரயந்திரம்' எனப் பெயர்.

ஓர் ஆழமான பள்ளத்தில் வைத்து கஜபுடம் போட்டு, ஆறியபிறகு ஔஷதத்தையெடுத்துப் பிணியாளியின் தன்மை முதலியவற்றை யறிந்து, லோகநாத ரஸத்தைப்போல் கொடுக்கவேண்டும். மிருகாங்க ரஸத்திற்குக் கூறிய பத்தியக்கிரமங்களே இவ்வௌஷதத்திற்கும் ஏற்றவையாகும்; மேலும் மூன்று நாட்கள்மட்டும் உப்பு உபயோகிக்கக்கூடியதல்ல. இவ்வௌஷத முபயோகிக்கப்பட்டு வருகையில் வாந்தியுண்டானால் சிந்திற்கொடியின் கஷாயத்தைத் தேனுடன் கொடுக்கவேண்டும். கபம் அதிகரித்திருந்தால் இஞ்சியும் வெல்லமும் கலந்துபயோகிக்கலாம். விசேஷமாக மலப்போக்கு நேரிடுமானல் கஞ்ஜாவைப்பொரித்து தயிரிற் கலந்து உட்கொள்ளலாம். இவ்வௌஷதம் காஸம், ச்வாஸம், கிரஹணீ, அரோசகம், கபவாதங்களின் கோளாறு இவற்றைப் போக்கும்; அக்னிதீபனமும் இதனல் உண்டாகும். இது 'ஹேமகர்ப்ப போடலீ ரஸம்' எனப்படும். 96—105.

ஹேமகர்ப்ப போடலீ ரஸம், இரண்டாவது:—இரஸம் நாலு பங்கு, தகடுகளாகச்செய்த ஸ்வர்ணம் நாலு பங்கு இரண்டையும் அரைத்து பிஷ்டம்போல் செய்து, பன்னிரண்டு பங்கு கந்தகம் சேர்த்து கஜ்ஜளி செய்து, பதினாறு பங்கு நல்முத்தும், இருபத்தி நான்கு பங்கு சங்கமும், ஒரு பங்கு வெண்காரமும் சேர்த்து அனைத்தையும் ஒருமிக்கச் சேர்த்து, நன்குகப் பழுத்த கொடி எலுமிச்சம் பழங்களின் ஸ்வரஸத்தினல் . அரைக்கவும். பிறகு அவற்றை ஒரு கோளம்போல் சேர்த்து, மூசைகளுக்குள் வைத்துச் சுற்றிலும் கவசமிட்டு வேண்டிய வறட்டிகளைப் போட்டு கஜபுடமிடவும். ஆறிய பிறகு இவ்வௌஷதத்தை யெடுத்துப் பொடிசெய்து, அதை நான்கு குஞ்ஜாப் பிரமாணத்தில் பத்தொன்பது மிளகுகளைப் பொடி செய்து அத்துடன் பசுவின் நெய்யையும் கலந்து உட்கொள்ளலாம். இதைக் கலந்து உபயோகிப்பதற்கு வெள்ளிப்பாத்திரமாவது, மட்பாத்திரமாவது, காச பாத்திரமாவது ஏற்றதாகும். அமைதியான மனதுடன் லோகநாதத்திற்குக் கூறியுள்ள பத்தியமுறைகளை யனுஸரித்து இதையும் உபயோகிக்கவேண்டும். இதனல் காஸம், ச்வாஸம், க்ஷயம், வாதரோகங்கள், கபரோகங்கள், கிரஹணீ, அதிஸாரம் இவை தீரும். இதுவும் 'ஹேமகர்ப்ப போடலீ ரஸம்' என்றே கூறப்படும். 106—112.

ஜ்வராங்குச ரஸம், இரண்டாவது:—இரஸம், நாபி, கந்தகம் ஒவ்வொன்றையும் சுத்தம் செய்து, ஒவ்வொன்றிலும் சாணப்பிரமாணம் எடுத்துக்கொள்ளவும்; ஊமத்தவிதை மூன்று சாணம், பிரம்மதண்டு விதை அனைத்திற்கும் இரண்டு பங்கு; இவற்றை அரைத்து சூர்ணம் செய்யவும். இரண்டு குஞ்ஜா அளவில் இச்சூர்ணத்தை எலுமிச்சம்பழத்தின் உட்புறத்துச் சோற்றில் கலந்து உபயோகிக்கலாம்; இஞ்சி ஸ்வரஸத்துடனாவது உட்கொள்ளலாம். ஸந்நிபாத ஜ்வரம், அந்யேத்யுஷ்கம், த்ருதீயகம், சாதுர்த்திகம் என்னும் விஷமஜ்வரங்கள் ஆகியவை இதனால் தீரும். இதற்கு 'ஜ்வராங்குச ரஸம்' எனப் பெயர். 113—115½.

ஆனந்த பைரவ ரஸம்:—லிங்கம், நாபி, மிளகு, வெண்காரம், திப்பிலி இவற்றைச் சமவெடையாக எடுத்து சூர்ணம் செய்யவும். இது 'ஆனந்த பைரவ ரஸம்' எனப்படும். இதில் ஒன்று அல்லது இரண்டு குஞ்ஜாப் பிரமாணம் தேனோடு கலந்து அவரவருடைய சரீர பலத்தை யறிந்து உபயோகிக்கச் செய்யலாம். வெட்பாலரிசி, இலவங்கப்பட்டை, இவ்விரண்டையும் சூர்ணம்செய்து, இத்துடன் மேற்கூறிய ரஸத்தைக் கலந்து கர்ஷப்பிரமாணம் உபயோகிக்க ஸந்நிபாதத்தினாலுண்டான அதிஸாரம் நிவ்ருத்தியாகும். இதற்கு பத்தியக்கிரமம் தயிரும் அன்னமும் கலந்து புஜிக்கச் செய்யலாம்; பசுவின்நெய், மோர் இவற்றையும் உபயோகிக்கலாம். விசேஷமாக தாவறட்சியுண்டானால் குளிர்ந்த ஜலத்தைக் குடிக்கலாம்; இரவில் நன்றாக நித்திரை யுண்டாகாவிட்டால் சிறிது கஞ்ஜாவை உபயோகிக்கலாம். 116—119.

ஸூசிகாபரண ரஸம்:—நாபி ஒரு பலம், இரஸம் சாணப்பிரமாணம் இவ்விரண்டையும் ஒன்றாகச் சூர்ணஞ்செய்து, ஒரு அகலில் வைத்து மற்றோர் அகலால் மூடி, சீலை மண் செய்து உலர்த்தி, அடுப்பில் ஏற்றி இரண்டு யாமம்வரையில் சிறுகச் சிறுகத் தீயிட்டெரிக்கவும். பிறகு புடத்தை யெடுத்துத் திறந்து, மேல் அகலின் உட்புறத்திற் படிந்திருக்கும் பஸ்மம்போன்ற ஔஷதத்தைச் சுரண்டியெடுத்து, காற்றுப் படாமலிருக்குமாறு உடனே ஒரு குப்பியில் வைக்கவேண்டும். குப்பியிலிருந்து ஊசியினால் எடுக்கையில், அவ்வூசிமுனையில் எவ்வளவு ஔஷதம் நிற்குமோ அவ்வளவு பிரமாணம் மூர்ச்சை யடைந்திருப்பவனுக்கும், ஸந்நிபாதத்தினால் அபாயகரமான நிலைமையிலிருப்பவனுக்கும் உட்கொள்ளக் கொடுக்கலாம். தீக்ஷ்ணமான கத்தியினால்

தலையில் சிறிதளவு கீண்டு இவ்வௌஷதத்தை அவ்விடத்தில் வைத்துத் தேய்க்க, இரத்தத்தில் ஔஷதம் நேராக ஸம்பந்தித்து விடுவதால் மூர்ச்சையுற்று அபாய நிலைமையிலிருப்பவனும் ஜீவித்துவிடுவான். இங்ஙனமே மரிக்கும் நிலைமையிலிருக்கும் ஸர்ப்பந்தீண்டிய மனிதனுக்கும் செய்யப் பிழைத்து விடக்கூடும். தாபம் அதிகரிக்குமானால் அவனுக்கு உடனே மதுரமான வஸ்துக்களைக் கொடுத்துத் தாபத்தைத் தணித்து விடலாம். 120—125½.

ஜலசூட ரஸம்:—பாரதபஸ்மமும் கந்தகமும் ஸமவெடை, அதற்கு நாலில் ஒரு பங்கு மனச்சிலையும், அதே அளவு பொன்னிமிளை, திப்பிலி, த்ரிகடு இவற்றையும் எடுத்து நன்றாகப் பொடித்து, மத்ஸியம் மயில் இவற்றின் பித்தங்களில் தனித்தனியே ஏழு முறை பாவனை செய்து, உலர்த்தி யெடுக்கவும். இதை 'இரண்டு குஞ்ஜாப்பிரமாணத்தில் உட்கொள்ளலாம். இதற்கு சதகுப்பியின் ஸ்வரஸத்தையாவது, பஞ்சகோலக்வாதத்தையாவது அனுபானமாய் உபயோகிகலாம். இதற்கு 'ஜலசூடரஸம்' எனப் பெயர். இது ஸந்நிபாததோஷத்தையும் போக்கும். இந்த ஔஷதத்தை உட்கொள்கையில் ஒரு பாத்திரத்தில் ஜலம் சேர்த்து அதில் கைகால்களை வைத்திருப்பது நலம். அதனால் ஔஷதத்தின் வீர்யமும் அதிகமாகும். 126—129.

பஞ்சவக்த்ர ரஸம்:—இரஸம், நாபி, கந்தகம், மிளகு, வெண்காரம் இவற்றை ஊமத்தையிலைச் சாற்றால் ஒரு நாள் முடிய அரைத்து உலர்த்தவும். 'பஞ்சவக்த்ர ரஸம்' எனப்படும் இவ்வௌஷதத்தை இரண்டு குஞ்ஜா ப்பிரமாணத்தில் உட்கொள்ள ஸந்நிபாதமும் நிவ்ருத்தியாகும். அதற்கு எருக்கன் வேரின் கஷாயத்தில் த்ரிகடு சூர்ணத்தையும் சேர்த்து அனுபானமாய் உபயோகிக்கலாம். தயிரும் அன்னமும் பத்தியமாகும். பிணியாளியை ஜலத்தில் சிறிது நேரம் இருக்கச் செய்வது நலம். இந்த ஔஷதத்தைத் தேனுடன் கலந்து உட்கொண்டால் கபத்தின் கோளாறுகளும் விலகும். ஜாடராக்னியை விருத்தி செய்வதற்கு இதை தேன், இஞ்சிஸ்வரஸம் இவற்றுடன் உபயோகிக்கலாம். இதை யுபயோகிக்கையில் வேண்டிய வளவு நெய்யும் மாம்ஸமும் சாப்பிடுவதால் அக்கினிபலம் சிறிதுங் குறைவடையாமல் மேன்மேலும் விருத்தியாகும். 130—133.

உன்மத்த ரஸம்:—இரஸமும், கந்தகமும் ஸமவெடை யெடுத்து ஊமத்தங்காயின் சாற்றால் ஒரு தினம் அரைத்து, அதற்குச் சமமாக த்ரிகடு சூர்ணம் கலந்து நஸ்யமிடலாம். இதனால் ஸந்நிபாத தோஷம் தீரும். இது 'உன்மத்த ரஸம்' எனக் கூறப்படும். 134½.

நேபாள ரஸம்:—நேபாளவிதையைத் தோல் நீக்கி,பத்து நிஷ்கப் பிரமாணம் எடுத்து, மிளகு, திப்பிலி, பாதரஸம், ஒவ்வொன்றும் ஒவ் வொரு நிஷ்கம் சேர்த்து, எலுமிச்சம்பழச் சாற்றில் ஒரு வாரம் பாவனை செய்யவும். இவ்வௌஷதத்தை அஞ்ஜனமிட ஸந்நிபாதம் தீரும். 135—136½.

நாராச ரஸம்:—இரஸம், வெண்காரம், மிளகு இவை ஒவ் வொரு பங்கு, கந்தகம், திப்பிலி, சுக்கு இவை தனித்தனியே இரண்டு பங்கு, தோல் நீக்கிய நேபாள விதை அனைத்திற்கும் ஸமவெடை ; இச்சரக்குகளைச் சேர்த்து சூர்ணம் செய்யவும்; இதை இரண்டு குஞ் ஜா பிரமாணத்தில் உட்கொள்ள நன்றாக விரேசனமாகும். இதனால் வயிற்றுப் பொருமல், மலச்சிக்கல், உதாவர்த்தம் இவை நிவ்ருத்தி யாகும். இது 'நாராச ரஸம்' என்று கூறப்படும். 137—139.

ரேசக ரஸம்:—லிங்கம், வெண்காரம், சுக்கு, திப்பிலி இவை ஒவ்வொன்றும் தனித்தனியே கால் பலம், பிரம்மதண்டு விதையும் நேபாள விதையும் ஒவ்வொரு பலம் ; இவ்வனைத்தையும் ஒன்றாக அரைத்து, பசும்பாலுடன் மூன்று குஞ்ஜா ப்பிரமாணத்தில் உட்கொள் ளவும். இதை மலபந்தம் வயிற்றுப் பொருமல் இவற்றில் மலம் கழி வதற்காக உட்கொள்ளச் செய்யவும். 140, 141.

வஸந்த குஸுமாகர ரஸம்:—ஸ்வர்ண பஸ்மம் இரண்டு பங்கு, அப்ரக பஸ்மம் இரண்டு பங்கு, அய பஸ்மம் மூன்று பங்கு, இரஸ பஸ் மம் நான்கு பங்கு, வங்க பஸ்மம் மூன்று பங்கு, பவள பஸ்மம் இரண்டு பங்கு, முத்து பஸ்மம் இரண்டு பங்கு, இவையனைத்தையும் ஒன்றாக அரைத்து, ஆடாதோடையின் ஸ்வரஸம், மஞ்சளின் ஸ்வரஸம், வாழைக்கிழங்கின் சாறு, தாமரையின் சாறு, ஜாதிமல்லிகையின் சாறு இவற்றால் தனித்தனியே அரைத்து, பசும்பாலில் அவ்வனைத்தையும் பாவனை செய்யவும். பிறகு துளஸி ஸ்வரஸத்தில் பச்சைக் கர்ப்பூரம் கலந்து, அதில் கஸ்தூரியை பாவனை செய்து, அக்கஸ்தூரியையும் மேற்கூறிய சரக்குகளுடன் சேர்த்து நன்றாகக் கலந்துவிடவும். இது 'வஸந்த குஸுமாகரம்' என்று கூறப்படுகிறது. எவ்விதமான மேஹ

ரோகங்களிலும் இதை இரண்டு குஞ்ஜாப்பிரமாணத்தில் தேனில் கல ந்து உட்கொள்ளக் கொடுக்கலாம். அம்லபித்தம் முதலிய ரோகங்களைப் போக்குவதற்கு அதே அளவாக சர்க்கரை சந்தனம் இவற்றுடன் கலந்து உபயோகிக்கச் செய்யலாம். 142—146½.

**இராஜ மிருகாங்க ரஸம்:**—இரஸபஸ்மம் மூன்று பாகம், ஸ்வர்ண பஸ்மம் ஒரு பாகம், அப்ரகபஸ்மம் ஒரு பாகம், மனச்சிலே, கந்தகம், தாளகம் இம்மூன்றும் தனித்தனியே இரண்டிரண்டு பாகம்; இவ் வனைத்தையும் ஒன்ருகக் கூட்டி சூர்ணம் செய்யவும். இந்த சூர்ண த்தைப் பலகறைகளின் த்வாரங்களில் அடைத்துவிடவும். பிறகு வெண்காரத்தை ஆட்டுப்பால் விட்டு அரைத்து இதனல் அப்பலகறை களின் த்வாரங்களை மூடி, ஒரு மட்பாத்திரத்தில் அவற்றை வைத்து, அப்பாத்திரத்தின் முகத்தையும் மூடி, சீலை மண் செய்து உலர்த்தி கஜபுடமிடவும்; அப்பால் ஆறியபிறகு பாத்திரத்தை வெளியே லெடு த்து, அதிலுள்ள ஔஷதத்தைக் கிரஹித்து சூர்ணம் செய்துகொள்ள வும். இது 'இராஜ மிருகாங்கம்' எனப்படும். இதில் நான்கு குஞ் ஜாப்பிரமாணம் உட்கொள்ள க்ஷயரோகத்தைப் போக்கக்கூடியது. பத்துத் திப்பிலி, இருபத்தொன்பது மிளகு, இவற்றைப் பொடித்துத் தேனிற் கலந்து இதற்கு அனுபானமாய் உபயோகிக்கலாம். ஆஹாரங் களில் அவசியமானவளவு நெய் சேர்த்து உட்கொள்ளச் செய்யலாம். ஸ்திரீஸம்பந்தம், அதிக கோபம், அக்னிக்குச் சமீபத்திலிருத்தல், சரீரத்திற்கு சிரமமுண்டாக்கும் காரியங்கள் இவற்றைப் பரிஹ ரிக்கவும். 147—151½.

**ஸித்தயோக ரஸம்:**—ஒரு பங்கு பாரதமும், இரண்டு பங்கு கந் தகமும் கல்வத்திலிட்டு கஜ்ஜளி செய்து, அவற்றிற்குச் சமவெடை எஃகின் பொடியைச் சேர்த்து, சோற்றுக் கற்றாழையின் சாற்றல் அனைத்தையும் இரண்டு யாமம் ஆட்டி, கோளமாகச் செய்து, தாம்பிர பாத்திரத்தில் வைத்து, அதனுள் ஆமணக்கிலைகளைப் போட்டு மூடி வைக்கவும். அரை யாமம் கழித்துப் பார்க்க, அப்பாத்திரத்தில் அதிக உஷ்ண முண்டாயிருக்கும். பிறகு தானியக் களஞ்சியத்தில் அதைப் புதைத்து வைத்து, ஒரு நாள் கழிந்ததும் எடுத்து சூர்ணம் செய்து வஸ்திர காளிதம் பண்ணியெடுக்க, அவ்வௌஷதம் நன்கு ஜலத்தின்

மேல் மிதக்குமாறு பக்குவமா யிருக்கும். பிறகு சோற்றுக் கற்றாழை யின் சாற்றிலும், கரிசிலாங்கண்ணிச் சாற்றிலும், மணத்தக்காளிச் சாற்றிலும், மருதோன்றியின் சாற்றிலும், ச்ராவணீ யென்னும் ஓஷதியின் சாற்றிலும், வெள்ளைச் சாரடையின் சாற்றிலும், சீந்திற் கொடியின் சாற்றிலும், நொச்சியின் சாற்றிலும், சித்திரமூல ஸ்வரஸத்திலும் தனித்தனியே ஏழு முறை பாவனை செய்து, வெயிலில் உலர்த்தி யெடுக்கவும். இது 'ஸித்தயோகம்' என்று வழங்கப்படும். ஸித்தர் களுடைய அனுபவத்தில் பயனுண்டானதாக அவர்களால் கூறப்பட்ட ஔஷதமாகும். இது அநேகம் வியாதிகளைப் போக்கக் கூடியது. எஃகு அல்லது அயத்தைப் பொடித்து மேற்கூறியவிதம் செய்தால் பஸ்மமாகும். அதுபோலவே ஸ்வர்ணம் முதலியவற்றையும் செய்ய பஸ்மமாகும். எந்த ரோகங்களிலும் த்ரிபலாக்வாதம், தேன் இவற்று டன் கலந்துட்கொள்ளலாம். 152—158.

**அக்னி ரஸம்:**—த்ரிகடு, த்ரிபலை, ஏலக்காய், ஜாதிக்காய், இலவங்கம் இவை ஒவ்வொன்றும் ஒன்பது பங்கு, சுத்த ரஸம் இவற்றிற்குச் சமயெடை சேர்த்து அரைத்து வைத்துக்கொண்டு, இரண்டு நிஷ்க பிரமாணம் தேனில் கலந்து உட்கொள்ளலாம். இது ''அக்னி ரஸம்'' எனப்படும். இது க்ஷய காஸங்களைப் போக்கும். 159—160½.

**அம்ருதார்ணவ ரஸம்:**—பாரதம், கந்தகம், லோஹபஸ்மம், வெண்காரம், சிற்றரத்தை, வாய்விடங்கம், த்ரிபலை, தேவதாரு, த்ரிகடு, சீந்திற்கொடி, தாமரைக் கிழங்கு, தேன், சுக்கு இவ்வனைத்தையும் ஸமயெடை சேர்த்து அரைத்து, மூன்று குஞ்ஜாப்பிரமாணத்தில் உட்கொள்ள எவ்வித காஸமும் தீரும். இது 'அம்ருதார்ணவம்' என்று கூறப்படும். 161—162½.

**ஸூர்யாவர்த்த ரஸம்:**—பாதரஸம் ஒரு பங்கு, கந்தகம் அரைப் பங்கு இவ்விரண்டையும் சோற்றுக் கற்றாழையின் சாற்றால் ஒரு யாம நேரம் அரைத்து, அவற்றிற்குச்சமயெடையான செப்புத் தகடுகளில்

1. லோஹம் முதலானவற்றை பஸ்மம் செய்தபிறகு நன்கு பக்குவமாயிற்று என்று பரீக்ஷித்தறிய அவற்றை ஜலத்தில் சேர்க்கவும்; அப்பொழுது அவை ஜலத்தில் மிதந்தால் பக்குவமானதற்கு இலக்ஷணம்; அமிழ்ந்துவிட்டால் பக்குவமாகவில்லை யென்றறியவும்.

அக் கல்கத்தைத் தடவி, ஒருநாள் ஸ்தாலீயந்திரத்தில்[1] எரித்தெடுத்து, சூர்ணம்செய்து, அதில் இரண்டு குஞ்ஜா பிரமாணம் உட்கொள்ளலாம்; இது ச்வாஸ ரோகத்தைப் போக்கும். இதற்கு 'ஸூர்யாவர்த்த ரஸம்' என்று பெயர். 163—164½.

ஸ்வச்சந்த பைரவ ரஸம்:—சுத்தி செய்த பாரதம், அய பஸ்மம், பொன்னிமிளை, கந்தகம், தாளகம், கடுக்காய், அகில், கருநொச்சி, த்ரிகடு, வெண்காரம், நாபி இவற்றைச் சமவெடையாகச் சேர்த்து, கருநொச்சிச்சாற்றால் ஒரு தினமும், கொட்டைக்கரந்தையின் சாற்றால் ஒரு தினமும் அரைத்து, இரண்டு குஞ்ஜா பிரமாணத்தில் குளிகைகள் உருட்டி உலர்த்தி வைத்துக்கொள்ளவும். வாதரோகங்களால் பீடிக்கப்படுபவர் இதை உபயோகிக்கலாம். இது 'ஸ்வச்சந்த பைரவம்' எனப்படும். சிற்றரத்தை, சீந்தில், தேவதாரு, சுக்கு, ஆமணக்கன்வேர் இவற்றைக் கஷாயமிட்டு, அதில் சிறிது மஹிஷாக்ஷி யென்னும் பிசினைப் பொடித்துச் சேர்த்து இளஞ்சூடாயிருக்கையில் அனுபானமாய் உட்கொள்ளலாம். 165—168.

ஹம்ஸபோடலீ ரஸம்:—நன்றாக எரித்தெடுத்த பலகறையின் சூர்ணம், த்ரிகடு, வெண்காரம், நாபி, கந்தகம் இரஸம் இவற்றைச் சமவெடை யெடுத்து, எலுமிச்சம்பழச் சாற்றால் அரைத்து வைத்துக்கொண்டு, ஒரு மாஷப்பிரமாணம் மிளகுப்பொடியோடும் நெய்யோடும் கலந்து உட்கொள்ளலாம். இது கிரஹணீரோகத்தைப் போக்கும். இதற்கு மோரும் அன்னமும் கலந்துபயோகிப்பது பத்தியமாம். 169, 170.

த்ரிவிக்ரமரஸம் :— தாம்ரபஸ்மத்தை அதற்குச் சமபாகமான வெள்ளாட்டுப் பாலில் கலந்து தீயிலேற்றி ஜலபாகம சுண்டும் வரையில் பக்குவம் செய்து இரஸம், கந்தகம் இவற்றை அதற்குச் சமவெடையாகச் சேர்த்து, கருநொச்சிச்சாற்றால் ஒரு நாள் அரைத்து, கோளமாகச் செய்து, ஒரு யாமகாலம் வாலுகாயந்திரத்தில்[2] பக்குவம் செய்யவும். இதில் இரண்டு குஞ்ஜா பிரமாணம் உபயோகிக்கலாம்; கொடி

1. ஒரு சிறு கலசத்தில் பக்குவம் செய்யவேண்டிய ஔஷதச் சரக்குகளைச் சேர்த்து, அதன் வாயை ஒரு அகலால் மூடி, அடுப்பிலேற்றி எரிக்கவேண்டும்; இவ்வகையாக பாகம் செய்வதற்கான ஸாதாரண உபகரணத்திற்கு 'ஸ்தாலீயந்திரம்' எனப் பெயர்.

2. வாலுகாயந்திரம் 213-வது பக்கம் பார்க்க.

மாதுளையின் வேரைக் கஷாயமிட்டு இதற்கு அனுபானமாய் உட்கொள்ளலாம். இதற்கு 'த்ரிவிக்ரம ரஸம்' எனப் பெயர். இதை ஒரு மாத காலம் விடாமலுபயோகிக்க அச்மரீ யென்னும் மூத்திர வியாதி நிவ்ருத்தியாகும். 171—173.

மஹாதாளேச்வர ரஸம்:—தாளகம், பொன்னிமிளை, மனச்சிலை, பாதரஸம், இந்துப்பு, வெண்காரம் இவை ஒவ்வொரு பாகம், கந்தகம், தாம்ர பஸ்மம் இவ்விரண்டும் தனித்தனியே இரண்டு பாகம், இவற்றை எலுமிச்சம்பழச்சாற்றால் ஐந்து நாட்கள் அரைத்து மூசைகளில் அடைத்து பூதரயந்திரத்தில்[1] வைத்துப் புடமிடவும்; இவ்விதமே ஒவ்வொரு முறையும் எலுமிச்சம்பழச்சாற்றால் அரைத்து ஆறு புடம் போடவேண்டும். இவ்விதம் புடமிட்ட ஔஷதச்சரக்கு ஆறு பலம், தாம்ர பஸ்மம் இரண்டு பலம், அய பஸ்மம் நான்கு பலம்; இவ்வனைத்தையும் எலுமிச்சம்பழச்சாற்றால் ஒரு நாள் அரைத்து ஸாதாரணமாய் ஒரு புடம் போடவும். பிறகு அதை யெடுத்து அத்துடன் முப்பதில் ஒரு பாகம் நாபியைச் சேர்த்து, எல்லாவற்றையும் ஒன்றாக அரைத்து எடுக்கவும். இதை இரண்டு மாஷப் பிரமாணம் எருமை நெய்யுடன் கலந்து உட்கொள்ளவேண்டும். பிறகு ஆட்லாங் கொடியை யுலர்த்தி சூர்ணம் செய்து, கர்ஷப்பிரமாணம் சூர்ணத்தைத் தேன் அல்லது நெய்யோடு கலந்து மேற்கூறிய ஔஷதத்திற்கு அனுபானமாய் உபயோகிப்பது நலம். 'மஹாதாளேச்வர ரஸம்' என்னும் இவ்வௌஷதம் பலவகையான குஷ்டங்களையும் போக்கும். 174—178½.

தஷ்டதுடார ரஸம்:—இரஸ பஸ்மம், கந்தகம், அய பஸ்மம், தாம்ர பஸ்மம், மஹிஷாக்ஷி குக்குலு, த்ரிபலை, வேம்பு, சித்திரமூலம், சிலாஜது இவற்றைத் தனித்தனியே சூர்ணம் செய்து, ஒவ்வொன்றிலும் பதினாறு சாணமெடை யெடுத்துக்கொள்ளவும். புங்கங்கொட்டையின் சூர்ணம் அறுபத்து நான்கு சாணம்; அப்ரக பஸ்மம் அறுபத்து

---

1. பூதரயந்திரம்—இரஸௌஷதச்சரக்குகள் அடங்கிய ஒரு குப்பியை மற்றொரு மட்பானையினுள் அடக்கி, அப்பானையினுள் ஔஷதக்குப்பி மறையுமாறு மணலை நிரப்பி, ஒரு குழியில் அப்பாத்திரத்தை அமர்த்தி வைத்து, அதன் மேலும் சுற்றுப்புறங்களிலும் தீயிடவேண்டும்; இது "பூதரயந்திரம்" எனப்படும்.

நான்கு சாணம்; இவ்வனைத்தையும் ஒன்றாகக் கலந்து, தேன் நெய் இவற்றைப் போதுமானவளவு சேர்த்துக் குழைத்து, நெய் வைத்துப் பழகிய மட்பாத்திரத்தில் இம்மருந்தைச் சேர்த்து வைக்கவும். 'குஷ்ட குடார ரஸம்' என்கிற இது அவயவங்களைச் சிதறச்செய்யும் கொடிய குஷ்டரோகங்களையும் போக்கவல்லது. 179—182.

உதயாதித்ய ரஸம்:—சுத்த ரஸம் ஒரு பங்கு, கந்தகம் இரண்டு பங்கு ; இவற்றைச் சோற்றுக்கற்றாழையின் சாற்றால் ஒரு நாள் அரைத்து, கோளமாக உருட்டி, மட்பாத்திரத்தினுள் வைத்து, இரஸத்திற்குச் சமான எடையுள்ள ஒரு தாம்ரபாத்திரத்தை ஔஷத முறைக்கு ஏற்றவாறு சுத்தம் செய்து, இப்பாத்திரத்தைக் கவிழ்த்து மட்பாத்திரத்தின்மேல் மூடவேண்டும் ; அத்தாம்ரபாத்திரத்தைச் சுற்றிலும் சாம்பரைக் கனமாகத் தூவி, மட்பாத்திரத்திற்கு அடியில் கடுந்தீயிட்டெரித்துக்கொண்டே, தாம்ரபாத்திரத்தின் மேல் பசுஞ்சாணங்கலந்த குளிர்ந்த நீரைச் சிறுகச் சிறுக விட்டு வரவேண்டும் ; இவ்விதம் இரண்டு யாமகாலம் எரித்து அப்பால் தீயை நிறுத்திவிடவும். பிறகு பேயகத்தி, சித்திரமூலம், த்ரிபலை, கொன்றை இவற்றின் பட்டை, வாய்விடங்கம், வாலுளுவை இவற்றை இடித்து ஜலம் சேர்த்து க்வாதம் காய்ச்சி, இக்கஷாயத்தில் மேற்கூறிய ஔஷதத்தை ஒரு நாள் முடிய பாவனை செய்யவேண்டும். 'உதயாதித்ய ரஸம்' என்கிற இதை இரண்டு குஞ்ஜா அளவில் உட்கொள்ளலாம். இது விசர்ச்சிகா யென்னும் சர்மரோகத்தையும், தத்ரு குஷ்டம் என்னும் படையையும், வாதரக்தத்தையும் நிவ்ருத்தி செய்யும். கருங்காலிப்பட்டையின் கஷாயத்தில் வாலுளுவைப் பொடியைச் சேர்த்துக் காய்ச்சி வடிக்கட்டி, அதற்கு அனுபானமாய் உபயோகிக்க வேண்டும். வெண்குஷ்டரோக முடையவன் மூன்று சாணமெடை உதயாதித்ய ரஸத்தைப் பசும்பாலுடனாவது, த்ரிபலாக்வாதத்துடனாவது உட்கொண்டுவர மூன்று நாட்கள் அல்லது ஏழு நாட்கள் கழித்து உடலில் எங்கும் கொப்புளங்கள் உண்டாகும். அப்பால் அவுரிவேர், குன்றிவேர், ஊமத்தைவேர், செருப்படை, வல்லாரை, புளியாரை இந்த மூலிகைகளையும் அன்னபேதியையும் ஒன்றாக அரைத்து, ஏழு நாள் அக்கொப்புளங்களின்மேல் தடவிவர அவை சாந்தமாகும். எவ்வித வெண்

குஷ்டமும் இவ்வௌஷதப்பிரயோகத்தினால் நிவ்ருத்தியாகும். சவித்ரத்தின்மேல் உபயோகிப்பதற்கு வேறுவிதமான லேபங்களும் வைத்தியர்களுடைய அநுபவத்தில் வந்திருப்பதாகக் கூறப்படுகிறது:—குன்றிமணி, சித்திரமூலம் இவ்விரண்டையும் அரைத்து மேலே பூசி வந்தாலும், மனச்சிலை, நாயுருவிச்சாம்பர் இவற்றை ஜலத்தினால் அரைத்துத் தடவினாலும் வெண் குஷ்டம் விலகும். 183—192½.

ஸர்வேச்வரரஸம்:—இரஸம் ஒரு பலம், கந்தகம் நான்கு பலம், இரண்டையும் ஒன்றாகச் சேர்த்து ஒரு யாமகாலம் அரைக்கவும்; பிறகு தாம்ரபஸ்மம், அப்ரக பஸ்மம், அயபஸ்மம், லிங்கம் இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பலம்; ஸ்வர்ணம், வெள்ளி இவ்விரண்டும் பிரத்தியேகம் பத்து நிஷ்கங்கள்; வஜ்ரபஸ்மம் ஒரு மாஷமெடை; சுத்த தாளகம் இரண்டு பலம்; இவ்வனைத்தையும் கல்வத்திலிட்டு எலுமிச்சம்பழச்சாற்றால் ஒரு நாள் அரைக்கவும்; அவ்விதமே ஊமத்தையிலைச்சாறு, ஆடாதோடை இலைச்சாறு, இலைக்கள்ளிச்சாறு, எருக்கிலைசசாறு, எட்டிக்கொட்டையின் கஷாயம், அலரியிலைச்சாறு இவற்றில் ஒவ்வொன்றையும் சேர்த்து ஒவ்வொரு நாள் அரைக்கவேண்டும்; இவ்வாறு ஏழு நாட்கள் அரைத்த பின்பு உருட்டி வஸ்திரத்தினால் கவசமிட்டு வாலுகாயந்திரத்தில் மூன்று நாட்கள் இளந்தீயிட்டு எரித்து பக்குவம் செய்து, பிறகு அப்புடத்தையுடைத்து, அதிலுள்ள மருந்துடன் ஒரு பலம் நாபியையும், இரண்டு பலம் திப்பிலியையும் பொடித்துச் சேர்த்து அனைத்தையும் ஒன்றாகக் கூட்டவும். இது 'ஸர்வேச்வர ரஸம்' எனப்படும். இதை இரண்டு குஞ்ஜா அளவில் தேனில் கலந்து உட்கொள்ளலாம். பரிச உணர்ச்சி யிழந்த குஷ்டரோகத்திலும், படைபோன்ற விகாரத்தை யுண்டுபண்ணும் குஷ்டத்திலும் இவ்வௌஷதம் உட்கொள்ளத் தகுந்தது. வாலுளுவை, தேவதாரு இவ்விரண்டையும் சூர்ணம் செய்து, கால் பலம் சூர்ணத்தை ஆமணக்கெண்ணெயுடன் கலந்து மேற்கூறிய ஔஷதத்திற்கு அனுபானமாய் உட்கொள்வதால் நற்குண முண்டாகும். 193—199.

ஸ்வர்ணக்ஷீரீ ரஸம்:—ஐந்து பலமெடை பிரம்மதண்டு விதையை ஒரு திரோணம் மோரில் சேர்த்து பக்குவம் செய்யவும்; மோர் முடியவும் வற்றிப்போன பின்பு ஒரு திரோணம் பாலில் சேர்த்து

அவ்விதமே கொதிக்கவைத்து, அதிலுள்ள பால் அனைத்தும் வற்றிய பிறகு அவ்விதைகளை யெடுத்துக் கழுவி யுலர்த்தி, சூர்ணம் செய்து, அச்சூர்ணத்தில் ஐந்து பலமும், மிளகுப்பொடி இரண்டு பலமும், இரஸபஸ்மம் ஒரு பலமும் சேர்த்து, ஒன்றாகக் கலந்து வைத்துக் கொள்ளவும். இதில் ஒரு வேளைக்கு நிஷ்கப்பிரமாணம் உட்கொள்ளலாம். பரிச வுணர்ச்சியைப் போக்கும் குஷ்டரோகத்தில் இதனால் நற்குண முண்டாகும். இதற்கு 'ஸ்வர்ணக்ஷீரீ ரஸம்' என்று பெயர். 200—202.

மஹா மேஹபந்த ரஸம்:—இரஸபஸ்மம், காந்தபஸ்மம், மண்டூரம், சிலாஜது, சுத்தமான பொன்னிமிளை, மனச்சிலை, த்ரிகடு, த்ரிபலை, இலந்தங்கொட்டை, விளாம்பழம், மஞ்சள் இவற்றில் சூர்ணம் செய்யக்கூடியவற்றைப் பொடித்து, இருபது முறை கரிசிலாங்கண்ணிச்சாற்றில் பாவனை செய்யவும்; பிறகு அச்சூர்ணமனைத்தையும் உலர்த்தி, நிஷ்கப்பிரமாணம் தேனில் கலந்து உட்கொள்ள எவ்வித மேஹரோகங்களும் போகும். 'மஹாமேஹபந்தரஸம்' என்று இதற்குப் பெயர். நன்கு முதிர்ந்த வேப்பமரத்தின் ஐந்து வித்துகளைச் சூர்ணம் செய்து, ஒரு பலமெடை அரிசி கழுவிய நீரில் சேர்த்து, மேற்கூறிய ஔஷதத்திற்கு அனுபானமாய் உட்கொள்ளலாம். அல்லது இரண்டு நிஷ்கமெடை நெய்யில் கலந்தாவது உபயோகிக்கலாம். வெகு நீடித்த காலமாய் தொடர்ந்து வரும் மேஹரோகம் அனைத்தும் இதனால் நிவ்ருத்தியாகும். 203—206.

மஹா வஹ்நி ரஸம்:—இரஸம் நாலு பங்கு, கந்தகம் எட்டு பங்கு, மஞ்சள், த்ரிபலை, கோரோசனை இவை பிரத்தியேகம் இரண்டு பாகம், கருஞ்சிவதை, சித்திரமூலம் இவை ஒவ்வொன்றும் மூன்று பாகம், த்ரிகடு, நேபாளம், ஜீரகம் இவை ஒவ்வொன்றும் எட்டு பாகம்; இவற்றை ஒருமிக்கப் பொடித்து, காஞ்ஜிக மென்னும் காடியிலும், கள்ளிப்பாலிலும், கரிசிலாங்கண்ணிச்சாற்றிலும், சித்திரமூலக் கஷாயத்திலும், ஆமணக்கெண்ணெயிலும் தனித்தனியே எவ்வேழு முறை பாவனை செய்யவும். இது 'மஹா வஹ்நி ரஸம்' எனப்படும். ஒரு நிஷ்கம் ஔஷதத்தை உஷ்ணஜலத்துடன் உட்கொள்ள நன்கு விரோசனமாகும். இதை யுபயோகிப்பவர் மாலைப் பொழுதில் இந்துப்

பும் போரும் கலந்த அன்னத்தைப் பத்தியமாய் உட்கொள்வது நலம். குளிர்ந்த ஜலம் உபயோகிக்கக்கூடாது. வயிற்றைப்பற்றி யுண்டாகும் வியாதிகளையும், ஆமவாதம், ஊருஸ்தம்பம் முதலியவற்றையும் இது நிவ்ருத்தி செய்யும். 207—211.

வித்யாதர ரஸம்:—கந்தகம், தாளகம், பொன்னிமிளை, தாம்ரபஸ்மம், மனச்சிலை, இரஸம் இவ்வளைத்தையும் சூர்ணம் செய்து, திப்பிலிக் கஷாயத்தில் ஒரு தினமும், கள்ளிப்பாலில் ஒரு தினமும் பாவனை செய்து வைத்துக்கொள்ளவும். அதில் அரை நிஷ்கவெடை யெடுத்துத் தேனுடன் கலந்து உட்கொள்ள குன்மம், மண்ணீரலின் வீக்கம் இவை நீங்கும். இதற்குப் பசுமூத்திரம் அனுபானம். இது 'வித்யாதர ரஸம்' எனப்படும். 212—213½.

த்ரிநேத்ர ரஸம்:—வெண்காரம், மான்கொம்பு, ஸ்வர்ணம், தாம்ரபஸ்மம், இரஸம் இவற்றை இஞ்சிஸ்வரஸத்தினால் ஒரு நாள் அரைத்து, அகல்களில் வைத்துச் சீலைமண் செய்து புடம் போடவும். இது 'த்ரிநேத்ரரஸம்' எனப்படும். இதில் மாஷப்பிரமாணம் நெய் தேன் இவற்றில் கலந்து உட்கொள்ளலாம். பிறகு இந்துப்பு, ஜீரகம், பெருங்காயம் இம்மூன்றையும் பொடித்து, தேன், நெய் இவற்றில் குழைத்து அனுபானமாய் உபயோகிக்க வேண்டும். இதை ஒரு மாத காலம் உபயோகித்துவர பரிணாமசூலை யென்னும் வயிற்றுவலி தீரும். 214—216.

கஜகேஸரி ரஸம்:—ஒரு பங்கு பாதரஸத்தையும், இரண்டு பங்கு கந்தகத்தையும் ஒரு யாமம் நன்றாய் அரைக்கவும்; இரண்டுக்கும் ஸமயெடையாக தாம்ரபஸ்மத்தையும் சேர்த்து ஓர் அகலில் வைத்து, மற்றொரு அகலால் மூடி சீலை மண்செய்து, ஒரு மட்பாத்திரத்தில் வைத்து, அதற்குள் கீழும் மேலும் உப்பைச் சேர்க்கவேண்டும். பிறகு அதை கஜபுடத்தில் எரித்து, தனக்குத்தானே ஆறிய பிறகு எடுத்து உள்ளிருக்கும் ஔஷதத்தைச் சூர்ணம் செய்து வைத்துக்கொள்ளவும். இதை இரண்டு குஞ்ஜாப்பிரமாணத்தில் வெற்றிலையில் மடித்து மென்றுவிடவும்; பிறகு பெருங்காயம், சுக்கு, ஜீரகம், செப்பு, மிளகு இவற்றின் சூர்ணத்தில் கால் பலம் எடை உஷ்ண ஜலத்துடன் அனுபானமாய் உட்கொள்ளலாம். 'கஜகேஸரி ரஸம்'

என்கிற இது அஸாத்தியமென்று கருதப்படும் வயிற்று வலிகளையும் போக்கக்கூடியது. 217—220.

ஸம்தாதி வடி:—பாரதம், நாபி, கந்தகம், ஓமம், த்ரிபலை, ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம், சித்திரமூலம், இந்துப்பு, ஜீரகம், அட்டுப்பு, த்ரிகடு இவை தனித்தனியே ஒவ்வொரு பங்கும், இவ்வனைத்துக்கும் ஸமமாக எட்டிக்கொட்டையும் சேர்த்து சூர்ணம் செய்து, எலுமிச்சம் பழச் சாற்றால் அரைத்து, மிளகுகளைப்போல் மாத்திரைகள் செய்யவும். அக்னிமாந்தியத்திற்கு இது சிறந்த ஔஷதம். 221—222½.

அஜீர்ண கண்டக ரஸம்:—பாரதம், நாபி, கந்தகம், இவற்றைச் சமவெடை யெடுத்து, இவ்வனைத்துக்கும் ஸமமாக மிளகுப் பொடியையும் சேர்த்து, கண்டங்கத்திரிக்காயின் ஸ்வரஸத்தினால் ஆட்டி, அந்த ஸ்வரஸத்திலேயே இருபத்தோரு முறை பாவனை செய்து, மூன்று குன்றுமணி யெடையில் மாத்திரைகள் செய்யவும்; 'அஜீர்ண கண்டக ரஸம்' என்கிற இவ்வௌஷதம் அகில அஜீர்ணத்தையும் விஷூசியையும் போக்கக்கூடியது. 223—225.

மந்தார பைரவ ரஸம்:—இரஸபஸ்மம், தாம்ரபஸ்மம், பெருங்காயம், தாமரைக்கிழங்கு, இந்துப்பு, கந்தகம், தாளகம், கடுகரோகிணி இவற்றைச் சமவெடை யெடுத்து சூர்ணம்செய்து, வெள்ளைச்சாறனை, தேவதாளி, கருநொச்சி, மூள்ளுக்கீரை, பேய்ச்சுரை இவற்றின் ஸ்வரஸத்தினால் தனித்தனியாக ஒவ்வொரு நாள் ஆட்டி உளுந்து அளவாக மாத்திரைகள் செய்யவும். இதைத் தேனுடன் கலந்து உபயோகிக்கலாம். இதற்கு வேப்பம்பட்டை க்வாதத்தை அனுபானமாய் உட்கொள்ள வேண்டும். கபத்தினாலுண்டாகும் வியாதிகளை நிவ்ருத்திக்க வல்லது. இது 'மந்தார பைரவ ரஸம்' என்று வழங்கப்படும். 226—228.

வாதநாசந ரஸம்:—பாரதம், ஸ்வர்ணம், வஜ்ரம், தாம்ரம், அயம், பொன்னிமிளை, தாளகம், நீலாஞ்ஜனம், துத்தம், அபினி, பஞ்சலவணம் இவற்றை ஸமபாகம் எடுத்து, கள்ளிப்பாலிட்டு ஒரு நாள் அரைத்து, அகல்களில் வைத்து சீலைமண்செய்து, பூதரயந்திரத்தில் பக்குவம்செய்யவும். பிறகு அப்புடத்திலுள்ள ஔஷதத்தை யெடுத்து ஒரு மாஷாப்பிரமாணம் இஞ்சி ஸ்வரஸத்தில் கலந்து உட்கொள்ள

வேண்டும். மோடியையும் திப்பிலியையும் பொடித்துச் சேர்த்து பக்குவம் செய்த க்வாதத்தை மேற்கூறிய ஔஷதத்திற்கு அனுபானமாய் உபயோகிக்கலாம் ஆக்ஷேபகமென்னும் இசிவு முதலான எல்லா வாத ரோகங்களையும் போக்கும். 229—231½.

ரோகஹர ரஸம்:—ஸ்வர்ணம் எட்டு சாணமெடை, இரஸம் பன்னிரண்டு சாணம், அப்ரகம் நான்கு சாணம், கந்தகம் பன்னிரண்டு சாணம், தாம்ரம் இரண்டு சாணம், பொன்னிமிளை இரண்டு சாணம், வங்கம் இரண்டு சாணம், ஸௌவீரம் மூன்று சாணம், அயம் எட்டு சாணம், நாபி மூன்று சாணம், கிலப்பனங்கிழங்கு ஒரு பலம்; இவற்றை நன்குகப் பொடி செய்து, எலுமிச்சம்பழம் முதலிய புளிப்பான பழங்களின் சாறுகளை விட்டு ஒரு நாள் அரைத்துப் புடம்போடவும். அப்பால் அப்புடத்திலுள்ள ஔஷதத்தை யெடுத்து, கல்வத்தில் அரைத்து வைத்துக் கொள்ளவும். 'ரோகஹர ரஸம்' என்கிற இவ்வௌஷதம் உக்கிரமான ஸந்நிபாதம், வெண் குஷ்டம், குஷ்டம், விஸர்ப்பம், பகந்தரம், ஜ்வரம், அஜீர்ணம், கிருத்ரிமவிஷப் பிரயோகத்தினுலுண்டாகும் கோளாறுகள் இவ்வற்றில் ஒரு மாஷமெடையில் இஞ்சி ஸ்வரஸத்துடன் கலந்து உபயோகிக்கலாம். 232—237.

ஸந்நிபாத பைரவ ரஸம்:—இரஸம், கந்தகம் ஒவ்வொன்றும் முக்கால் பலம்; வெள்ளி, அப்ரகம், தாம்ரம், வங்கம், அபினி இவை கால் கால் பலம்; முருங்கப்பட்டையின் ஸ்வரஸத்திலும், சித்திர மூல ஸ்வரஸத்திலும், சுக்குஸ்வரஸத்திலும், பில்வ ஸ்வரஸத்திலும், முள்ளுக்கீரை ஸ்வரஸத்திலும் தனித் தனியே ஒவ்வொரு யாமம் மேற்கூறிய சரக்குகளை அரைத்து, கோளமாகச் செய்து வஸ்திரத்திலுல் கவசம் செய்து, இதை ஒரு காசக்குப்பியில் வைத்து, அதினுள் கீழும் மேலும் உப்பை நிரப்பி, இக்குப்பியை மற்றொரு மட்பாத்திரத்தில் வைத்து, அதனுள் மணலை நிரப்பி, இரண்டு யாமகாலம் எரித்தல் போடவேண்டும். அப்பால் அக்கோளத்தை யெடுத்து சூர்ணம்செய்து, அத்துடன் கால் பலம் பொடிசெய்த பவளமும், சாணமெடை நாபியும் சேர்த்து, கிருஷ்ண ஸர்ப்பத்தின் விஷத்தில் இரண்டு நாள் பாவனை செய்யவும். கிரந்திதகரம், அமுக்கிருங் கிழங்கு, ஜடாமாம்ஸி, பிரம்மதண்டு, நீர்வஞ்சி, திப்பிலி, அவுரி, இலவங்கப்பத்திரி,

ஏலம், சித்திரமூலம், கருப்புக் கஞ்சாங்கோரை, சதகுப்பி, தேவதாளி, ஊமத்தை, அகத்தி, கொட்டைக்கரந்தை, இலுப்பை, ஜாதிக்காய், மருக்காரை இவற்றின் கஷாயநீரால் தனித்தனியே ஒவ்வொரு நாள் அரைத்து, உலர்த்தி வைத்து ஒரு குப்பியில் அடைத்து வைத்துக் கொள்ளவும். இதை இரண்டு குஞ்ஜ ப்ரமாணத்தில் உட்கொள்ள லாம். பதினாறு மிளகுகளைப் பொடி செய்து, செம்மட்டி மாதளை யின் சாறு, இஞ்சிஸ்வரஸம் இவற்றுடன் சேர்த்து அனு பானமாய் உபயோகிக்கலாம். 'ஸந்நிபாதபைரவரஸம்' எனப்படும் இதை ஸந்நிபாத ரோகங்களில் ப்ரயோகிக்கலாம். 238—246.

**கிரஹணி கபாட ரஸம்:**—வெள்ளி, நல்முத்து, ஸ்வர்ணம், யவ க்ஷாரம், இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு பாகம்; கந்தகம் இரண்டு பங்கு; பாதரஸம் மூன்று பங்கு; இவற்றை விளாம்பழ ரஸத்தினால் அரைத்து, மான்கொம்புக்குள் சேர்த்து, சீலைமண் செய்து புடம் போடவும். அதை ஆறிய பிறகு எடுத்து, சிற்றுமுட்டியின் ஸ்வரஸத் தினால் ஏழு நாட்களும், நாயுருவிச் சாற்றால் மூன்று நாட்களும் அரைக்கவேண்டும். பிறகு வெள்ளிலோத்திப்பட்டை, அதிவிடயம், கோரைக்கிழங்கு, காட்டாத்திப்பூ, வாலுளுவை, சீந்தில் இவற்றின் ஸ்வரஸங்களால் தனித்தனியே மும்மூன்று முறை பாவனை செய்ய வேண்டும். மிளகுப்பொடி, தேன் இவற்றுடன் மேற்கூறிய ஔஷ தத்தை ஒரு மாஷாப்ரமாணம் உட்கொள்ள எவ்விதமான அதிஸார மும் கிரஹணீரோகமும் தீரும். அக்னிதீபனமும் உண்டாகும். இது 'கிரஹணீ கபாட ரஸம்' எனக் கூறப்படும். 247—251.

**வஜ்ர கபாட ரஸம்:**—பாரதபஸ்மம், அப்ரகபஸ்மம், கந்தகம், யவக்ஷாரம், வெண்காரம், அகில், வசம்பு இவற்றைச் சமபாகமெடுத்து, காடி, எலுமிச்சம்பழ ரஸம், கரிசிலாங் கண்ணி ரஸம் இவற்றால் ஒவ் வொரு நாள் ஆட்டி, ஒரு கோளமாக உருட்டி உலர்த்தி, ஒரு இரும் புப் பாத்திரத்தில் வைத்து ஓர் அகலால் மூடி சீலைமண்ணிட்டு, அதன் அடியில் சிறுகச் சிறுக அரை யாமகாலம் தீயிட்டெரிக்கவேண்டும். பிறகு அதையெடுத்து அவ்வௌஷதத்திற்குச் சமமாக அதிவிடயம், இலவம்பிசின் இரண்டையும் பொடித்துச் சேர்த்து, விளாம்பழம், கஞ்ஜா இவற்றின் கஷாயங்களில் ஏழு முறை பாவனை செய்யவேண்

டும்; பிறகு காட்டாத்திப்பூ, வாலுளுவை, கோரைக்கிழங்கு, வெள்ளிலோத்தி, பில்வம், சிந்தில் இவற்றின் கஷாயங்களில் ஒவ்வொரு நாள் பாவனை செய்து உலர்த்தவும். இது 'வஜ்ர கபாட ரஸம்' என்று கூறப்படும். இதை சாணப்பிரமாணமாகத் தேனில் கலந்துபயோகிக்கலாம். சித்திரமூலம், சுக்கு, கறுப்புப்பு, பில்வக்காய், கறியுப்பு இவற்றைச் சமமாகச் சூர்ணம் செய்து, உஷ்ணஜலத்துடன் மேற்கூறிய ஔஷதத்திற்கு அநுபானமாய் உட்கொள்ளவேண்டும். இவ்வௌஷதம் ஸகல தோஷங்களாலும் ஸம்பவிக்கும் கிரஹணீரோகத்தைப் போக்கும். 252—257½.

தாராதி ரஸம்:—வெள்ளி ஒரு பங்கு, வஜ்ரம் இரண்டு பங்கு, ஸ்வர்ணம் மூன்று பங்கு, தாம்ரம் நான்கு பங்கு, இரஸம் ஐந்து பங்கு, கந்தகம் ஆறு பங்கு, அப்ரம் ஏழு பங்கு; இவற்றைச் சோற்றுக் கற்றாழையின் சாற்றால் அரைத்து, காசிக் குப்பியில் அடைத்து, ஒரு பானையில் இந்துப்பைக் கொட்டி, அதனிடையில் அக்குப்பியை அமர்த்தி அப்பானையின் வாயை மூடி, சீலை செய்து அடுப்பிலேற்றவும். ஒரு நாள் முடியவும் சிறுகச் சிறுக அக்னியை வளர்த்தி, அப்பால் தீயை நிறுத்திவிடவேண்டும். ஆறிய பிறகு அக்குப்பியிலிருந்து ஔஷதத்தை வெளியிலெடுத்து, அதை எருக்சம்பாலிலும், அமுக்கிருங்கிழங்கின் சாற்றிலும், காகோலீ, பூனைக்காலி, நிலப்பனங்கிழங்கு, யானைநெரிஞ்சி, தண்ணீர் விட்டான் இவற்றின் ஸ்வரஸத்திலும், தாமரைக்கிழங்கு, பத்ரமுஸ்தையென்னும் முத்தக்காசு, ஞாழல் இவற்றின் ஸ்வரஸத்திலும் தனித்தனியே மும்மூன்று நாட்கள் பாவனை செய்யவேண்டும். பிறகு கஸ்தூரி, த்ரிகடு, பச்சைக் கர்ப்பூரம், தக்கோலம், ஏலம், இலவங்கம் இவற்றை முற்கூறிய சூர்ணத்தில் எட்டிலொரு பங்காகச் சேர்த்து, அனைத்துக்கும் ஸமயெடையாக, சர்க்கரையையும் கலந்து வைத்துக்கொள்ளவும். இதை ஒரு சாணமளவில் இரண்டு பலம் பசும்பாலுடன் உட்கொள்ளவேண்டும். இதற்கு மதுரமான உணவுகளையே பத்தியமாகக் கொள்ளவேண்டும். இதன் பிரபாவத்தினால் தேசத்தில் அழகும், வன்மையும், ஒளியும் செழிக்கும். சுக்லதாதுவும் மிக விருத்தியடையும். 258—265½.

கந்தர்ப்ப ஸுந்தர ரஸம்:—பாரதம், வஜ்ரம், நாகம், நல்முத்து,

வெள்ளி, ஸ்வர்ணம், கிருஷ்ணாப்ரகம் இவற்றில் ஒவ்வொன்றிலும் கால் பலமெடுத்து, சருங்காலிப் பட்டையின் சாற்றால் அவற்றை ஆட்டி, பவளப்பொடி, கந்தகம் இவற்றில் ஒவ்வொன்றையும் கால்பலமெடை கலந்து, அமுக்கிறாங்கிழங்கு ஸ்வரஸத்தால் அனைத்தையும் அரைத்து, அதை மான்கொம்புக்குள் அடைத்து ஒரு முறை புடம் போடவும். பிறகு காட்டாத்திப்பூ, காகோலீ, அதிமதுரம், ஜடாமாம்ஸீ, சிற்றாமுட்டி, பேராமுட்டி, சுரைக்காய், தாமரைக்கிழங்கு, தண்ணீர்விட்டான் கிழங்கு, இங்குணப் பட்டை, திராக்ஷை, திப்பிலி, புல்லூரி, சிறுமல்லிகை, மேர்மல்லிகை, பெருமல்லிகை, நாய்ப்பயறு, ஈச்சம்பூம், சிறு கோரைக்கிழங்கு, இலுப்பை, பூனைக்காலி இவற்றின் ஸ்வரஸங்களில் பாவனை செய்து உலர்த்தி, ஏலக்காய், இலவங்கப்பட்டை, இலவங்கப்பத்திரி, ஜடாமாம்ஸீ, இலவங்கம், அகில், நாககேஸரம், கோரைக்கிழங்கு, திப்பிலி, வெட்டிவேர் இவற்றைத் தனித்தனியே சாணமெடை சேர்த்து, அனைத்தையும் சூர்ணம் செய்து, பிறகு ஒரு சாணம் கஸ்தூரியையும், ஒரு சாணம் பச்சைக் கர்ப்பூரத்தையும் அதில் கலந்துகொள்ளவும். இது 'கர்தர்ப்ப ஸுந்தர ரஸம்' என்று சொல்லப்படும். நெல்லிக்கனி, நிலப்பனங்கிழங்கு, சர்க்கரை இவற்றைப் பொடித்து அதில் கால்பலமெடுத்து, இவ்வௌஷதத்தை ஒரு சாணப்பிரமாணம் கலந்து, கால்பலம் நெய் விட்டுக் குழைத்து, இரவில் உட்கொள்ளலாம். அதற்கு இரண்டு பலம் பாலையும் அனுபானமாகக் கொள்ளலாம். இதனால் சரீரவன்மையும், சுக்லவிருத்தியும் உண்டாகும். ஆகவே இவ்வௌஷதம் சிறந்த வ்ருஷ்யகுணமுள்ளதாம். 266—273½.

**லோஹ ரஸாயனம்:**—சுத்தரஸம் ஒரு பங்கு, சுத்தகந்தகம் இரண்டு பங்கு இவ்விரண்டையும் அரைத்து கஜ்ஜளி செய்து, இக்கஜ்ஜளிக்குச் சமஎடை உருக்கிரும்புத்தூளைச் சேர்த்து, ஒரு யாமம் அரைத்து, இச்சூர்ணத்தில் சோற்றுக்கற்றாழையின் சாற்றை விட்டு வெயிலில் வைத்து மூன்று நாட்கள் ஆட்டவும். பிறகு க்ரமமாக இதில் உஷ்ணமுண்டாய் விசேஷ தாபமும் கிளம்பும். அப்பொழுது இதைக் கெட்டியாகப் பிண்டம்போல் உருட்டி, ஒரு தாம்ரபாத்திரத்தில் வைத்து, அதிக சுணையுள்ள தானியக் களஞ்சியத்திற் புதைத்து

வைத்து, மூன்று நாட்களுக்குப் பிறகு எடுத்து, கல்வத்திலிட்டு ஒரு நாள் வெயிலில் வைக்கவும்; பிறகு சிந்திற்கொடியின் ஸ்வரஸத்தில் மூன்று முறை பாவனைசெய்து வெயிலில் உலர்த்தி, மறுபடி த்ரிகடு க்வாதத்திலும், ஆடாதோடை, சித்திரமூலம் இவற்றின் ஸ்வரஸத்தி லும் தனித்தனியே மும்மூன்று முறை பாவனைசெய்து, அப்பால் இரும்புப்பாத்திரத்தில் இதைச் சேர்த்து, த்ரிபலாக்வாதத்திலும், கரு நொச்சி, மாதளம்பட்டை, தாமரைக்கிழங்கு, கரிசிலாங்கண்ணி, மரு தோன்றி, பலாசம்பட்டை, வாழைப்பட்டை இவற்றின் சாறுகளிலும், வேங்கம்பட்டையின் கஷாயத்திலும், அவுரிச்சாற்றிலும், வாளச் சுண் டிச்சாற்றிலும், கருவேலங்காய்ச் சாற்றிலும், பேராமுட்டி, தண்ணீர் விட்டாங்கிழங்கு, நெரிஞ்சி, சிந்தில் இவற்றின் ஸ்வரஸங்களிலும் தனித்தனி மும்மூன்றுமுறை பாவனை செய்யவும். ஆனால் இவற் றுள் கிடைக்கக்கூடிய ஓஷதிகளின் ஸ்வரஸம் அல்லது க்வாதங்களில் மட்டும் பாவனைசெய்தால் போதுமானது. இவ்வௌஷதத்தை கோல ப்பிரமாணமாக நெய்யிலும் தேனிலும் கலந்து காலையில் உட்கொண்டு வரலாம், ஒரு பலம் சிற்றாமுட்டிக் கஷாயத்தை இதற்கு அனுபான மாய் உபயோகிக்கலாம். இதை மூன்று மாதங்களளவும் உபயோ கிக்க நரை திரைகள் நீங்கும். திப்பிலிப்பொடி, தேன் இவற்றைக் கலந்து அனுபானமாயுட்கொண்டால், அக்னிமாந்தியம், ச்வாஸகாஸம், பாண்டுரோகம், மற்றும் வாத கபங்களால் நேரிடும் கோளாறுகள் இவை நிவ்ருத்தியாகும். சிந்திற்கொடியின் ஸத்துவம், தேன் இவற் றிற் கலந்து உபயோகிக்க வாதரக்தம், கிரஹணீ, அர்சஸ், மூத்திர ரோகங்கள், அண்டவிருத்தி இவை தீரும். சரீரவன்மையையும், திறத்தையும் இது விருத்தி செய்யும். 'லோஹரஸாயனம்' என்கிற இவ்வௌஷதம் வ்ருஷ்யம், ஆயுஷ்யம் என்கிற குணங்களில் மிகச் சிறந்தது. அயத்திஞலான ஔஷதத்தை யுபயோகிப்பவர் பூசணிக் காய், நல்லெண்ணெய், உளுந்து கலந்த அன்னம், கடுகு, மதுபானம், புளிப்பு இவற்றை உபயோகிக்கக்கூடாது. 274—288.

## சில விசேஷ விஷயங்கள்.

நேபாள சுத்தி:—நேபாளத்தின் மேற்றோலையும், முளையையும், முளையிலுள்ள மூக்குபோன்ற பாகத்தையும் நீக்கி, அவ்விதைகளைப்

பசுஞ்சாணத்தில் மூன்று நாட்கள் புதைத்துவைத்து, அப்பால் உஷ்ண ஜலத்தினால் கழுவியெடுத்து, கல்வத்திலிட்டு அரைத்து, புதிய மட்பாத்திரத்தில் அக்கல்கத்தைத் தடவிவிடவும். அதிலுள்ள எண்ணெய்ப் பசை உறிஞ்சப்பட்டு வறண்டுபோனதும், சூர்ணம்போலிருக்கும் நிலைமையில் அதையெடுத்து எலுமிச்சம்பழஸ்வரஸத்தில் அநேக முறை பாவனை செய்யவேண்டும். இவ்விதம் பக்குவம் செய்த நேபாளம் சுத்தமாகவும், குணத்திற் சிறந்ததாகவும் இருக்கும். 1.

நாபி சுத்தி:—வத்ஸநாபியைச் சிறு துண்டுகளாகச் செய்து, ஒரு துண்டு வஸ்திரத்திற் கட்டி பசுமூத்திரத்தில் போட்டு மூன்று நாட்கள் வெயிலில் வைத்திருக்கவும்; ஆனால் ஒவ்வொரு நாளும் முதல் நாள் சேர்த்த கோமூத்திரத்தைக் கொட்டிவிட்டுப் புதிதாக மீண்டும் பசுமூத்திரம் சேர்க்கவேண்டும். மூன்று நாட்கள் சென்றதும் அத்துண்டுகளை யெடுத்து வெயிலில் உலர்த்தி, மிக ம்ருதுவாக அரைத்தெடுக்க நாபி சுத்தமாகும். இவ்வாறு சுத்தி செய்த நாபியை அவசியமான வியாதிகளில் உபயோகிக்கலாம். மற்றொரு விதத்திலும் நாபியைச் சுத்தம் செய்யக்கூடும். அக்கிழங்கை முன்போலவே துண்டுகளாகச் செய்து, வஸ்திரத்திற் கட்டி, வெள்ளாட்டுப்பாலில் டோலாயந்திரமாக வைத்து ஒரு யாமகாலம் எரித்தல் போட சுத்தமாகும். வெள்ளாட்டுப் பால் கிடைக்காவிட்டால் பசும்பாலைக்கொண்டு சுத்தி செய்யலாம்.[1] 2-5.

---

1. நேபாளசுத்தி, நாபி சுத்தி (இம்முறைகள் கீழே அவசியமாயிருந்தும் கூறப்படவில்லை யென்பதைக் கருதி, இதர கிரந்தத்திலிருந்து எடுத்து ஸம்ஸ்கிருதத்தில் வெளியாயிருக்கும் சார்ங்கதர ஸம்ஹிதையில் இப்பிரகரணத்தில் "சார்ங்கதரனால் கூறப்படாதவை" என்று குறிப்பிட்டு சேர்க்கப்பட்டிருக்கின்றன. ஆகவே இங்கு 1-முதல் 5-வரையிலுள்ள பத்தியங்கள் சார்ங்கதர ஸம்ஹிதைக்குச் சேராதவை யென்று கருதப்படுகின்றன.

# உத்தர கண்டம்

---

## முதல் அத்தியாயம்

---

### ஸ்நேஹபான விதி

**நான்குவித ஸ்நேஹங்கள்:**—க்ருதம், தைலம், வஸா, மஜ்ஜா[1] என்று ஸ்நேஹம் நான்குவிதம்.[1] நான்குவித ஸ்நேஹங்களும் ஸ்த்தா வரம், ஜங்கமமென்னும் இரண்டு மூலங்களிலிருந்து உற்பத்தியாகின் றன. ஸ்த்தாவரபதார்த்தங்களிலிருந்து உற்பத்தியாகும் ஸ்நேஹங்களுள் நல்லெண்ணெயும், ஜங்கமங்களிலிருந்து உற்பத்தியாகிறவற்றுள் நெய் யும் சிறந்தவையாம். ஸ்நேஹபானம் செய்வதற்கு ஸூர்யோதயம் சிறந்த காலமாகும். 1—2.

**ஸ்நேஹங்களின் சேர்க்கைக்கான பரிபாஷைகள்:**—மேற் கூறிய நான்குவித ஸ்நேஹங்களுள் ஏதேனும் இரண்டை ஒருமிக்கச் சேர்த்தால்அதற்கு 'யமகம்' என்றும், மூன்றைச் சேர்த்தால் 'த்ரிவ்ருதம்' என்றும், நான்கைச் சேர்த்தால் 'மஹத்' என்றும் பெயராம். அந்தந்த நிலைமைக்கேற்றவாறு ஸ்நேஹத்தை மூன்று நாட்களும், நாலு நாட்களும், ஐந்து நாட்களும், ஆறு நாட்களுமாக முறையே உப யோகிக்கலாம். ஏழு நாட்களுக்குமேல் ஸ்நேஹத்தைப் பானம் செய்தால் அது சரீரத்திற்கு ஸாத்மியமாய் விடும்.[2] 3½.

---

1. க்ருதம்—நெய்; தைலம்—எண்ணெய் வகைகள்; வஸா—நிணம் அல்லது கொழுப்பு; மஜ்ஜா—எலும்புகளுக்குள்ளிருக்கும் ஒரு வகையான சோறுபோன்ற பசை.

2. ஸாத்மியம்—உபயோகிக்கப்படும் ஔஷதங்கள் சரீரத்தில் அவ்வவற்றின் குணங்களுக்கேற்ற செயல்களைக் காட்டும்; ஆனால் ஔஷ தங்கள் அல்லது சரக்குகள் எவையேனும் நீடித்து உபயோகிக்கப்படுமா னால் அவை விசேஷகுணங்களைக் காட்டாமல் சரீரத்திற்கு உரிய பதார்த்தங்களைப்போல் ஆய்விடும். அவ்விதம் சரீரத்திற்கு ஸஹஜமாய் விடுவதுதான் ஸாத்மியம் எனப்படும்.

**ஸ்நேஹபானத்திற்கான அளவுகளும், உபயோகங்களும்:—** ஸ்நேஹபானம் செய்வதற்கு ஹீனமாத்திரை, மத்யமமாத்திரை, உத்தமமாத்திரை என்று மூன்றுவித அளவுகள் உண்டு. வாத பித்த கபங்களென்ன, காலபேதங்களென்ன, வயதின் வேற்றுமைகளென்ன இந்நிலைமைகளை யனுஸரித்து ஸ்நேஹங்களைக் கொடுக்கவேண்டிய அளவுகளையும் நிர்த்தாரணம் செய்யவேண்டும். அளவுகளில்லாமலும், காலநியமமின்றியும், உண்டிவினை பத்தியக்கிரம மில்லாமலும் ஸ்நேஹங்களை யுட்கொண்டால் சரீரவீக்கம், அர்சஸ், சோம்பல், அதிக நித்திரை, உணர்ச்சிக்குறைவு இவையுண்டாகும். நல்ல அக்னி தீபனமுள்ள மனிதருக்கு ஒரு பலம் ஸ்நேஹமும், மத்யமமான ஜீர்ண சக்தியுள்ளவருக்கு முக்கால் பலம் ஸ்நேஹமும், ஜீர்ணசக்தி யில்லாதவருக்கு அரைப்பலம் ஸ்நேஹமும் கொடுக்கலாம். அல்லது ஸ்நேஹபானத்திற்கு அகில வைத்தியராலும் அங்கீகரிக்கப்பட்ட வேறுவித மூன்று அளவுகள் உண்டு. அவையாவன: எவ்வளவு ஸ்நேஹத்தைப் பானம் பண்ணினுல் அது ஓர் இராப்பகலில் ஜீர்ணமாகக் கூடுமோ அந்த அளவு உத்தம மாத்திரையாம்; ஒரு முழுப்பகலில் ஜீரணமாகக் கூடிய அளவு மத்யம மாத்திரையாகும்; அரைப்பகலில் ஜீரணமாகக் கூடியது ஹீனமாத்திரையாம். அவற்றுள் ஹீனமாத்திரையே ஸுகந்தரத்தக்கது. அது தீபனம் வ்ருஷ்யம் என்கிற குணங்களுடையது. தோஷங்கள் சிறிது கோளாறடைந்திருக்கையில் ஸ்நேஹத்தை ஹீனமாத்திரையி லுபயோகிப்பதே நலம். ஸ்நேஹங்களை மத்யம மாத்திரையி லுபயோகிப்பதால் சரீரம் நன்கு ஸ்நிக்த்தமாகும்;[1] பிரமமென்னும் தலைச்சுற்றல் முதலியதும் நீங்கும்; அவ்விதமுபயோகிப்பதால் ப்ருஹ்மணமென்னும் குணமுமுண்டாகும். உத்தம மாத்திரையி லுபயோகிப்பதால் குஷ்டம், விஷதோஷம், உன்மாதம், கிரஹபீடை, அபஸ்மாரம் இவை நிவ்ருத்தியாகும். 4—9½.

**ம்ருதபானத்திற்கான நிலைமைகள்:—** பித்தத்தினுல் ஏற்பட்ட வியாதிகளில் க்ருதத்தைத் தனியாகவும், வாத ரோகங்களில் இலவணங்களைச் சேர்த்தும், கபம் மிகுதியாய் விருத்தியான வியாதிகளில்

1. ஸ்நிக்த்தம்—எண்ணெய்ப் பசையுடன் கூடிய தன்மை; அல்லது வறட்சி யில்லாத்தன்மை.

த்ரிகடு, க்ஷாரவகைகள் இவற்றுடன் கூட்டியும் உபயோகிக்கலாம். மேலும் ரூக்ஷ சரீரிகள், விரணத்திருலும் விஷப்பற்றுலும் வருந்துபவர், வாத பித்தங்களாலுண்டான வியாதிகளுடன் கூடியவர், அறிவு, ஞாபகத்தி இவற்றிற் குன்றியவர் இவர்களுக்கெல்லாம் க்ருதபானம் சிறந்ததாகும். 10—11½.

**தைலபானத்திற்கான நிலைமைகள்:**—குடல்களில் கிருமிகளுண்டாயிருக்கையிலும், வாதரோகங்களிலும், கபம் கொழுப்பு இவை விருத்தியா யிருக்கையிலும், சரீரத்தை வன்மையாக்க வேண்டிய நிலைமையிலும் தைலத்தை யுபயோகிக்கலாம்; மேலும் எவருக்குத் தைலமே ஸாத்மியமா யிருக்கின்றதோ அவர்களும் தைலத்தை யுபயோகிப்பது நலமே. 12½.

**வஸாபானத்திற் குரியவர்:**—அதிக சரீர வுழைப்பினுல் மெலிவடைந்தவர்களும், சுக்லம் இரத்தம் முதலிய தாதுக்கள் க்ஷீணமானவரும், மஹத்தானவியாதிகளால் வருந்துபவரும், அதிக சரீர வலிவுள்ளவரும், ஜீர்ணம் செய்துக்கொள்ளக்கூடிய அக்னி பலமுடையவரும், வாதப்பிரகோபத்திஞல் பிணியுண்டவரும் வஸாவென்னும் ஸ்நேஹத்தை உபயோகிப்பதற்கு உரியவராகின்றனர். 13½.

**மஜ்ஜாபானத்திற்குரியவர்:**—க்ரூரகோஷ்டமுள்ளவரும் [1] க்லேசங்களை ஸஹிக்குமியல்பினரும், வாதரோகங்களால் பீடிக்கப்படுபவரும், அதிக அக்னி தீபனமுடையவரும் மஜ்ஜா என்னும் ஸ்நேஹத்தை அருந்துவதற்கு அர்ஹமானவராம். மேலும் முன்குறித்த எல்லாப் பிணியாளிகளுமே க்ருதபானமும் செய்யலாம். 14½.

**ஸ்நேஹபானத்திற்குரிய காலங்கள்:**—சீதகாலங்களில் பகலும் உஷ்ணகாலங்களில் [2] இரவும் பொதுவாக ஸ்நேஹ பானத்திற்கேற்ற காலங்களாம்; ஆனல் வாத பித்தங்களின் பிரகோபத்திஞலுண்டான வியாதிகளில் இரவிலும், வாத கபங்களின் பிரகோபத்திஞலுண்டான வியாதிகளில் பகலிலும் ஸ்நேஹபானம் செய்வது உசிதமாகும். 15½.

---

1. க்ரூரகோஷ்டம்—கற்குடல்.

2. ஹேமந்தருது, சிசிரருது, வர்ஷருது இவை சீத காலங்கள்; மற்ற மூன்று ருதுக்களும் உஷ்ணகாலங்கள்.

**நஸ்யம் முதலியவற்றிற்குரிய ஸ்நேஹங்கள்:**—நஸ்யம், அப்யஞ்ஜநம், கண்டூஷம், மூர்த்த தர்ப்பணம், கர்ணதர்ப்பணம், நேத்திர தர்ப்பணம் என்னும் க்ரியைகளில்[1] வாத பித்த கபங்களுக்குள்ள பலாபலங்களை யறிந்து க்ருதத்தையாவது தைலத்தையாவது தக்கபடி உபயோகிக்கலாம். 16½.

**ஸ்நேஹத்திற்கு அநுபானங்கள்:**—க்ருதபானம் செய்ததும் இளஞ்சூடான ஜலத்தை உட்கொள்ளவேண்டும். தைலபானத்தில் யூஷம் உடனே உபயோகிக்கக்கூடியது. வஸா, மஜ்ஜா இவற்றுடன் மண்டம் பருகத்தகுந்தது. ஸ்நேஹபானங்களில் இவையே அநுகூலமான அநுபானங்களாம். 17½.

**ஸ்நேஹபானத்தை அருவருப்பவருக்குச் செய்யவேண்டிய உபாயம்:**—ஸ்நேஹபானத்தில் வெறுப்புள்ள சிறுவர்கள், வயது முதிர்ந்தவர்கள், ஸுகுமார தேகிகள், மெலிந்து போனவர், நாவறட்சியுள்ளவர் இவர்களுக்கு ஆஹாரங்களிற் கலந்து ஸ்நேஹங்களை உட்கொள்ளக் கொடுப்பது நலம். உஷ்ணகாலங்களில் அனைவருக்குமே இவ்விதந்தான் செய்யவேண்டும். இத்தகையவர்களுக்கேற்ற ஸ்நேஹ குணமுள்ள உணவுகள் பலவுண்டு. அதிக எள்ளும் சொற்ப அரிசியும் சேர்த்து பக்குவம் செய்யப்பெற்ற நெய் கலந்த யவாகூ வென்னும் கஞ்சியை இளஞ்சூடாயிருக்கையில் உட்கொண்டால் உடனே தேகம் ஸ்நிக்த்தமாகும். ஒரு பாத்திரத்தில் சர்க்கரையும் நெய்யும் சேர்த்து, அதில் பசும்பாலைக் கறந்து உஷ்ணத்துடன் பருகுவதால் சரீரம் உடனே ஸ்நிக்த்தமாகும். 18—20½.

**முறைதவறான ஸ்நேஹ பானத்தினாலுண்டாகும் தீமையும் பரிஹாரமும்:**—மித்யாசரணையினாலும்,[2] மிதமிஞ்சிய ஸ்நேஹபானத்தினாலும் எவருக்கு உட்கொண்ட ஸ்நேஹம் ஜீர்ணமாவதில்லையோ, வயிற்

1. நஸ்யம், அப்யஞ்ஜநம் முதலியவற்றைப்பற்றிய விவரங்களைப் பின் வரும் அத்தியாயங்களிற் காண்க.

2. சீதகாலங்களில் உஷ்ணகாலத்திற்கேற்ற ஆசரணைகளும், உஷ்ணகாலங்களில் சீதகாலாசரணைகளும், குருபோஜனத்திற்குப் பதிலாய் இலகுவும், இலகுவுக்குப் பதிலாய் குருவும்-இவ்வாறு நேர் எதிரிடையான ஆசரணைகள் மித்யாசாரங்கள் எனப்படும்.

றுப் பொருமலுடன் அஜீர்ணத்தை உண்டுபண்ணுமோ அவரை உஷ்ண ஜலம் குடிக்கச் செய்து வாந்தி செய்விக்க வேண்டும். உட்கொண்ட ஸ்நேஹம் நன்ருக ஜீர்ணமாகவில்லை யென்கிற சங்கையிருந்தால் உடனே அந்த நோயாளி சிறிது வெந்நீரைக் குடித்தால் ஸ்நேஹம் ஜீர்ணமாய், வயிற்றிலேயே ஸ்நேஹம் தங்கியிருப்பதற்கு அறிகுறியாக உண்டாய்க் கொண்டிருந்த ஏப்பம் முதலியதும் நிவ்ருத்தியாகும்; உணவுண்பதில் இச்சையும் உண்டாகும். பித்தப்பிரக்ருதிக்கு அல்லது பித்தரோகமுள்ளவனுக்கு ஸ்நேஹபானத்திஞல் ஜாடராக்னி மிகவும் கிளறப்பட்டு நாவறட்சி யேற்பட்டால் அந்நிலைமைக்கு எதிரிடையான சிகித்ஸை செய்யலாம்: அதாவது குளிர்ந்த ஜலத்தைக் குடிக்கச் செய்ய நாவறட்சி நீங்கும். 21—24.

ஸ்நேஹபானம் **செய்யத்தகாதவர்கள்:—** அஜீர்ணரோகி, அரோசகமுள்ளவன், உதரரோகி, தருணஜ்வரமுடையவன் [1], துர்ப்பலன், ஸ்தூல தேஹி, மூர்ச்சையிஞல் வருந்துபவன், வெறியன், வஸ்தி சிகித்ஸை செய்து கொண்டவன், விரேகம் செய்துகொண்டவன், வமனம் செய்விக்கப்பட்டவன், நாவறட்சியிஞலும் சிரமத்திஞலும் கஷ்டப்படுபவன், அகாலத்தில் முறைகேடாகப் பிரஸவித்தவள் என்னும் இவர்கள் ஸ்நேஹபானத்திற்குத் தகாதவராவர்; மாரி காலத்தில் எவருக்குமே ஸ்நேஹபானம் உற்றதல்ல. 25, 26.

ஸ்நேஹபானத்திற்குரியவர்கள்:—ஸ்வேத சிகித்ஸை செய்ய வேண்டியவர், வேறு வகையான சோதன சிகித்ஸைக்குரியவர், மதுபானம் செய்பவர், சிற்றின்பத்தில் அதிகப்பற்றுள்ளவர், அதிக வியாயாமம் செய்பவர், சிந்தையுள்ளவர், கிழவர், பாலர், இளைத்துப்போனவர், ரூக்ஷதேகமுள்ளவர், இரத்தம் க்ஷீணித்தவர், சுக்ல க்ஷீணமுள்ளவர், வாதரோகத்திஞல் பீடிக்கப்படுபவர், திமிரமென்னும் நேத்திரரோகத்திஞல் வருந்துபவர் இவர்களுக்கெல்லாம் ஸ்நேஹபானம் சிறந்ததாகும். 27, 27½.

---

1. தருணஜ்வரம்:—முதிர்ச்சி பெருத ஜ்வரம். [எட்டு நாட்களுக்குப் பிறகு ஜ்வரம் பக்குவமாவதாகவும், அதற்கு முன் அது தருணஜ்வரம் அல்லது ஆமஜ்வரம் என்று கூறப்படும்.]

**சரீரம் ஸ்நிக்த்தமானதற்கு அறிகுறிகள்:**—வாததோஷம் கோளாற டைந்த நிலைமையை விட்டு இயற்கை நிலைமையடைவது 1, ஜாடராக்னி விருத்தியாவது, மலம் இளகலாய் எண்ணெய்ப் பசையுடன் வெளியாவது, சரீரம் மிருதுவாகவும் ஸ்நிக்த்தமாகவும் ஆவது, சரீரத்தில் சிறிது களைப்புண்டாவது, ஸ்நேஹத்தில் அருவருப்பு ஏற்படுவது, தேகம் இலகுவாதல், இந்த்ரியங்கள் யாவும் அததற்குண்டான இயற்கைச்சக்தியைப் பெறுதல் இவைகள் ஸ்நேஹபானம் செய்து சரீரம் நன்கு ஸ்நிக்த்தமாயிற்றென்பதற்கு அறிகுறிகளாம். ஸ்நிக்த்தமாகாமல் ரூக்ஷகுணம் மேலிட்டிருந்தால் மேற்கூறிய குறிகளுக்கு நேர் விரோதமான குணங்களுண்டாயிருக்கும். 28,29.

**அதிஸ்நிக்த்தமானதற்குக் குறிகள்:**—அன்னத்வேஷம், வாயில் நீர் சுரத்தல், குதத்தில் எரித்தல், ஆஸனக்கடுப்பு, சோம்பல் அதிகரித்தல், அதிஸாரம், சரீரம் வெளிறிப்போதல் இவை மிதமிஞ்சிய ஸ்நிக்த்த குணத்திற்கு அறிகுறியாம். 30.

**அதிஸ்நிக்த்த நிலைமையிலும் ரூக்ஷநிலைமையிலும் செய்யவேண்டிய சிகித்ஸை:**—மிகவும் வறட்சியுண்ட சரீரமுள்ளவன் ஸ்நேஹ பதார்த்தங்களை யுபயோகித்து சரீரத்தை ஸ்நிக்த்தமாக்கிக்கொள்ள வேண்டும். அதிஸ்நிக்த்தமாக ஆய்விட்டால் சாமை, கடலை இவற்றின் கஷாயம், மோர், பிண்ணாக்கு, மாப்பண்டங்கள் இவற்றை யுபயோகித்து சரீரத்தை ரூக்ஷமாக்க வேண்டும். 31.

**ஸ்நேஹோபயோகத்தினுலுண்டாகும் குணங்கள்:**—ஸ்நேஹங்களை யுபயோகிப்பவருக்கு ஜாடராக்னி நன்ருக விருத்தியாகும்; குடல் சுத்தமாகும்; தாதுக்கள் புஷ்டியடையும்; புலன்கள் யாவும் பலம்பெற்று நல்ல நிலைமையிலிருக்கும்; தேகத்திற்கு வன்மையும் அழகிய நிறமும் உண்டாகும்; கிழத்தனம் சீக்கிரமேற்படாது. 32.

**ஸ்நேஹங்களை யுபயோகிக்கையில் பரிஹரிக்க வேண்டியவை:**—ஸ்நேஹமுபயோகிக்கையில் வியாயாமம், மாம்ஸ போஜனம்,

---

1. இங்கு 'வாதாநுலோம்யம்' என்பதற்கு வாததோஷம் இயற்கை நிலைமையடைவது எனப் பொருள் கூறினோம். இதற்கு ஸ்நேஹ சிகித்ஸை வாதரோகங்களுக்கே இன்றியமையாததென்பது காரணமாகும். 'வாதாநுலோம்யம்' என்பதற்கு அபானவாயு வெளியாதல் என்றும் பொருள் கூறுவர்.

சீதள வஸ்துவின் உபயோகம், வேக நிரோதம்[1], அதிகமாகக் கண் விழித்தல், பகலில் நித்திரை போதல், வாயிலும் குடல் முதலியவற்றி லும் திரவபதார்த்தங்களை அதிகமாகச் சுரக்கச்செய்யும் பதார்த்தங்களின் உபயோகம், ரூக்ஷமான உணவு இவற்றைப் பரிஹரிக்கவேண்டும். 33.

---

## இரண்டாவது அத்தியாயம்.

---

### ஸ்வேத விதி.

நான்குவித ஸ்வேதங்களும் அவற்றின் உபயோகங்களும்:— தாப ஸ்வேதம், ஊஷ்ம ஸ்வேதம், உபநாஹ ஸ்வேதம், திரவ ஸ்வேதம் என்று ஸ்வேதமுறை நான்கு வகைப்படும். ஸ்வேதமுறைகள் யாவும் பெரும்பாலும் வாதஹரங்களாகவே இருக்கும். சில ஸமயம் அவை வேறு குணங்களையு முண்டுபண்ணும். அதாவது: தாபஸ்வேதம் ஊஷ்மஸ்வேதம் இவை கபஹரங்களாகவும், உபநாஹஸ்வேதம் வாத ஹரமாகவும், திரவஸ்வேதம் பித்தஹரமாகவும் உபயோகமாவதுண்டு. 1,2.

மூன்றுவித ஸ்வேதங்களும் அவற்றின் உபயோகங்களும்:— முற்கூறிய நான்கு ஸ்வேதமுறைகளையும் 'மஹா ஸ்வேதம்', 'மத்யம ஸ்வேதம்,' 'துர்ப்பல ஸ்வேதம்' என்று மூன்றுவிதமாகப் பிரிக்கலாம். அவற்றுள் மிகவும் பலிஷ்டருக்கும், மஹத்தான வியாதிகளால் வருந்து பவருக்கும், சைத்திய பாதையினால் பீடிக்கப்படுபவருக்கும் மஹாஸ்வே தம் ஏற்றதாம். மத்யம பலமுள்ளவருக்கும், மத்யம பலமுள்ள வியாதி களால் வருந்துபவருக்கும் மத்யம ஸ்வேதம் தகுந்தது. துர்ப்பலர்களுக் கும், வெகு ஸாமானிய வியாதிகளுடையவருக்கும் துர்ப்பல ஸ்வேதம் உற்றதாகும். 3.

---

1. வேகநிரோதம்:—மலவிஸர்க்கம், மூத்திரவிஸர்க்கம், அபான வாயு விஸர்க்கம், தும்மல், நித்திரை, பசி, தாஹம் முதலியவை வேகங்க ளென்றும், அவற்றை இயற்கைக்கு மாறாகத் தடுத்தல் வேகநிரோத மென்றும் கூறப்படும்.

நிலைமைகளுக்குத் தகுந்த வெவ்வேறு ஸ்வேத முறைகள்:— கபம் பிரகோபமடைந்திருந்தால் ரூக்ஷபதார்த்தங்களால் செய்யப்படும் ஸ்வேதமும், கபம் வாதம் இரண்டும் கோளாறடைந்தால் ரூக்ஷமும் ஸ்நிக்த்தமுமான பதார்த்தங்களாலான ஸ்வேதமும், வாதம் கபத்தா லும் மேதஸ்ஸாலும் கவரப்பட்டிருந்தால் சிறிது கதகதப்பான வீட்டில் வஸிப்பது, ஸூரியகிரணங்களைப் பரிசிக்கச்செய்வது, கைச் சண்டை, வழிநடத்தல், கனமான போர்வை, சிந்தை, அதிக வியாயா ம, பாரங்களைச் சுமத்தல் என்னும் இவ்வித காரியங்களும் பிணி களைப் போக்கத் தகுந்த ஸ்வேத முண்டாக்கும் முறைகளாம். 4,5.

முதலில் ஸ்வேதசிகித்ஸைக்கு உரிய பிணியாளிகள்:—நஸ் யம், வஸ்திகள், இதரசோதனசிகித்ஸை[1] இவற்றைச் செய்து கொள்ள வேண்டியவர் முதலில் ஸ்வேதசிகித்ஸை செய்துகொள்ள வேண்டுவதும் அவசியம். மேலும் பகந்தரரோகி, மூலரோகி, அச்மரீ ரோகி இம்மூவருக்கும் சஸ்திர சிகித்ஸை செய்வதற்கு முன்பும் ஸ்வேதம் செய்ய வேண்டியது அவசியம். 6,7.

ஸ்வேத சிகித்ஸைக்குப் பிறகு செய்ய வேண்டிய காரியம்:— சரீரத்திற் பிரவேசித்த சல்யங்களை வெளிப்படுத்திய பிறகும், மூட கர்ப்பத்தில்[2] வயிற்றிலுள்ள சிசுவை வெளியிற் கொண்டு வந்த பிற கும், காலப்பிரஸவமாகவோ அகாலபிரஸவமாகவோ ஸ்த்ரீகள் பிரஸ வித்த பிறகும் ஸ்வேதம் செய்யவேண்டும். 8.

ஸ்வேதந்திற்குரிய நிலைமையுங் காலமும்:—ஸ்வேத சிகித்ஸைக் குரியவர்களை அதிக காற்றோட்டமில்லாத விடங்களில் இருக்கச் செய்து, அதற்கு முன் புஜித்துள்ள உணவு ஜீர்ணமான பிறகு அவர் களுக்கு ஸ்வேத விதியை நிறைவேற்றவேண்டும். 8½.

ஸ்வேத சிகித்ஸையைப் பயன்படச் செய்யுமுபாயம்:— ஸ்வேதம் செய்வதால் தாதுக்களில் வியாபித்துள்ள தோஷங்கள்

1. வமனம், விரேசனம், நஸ்யம் முதலியவை சோதன சிகித்ஸை கள் எனப்படும்.

2. மூடகர்ப்பம்:—பிரஸவகாலத்தில் சிசு கருப்பையில் இயற் கைக்கு மாறாகத் திரும்பி வயிற்றில் சிக்கிக்கொள்வதால் உண்டாகும் கோளாறு.

திரவமாகப் போய் குடல் முதலியவற்றில் வந்து சேரும். இவ்விதம் ஸ்வேதம் செய்தானவுடன் சிறிது ஸ்நேஹங்களை யுட்கொண்டால் அத்தோஷங்கள் விரேகத்தின் மூலமாய் வெளிப்பட்டுவிடுகின்றன. ஸ்வேத சிகித்ஸையினால் சரீரம் வியர்க்கையில் சீதளமான பதார்த்தங்களால் இருதயத்திற்கு அருகில் மார்பைப் பரிசிக்கவேண்டும். ஆனால் அதற்கு முன் சரீரத்தை ஸ்நேஹங்களால் மெதுப்படுத்தவேண்டும். கண்களையும் சீதளமான வஸ்துக்களால் மூடிவிட்டு அவற்றிற்கு அருகில் ஸ்வேதம் செய்யலாம். 9—10½

ஸ்வேதசிகித்ஸைக்குத் தகாதவர்:—அஜீர்ணம், துர்ப்பலம், மேஹரோகம், க்ஷதக்ஷீணம், நாவறட்சி, அதிஸாரம், இரக்தபித்தம், பாண்டு, மஹோதரம் முதலிய வயிற்றைப் பற்றிய வியாதிகள், வெறி இட்பிணிகளால் பீடிக்கப்படுபவரும், கர்ப்பிணியும் ஸ்வேதசிகித்ஸைக்கு உரியவரல்லர். 11, 12.

மிருது ஸ்வேதத்திற்குரிய நிலைமை:—ஆனால் முற்கூறியவர்களுக்கும் அவசியம் ஸ்வேதசிகித்ஸை செய்யவேண்டிய நிலைமை நிர்ப்பந்தமாயேற்பட்டால், 'துர்ப்பல ஸ்வேத'மென்கிற மிருதுஸ்வேதம் செய்வதே உசிதம். மேலும் இருதயம், பீஜங்கள், கண்கள் இவ்விடங்களிலும் மிருது ஸ்வேதமே செய்யவேண்டும்.—13.

அளவு மீறிய ஸ்வேதத்தினால் உண்டாகும் தீமையும் பரிஹாரமும்.—ஸ்வேத சிகித்ஸையை மிதமிஞ்சி செய்து விட்டால் மூட்டுகளில் வேதனை, நாவறட்சி, தேக அழற்சி, சரீரவாட்டம், தலைச்சுற்றல், இரக்தபித்தம், பிடகைகளென்னும் விரணங்கள், கோபம் இவை உண்டாகும். இவ்விதம் நேரிட்டால், சீதோபசாரம் செய்து இக்கோளாறுகளை அடக்கவேண்டும்.—14

தாபஸ்வேதம்.—மணல், வஸ்திரம், கரங்கள், ஓடுகள், பந்துகள் இவற்றைக் காய்ச்சியும், தழல்கள் உள்ளடங்கிய பாத்திரங்கள் முதலியவற்றைக் கொண்டும் ஒற்றடம் கொடுத்து தாப ஸ்வேதத்தை நிறைவேற்றவேண்டும். மணல் முதலியவற்றில் எந்தெந்த வஸ்து எந்தெந்த நிலைமைக்கு உற்றதென்பதை வைத்தியர்கள் உற்றுணரவேண்டும். 15.

ஊஷ்மஸ்வேத முறைகள்:—(1) இரும்புக் குண்டுகள், செம்

கல், கற்கள் முதலியவற்றை அக்னியிலிட்டுக் காய்ச்சி, காடியில் சேர்த்து, அதிலிருந்து கிளம்பும் ஆவி சரீரமெங்கும் படும்படி வஸ்திரங்களால் காடி யடங்கிய அப்பாத்திரத்தையும் உடம்பையும் சேர்த்து போர்த்துக்கொண்டு செய்யப்படும் சிகித்ஸாமுறை ஊஷ்ம ஸ்வேதம் எனப்படும். (2) ஒரு குடத்தின் ஒரு பாரிசத்தில் சிறிது த்வாரம் செய்து, மரம், மூங்கில், லோஹவகைகள் முதலிய ஏதேனும் ஒன்றால் கோபுச்சம்போல் செய்த இரண்டு முழம் நீளமுள்ள குழாயை அந்த த்வாரத்தில் அமைத்து, அதில் வாதஹரமான திரவியங்களாலாகிய க்வாதங்கள், ஸ்வரஸங்கள் முதலானவற்றைக் கொதிக்கும் நிலைமையில் நிரப்பி, அதன் வாயை மூடிவிடவும். ஸ்வேதம் செய்துகொள்ள வேண்டிய பிணியாளிக்கு முதலில் அப்யங்கம் செய்வித்து, அவனுடம்பை கனமான போர்வைகளால் போர்த்து ஓர் ஆஸனத்தில் அல்லது வேறு இடத்தில் ஸுகமாயுட்காரவைத்து, துதிக்கையைப் போன்ற அக்குழாய் மூலமாய் வரும் ஆவியை அவனுடம்பில் பரவச் செய்யவும். நாடீஸ்வேதம் என்கிற இது விசேஷமாக வாத ரோகிக்கு குணந் தரத்தக்கது. (3) பூமியில் ஒரு புருஷப் பிரமாணம் அகல நீளமும் சிறிது ஆழமுமுள்ள பள்ளம் தோண்டி, அதில் கருங்காலிக்கட்டைகளையிட்டு எரித்து, அப்பால் அதிலுள்ள நெருப்பை அப்புறப்படுத்தி, அப்பள்ளத்தில் பால், காடி, ஜலம் இவற்றைத் தெளித்து, வாதஹரமான இலை தழைகளால் அதை மூடி, அதன்மேல் தழைகளைக் கொண்டு படுக்கையிட்டு, அதன்மேல் பிணியாளியைப் படுக்கச் செய்தால் சரீரம் நன்கு வியர்க்கும். இவ்விதமாகவே உளுந்து முதலிய வற்றையும் வேகவைத்து அவற்றால் சயநமேற்படுத்தி, அதில் மனிதனைப் படுக்கச்செய்து ஸ்வேதம் சேய்யலாம். 16—21.

உபநாஹஸ்வேதம்:—பிறகு உபநாஹஸ்வேத முறை எங்ஙனமெனில்:—முதலில் வாதஹரமான ஔஷதங்களை பால், மாம்ஸரஸம், காடிகள், உப்பு, ஸ்நேஹவர்க்கங்கள் இவற்றைச் சேர்த்து அரைத்து, சிறிது சூடேற்றி வாதரோகத்தினால் வருந்துபவருடைய தேகத்திற் பூசவேண்டும். கிராமங்களுக்கு அருகில் நீர்ப்பாங்கான இடங்களில் ஸஞ்சரிக்கும் மிருக பக்ஷிகளின் மாம்ஸம், ஜீவநீயகணத்திற் கூறப்பட்டுள்ள ஔஷதச் சரக்குகள்[1], தயிறு, காடி, க்ஷாரங்கள்,

1. ஜீவநீய கணம்—134-ம் பக்கம் விவரம் காண்க.

வீரதராதி கணத்திற் கூறிய [1] சரக்குகள், கொள், உளுந்து, கோதுமை, ஆளிவிதை, எள், கடுகு, சதகுப்பி, தேவதாரு, கருநொச்சி, ஜீரகம், ஆமணக்கு வேர், ஆமணக்கு விதை, சிற்றரத்தை, முள்ளங்கி, முருங்கை, ஜடாமாம்ஸி, திப்பிலி, கஞ்சாங்கோரை, உப்புகள், அம்ல பதார்த்தங்கள், முதியார்கூந்தல், அமுக்கிருங்கிழங்கு, சிற்றுமுட்டி, தசமூலம் [2], சீந்தில், பூனைக்காலிவிதை இவற்றுள் கிடைக்கக் கூடிய வற்றைக் கிரஹித்து இடித்து, வதக்கி, வஸ்திரத்திற் கட்டி ஒற்றடம் கொடுப்பதுபோல் ஸ்வேதநம் செய்யலாம். உபநாஹ ஸ்வேதத்திற் கான இம்முறை 'மஹாசால்வணம்' என்று வழங்கப்படும். இது ஸகலவித வாதரோகங்களையும் அகற்றும். 22—27½.

திரவஸ்வேதம்:— திரவஸ்வேதம் எவ்விதமென்றால்— தைலம் முதலானதைக் கொண்டு பிணியாளியின் சரீரத்தை ஸ்நிக்த்தமாக்கி, அவனை வாதஹர திரவ்யங்களாலான கஷாயம் நிரப்பிய தொட்டி யில் அல்லது பாலில், நாபிக்குமேல் ஆறு அங்குலம் வரையில் சரீரம் அமிழ்ந்திருக்குமாறு உட்காரச் செய்து, அதே க்வாதத்தை இளஞ்சூடாக எடுத்து இரு தோள்களிலும் தாரைபோல் விட வேண்டும். இவ்விதமே நோயாளிக்கு தைலத்தினாலும், பாலாலும், நெய்யாலும் ஸ்வேதசிகித்ஸை செய்யலாம். ஸ்நேஹங்களில் அமிழ்ந்து செய்துகொள்ளும் ஸ்வேதசிகித்ஸையை ஒன்று அல்லது இரண்டு நாள் இடையில் விட்டுவிட்டுச் செய்வது நலம். தைலம் முதலிய ஸ்நேஹவகைகளில் மூழ்கி ஸ்வேதசிகித்ஸை செய்து கொண்டால், மயிர்க்கால்களாலும், ஸிரைகளின் [3] மூலமாகவும், தமனிகள் மூலமாகவும் [4] அந்த ஸ்நேஹங்களின் அம்சங்கள் சரீரத்

1. வெட்டிவேர், அகில், ஈச்வரமல்லி, ஆடாதோடை, கல்லுருவி, நெரிஞ்சி, ஞாழல் இத்கடகாவென்னும் ஒரு சிவந்த மூலிகை, மருதோன்றி, கருங்குறிஞ்சி, சீந்தில், சவுட்டுக்கோரை, தர்ப்பம், காவட்டம்புல், பேய்க்கரும்பு, பெருவாகை, விழுதி, வாடாக்குறிஞ்சி, உத்தாமணி, பருத்தை இவை வீரதராதி கணம் எனப்படும்.

2. தசமூலம்—115-வது பக்கம் பார்க்க.

3. ஸிரைகள்—36-37-ம் பக்கங்களைப் பார்க்க,

4. தமனிகள்—36-37-ம் பக்கங்களைப் பார்க்க.

தினுள் வியாபித்து தேஹத்திற்கு வன்மையைத் தருகின்றன. விருக்ஷத்தின் வேர்களில் ஊற்றிய ஜலத்தினால் அதில் இலைகளும் கிளைகளும் செழித்து வளருவதுபோலவே, ஸ்நேஹத்தில் அமிழ்ந்து ஸ்வேதம் செய்து கொள்வதால் சரீரத்தில் தாதுக்கள் விருத்தியடைகின்றன. வாயுவினாலான கோளாறுகளைப் போக்குவதற்கு இதைக் காட்டிலும் சிறந்த உபாயம் வேறொன்றில்லை. 28—33.

**ஸ்வேத சிகித்ஸையை நிறுத்தும் ஸமயம்:**—அதிக சைத்யமும் வலியும் ஒழிந்து, அவயவங்களின் பிடிப்பும் பாரமும் குறைந்து, அக்னி தீபன முண்டாய், தேகம் மிருதுவாகவும் ஆயிற்றானால் ஸ்வேத சிகித்ஸையை நிறுத்திவிடவேண்டும். 34.

**ஸ்வேத முடிவில் செய்யவேண்டிய காரியம்:**—நன்கு ஸ்வேத சிகித்ஸை செய்து முடிந்ததும், சரீரத்தை நன்றாகப் பிடித்து விடவேண்டும்.[1] பிறகு உஷ்ணஜலத்தில் ஸ்நானம செய்து, அபிஷ்யந்தியென்னும்[2] குணமில்லாத ஆஹாரத்தை மெதுவாகப் புஜிப்பது நலம். ஸ்வேத சிகித்ஸை செய்து கொண்டவன் உடனே வியாயாமம்[3] செய்யக்கூடாது. 35.

---

## மூன்றாவது அத்தியாயம்.

---

### வமன விதி.

**வமன விரேசனங்களுக்கேற்ற காலங்கள்:**—சரத்ருது, வஸந்தருது, வர்ஷருது இக்காலங்களில் பிணியாளருக்கு விஷயமறிந்த வைத்தியர்கள் வமனம், விரேசனம்[4] இவற்றைச் செய்விக்கலாம். 1.

**வமனத்திற்கு உரியவர்:**—வலிவுள்ளவர், கபப்பிரகோபத்தால் வருந்துபவர், இருதயத்தைப்பற்றிய வியாதியினால் பீடிக்கப்படுபவர்,

---

1, பிடித்து-விடுதல்—தேகத்தை இதமாக மர்த்தனம் செய்தல்.

2. அபிஷ்யந்தி—21-வது பக்கம் பார்க்க.

3. வியாயமாம்—தேகவுழைப்பு.

4, வமனம்—வாந்தி செய்வித்தல் ; விரேசனம்—மலத்தைத் திரவமாக்கி வெளிப்படுத்தும் சிகித்ஸை.

வமனசிகித்ஸையை ஹிதமாகக் கொண்டவர், மனோதைரியமுள்ள வர் இவ்வித மனிதர்கள் அந்தந்த ரோகங்களில் வமன சிகித்ஸைக்கு உரியவராகின்றனர். 2.

வமனம் செய்வதற்கான வியாதிகள்:—விஷஸம்பந்தத்தினு லுண்டான கோளாறுகள், ஸ்தன்யரோகம், அக்னிமாந்த்யம், யானைக் கால், அர்புதம், இருதயரோகம், குஷ்டம், விஸர்ப்பம், மேஹரோகம், அஜீர்ணம், தலைச்சுற்றல், விதாரிகா என்னும் சிலந்தி, அ-சி என்னும் புண், காஸம், ச்வாஸம், பீனஸம், அண்டவ்ருத்தி, அபஸ்மாரம், ஜ்வரம், உன்மாதம், இரத்தாதிஸாரம், நாஸாபாகம், தாடையிலுண்டா கும் புண், உதட்டிலுண்டாகும் புண், காதில் சீழ்வடிதல், உள்நாக்கு வீங்குதல், களசுண்டியென்னும் தொண்டைச் சிலந்தி, அதிஸாரம், பித்தரோகங்கள், கபரோகங்கள், மேதோரோகம், அருசி இந்த ரோகங்களில் வமனம் செய்விக்கவேண்டும். 3—5½.

வமனத்திற்குத் தகாதவர்கள்:—திமிரமென்னும் நேத்திரவியாதி, குன்மம், மஹோதரம் முதலிய உதர வியாதிகள், தேகம் இளைத்துப் போதல், மிகவும் முதிர்ந்த வயது, கர்ப்பம் தரித்தல், மிகவும் ஸ்தூ லித்த தேகம், க்ஷதகாஸமென்னும் இரத்தகாஸம், வெறி அல்லது மதம், ரூக்ஷசரீரம், பசி, உதாவர்த்தம், கஷ்டப்பட்டு வாந்தி செய்யும் நிலைமை, வாத தோஷத்தினுலேயே உண்டான கோளாறு, பாண்டு ரோகம், க்ருமிரோகம், படிப்பதால் தொண்டை வறட்சியுறுதல் இவ் வியாதிகளால் வருந்துபவரும், நிரூஹவஸ்தி[1] செய்து கொண்ட வரும், சிறு குழந்தைகளும் வமனத்திற்கு உரியவரல்லர். 6—7½.

வமனத்திற்குத் தகாதவர்களில் சில விலக்கு:—ஆனல் பாண்டு ரோகி, வயிற்றில் கிருமியுள்ளவன், படித்ததால் தொண்டை வறண்ட வன் இவர்களுக்கு அஜீர்ணமும் தொடருமானல் அப்பொழுது விஷ முண்டவனுக்குச் செய்வது போலவே வமனம் செய்விக்க வேண்டி யது அவசியமாம். 8½.

அதிமதுர க்வாதத்தினுல் வமனம்:—பாண்டுரோகம், கிருமி, தொண்டை வறட்சி இவ்வியாதிகளுடன் அஜீர்ணமும் தொடருமா

---

1. நிரூஹவஸ்தி—இதைப்பற்றிய விவரங்களை இந்த கண்டத் தில் ஆருவது அத்தியாயத்திற் காண்க.

ஞல் அவர்களுக்கும், வமனத்திற்குரிய விஷமுண்டவர் முதலியவருக்கும், கபபிரகோபத்தினுல் வருந்துபவருக்கும் அதிமதுரத்தை க்வாதம் செய்து உட்கொள்ளக் கொடுத்து வமனம் செய்விக்கவேண்டும். 9.

**பாலர் முதலிய ஸுகுமார தேகிகளுக்குச் செய்விக்கத்தகும் வமனமுறை:**—ஸுகுமாரதேஹிகள், சரீரம் மெலிந்தவர், பாலர், கிழவர், பலசாலிகள் இவர்களுக்கு வமனம் செய்விக்கக்கூடாது ; ஆனுல் அவசியமாக இருந்தால் யவாகூவையாவது, பாலையாவது, தயிரையாவது, மோரையாவது வயிறு நிரம்ப மேலே எதிர்த்து வரும்படி அதிகமாய் உட்கொள்ளச் செய்து வமனம் செய்விக்கவேண்டும் ; மேலும் வழக்கத்திலில்லாதவையும் கபத்தை விருத்தி செய்யத் தகுந்தவையுமான ஆஹாரபதார்த்தங்களைக் கொடுத்து ரோயாளியின் சரீரத்தினுள் சேர்ந்திருக்கும் தோஷங்களைக் கலிவிட்டு, ஸ்நேஹசிகிச்சையும் ஸ்வேதசிகித்ஸையும் செய்துவைத்தபின் வமனம் செய்வித்தால் உடலிலிருந்து தோஷங்கள் நன்ருக வெளி வந்துவிடும். 10, 11.

**வமனத்திற்கு உபயோகிக்கும் போதுச் சரக்குகள்:**—எவ்விதமான வமன சிகித்ஸைகளிலும் வமனமுண்டுபண்ண இந்துப்பு அல்லது தேன் உபயோகிக்கத் தகுந்ததாம். ஆனுல் வமனமானது சிலஸமயம் பார்க்க வழங்காத துன்பத்தைத் தரும் ; அவ்வித வமன சிகித்ஸையை விரும்பாதவருக்கு அதற்கு மாருக விரேசன சிகித்ஸையைச் செய்வது நலம். 12.

**வமனத்திற்கு க்வாதம் பக்குவம் செய்யுமுறை:**—க்வாதம் செய்வதற்கான வஸ்துக்கள் நான்கு பலமிருந்தால், அவற்றிற்கு ஓர் ஆடகப்பிரமாணம் ஜலம் சேர்த்து, அரை வாசி மிகும்படிக் காய்ச்சியெடுக்கவும். வமனசிகித்ஸைக்கு உபயோகிக்கவேண்டிய கஷாயங்களைப் பெரும்பாலும் இவ்வாறே பக்குவம் செய்யவேண்டும். 13.

**வமனத்திற்காக ஔஷதங்களுபயோகிப் பதற்குப்போது அளவு:**—வமனத்திற்காக க்வாதங்களை உபயோகிக்கவேண்டுமானுல் அதில் ஜ்யேஷ்ட மாத்திரை யென்றும், கநிஷ்ட மாத்திரை யென்றும், மத்யம மாத்திரையென்றும் மூன்றுவித அளவுகள் உண்டு[1]. அவற்

---

1. நடுப்பிராயமும் பலமும் வாய்ந்தவருக்குக் கொடுப்பது ஜ்யேஷ்டமாத்திரை (பெரிய அளவு) என்றும், குழந்தைகளுக்கும் மிக

றுள் ஒன்பது பிரஸ்த்தம் அளவில் கொடுக்கப்படுவதை ஜ்யேஷ்ட மாத்திரை யெனவும், ஆறு பிரஸ்த்தம் அளவில் கொடுப்பதை மத்யம மாத்திரையென்றும், மூன்று பிரஸ்தங்களை கநிஷ்டமாத்திரை யென்றும் சொல்லுவர். மேலும் கல்கம், சூர்ணம், லேஹ்யம் இவற்றை வமனத்திற்காக உபயோகிக்கவேண்டுமானால், அவற்றிற்கு மூன்று பலம் ஜ்யேஷ்டமாத்திரையாகவும், இரண்டு பலம் மத்யமமாத்திரையாகவும், ஒரு பலம் கநிஷ்ட மாத்திரையாகவும் கருதப்படும். இது வமனத்திற்காக ஔஷதங்களுபயோகிப்பதற்கான பொதுப் பிரமாணமாகும் 14, 15

**வமனாதிகளில் பிரஸ்த்தத்தின் பரிமாணம்:**—வமனத்திற்காகவும், விரேசனத்திற்காகவும், இரத்தமோக்ஷணம்[1] செய்விப்பதற்காகவும் ஔஷதங்களுபயோகிப்பதற்கான அளவுகளில் பிரஸ்த்தம் என்கிற பரிமாணம் கூறப்படுமானால், அந்த பிரஸ்த்தம் பதின்மூன்றரைப் பலம் அளவுள்ளதெனக் கருதப்படுமாம்.[2] 16.

**வமனத்திற்கான அளவுகள்:**—வமனத்திற்காக ஔஷதமுட்கொண்டவருக்கு எட்டு முறை வாந்தியானால் அல்லது பித்தநீர் வெளிப்படுமானால் அது உத்தமம அளவென்றும், ஆறுமுறை வாந்தியானால் மத்யமமென்றும், நான்கு முறையானால் சிறிய அளவெனவும் கூறப்படுகிறது. 17.

**தனித்தனியே வாத பித்த கபங்களாலான வியாதிகளில் வமனத்திற்குரிய பொருட்கள்.**—கடுரஸமும் தீக்ஷ்ண குணமுமுள்ள பதார்த்தங்களால் கபத்தினாலான வியாதிகளிலும், மதுரமும் குளிர்ச்சியும் பொருந்திய வஸ்துக்களால் பித்தத்தினாலான வியாதிகளிலும்,

---

வும் துர்ப்பலர்களுக்கும் கொடுப்பது கநிஷ்ட மாத்திரை (சிறிய அளவு) என்றும், மத்யமவயதுள்ளவருக்கும் மத்யம பலமுள்ளவருக்கும் கொடுப்பது மத்யமமாத்திரை (மத்திம அளவு) என்றும் கருதப்படும்.

1. இரக்தமோக்ஷணம் — இரத்தத்தை ஸிரைகளிலிருந்து குத்தி வெளிப்படுதல்.

2. வைத்யக பரிபாஷை முதலிய வேறு சில கிரந்தங்களில் வமனம் முதலியவற்றில் ஔஷதப்பிரயோகத்திற்கு 12-பலங்கொண்டது பிரஸ்த்தமென்றும் மற்றவைகளுக்கு 16-பலங்கொண்டது ஒரு பிரஸ்த்தமென்றும் கூறப்படுகிறது.

மிகவும் மதுரமும் இலவணமும் அம்லமும் உஷ்ணவீர்யமுமுள்ள பதார்த்தங்களால் கபம் வாயு இவற்றாலான வியாதிகளிலும் வமனம் செய்விக்கவேண்டும். 18.

கபம் முதலியவற்றாலான வியாதிகளுக்கேற்ற வமநௌஷதங்கள்:—கபப்பிரகோபத்தில் அல்லது கபத்தினாலான வியாதியில் திப்பிலி, மருக்காரை, இந்துப்பு இவற்றைப் பொடித்து உஷ்ண ஜலத்தில் சேர்த்து உட்கொள்ளலாம். பித்தத்தினாலான வியாதிகளில் அல்லது பித்தப்பிரகோபத்தில் பேய்ப்புடல், ஆடாதோடை, வேப்பு இவற்றைக் குளிர்ந்த ஜலத்துடன் உபயோகிக்கலாம். கபம் வாதம் இவ்விரண்டாலுமுண்டான வியாதிகளில் அல்லது அவ்விரண்டும் ஒருமிக்க பிரகோபித்த நிலைமையில் மதனபலத்தைப் பாலுடன் உட்கொள்ளலாம். அஜீர்ணத்தில் இந்துப்பை உஷ்ணஜலத்துடன் உட்கொண்டு வமனம் செய்யவேண்டும். 19, 20.

வமனோபசாரம்:—வமன சிகித்ஸைக்குரிய பிணியாளியை முழங்காலளவு உயரமுள்ள ஓர் ஆஸனத்தில் உட்காரச்செய்து, வமனத்திற்கான ஔஷதங்களை உட்கொள்ளப்பண்ணி, வைத்தியன் மெல்லிய ஆமணக்கந்தண்டை யெடுத்து அதனால் ரோகியின் தொண்டையைப் பரிசித்து வாந்தியுண்டாகும் வண்ணம் செய்யவேண்டும். வமனம் பண்ணும்போது அப்பிணியாளியின் கன்னங்கள் இரண்டையும் பற்றிக்கொண்டு அவனுக்கு உத்ஸாஹமூட்டவேண்டும். 21½.

துச்சர்த்தி:—வமனம் தகுந்தவாறு செய்விக்கப்படாமல் உள்ளே தங்கியிருக்கும் தோஷங்கள் முற்றிலும் வெளிவராமற்போனால் அப்பொழுது வாயில் நீர் சுரக்கும்; மாரில் ஒருவிதமான அடைப்பு அல்லது பிடிப்பு உண்டாகும்; குடலில் ஒருவாறு அரிப்பு அல்லது வேதனையும் ஸம்பவிக்கும். இக்குறிகளால் வேண்டியவளவு வாந்தியுண்டாகவில்லையென்றறியலாம்; இது 'துச்சர்த்தி' எனப்படும். 22.

அதிவமனம்:—மிதமிஞ்சி வாந்தி செய்யப்படுமானால் நாவறட்சி, விக்கல், ஏப்பம், மயக்கம், நாக்குத்தள்ளல், கண் புரளுதல், முகவாய்க்கட்டைப் பிடிப்பு, இரத்தவாந்தி, உமிழ்நீர் அதிகமாயூறல், தொண்டைக்குள் வேதனை இக்குறிகள் ஸம்பவிக்கும். 23½.

**அதிவமனத்தினலான கோளாறுகளை விலக்கு முபாயம்:**—வமனம் மிதமிஞ்சியுண்டானல் மிருதுவாக விரேசனமாகும்படி உபாயம் செய்யவேண்டும். அதிக வமனத்தினல் நாக்கு இழுக்கப்பட்டு சுருக்கங்கொண்டால் இருதயத்திற்கு வன்மை தரக்கூடியவாறு பக்குவம் செய்த ஸ்நிக்த்தமும் அம்லமும் இலவண ரஸமுமுள்ள க்ருதம், பால், மாம்ஸரஸம் இவற்றால் கபளக்ரஹம்[1] செய்யவேண்டும்; ஆனல் கபளக்ரஹம் செய்வதற்குமுன் புளிப்பான கனிகளைப் புஜிப்பது நலம்; நாக்கு வெளியில் துவளுமாயின், எள், திராக்ஷை இவற்றைக் கல்கஞ்செய்து அதன்மேல் தடவி, மெதுவாகச் சுருங்கி உட்செல்லுமாறு செய்யவேண்டும். கண்கள் பிதுங்கவொட்டாமல் மெதுவாக நேத்திரங்களில் நெய் விட்டுக் கட்டலாம். முகவாய்க்கட்டையின் பிடிப்பு அல்லது தளர்ச்சியில் ஸ்வேத சிகித்ஸையும், வாதகபங்களின் கோளாறுகளை யகற்றக்கூடிய நஸ்ய சிகித்ஸையும்[2] செய்யலாம். வாந்தியில் இரத்தம் வருமானல் இரத்தபித்தத்திற்குக் கூறப்பட்டுள்ள சிகித்ஸை செய்வது நலம். மேலும் நெல்லிக்கனி, இரஸாஞ்ஜனம், வெட்டிவேர், நெற்பொரி, சந்தனக்குழம்பு இவற்றை மந்தமாகச்[3] செய்து, அதில் நெய், தேன், சர்க்கரை இவற்றையும் சேர்த்து உட்கொள்ளச் செய்யலாம்; இதைப் பருகுவதால், அதிக வாந்தியினலுண்டான நாவறட்சி முதலிய உபத்திரவங்கள் நீங்கிவிடும். 24—29.

**முறைப்படி வாந்தியானதன் குறிகள்:**—மார்பின் உட்புறம் அல்லது இருதயம், தொண்டை, சிரஸ் இவை சுத்தமாதல், நன்கு பசியெடுத்தல், சரீரத்திற்கு இலாகவமுண்டாதல், கப-பித்தங்கள் ஒழிதல் ஆகிய இவையே முறைப்படி வாந்தியானதன் குறிகளாகும். 30.

**வமனத்திற்கான பத்தியம்:**—முறைப்படி வாந்தியானபின்பு, பகற்பொழுது சாய்ந்ததும் அக்னிதீபனமுண்டாயிருப்பதை யறிந்து

---

1. கபளக்ரஹம்—இந்த கண்டத்தில் 10-வது அத்தியாயத்தில் இதைப்பற்றிய விவரங்களைப் பார்க்கவும்.

2. நஸ்யம்—இதே கண்டத்தில் 8-வது அத்தியாயத்தில் இதன் விவரங்களைப் பார்க்க.

3. மந்தம்—126-வது பக்கத்தைப் பார்க்கவும்.

பயறு, காரரிசி, சம்பா, இருதயத்திற்கு பலந்தரக்கூடிய மாம்ஸரஸம் இவற்றால் யூஷம்[1] செய்து பிணியாளிக்குக் கொடுக்கலாம். 31.

வமனத்தினுல் நிவ்ருத்திக்கக்கூடிய வியாதிகள்:—சோம்பல், அதிநித்திரை, வாயில் துர்நாற்றம், குடலில் அரிப்பு, கிரஹணீ, விஷம் இவற்ருலுண்டாகும் தீங்குகள் நன்கு வமனம் செய்வதால் நிவ்ருத்திக்கக் கூடியவையாம். 32.

வமனசிகித்ஸையில் விலக்கக்கூடியவை:—அஜீர்ணமுண்டாகக் கூடிய உணவு, குளிர்ந்த ஜலம், வியாயாமம், புணர்ச்சி, தைலாப்யங்கம், அதிக சினமுண்டாதல் இவற்றை வமனசிகித்ஸை செய்துகொண்டவன் ஒருநாள் முடிய விலக்கவேண்டும். 33.

---

# நான்காவது அத்தியாயம்.

---

## விரேசன விதி.

விரேசனத்திற்கு முன் செய்யவேண்டிய சிகித்ஸை:—முதலில் ஸ்நேஹங்களைக் கொண்டு சரீரத்தை ஸ்நிக்த்தமாகச் செய்து, பிறகு ஸ்வேத முறைப்படி தேகத்திற்கு ஸ்வேதம் செய்வித்து, வமனவிதியையும் தகுந்தவாறு நிறைவேற்றி, அப்பால் குடல்களிலிருந்து மலங்கழியுமாறு நன்கு விரேசனமும் செய்விக்க வேண்டும். வமனமின்றியே விரேசனத்திற்குக் கொடுத்தால், ஆமாசயமென்னும் இரைப்பைக்கு மேலுள்ள கபமானது கீழ் நோக்கிச் சென்று கிரஹணீயென்னும் த்வாரத்தை[2] மூடிவிடும்; அல்லது அக்னி மாந்தியம், சரீரம் பாரமாயிருப்பதுபோன்ற கோளாறு, பிரவாஹிகா வென்னும் ஆஸனக் கடுப்பு இவையாவது உண்டாகும். அல்லது பாசனமுள்ள ஔஷதங்களால் குடலில் சேர்ந்துள்ள அடக்குவமான தோஷங்களையும், கபத்தையும் பக்குவஞ்செய்து, ஸ்நேஹ வர்க்கங்களால் சரீரத்தை ஸ்நிக்த்தமாக்கி, ஸ்வேத சிகித்ஸையையும் செய்து, அப்பால் விரேசனத்திற்கும் ஔஷதங்களையுபயோகிக்கலாம். 1—2½.

---

1. யூஷம்—இதைப்பற்றி 124-வது பக்கம் பார்க்க.
2. கிரஹணீ—33-ம் பக்கம் பார்க்க.

விரேச்னத்திற் கேற்ற காலம்:—சரத்ருதுவிலும் வஸந்தருதுவிலும் தேகம் சுத்தியாவதற்காக விரேசனம் செய்விப்பது நலம்; ஆனால் ஆபத்கரமான ஸமயங்களில் வேறு காலங்களிலும் செய்விக்கலாம். 3½.

விரேசனம் செய்விக்கக்கூடிய கோளாறுகள்.—பித்தம் பிரகோபித்ததாலான கோளாறுகளிலும், ஆமதோஷத்தினாலான வியாதிகளிலும், உதர ரோகங்களிலும், வயிற்றுப் பொருமலிலும் குடலைச் சுத்தி செய்வதன்பொருட்டு விரேசனம் செய்விக்க வேண்டும். 4½.

விரேச்னத்தின் மேன்மை:—லங்கனம், பாசனம் என்கிற சிகித்ஸைகளால் தோஷங்கள் ஸ்வஸ்த்தம் செய்யப்பட்டாலும் சில ஸமயம் அவை மீண்டும் பிரகோபமடையும்; விரேசனம் முதலிய சோதன சிகித்ஸைகளால் எவர்களுடைய சரீரம் சுத்தம் செய்யப்படுகிறதோ அவர்களுக்கு அத்தோஷங்கள் மீண்டும் மேலெழுந்து துன்பம் விளைவிப்பதில்லை. 5½.

விரேகத்திற்குத் தகாதவர்கள்:—அதிக வேலை முதலியவற்றால் களைப்புற்றவர், நாவறட்சியினால் கஷ்டப்படுபவர், ஸ்தூலதேகிகள், கர்ப்பிணிகள், நவஜ்வரிகள் [1] புதிதாகப் பிரஸவித்த ஸ்த்ரீ, அக்னிமாந்தியமுள்ளவர், மதாத்யய ரோகிகள் [2], சரீரத்தில் சல்யம் புகுந்து வருந்துபவர், ரூக்ஷதேகிகள் [3] இவர்கள் விரேகத்திற்குத் தகாதவர்கள். 6—7½.

விரேகத்திற்குத் தகுந்த ரோகிகள்—ஜீர்ண ஜ்வரிகளும் [4], க்ருத்ரிமவிஷம் [5] பரவிய சரீரமுடையவர்களும், வாதரக்தம், பகந்தரம், அர்சஸ், பாண்டு, உதரரோகம், கிரந்திகள், இருதயவியாதிகள், அரோசகம், யோனி ரோகம், பிரமேஹம், குன்மம், ப்லீஹரோகம், விரணங்கள், வித்ரதி, வாந்தி, கொப்புளங்கள், விஷூசி, குஷ்டம், காது

1. நவஜ்வரம்—108-ம் பக்கம் பார்க்க.

2. மதாத்யயம்—48-வது பக்கம் பார்க்க.

3. ரூக்ஷதேகிகள்—வறட்சியுள்ள சரீரமுடையவர்.

4. ஜீர்ண ஜ்வரி—ஆமஜ்வர நிலைமை நீங்கியவன்; நாட்பட்ட ஜ்வரத்தினால் வருந்துபவன் எனவும் கூறலாம்.

5. க்ருத்ரிமவிஷம்—92-வது பக்கம் பார்க்க.

நோய், நாசியைப்பற்றிய ரோகம், சிரோரோகம், வாய்ப்புண் முதலிய முகத்தைப்பற்றிய நோய்கள், ஆண்குறி ஸம்பந்தமான வியாதிகள், நேத்திரரோகம், சோபையென்னும் சோகை, கிருமிரோகம், வாத தோஷம் க்ஷீணித்தல், வயிற்றுவலி, மூத்திர அடைப்பு இவ்வியாதிகளால் பீடிக்கப்படுபவரும் விரேகத்திற்கு உரியவராவர். 8—11.

**குடல்களின் குணபேதங்களும் விரேகம் செய்விக்க ஔஷத மாத்திரைகளும்:**—எவருடைய குடலில் பித்தம் அதிகரித்திருக்குமோ அவர் மிருதுகோஷ்டிகள் [1] என்றும், கபம் அதிகரித்திருக்குமானல் மத்யம கோஷ்டிகள் [2] என்றும், வாதம் மேலிட்டு வறண்டிருந்தால் க்ரூரகோஷ்டிகள் [3] எனவும் கூறப்படுவர். இவர்களுள் க்ரூர கோஷ்டிகளுக்கு ஸாதாரண ஔஷதங்களால் விரேசன முண்டாக்குவது கடினம். மிருது கோஷ்டமுடையவருக்கு சிறிய அளவுகளிலும், மத்யம கோஷ்டமுள்ளவருக்கு மத்யமமான அளவுகளிலும், க்ரூர கோஷ்டிகளுக்குப் பெரிய அளவுகளிலும் ஔஷதங்களைப் பிரயோகிக்க வேண்டும்; அவ்வௌஷதச் சரக்குகளும் வீர்யத்தில் முறையே மிருது—மத்யமம்—தீக்ஷ்ணம் என்கிற குணங்களுள்ளவையாயிருப்பது அவசியம். 12,13.

**குடல்களின் தன்மைக்கேற்ற விரேகௌஷதங்கள்:**—மிருது கோஷ்டிகளுக்கு திராக்ஷை, டால், ஆமணக்கெண்ணெய் இவற்றை யுபயோகிப்பதாலேயே விரேசனமுண்டாகலாம். மத்யம கோஷ்டிகளுக்குச் சிவதைவேர், கடுகரோகிணீ, கொன்றை இவற்ருல் விரேகமுண்டாகும். க்ரூரகோஷ்டமுள்ளவருக்குக் கள்ளிப்பால் கூடை நீறு, நேபாளம் முதலியவற்ருல்தான் விரேசனமுண்டாகும். 14½.

**விரேகத்தில் உத்தம மத்யம ஹீன யோகங்கள்:**—முப்பது முறை விரேசனமாய் இறுதியில் ஆகும் விரேகத்தில் கபமும் வெளிவருமானல் அது உத்தம யோகமென்றும், இருபதுமுறை விரேசன

1. மிருது கோஷ்டிகள்:—மிருதுவான அல்லது இளகிய குடல் உடையவர்கள்.

2. மத்யம கோஷ்டிகள்:—அதிக இளகலுமல்லாமல் அதிக கடினமுமல்லாமலிருக்கும் குடல் உடையவர்.

3. க்ரூர கோஷ்டிகள்:—கற்குடலுள்ளவர்.

மாஞல்; அது மத்யம யோகமென்றும், பத்துமுறை ஆனால் ஹீன யோகமென்றும் கூறப்படும். 15½-

**விரேகத்திற்குப் போதுவாக கஷாயங்களின் உத்தம மத்யம ஹீந மாத்திரைகள்:**—விரேகத்திற்காகக் கஷாயவகைகள் உபயோகிக்கப்படுமாஞல் அவற்றை இரண்டு பலம் அளவில் உபயோகித்தால் உத்தம மாத்திரையென்றும், ஒரு பலமாஞல் மத்யமமாத்திரையென்றும், அரைப் பலமாஞல் ஹீனமாத்திரையென்றும் கூறப்படும். 16½.

**விரேகத்தில் கல்கம் முதலியவற்றின் அளவு:**—கல்கங்கள், மோதகம் அல்லது குடிகைகள், சூர்ணங்கள் இவ்வுருவங்கொண்ட விரேசன ஔஷதங்களை வயது, வியாதி முதலியவற்றின் தன்மைகளுக்கு ஏற்றவாறு கால் பலம் அளவிலோ, அரைப்பலம் அளவிலோ, ஒரு பலம் அளவிலோ உபயோகிக்கலாம். 17½.

**வாதாதி தோஷங்களுக்கேற்ற விரேகௌஷதங்கள்:**—பித்தம் பிரகோபித்து உண்டாகும் வியாதிகளில் விரேகத்திற்காகச் சிவதை வேரின் சூர்ணத்தை திராக்ஷாதிக்வாதம்[1] முதலியதுடன் கலந்து உட்கொள்ளலாம். கபத்திஞல் பீடிக்கப்பட்டவன் த்ரிபலாக்வாதம்[2], கோமூத்திரம் இவற்றுடன் த்ரிகடு சூர்ணத்தைச் சேர்த்து உட்கொள்ளலாம். சிவதை வேர், இந்துப்பு, சுக்கு இவற்றின் சூர்ணத்தை ஏதேனும் காடிகளுடஞவது, ஜாங்கலமாம் ஸரஸத்துடஞவது வாதவியாதிகளில் விரேகத்திற்காக உபயோகிக்கலாம். 18—19½.

**எளிய விரேசனௌஷதம்:**—ஆமணக்கெண்ணையை அதற்கு இரு மடங்கு த்ரிபலாக்வாதத்துடஞவது, பாலுடஞவது கலந்து உட்கொண்டால் சீக்கிரத்தில் விரேசனமாகும். 20½.

**அந்தந்த ருதுக்களுக்கேற்ற விரேசனௌஷதங்கள்:**—சிவதை வேர், வெட்பாலரிசி, திப்பிலி, சுக்கு இவற்றைப் பொடித்து திராக்ஷாதி க்வாதம், தேன் இவற்றுடன் கலந்து வர்ஷ ருதுவில் விரேசன

---

1. திராக்ஷாதி க்வாதம் 103.வது பக்கம் பார்க்க.

2. த்ரிபலா க்வாதம்:—கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் இவற்றைச் சேர்த்து செய்யப்படும் க்வாதம்.

ஔஷதமாக உபயோகிக்கலாம். சிவதை வேர், காஞ்சொறி, கோரைக் கிழங்கு, சர்க்கரை, வெட்டிவேர், சந்தனம், அதிமதுரம் இவற்றின் சூர்ணத்தை திராக்ஷாதி க்வாதத்துடன் கலந்து குளிரச் செய்து சரத் ருதுவிலும், சிவதை வேர், சித்திரமூலம், வட்டத்திருப்பி, ஜீரகம், கருஞ்சிவதை, வசம்பு, கைநீறு இவற்றின் சூர்ணத்தை உஷ்ண ஜலத்தோடு ஹேமந்தருதுவிலும் விரேசனத்திற்காக உட்கொள்ள லாம். திப்பிலி, சுக்கு, இந்துப்பு, சிவதை, கருஞ்சிவதை இவற்றின் சூர்ணத்தைத் தேனிற் கலந்து சிசிரருதுவிலும், வஸந்தருதுவிலும், சிவதை வேரைப் பொடித்து சர்க்கரையுடன் ஸமபாகமாகக் கலந்து க்ரீஷ்ம ருதுவிலும் விரேசனத்திற்காக உட்கொள்ளலாம். 21—25.

அபயா மோதகம்:—கடுக்காய், மிளகு, சுக்கு, வாய்விடங்கம், நெல்லிப்பருப்பு, திப்பிலி, மோடி, இலவங்கப்பத்திரி, இலவங்கப்பட்டை, கோரைக்கிழங்கு இவற்றைச் சமபாகமாகவும், வாளம் இரண்டு பங்கும், சிவதை வேர் எட்டு பங்கும் சேர்த்து, நன்றாகச் சூர்ணம் செய்து, ஆறு பங்கு சர்க்கரையும் கலந்து, தேன் கூட்டி கால் பல மெடையில் குளிகைகள் செய்யவும். இதில் ஒரு குளிகையை காலையில் குளிர்ந்த ஜலத்துடன் உட்கொள்ளலாம்; நன்றாக விரேசனமாகும்; விரேசனம் குறைவாயிருந்தால் குளிர்ந்த ஜலத்தை மேன் மேலும் பருகலாம்; விரேசனம் அதிகமானால் உடனே உஷ்ண ஜலத்தைக் குடிக்க பேதி நின்றுவிடும்; உணவுகளை யுண்பதிலும், பான வகைகளைப் பருகுவதிலும், மற்ற வேலை விளையாட்டுகளைச் செய்வதிலும் இவ்வௌஷத முபயோகிக்கையில் நியமமொன்றுமில்லை. விஷம ஜ்வரம், அக்னிமாந்தியம், பாண்டு, காஸம், பகந்தரம், அர்சஸ், குஷ்டம், குன்மம், களகண்டம், தலைச்சுற்றல், உதரரோகங்கள், தேக அழற்சி, ப்லீஹரோகங்கள், மேஹம், க்ஷயம், நேத்திரவியாதிகள், வாதரோகங்கள், வயிற்றுப்பொருமல், மூத்ரக்ருச்சிரம், அச்மரீ, முதுகுவலி, பக்கவலி, தொடையிலுண்டாகும் நோய், இடுப்புவலி, வயிற்றுவலி இவை இவ்வௌஷதத்தினால் தீரும்; அவசியமான ஸமயங்களில் இதை யுபயோகித்துவர கிழத்தன்மையும் சீக்கிரமுண்டாகாது. இதற்கு 'அபயாமோதகம்' எனப் பெயர். இது சிறந்த இரஸாயனமாகக் கருதப்படுகிறது. 26—32½.

**விரேசனௌஷதமுட்கொண்டபின் செய்யவேண்டிய விதி:—** விரேசனத்திற்காக ஔஷத முட்கொண்டதும் குளிர்ந்த ஜலத்தினால் கண்களைத் துடைத்துக்கொண்டு, சிறந்த பரிமளவஸ்துக்களைச் சிறிது முகர்ந்து, தாம்பூலம் தரிக்கலாம். அதிக காற்றோட்டமில்லாத பிரதேசத்தில் இருந்துகொண்டு, விரேசனமாகும்போலிருந்தால் அதை அடக்கிக்கொண்டிராமல் அப்போதைக்கப்போது மலபாதையை நிவ்ருத்தி செய்யவேணும்; படுத்துறங்கக்கூடாது; குளிர்ந்த ஜலத்தையும் பரிசிக்காமலிருப்பது நலம்; இளஞ் சூடான ஜலத்தை அடிக்கடியும் பருகி வரலாம். வமன சிகித்ஸையில் கபமும், ஔஷதமும், பித்தமும், அப்பால் வாயுவும் கிரமமாக வெளிவருவதுபோல், முறை தவறாத விரேகத்தில் மலமும் பித்தமும், ஔஷதமும், அப்பால் கபமும் முறையே வெளிப்படும். 33—35½.

**துர்விரேகத்தின் குறிகளும் சிகித்ஸையும்:—** தகுந்தவளவு விரேகம் ஆகாமற்போனால் அது 'துர்விரேகம்' எனப்படும். அப்பொழுது நாபியில் தடிப்பும், வயிற்றுவலியும், மலம், வாயு இவற்றின் சிக்கலும், குடல்களில் வேதனையும், தேகத்தில் தழும்புகளும், சரீரம் பாரமாயிருப்பதுபோன்ற உணர்ச்சியும், தேக அழற்சியும், அரோசகமும், வயிற்றுப்பொருமலும், தலைச்சுற்றலும், வாந்தியும் உண்டாகும். இக்குறிகளுண்டானவனுக்கு பாசனகுணமுள்ள ஸ்நேஹ வர்க்கங்களால் வயிற்றிலுள்ள மலாதிகளைப் பக்குவம் செய்து, குடல்களை ஸ்நிக்த்தமாக்கி மீண்டும் விரேசனமாகும்படி உபாயம் செய்ய வேண்டும். இவ்விதம் செய்ய அவ்வுபத்திரவங்கள் ஒழிந்து, அக்னி தீபனமுண்டாய், சரீரம் பாரமாயிருப்பதுபோன்ற உணர்ச்சியும் தீர்ந்து லாகமுண்டாகும். 36—38.

**அதிவிரேகத்தின் குறிகளும் சிகித்ஸையும்:—** மூர்ச்சை, குதம் நழுவிப்போதல், வயிற்றுவலி, அதிக கபம் வெளி வருதல், மாம்ஸம் கழுவிய நீர்போன்றதும் கொழுப்பு அல்லது தண்ணீரைப் போன்றதுமான மலம் கழிதல், அல்லது இரத்தமே வெளிப்படுதல் என்னும் இவை மிதமிஞ்சிய விரேகத்திற்கு அறிகுறிகளாகும். அம்மனிதனுக்குச் சரீரத்தைக் குளிர்ந்த ஜலத்தினால் துடைத்து, குளிர்ந்த அரிசி கழுவிய நீரையும் தேனையும் கலந்து குடிக்கச்செய்து, மெதுவாக வமனம் செய்விக்கவேண்டும். மாம்பட்டையைத் தயிர் சேர்த்தாவது

-காடி சேர்த்தாவது அரைத்து கல்கமாகச் செய்து, நாபியின் மேல் தட விஞல் அதிகமாய் பேதியாவதைத் தடுக்கும். அல்லது வெள்ளாட்டுப் பால், விஷ்கிரமென்னும் வகுப்பைச்சேர்ந்த பக்ஷிகளுடைய மாம்ஸ ரஸம்,[1] அல்லது மானின் மாம்ஸரஸம் இவற்றில் ஏதேனுமொன்றுடன் சம்பா அரிசியினுல் அல்லது காரரசியினுலான அன்னத்தையாவது, சிறு கடலையைச் சமைத்தாவது கலந்து சிறிது புஜிக்கச் செய்யலாம். மேலும் க்ராஹியென்னும் குணத்திற் 2 சிறந்ததையும் குளிர்ந்ததையு மான தகுந்த பதார்த்தங்களால் மலத்தைக் கட்டுவதற்கு வைத்தியன் உடனே முயல வேண்டும். 39—43.

**முறைப்படி விரேகமானதின் குறிகளும் பிந்திய உபசாரங் களும்:**—தேகம் இலகுவாகவும், மனது மிகத் தெளிவுற்றுமிருந்து, வாயுவும் அதற்குற்ற மார்க்கத்திஞல் கீழ்நோக்கி வருமாஞல் அப்பொ ழுது அப்பிணியாளிக்கு முறைப்படி விரேகமுண்டாய் ஸுகமுண் டானதாகக் கருதவேண்டும். அதன்பிறகு குடலில் மிகுந்துள்ள ஆம தோஷம் முதலியவற்றைப் பக்குவம்செய்ய பாசன ஔஷதங்களை இர விற் பருகச்செய்வது நலம். 44.

**விரேகத்தின் உபயோகம்:**—விரேசனமாகும்படி அப்போதைக் கப்போது ஔஷத முபயோகித்து வருவதால் இந்த்ரியங்களுக்கு பல மும், புத்திக்குத் தெளிவும், அக்னி தீபனமும், தாதுக்களுக்கு வன்மை யும், ஆயுளபிவிருத்தியும் உண்டாகும். 45.

**விரேகௌஷத முபயோகித்தவர் விலக்கவேண்டியவை:**— பெருங்காற்று வீசுமிடங்களில் இருப்பது, குளிர்ந்த ஜலம், தைலாப் யங்கம், அஜீர்ணமுண்டாக்கும் உணவு, வியாயாமம், புணர்ச்சி இவற்றை விரேசனௌஷத முட்கொண்டவன் விலக்கிவிடவேண்டும். 46.

**விரேகத்தில் பத்தியம்:**—சம்பா அரிசி, காரரசி, பயறு இவை முதலியவற்றுல் பக்குவம் செய்த யவாகூவென்னும் கஞ்சியை விரேக மானவன் உட்கொள்வது நலம்; அல்லது ஜங்கலமாம்ஸ ரஸத்துட

1. விஷ்கிரங்கள்:—லாவம், விச்சுளி, குயில், செங்குருவி, சக்ர வாகப்புள், கிலாமுக்கி, அழுகுரல் பக்ஷி, கித்திரி, இராஜாளி, கோழி, கொக்கு முதலிய பக்ஷிகள் விஷ்கிர கணத்தைச் சேர்ந்தவையாம்.

2. க்ராஹி:—19-வது பக்கம் பார்க்க.

னுவது, விஷ்கிரமென்னும் பக்ஷியினங்களின் மாம்ஸ ரஸத்துடனுவது சம்பா அரிசியினுலான அன்னத்தைக் கலந்து புஜிப்பது ஹிதமாகும். 47.

---

## ஐந்தாவது அத்தியாயம்.

---

### வஸ்தி விதி.

இரண்டுவித வஸ்திகள்:—'அநுவாஸனம்', 'நிரூஹம்' என்று வஸ்தி[1] இருவகைப்படும்; ஸ்நேஹவர்க்கங்களால் செய்யப்படுவது 'அநுவாஸனவஸ்தி' என்றும், கஷாயம் பால் தைலம் முதலியவற்றைச் சேர்த்து செய்யப்படுவது 'நிரூஹவஸ்தி' என்றும் கூறப்படும். வஸ்தியென்னும் வஸ்துவினுல் செய்யப்படுவதால் 2 இச்சிகித்ஸை 'வஸ்தி' என்று வழங்கப்படுகின்றது: 1, 2.

மூன்று வஸ்திகள் செய்யப்படும் கிரமம்:—அவற்றுள் 'அநுவாஸனவஸ்தி' யென்பது முதலிற் கூறப்படும்; அதன்பிறகு 'நிரூஹவஸ்தி' விவரிக்கப்படும்; நிரூஹவஸ்திக்கு உத்தரத்தில்[3] செய்யக்கூடிய வஸ்தியானது 'உத்தரவஸ்தி' என்று வழங்கப்படும். $3\frac{1}{2}$.

மாத்ராவஸ்தி:—அநுவாஸநவஸ்தியிலேயே 'மாத்ராவஸ்தி' யென்ெருரு வகையான வஸ்தியுண்டு. 'மாத்ராவஸ்தி' யென்பது அவ்வஸ்திகர்மத்திற்காக உபயோகிக்கப்படும் ஔஷதங்களில் அல்லது

---

1. ஏதேனும் கருவியினுல் ஆஸனத்வாரமூலமாய் தைலம் முதலியவற்றைச் செலுத்தி குடலைக் கழுவுவதற்கான உபாயம் வஸ்தியெனப்படும். மூத்திரமார்க்கம் அல்லது கருப்பையைக் கழுவுவதற்கான வஸ்தி 'உத்தரவஸ்தி' எனப்படும்.

2. வஸ்தியென்று மூத்திரப்பைக்குப் பெயர். [முற்காலங்களில் மிருகங்களின் கனமான மூத்திரப் பைகளைப் பீச்சாங்குழல்களுக்குப் பதிலாக குதமார்க்கத்தினுல் ஔஷதங்களைப் பீச்சிட உபயோகித்து வந்தனர். ஆகவே, அக்கருவியும், அவ்வேலையும் 'வஸ்தி' எனப்படுகின்றன.]

3. உத்தரவஸ்தி—அநுவாஸனத்திற்கும் நிரூஹத்திற்கும் உத்தரத்தில் (பிறகு) செய்யப்படுவதால் இப்பெயர் வந்தது.

செய்கைகளிலுள்ள பேதத்திலை ஏற்படுத்தப்படாமல், அவ்வௌஷதங்களின் அளவுகளிலுள்ள பேதத்திலேயே ஏற்பட்டதாகும். அநுவாஸனவஸ்தியில் ஒன்று அல்லது இரண்டு பலம் அளவாகத் தைலம் முதலியது உபயோகிக்கப் படுமானால் அது 'மாத்ராவஸ்தி'[1] எனப்படும். 4½.

**அநுவாஸனத்திற்கு உரியவரும் தகாதவரும்:** — ரூக்ஷசரீரமும், மிதமிஞ்சிய பசியும், மிகவும் அதிகரித்த வாத தோஷமுமுடைய மனிதன் அநுவாஸன வஸ்திக்கு ஏற்றவனாவான். குஷ்டரோகி, மேஹரோகி, ஸ்தூலித்த தேகமுடையவன், மஹோதரம் முதலிய உதரரோகங்களால் வருந்துபவன் இவர்கள் அநுவாஸனவஸ்திக்குத் தகாதவர்கள். 5½.

**இரண்டு வஸ்திகளுக்கும் தகாதவர்:**—அஜீர்ணம், உன்மாதம், நாவறட்சி, மனநோய், மூர்ச்சை, அரோசகம், பயம், ச்வாஸம், காஸம் இவற்றால் வருந்துபவர் ஆஸ்த்தாபநவஸ்தி யென்ன[2] அநுவாஸன வஸ்தி யென்ன இரண்டுக்கும் தகுந்தவரல்லர். 6½.

**நேத்திரத்தின் விவரணம்:**—பொன் முதலிய லோஹங்களாலாவது, மரம் அல்லது மூங்கில் முதலியவற்றாலாவது, த்வாரமுள்ள வேறுவிதமான தண்டுகளாலாவது, தந்தத்திலைாவது, மாடு முதலிய மிருகங்களின் கொம்பு முனைகளாலாவது, இரத்தினங்களாலாவது வஸ்தியில் சேர்ப்பதற்கான நேத்திரம்[3] செய்யப்படவேண்டும். ஒன்று முதல் ஆறு வயது வரையிலுள்ள சிறுவர்களுக்கு உபயோகிப்பதற்கு நேத்திரம் ஆறு அங்குலம் நீளமாகவும், அதற்குமேல் பன்னிரண்டு

1. இரண்டு யாமங்களில் ஜீர்ணமாகக் கூடிய அளவில் ஸ்நேஹத்தை உபயோகித்துச் செய்யப்படுவது அல்லது ஒன்றரை பல மளவிலுபயோகிக்கப்படுவது 'மாத்ராவஸ்தி'யின் முறையென்று வேறு சிலரது கொள்கை.

2. ஆஸ்த்தாபந வஸ்தி—நிரூஹவஸ்திக்கே மற்றொரு பெயர். [இதையே கஷாயவஸ்தி யென்றும் கூறுவர். அவ்விதமே அநுவாஸனத்திற்கும் ஸ்நேஹவஸ்தி யென்று பெயர் வழங்கப்படும்.]

3. நேத்திரம்—தோல் அல்லது மூத்திரப்பையாலான வஸ்தியில் இணைக்கப்பட்டு, குதத்தில் பிரவேசிப்பித்து மருந்துகளைப் பீச்சிடுவதற்கு உபயோகமான குழல்.

வயது வரையில் எட்டு அங்குலம் நீளமாகவும், பன்னிரண்டு வயதுக்கு மேற்பட்ட அனைவருக்குமே பன்னிரண்டு அங்குலம் நீளமாகவும் செய்யப்படவேண்டும். அவற்றில் ஆறு அங்குலமுள்ள நேத்திரத்திற்கு ஒரு பயறு புகும்படியாகவும், எட்டு அங்குலமுள்ள நேத்திரத்திற்குச் சிறு கடலை பிரவேசிக்கக் கூடியதாகவும், பன்னிரண்டு அங்குலமுள்ளதற்கு இலந்தங்கொட்டை நுழையும்படியும் த்வாரம் அமைக்கப்படவேண்டும். நேத்திரத்தை வழவழப்பாகவும், அடி பருத்து நுனி சிறுத்ததாகவும் செய்யவேண்டும். அவற்றின் அடி பாகம் பிணியாளியின் பெருவிர லளவாகவும், முனை சுண்டுவிர லளவாகவும், குளிகைபோல் சிறிது உருண்டு வழவழப்பான முகமுடையதாகவும் இருக்கவேண்டும். நேத்திரங்களின் அடிப்புறத்தில் நாலு பாகங்களுக்குமேல்ஒரு கணுவும், முனையில் நாலுபாகத்திற்குக் கீழ் ஒரு கணுவும் ஏற்படுத்தி, அவற்றின் அடிப்புறத்துக் கணுவரையில் வஸ்தியை நுழைத்து நன்றாகக் கட்டிவிடவும். 7—12.

வஸ்தியென்னும் கருவிக்கான வஸ்துக்கள் :—மான், ஆடு, பசு, பன்றி, எருமைக்கிடா இவற்றுள் ஏதேனும் ஒரு மிருகத்தின் மூத்திரப்பையை யெடுத்து வஸ்தியென்னும் கருவியாகச் செய்துகொள்ளலாம். அவ்வித மூத்திரப்பை கிடைக்காவிடின், ஏதேனும் சர்மத்தினால் வஸ்தியை நிர்மித்துக் கொள்ளலாம். இதற்காக உபயோகிக்கப்படும் மூத்திரப்பை முதலியவற்றை முதலில் துவர்ப்பான வஸ்துக்களாலான கஷாயங்களில் தோய்த்து, ஒருவித வர்ணமும் நிகுநிகுப்பும் மெதுத்தன்மையும் வன்மையும் உண்டாகும் வண்ணம் பதன் செய்யவேண்டும். 13½.

விரணவஸ்தியின் நேத்திரம் :—விரணங்களைக் கழுவுவதற்கு உபயோகமாகும் வஸ்திக்கு எட்டு அங்குலம் நீளமுள்ளதும், வழவழப்பாயிருப்பதுமான நேத்திரத்தை வஸ்தியில் இணைக்க வேண்டும்; அந்த நேத்திரம் கழுகென்னும் பக்ஷியினுடைய இறகுத்தாளின் பருமனுள்ளதாகவும், பயறு நுழையக்கூடிய இரந்த்ர முடையதாகவும் அமைக்கப்படவேண்டும். 14½.

வஸ்தியின் மஹிமை:—வஸ்தியை முறை தவறாமல் உபயோகித்து வந்தால் சரீரம் செழித்து வளரும் ; அழகிய நிறங்கொள்ளும் ;

தேகவன்மை விருத்தியாகும்; ஆரோக்கிய நிலைமை அபிவிருத்தியடையும்; ஆயுளும் வளரும். $15\frac{1}{2}$.

**அநுவாஸனத்திற்கேற்ற காலங்கள்:**—வஸந்தகாலத்தில் ஸாயங் கால வேளையில் அநுவாஸனவஸ்தியைப் பிரயோகிக்கவேண்டும். க்ரீஷ்ம ருது, வர்ஷருது, சரத்ருது இவற்றில் இராத்ரி காலங்களில் அதைப் பிரயோகிப்பது உசிதமாம். $16\frac{1}{2}$.

**முறை தவறிய அநுவாஸனத்தினாலான தீங்குகள்:**—மிகவும் எண்ணெய்ப்பசையுள்ள உணவுகளைப் புஜிக்கச் செய்து அநுவாஸனம் செய்விக்கக்கூடாது; இரண்டு முறையாக ஸ்நேஹங்களை யுபயோகிப்பதால்[1] மனிதனுக்கு ஒருவித வெறியும் மூர்ச்சையும் உண்டாகக்கூடும். அதிக ரூக்ஷமான உணவுகளை யுண்டவனுக்கும் உடனே அநுவாஸனம் செய்தால் சரீரவன்மையும் நிறமும் குறையும். அநுவாஸன வஸ்தியையாவது நிரூஹவஸ்தியையாவது குறைந்த அளவில் உபயோகித்தால், அவை போதுமாறு பயன்படமாட்டா. அளவு மிஞ்சி உபயோகிக்கப்படுமானால், அவ்வஸ்தி கர்மங்களால் வயிற்றுப்பொருமல், சோர்வு, அதிஸாரம் இக்கோளாறுகளுண்டாகும். 17—19.

**அநுவாஸனத்தில் உத்தம மத்யம ஹீநமாத்திரைகள்:**—அநுவாஸனத்தில் ஸ்நேஹம் முதலியவற்றை ஆறு பலம் அளவில் உபயோகித்தால் 'உத்தம மாத்திரை' யென்றும், மூன்று பலமானால் 'மத்யம மாத்திரை' யென்றும், ஒன்றரைப் பலமளவாயின் 'ஹீநமாத்திரை' யென்றும் கருதப்படும். 20.

**சதாஹ்வா தைல விரேகமும் அநுவாஸனத்திற்கேற்ற நிலைமையும்:**—சதகுப்பி, இந்துப்பு இவற்றைச் சூர்ணம் செய்து எண்ணெயில் சேர்த்து, வஸ்தி செய்வதற்குமுன் விரேசனமாவதற்காகக் கொடுக்கவேண்டும். அச்சூர்ணத்தை உத்தமமாத்திரையில் ஆறு மாஷமும், மத்யமமாத்திரையில் நான்கு மாஷமும், ஹீநமாத்

1. ஸ்நேஹம் என்றால் எண்ணெய் வஸ்துக்கள் என்று முன்பே கூறப்பட்டிருக்கிறது; எண்ணெய்ப் பசையுள்ள உணவுகள் ஒரு ஸ்நேஹமாகவும், அநுவாஸனத்தில் பிரயோகிக்கப்படுவது மற்றொரு வகையான ஸ்நேஹவிதியாகவும் இருப்பதால் இரண்டுவித ஸ்நேஹங்கள் என்று குறிக்கப்பட்டதாம்.

திரையில் இரண்டு மாஷ எடையும் எண்ணெயிற் சேர்த்து உபயோகிக்கவேண்டும். இதையுபயோகித்து விரேசனமான பின்பு ஏழு நாட்கள் சென்றதும், சரீரத்தில் பலமும் சிறிது உண்டாயிருந்தால், அநுவாஸனத்திற்கு ஏற்ற மற்ற நிலைமைகளையும் பெற்ற மனிதருக்கு ஆஹாரமூட்டிக்கொண்டபின் அவ்வஸ்தியைச் செய்யவேண்டும். 21,22.

**அநுவாஸனம் செய்யவேண்டிய முறை:**—அப்பால், அநுவாஸன வஸ்திக்குரிய மனிதனுக்கு முதலில் அப்யங்கம் செய்வித்து, உஷ்ண ஜலத்தினால் ஸ்வேதமுண்டாக்கி, விதிப்படி போஜனமும் செய்வித்து, சிறிது இங்குமங்கும் உலாவி வரச் செய்து, அபானவாயு மலம் மூத்திரம் இவற்றை வெளியிடப்பண்ணி, அதன்பிறகு ஸ்நேஹ வஸ்தியைப் பிரயோகிக்கவேண்டும். இடதுபுறமாகச் சாய்ந்து, இடது காலை நீட்டியும் மற்றொரு காலை மடக்கிக்கொண்டும் பிணியாளியைப் படுக்கச் செய்து, குதத்தில் சிறிது எண்ணெயைத் தடவி, வஸ்தியின் நேத்திரத்தை மெதுவாக குதத்தினுள் செலுத்தவேண்டும். இதற்காக முன்பாகவே வஸ்தியையும் நேத்திரத்தையும் நன்றாக நூலைக்கொண்டு இணைத்துக் கட்டி ஆயத்தமாய் வைத்துக்கொள்வது அவசியம். வஸ்தியினுள் ஸ்நேஹத்தை ஊற்றி, வைத்தியன் தனது இடது கையால் நேத்திரத்தைப் பிடித்து பிணியாளியின் குதத்திற்குள் செலுத்தி, மற்றொரு கையால் வஸ்தியென்னும் பையைச் சிறிது வேகமாக அழுத்தவேண்டும். வஸ்தியைச் செய்துகொண்டிருக்கையில் கொட்டாவி, இருமல், தும்மல், இவை வராமல் அமைதியாயிருந்து முப்பது மாத்திரைகள் கொண்டகாலத்தில் ஒருமுறை வஸ்தியைச் செய்து முடிக்கவேண்டும். இவ்விதம் ஸ்நேஹத்தை உட்செலுத்திய பின், அப்பிணியாளி மல்லாந்து சயனித்தவாறு சற்றேறக்குறைய நூறு எண்ணிக்கைகள் எண்ணும் வரையில் அசையாமலிருக்கவேண்டும். நோயாளியை உடலனைத்தையும் நன்றாக நீட்டிக்கொண்டு படுக்கச்செய்து, அவனுடைய இரு கால்களையும் மூன்று முறை மெதுவாக மடக்கி பூமியின் மீது உதைக்கச் சொல்லவேண்

1. முப்பது மாத்திரைகள்—சற்றேறக்குறைய முப்பது விநாடிகள். [முழங்காலைச் சுற்றிலும் சுடிக்கைப் போட்டுக்கொண்டே மெதுவாகக் கையானது ஒருமுறை சுழன்றுவர எவ்வளவு நேரம் செல்லுமோ அவ்வளவு நேரம் ஒரு மாத்திரை யென்று கூறப்படுகிறது.]

டும்; இடுப்புக்குக் கீழும் இடுப்பின் இரு புறங்களிலும் தட்டிக் கொடுத்து, படுக்கையின்மேல் இடுப்பைத் தூக்கித்தூக்கி அசைக்கச் செய்வது நலம்; இதனால் ஸ்நேஹம் சரீரத்தில் வியாபிப்பது மல்லாமல், குடலிலிருந்து மலங்களும் எளிதாகக் கழிய வகையுண்டாகும். இவ்விதம் வஸ்தி செய்து முடிந்த பின்னர், நோயாளி தன் விருப்பப் படி ஸுகமாக நித்திரை செய்யலாம். 23—30.

**அநுவாஸனம் நன்கு நிறைவேறியதன் குறிகள்:**—வஸ்தியில் பிரயோகித்த ஸ்நேஹமானது அபானவாயுவோடும் மலத்தோடும் கலந்து கஷ்டமுண்டுபண்ணாமல் சீக்கிரம் வெளிவந்தால் அநுவாஸனம் நன்கு நிறைவேறியதாகக் கருதப்படலாம். 31.

**அநுவாஸனத்திற்குப் பிறகு கொடுக்கத்தகுந்த உணவு:**—முன் னால் புஜித்த ஆஹாரம் நன்கு ஜீர்ணமாய், வஸ்தியின் மூலமாய்ப் பிரயோகித்த ஸ்நேஹம் முதலியது வெளிவந்த பிறகு மாலைநேரத்தில் பசியும் நன்கு உண்டாயிருந்தால், அவனுக்கு மறுபடியும் இலகுவான ஆஹாரத்தை வேண்டியவளவு கொடுக்கலாம். 32.

**ஸ்நேஹம் குடலில் தங்கி கெடுதி செய்யாமலிருக்க உபாயம்:**—அநுவாஸனவஸ்தி செய்துகொண்டவனுக்கு மறுநாள் இளஞ்சூடான ஜலத்தையாவது, கொத்தமல்லி விதை சுக்கு இவ்விரண்டையும் சேர்த்துக் காய்ச்சிய கஷாயஜலத்தையாவது உட்கொள்ளக் கொடுப் பது நலம்; இவ்விதம் செய்வதால் வஸ்தியினாற் செலுத்திய ஸ்நேஹத்தில் ஏதேனும் சிறிது பாகம் குடலில் தங்கிக் கெடுதி செய்யாம லிருக்கும். 33.

**எத்தனை முறை அநுவாஸனம் செய்ய வேண்டும்?**—மேற் றிய முறைப்படி ஆறு முறையோ, ஏழு முறையோ, எட்டு முறையோ, ஒன்பது முறையோ ஸ்நேஹவஸ்தியைச் செய்யலாம்; ஆனால் ஒவ்வொரு முறை அனுவாஸனம் செய்ததும் இடையில் அப் போதைக்கப்போது நிரூஹவஸ்தியைச் செய்துவரவேண்டும். 34.

**ஒவ்வொரு ஸ்நேஹவஸ்தியினாலும் ஏற்படும் குணங்கள்.**—முதலிற் செய்யப்படும் வஸ்தியினால் துடைகளின் இடையிலுள்ள பாகங்களும், மூத்திரப்பையும் ஸ்நிக்த்தமாகின்றன. இரண்டாவது முறையும் வஸ்தியை நன்றாகச் செய்து முடித்தால் சிரஸ்ஸைப்பற்றி

யுள்ள வாததோஷம் நிவ்ருத்தியாகும். மூன்ருவது முறை உபயோகித்த வஸ்தியினுல் பலமும் தேகநிறமும் விருத்தியாகும். நான்காவது முறையும் ஐந்தாவது முறையும் பிரயோகித்த வஸ்திகளால் இரஸ, இரத்தம் என்னும் இரண்டு தாதுக்களும் ஸ்நிக்த்தமாகும். ஆருவது வஸ்தியினுல் மாம்ஸமும், ஏழாவது வஸ்தியினுல் மேதஸ்ஸும், எட்டாவது ஒன்பதாவது வஸ்திகளால் முறையே எலும்பும் மஜ்ஜாதாதுவும் ஸ்நிக்த்தமாகும். இவ்விதமாகவே மீண்டும் ஒன்பது தடவை ஸ்நேஹ வஸ்தியைப் பிரயோகித்தால் சுக்லத்திலுள்ள தோஷங்களையும் நன்ருகப் போக்கிவிடலாம். இங்ஙனம் முன்னூற்று இருபத்திருறு முறை இவ்வஸ்தியைச் செய்துகொள்பவர், ஒரு யானைக்குண்டான வன்மையைப் பெறுவரென்றும், குதிரை முதலியவைகளைப் பலாத்காரமாய் ஜயிக்கக்கூடிய சக்தியைப் பெறுவரென்றும், தேவதைகளுக்கேற்ற தேஜஸ்ஸை அடைவரென்றும் கருதப்படுகிறது. 35—38½.

**தினந்தோறும் அநுவாஸன நிரூஹங்களுக்கு உரியவர்.**—வாதம் மிகவும் அதிகரித்து, ரூக்ஷத்தன்மை மேலோங்கியுமுள்ள சரீரமுடையவருக்கு நாள்தோறும் வைத்தியன் அநுவாஸன வஸ்தியைக் கொடுத்துவரவேண்டும். இதற்கு மாருக கபம் அதிகரித்தும், ஸ்நிக்த்தத்தன்மை மேலோங்கியுமிருக்கின்ற தேகமுள்ளவர்களுக்கு நிரூஹ வஸ்தியை அவ்விதமே செய்யவேண்டும். 39½.

**நீடித்த காலம் அநுவாஸனத்திற்குரியவர்.**—ரூக்ஷதேகிகளுக்கு ஹ்ரஸ்வமாத்திரையில் ஸ்நேஹவஸ்தியை வெகு நாட்களளவும் நீடித்துச் செய்து வருவது நலம்; அவ்விதமே மிகவும் ஸ்நிக்த்தமான மனிதருக்கு ஹ்ரஸ்வமாத்திரையில் கஷாயவஸ்தியைச் செய்து வருவதும் உத்தமம். மேலும் எவனுக்கு ஸ்நேஹவஸ்தியைச் செய்ததும் உடனே அந்த ஸ்நேஹம் அப்படியே வெளிப்பட்டுவிடுகின்றதோ அவனுக்கு மறுபடியும் அப்பொழுதே மற்ளுெரு முறை மிகச் சிறிய அளவில் அநுவாஸனவஸ்தியைப் பிரயோகிப்பது அவசியம்; எவனுடைய சரீரம் நன்கு ஸ்நிக்த்தமாயிருக்கின்றதோ அவன் தேகத்தில் ஸ்நேஹம் தங்காமலிருப்பது இயல்பு. 40—41½.

**அநுவாஸனத்தினுல் மலம் சுத்தியாகாவிடில் செய்யக்கூடிய உபாயங்கள்:**—பலவாறு அசுத்தமான மனிதனுக்கு அநுவாஸனம்

செய்தும், உட்செலுத்திய ஸ்நேஹம் மலங்களுடன் வெளிவராமற் போனல், சரீரம் சோர்வுறுதல், வயிற்றுப்பொருமல், வயிற்றுவலி, பெருமூச்செறிதல், பக்வாசயமென்னும் சிறுகுடலுக்குள் பாரமாயிருப்பது போன்ற உணர்ச்சி இவை உண்டாகும்; அப்பொழுது தீக்ஷ்ணவீர்யமுள்ள ஔஷதங்களால் நிரூஹவஸ்தியைப் பிரயோகிக்க வேண்டும்; அல்லது தீக்ஷ்ணவீர்யமுள்ள ஔஷதங்களாலான பலவர்த்திகையாவது [1] குதத்தில் செலுத்தலாம். அபானவாயு, மலம், உட்செலுத்திய ஸ்நேஹம் இவை கீழ் நோக்கி வெளிவந்து விடுமாறு தீக்ஷ்ணமான நஸ்யமும் விரேசனமும் பிரயோகிப்பது நலம். வஸ்தியினுல் செலுத்திய ஸ்நேஹம் எவனுக்கு வெளிவராமலிருந்தும் ஒருவித கெடுதியையும் செய்வதில்லையோ அவனுக்குச் சரீரம் ரூக்ஷமாயிருப்பதாகவும் காணப்பட்டால், அந்த ஸ்நேஹத்தை வெளிப்படுத்த முயற்சி செய்யவேண்டிய அவசியமில்லை; சரீரம் மிக ரூக்ஷமாயிருந்தால் உட்செலுத்திய ஸ்நேஹம் அனைத்துமோ ஒரு பகுதியோ உடலில் ஊறிவிடுவது இயல்பு. ஸாதாரணமாய் மற்றவருக்கு வஸ்தியினுல் செலுத்திய ஸ்நேஹம் ஒரு நாள் முடிய வெளிவராமலிருப்பின் மறுநாள் விரேகம் முதலிய சோதன சிகித்சையினுல் அந்த ஸ்நேஹத்தை வெளிப்படுத்திவிடவேண்டும். ஆனல் ஸ்நேஹவஸ்தியில் முதலிற் பிரயோகித்த ஸ்நேஹம் வெளிவராமலிருந்தால் மறுபடியும் ஸ்நேஹத்தைக்கொண்டே சோதனம் செய்வது பிசகு. 42—46½.

அநுவாஸனத்திற்கு த்ருச்சியாதி தைலம்:—சீந்திற்கொடி, ஆமணக்கு, புங்கு, கண்டுபாரங்கி, ஆடாதோடை, காவட்டம்புல், தண்ணீர்விட்டான், மருதோன்றி, சிறுசோவை இவை ஒவ்வொரு பலம்; யவதானியம், உளுந்து, ஆளிவிதை, இலந்தங்கொட்டை, கொள் இவை ஒவ்வொன்றும் இரண்டு பலம்; இவற்றையெல்லாம் நாலு த்ரோணம் ஜலத்தில் சேர்த்து ஒரு த்ரோணமாகச் சுண்டக் காய்ச்சி, அக்கஷாயத்தில் ஒரு ஆடகம் தைலம் சேர்த்து, ஜீவநீயகணத்திற்

1. பலவர்த்தி—மருக்காரை யென்னும் மதனபலம் முதலியவற்றல் செய்யப்படும் சிறிது நீண்ட குளிகை; இவ்வித வர்த்திகளை குதத்தில் செலுத்தினுல் உடனே மலங்கள் வெளியிற் கழியும். இதற்கு 'குதவர்த்தி' என்றும் பெயர்.

கூறிய பதார்த்தங்களை[1] அதில் கல்கமாக இடித்துச்சேர்த்து பக்குவம் செய்யவும்; ஸகலவிதமான வாதரோகங்களிலும் அநுவாஸனவஸ்தி செய்வதற்கு இத்தைலம் ஏற்றதாயிருக்கும். 47—49½.

**முறைதவறின அநுவாஸனத்தினாலுண்டாகும் தீங்குகள் :—** வஸ்தி கர்மம் முறைப்படி நிறைவேறாமற்போனால், எழுபத்தாறு விதமான தீங்குகள் ஸம்பவிக்கும்[2]. அக்கோளாறுகளுக்கு ஸாச்ருதஸம்

---

1. ஜீயநீய கணம் 134-வது பக்கத்தைப் பார்க்க.

2. முறைதவறிய அநுவாஸனத்தினாலுண்டாகும் எழுபத்தாறு விதமான தீங்குகளாவன—வஸ்தியினுடைய நேத்திரத்தின் உருவம் ஒழுங்கீனமாயிருப்பதாலுண்டாகும் கெடுதிகள் பதினொன்று.—(1) மிகப்பருமன், (2) மிகக் கடினம், (3) வக்கிரத்தன்மை, (4) மிக மெல்லியதாயிருத்தல், (5) பிளந்திருத்தல், (6) கர்ணிகை யென்னும் கட்டு அருகில் இருத்தல், (7) அது தூரத்திலிருத்தல், (8) மெல்லிய த்வாரம், (9) வெகு விசாலமான த்வாரம், (10) மிகவும் நீண்டிருத்தல், (11) மிகவும் குறுகியிருத்தல். நேத்திரம் உட்செல்லுகையில் ஆறு வித கெடுதிகளுண்டு—(1) அசைதல், (2) புரளல், (3) பாரிசத்திற் பொத்துதல், (4) குறுக்காகப் பாய்தல், (5) குதத்தின் அடிப்புறத்தைத் தாக்கல், (6) அதன் மேற்புறத்தைத் தாக்கல். வஸ்தி தோஷங்கள் ஐந்தாம்.—(1) மிகப் பெரிது, (2) மிகச் சிறிது, (3) தகாதவிடங்களில் த்வாரமுள்ளது, (4) மிக விரிந்தது, (5) நன்கு சட்டிமுடியாதது. வஸ்தியை அமுக்குவதில் நான்கு தோஷங்கள்—(1) வெகு பலமாய் அழுத்தல், (2) வெகு மெல்லென அழுத்தல், (3) அடிக்கடியும் வெள்ள அழுத்தல், (4) காலவிளம்பம் செய்து அழுத்தல். திரவ்யங்களைப்பற்றியே தாஷங்கள் பதினொன்றும்—(1) பக்வமாகாதவை, (2) அளவிற் குறைந்தவை, (3) அளவில் மிகவும் அதிகமானவை, (4) மிகக் குளிர்ந்தவை, (5) மிகச் சூடானவை, (6) மிகவும் தீக்ஷ்ணமானவை, (7) மிகவும் குறைந்த வீர்யமுள்ளவை, (8) மிகவும் ஸ்நிக்த்தமானவை, (9) மிக ரூக்ஷமானவை, (10) மிகவும் கனமானவை, (11) மிகத்திரவமானவை. சயனத்தினாலுண்டாகும் ஏழு தோஷங்கள்—(1) தலை கவிழ்ந்துப் படுத்தல், (2) தலையை நிமிர்ந்துப் படுத்தல், (3) கூனிக்கொண்டு படுத்தல், (4) உட்கார்ந்திருத்தல், (5) உடலை வளைத்துப்படுத்தல், (6) தலை தாழ்ந்து இடுப்பு உயர்ந்திருத்தல், (7) வலது புறமாக ஒருச்சாய்ந்துப் படுத்தல். இந்த 44 கோளாறுகளும் வைத்தியனுடைய கவனக்குறைவால் நேரிடக் கூடியவையாம். நோயாளியின் முறைதவறின செய்கைகளால் பதினைந்து தோஷங்களுண்டு—

ஹிதையில் கூறப்பட்டிருக்கும் உபாயங்களை அநுஸரித்து சிகித்ஸை செய்யவேண்டும். 50½.

**அநுவாஸனத்திற்குப் பிறகு அன்னபானுதிகளின் முறை:—**அநுவாஸனம் முடிந்ததும் பானம், ஆஹாரம், விஹாரம் இவற்றையும் மற்றும் பரிஹரிக்க வேண்டியவைகளையும் ஸ்நேஹபானவிதியில் கூறப்பட்டுள்ள விதமாகவே ஸந்தேஹமின்றி நிறைவேற்றி விடலாம். 51½.

---

(1) சரீரத்திற்கு ஆயாஸமுண்டாக்கிக் கொள்ளுதல், (2) மனவருத்தப்படுதல், (3) புணர்ச்சி, (4) பகலில் நித்திரை யுறுதல், (5) உரத்துப் பேசுதல், (6) வாஹனங்களில் ஏறிச் செல்லுதல், (7) வெகுநேரம் உட்கார்ந்திருத்தல், (8) ஸ்நானம் செய்தல், (9) அதிகமாய் நடமாடுதல், (10) குளிர்ந்த ஜலத்தை யுபயோகித்தல், (11) அபத்தியமான உணவுகளைப் புஜித்தல், (12) வழக்கமில்லாத போஜனங்களை யுபயோகித்தல், (13) காற்றுக்கு எதிரிலிருத்தல், (14) வெயிலில் தங்குதல், (15) அமிதமாக உண்பது. வைத்தியன் பிணியாளி இருவருடையவும் அஜாக்கிரதையினுல் உண்டாகக்கூடிய தோஷங்கள் பத்து— (1) வாதம் கோளாறடைதல், (2) பித்தம் கோளாறடைதல், (3) கபம் கோளாறடைதல், (4) ஆஹார தோஷத்தினுல் அநுவாஸனம் விகாரமுறுதல், (5) மலம் சிக்கிக்கொள்ளுதல், (6) ஸ்நேஹம் குடலுக்குள் வெகுதூரம் பிரவேசித்தல், (7) ஸ்வேத சிகித்ஸையில்லாமல் அநுவாஸனம் செய்தல், (8) உடல் குளிர்ச்சியாயிருப்பது, (9) பட்டினியாயிருப்பவனுக்கு அநுவாஸனம் செய்தல், (10) மிகவும் சொற்ப அளவில் புஜித்தவனுக்கு அநுவாஸனம் செய்தல், வைத்தியனுடைய கவனக்குறைவாலுண்டாகும் தோஷங்கள். இன்னும் ஒன்பது உண்டு. (1) வேண்டியவளவு அநுவாஸனம் செய்யாமை; (2) வயிற்றுப்பொருமல், (3) ஆஸனக் கடுப்பு, (4) ஆஸன த்வாரத்திலிருந்து ஏதேனும் தோஷமுள்ள திரவம் கசிதல், (5) வயிற்றுக் கடுப்பு, (6) ஹ்ருதயம் படபடத்து அடித்தல், (7) உடற்பிடிப்பு, (8) அளவு மீறி வஸ்தியைச் செய்தல், (9) ஜீவசக்தியைக் குறைத்தல், இவை வஸ்தியினுலுண்டாகும் 76 தோஷங்கள் எனப்படுகின்றன.

1. வஸ்தியினுலுண்டாகும் கோளாறுகளுக்குச் சிகித்ஸை செய்வதற்கான உபாயங்களும் முறைகளும் ஸுச்ருத ஸம்ஹிதையின் சிகித்ஸா ஸ்த்தாநத்தில் 'நேத்ரவஸ்திவ்யாபத் சிகித்ஸை' என்னும் அத்தியாயத்தில் விவரமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

# ஆறாவது அத்தியாயம்.

## நிரூஹவஸ்தி விதி.

**நிரூஹம் அல்லது ஆஸ்த்தாபந வஸ்தியும் அதன் பேதங்களும்:-** அநேக முகாந்தரங்களைக் கொண்டு 'நிரூஹவஸ்தியானது' பலவிதமாகப் பிரிக்கப்பட்டுளது ; அந்தந்தக் காரணங்களுக்கேற்றவாறு அவற்றிற்கு முனிவர்கள் பெயர்களையும் ஏற்படுத்தியிருக்கின்றனர்.[1] நிரூஹத்திற்கே 'ஆஸ்த்தாபநம்' என்று மற்றொரு பெயருண்டு ; கோளாறடைந்த தோஷங்களையும் தாதுக்களையும் மீண்டும் அததற்குள்ள ஸ்த்தானங்களில் ஸ்த்தாபிக்கும் தன்மை இவ்வஸ்திக்கு உண்டானதால் இது 'ஆஸ்த்தாபநம்' என்றும் வழங்கப்படுகிறது. 1, 2.

**நிரூஹத்தில் கஷாயாதிகளின் அளவுகளுக்குப் பொது விதி:—** நிரூஹவஸ்தியில் ஒன்றேகால் பிரஸ்த்தமளவில் கஷாயம் முதலியவற்றை உட்செலுத்தினால் அது உத்தம மாத்திரையென்றும், ஒரு பிரஸ்த்தமளவு உட்செலுத்தினால் அது மத்யமமாத்திரையென்றும், மூன்று குடவப்பிரமாணம் செலுத்தினால் ஹீனமாத்திரையென்றும் கருதப்படும். 3.

**நிரூஹவஸ்திக்குத் தகாதவர்கள்:—** மிகவும் ஸ்நிக்த்தமான தேகமுடையவன், குடல் முதலியவற்றில் கல்லிவிடப்பெற்ற தோஷங்களுடன் கூடியவன், உரக்ஷதரோகி, இளைத்துப்போனவன், வயிற்றுப்பொருமல், வாந்தி, அர்சஸ், இருமல், ச்வாஸம், குதத்தின் வீக்கம், அதிஸாரம், விஷூசி, குஷ்டம், மதுமேஹம், ஜலோதரமென்னும் மஹோதரரோகம் இவற்றால் பீடிக்கப்படுபவரும், கர்ப்பிணியும் ஆஸ்த்தாபநவஸ்திக்கு உற்றவராகார். 4, 5.

**நிரூஹத்திற்கு உரியவர்:—** வாதரோகங்கள், உதாவர்த்தம், வாதரக்தம், விஷமஜ்வரம், மூர்ச்சை, நாவறட்சி, மஹோதரம் முதலிய வயிற்றைப்பற்றிய நோய்கள், வயிறு வீக்கம், மூத்ரக்ருச்சிரம், அச்மரீ,

1. மிருதுவஸ்தி, தீக்ஷ்ணவஸ்தி, உத்க்லேசநவஸ்தி முதலிய வஸ்திகள் நிரூஹவஸ்தியின் பேதங்களாம் ; அவற்றின் விவரம் இவ்வத்தியாயத்தில் 17-வது பத்யம் முதல் 36-வது பத்யத்தின் மொழிபெயர்ப்பு வரையில் கூறப்பட்டிருக்கிறது.

அண்டவ்ருத்தி, பெரும்பாடு, அக்னிமாந்த்யம், பிரமேஹம், சூலை, அம்லபித்தம், இருதயரோகம் இவ்வியாதிகளில் விஷயமுணர்ந்த வைத்தியர் விதிப்படி நிரூஹவஸ்தியைச் செய்யலாம். 6,7.

**நிரூஹம் செய்யும் கிரமம்:**—மல-மூத்திர-வாயுக்கள் நன்கு வெளியான பிறகு, ஸ்நேஹகர்மங்களாலும் ஸ்வேதவிதிகளாலும் சரீரத்தை முதலில் ஒருவாறு மிருதுவாகச் செய்து போஜனத்திற்கு முன்பாகவே நடுப்பகலில், பிணியாளியை வீட்டிற்குள் இருக்கச் செய்து, அநுவாஸனவஸ்தியைப்போலவே அவனவனுடைய நிலைமைக்கும் வியாதிகளுக்கும் தகுந்தவாறு நிரூஹவஸ்தியை நிறைவேற்றவேண்டும். வஸ்தி செய்து முடிந்ததும், உட்செலுத்திய ஔஷதமும் மலமும் வெளிப்படுவதற்காக ஒரு முகூர்த்த நேரம் குந்தியவாறு உட்கார்ந்திருக்கவேண்டும். ஒரு முகூர்த்தநேரத்திற்குள் மலம் முதலியது குடலிலிருந்து வெளிப்படாமற்போனால் மலத்தை வெளிப்படுத்துங் குணமுள்ள க்ஷாரங்கள், பசு மூத்திரம், புளிப்பான பதார்த்தங்கள், இந்துப்பு இவற்றைக்கொண்டு மறுபடியும் நிரூஹம் செய்தே அவற்றை வெளிப்படுத்தவேண்டும். 8—10½.

**நிரூஹம் நன்கு நிறைவேறியதன் குறிகள்:**—எவனொருவனுக்கு முதலில் மலமும், பிறகு பித்தமும், அப்பால் கபமும், அதன் பிறகு அபானவாயுவும் கிரமமாக வெளியாகின்றனவோ, சரீரம் இலகுவாகவும் ஆய்விடுகிறதோ அவனுக்கு நிரூஹம் நன்றாகப் பிரயோகிக்கப்பட்டதாய் அறிக. 11½.

**நிரூஹம் நன்கு நிறைவேறாததன் குறிகள்:**—உட்செலுத்தப்பெற்ற ஔஷதம் மெள்ள மெள்ளவும், அல்லது மிகவும் சொற்பமாகவும் வெளிவருமானால், மலம் அபானவாயு இவை வெளிப்படாமலும் இருந்தால், அவனுக்கு நிரூஹம் தகுந்தவாறு பிரயோகிக்கப்படவில்லை யென்றறிக. 12½.

**நிரூஹ-அநுவாஸன வஸ்திகள் நன்கு நிறைவேறியதன் பொதுக் குறிகள்:**—மனக்கவலை யொழிந்து களிப்பு அதிகரித்தல், சரீரம் ஸ்நிக்த்தமாதல், வியாதிகள் நீங்கிப்போதல் என்னும் இவை ஆஸ்த்தாபந வஸ்தியும் அநுவாஸனவஸ்தியும் நன்கு நிறைவேறியதற்கு முக்கியமான பொதுக்குறிகளாம். வஸ்தியைப் பிரயோகிப்பதில் நன்கு

அனுபவம் பெற்ற வைத்தியர் இவ்வாறு அதை நிறைவேற்றவேண்டும். ஒரு முறை பிரயோகித்த வஸ்தியினால் பயனில்லாவிட்டால் இரண்டு முறையோ, மூன்று முறையோ அல்லது நான்கு முறையோ உசிதப்படி அதைப் பிரயோகிக்கலாம். 13—14½.

**வாத-பித்த-கபரோகங்களில் நிரூஹவஸ்தியின் கிரமம்:**—வாத ரோகங்களில் ஒரு அநுவாஸனவஸ்தியையும் ஒரு நிரூஹவஸ்தியையும் பிரயோகிக்கலாம். பித்தவியாதிகளில் பாலையும் கலந்து இரண்டு நிரூஹவஸ்திகளை யுபயோகிக்கவேண்டும். கபரோகங்களில் துவர்ப்பும் காரமும் ரூக்ஷமுமாயுள்ள வஸ்துக்களைக்கொண்டு அவை இளஞ்சூடாயிருக்கையில் மூன்று முறை வஸ்தியைக் கொடுக்கவேண்டும். வாத-பித்த-கபங்களென்னும் மூன்று தோஷங்களும் கோளாறடைந்து ஸம்பவிக்கும் வியாதிகளில் பால், யூஷம், மாம்ஸரஸம் இவற்றில் ஏதேனுமொன்றை நோயாளிக்கு முறையே பத்தியமாகக் கொடுக்கவேண்டும். நிரூஹவஸ்தியைச் செய்து முடித்ததும் பிறகு அநுவாஸன வஸ்தியையும் பிரயோகிப்பது அவசியம். 15—16½.

**மிருது வஸ்திக்குரியவர்:**—ஸுகுமாரமான தேகமுள்ளவருக்கும், கிழவர்களுக்கும், பாலர்களுக்கும் மிருதுவஸ்தியையே[1] பிரயோகிக்கவேண்டும்; தீக்ஷ்ணவஸ்தியைப் பிரயோகித்தால் அவர்களுடைய தேகபலத்தையும் ஆயுளையும் அது அழிக்கக்கூடியதாகும். 17½.

**உத்க்லேசாதி வஸ்திகளைப்பிரயோகிக்கும் நியமம்:**—முதலில் உத்க்லேசவஸ்தியையும்,[2] இடையில் தோஷஹரவஸ்தியையும்,[3] இறுதியில் சமனவஸ்தியையும்[4] பிரயோகிக்கவேண்டும். உத்க்லேசந வஸ்தி முதலியவற்றில் உபயோகிக்கக்கூடிய பதார்த்தம் முதலியவை பின்வருமாறு. 18½.

---

1. மிருது வீர்யமுள்ள வஸ்துக்களால் சொற்ப அளவில் பிரயோகிக்கப்படும் வஸ்தி மிருதுவஸ்தி யெனப்படும்.

2. உத்க்லேசந வஸ்தி.—குடல் முதலியவற்றில் சேர்ந்துள்ள தோஷங்களைக் கிளப்பிவிடக்கூடிய வஸ்தி.

3. தோஷஹரவஸ்தி.—தோஷங்களை வெளிப்படுத்தும் வஸ்தி.

4. சமனவஸ்தி.—தோஷங்களைக் குறைத்து (வெளிப்படுத்தாமல்) கோளாறடைந்த தாது முதலியவற்றை இயற்கை நிலைமைக்குக் கொண்டுவரும் வஸ்தி.

உத்க்லேசநாதி வஸ்திகளுக்குரிய சரக்குகள்:—(1) ஆமணக்கு விதை, அதிமதுரம், திப்பிலி, இந்துப்பு, கொட்டைக் கரந்தையின் தோல், வசம்பு இவ்வஸ்துக்கள் உத்க்லேசநமென்னும் தோஷங்களைக் கலக்கிவிடுங் குணமுடையன. (2) சதகுப்பி, அதிமதுரம், பில்வப் பழம், வேட்பாலையின் கனி இவற்றைக் காடியுடனாவது பசு மூத்திரத்தோடாவது கலந்து வஸ்தி செய்தால் தோஷங்களை ஹரிக்கும். (3) ஞாழல், அதிமதுரம், கோரைக்கிழங்கு, இரஸாஞ்ஜனம் இவற்றைப் பாலுடன் கலந்து வஸ்தி செய்ய சமனமுண்டாகும். 19—21½.

சோதநவஸ்திக்குரிய சரக்குகள்:—மலங்களைக் கழியச்செய்யுங் குணமுடைய பதார்த்தங்களைக் கொண்டு 1 பக்குவம் செய்த க்வாதங்களையும், அதே வஸ்துக்களாலான கல்கங்களையும், இந்துப்பையும் ஒன்றாகச் சேர்த்து, அப்பால் ஒன்றுசேர்த்துக் கிளறி, அப்பால் அதை வஸ்தியாக உபயோகிக்கலாம்; இது சோதநவஸ்தி யென்று சொல்லப்படும். 22½.

லேகநவஸ்திக்குரிய சரக்குகள்:—த்ரிபலாக்வாதம், பசுவின் மூத்திரம், தேன், யவக்ஷாரம் இவற்றையும், ஊஷகாதி கணத்தில் 2 அடங்கிய வஸ்துக்களின் கல்கத்தையும் சேர்த்து வஸ்திகள் பிரயோகிக்கலாம்; இது லேகநவஸ்தி எனப்படும். 23½.

ப்ருஹ்மண வஸ்திக்குரிய சரக்குகள்:—ப்ருஹ்மண குணமுள்ள பதார்த்தங்களால் ஆகிய க்வாதத்தையும், இனிப்பான வஸ்துக்களின் கல்கத்தையும், நெய், மாம்ஸரஸம் இவற்றையும் சேர்த்து வஸ்திகள் கொடுக்கலாம்; இவ்வகையாகச் செய்யப்படுவது ப்ருஹ்மணவஸ்தி எனப்படும். 24½.

பிச்சிலவஸ்திக்குரிய சரக்குகள்:—இலந்தம்பழம், நரிநாவல், நறுவிலி, முள்ளிலவம்பட்டை, காஞ்சொறி, சுக்கு இவற்றைப் பசும்

1. சிவதை வேர், ஆமணக்கு, நேபாளம் முதலியவை சோதந குணமுள்ள (மலங்களைக் கழியச் செய்யும்) சரக்குகளாகும்.

2. ஊஷகாதி கணம்—உவர்மண்ணுப்பு, (ஊஷகம்—மிளகு என்று சிலர்,) மயில்துத்தம், பெருங்காயம், அன்னபேதி, புஷ்பகாஸீஸமென்னும் மற்றொருவித அன்னபேதி, சிலாஜது இவற்றின் ஸமுதாயத்திற்குப் பெயர்.

பாலில் பக்குவம் செய்து, தேன் சேர்த்து கலந்து வஸ்தி செய்யலாம். இதற்கு பிச்சிலவஸ்தி [1] என்று பெயர். வெள்ளாடு, செம்மறியாடு, மான் இவற்றின் உதிரத்தையும் மேற்கூறிய வஸ்திச்சரக்குடன் கூட்டி உபயோகிக்கவேண்டும். பிச்சிலவஸ்தியில் பன்னிரண்டு பலம் அளவில் ஔஷதங்களை உட்செலுத்தலாம். 25—26½.

**மதுதைலக வஸ்தியின் சரக்கு முதலியன:**—முதலில் நான்கு பலம் தேனில் கால் பலம் இந்துப்பைச் சேர்த்து இரண்டும் நன்கு கலந்துவிடுமாறு குழப்பவும்; பிறகு நான்கு பலம் தைலத்தைச் சேர்த்து கலக்கவும்; இதில் பிறகு கூறப்படும் சதகுப்பி யென்னும் கல்கத் திரவியத்தை நான்கு பலம் சேர்த்து, அதுவும் தைலத்துடன் ஒன்றாகக் கூடிய பிறகு, அடியில் கூறப்படும் ஆமணக்கன் வேரின் கஷாயத்தையும் எட்டு பலம் இதில் ஊற்றவும். இவ்வாறு இவற்றை ஒன்றாகக் கூட்டி நிபுணரான வைத்தியர் இதைக்கொண்டு வஸ்தி செய்விக்கலாம். இந்த நிரூஹவஸ்திக்கு மேற்கூறிய அளவில் வஸ்துக்களைச் சேர்ப்பதென்பது பொது விதியாகும். இதில் விசேஷ விதிகளும் சில உண்டு:—வாத ரோகங்களுக்கான வஸ்தியில் தேன் நான்கு பலமும் ஸ்நேஹம் ஆறு பலமும் சேர்க்கவேண்டும். பித்தத்திற்குத் தேன் நான்கு பலமும் ஸ்நேஹம் இரண்டு பலமும் சேர்க்க வேண்டும். கபத்திற்கு ஆறுபலம் தேனும் நான்கு பலம் ஸ்நேஹமும் கலக்கவேண்டும். அல்லது பொதுவாகக் கூறுமிடத்து—தேன் தைலம் இரண்டும் எவ்வெட்டு பலம், அதற்கு ஸம அளவு ஆமணக்கன் வேரின் கஷாயம், சதகுப்பியின் கல்கம் அரைப் பலம், இந்துப்பு அரைப் பலம் இவ்வாறு சேர்த்தும் இவ்வௌஷதத்தைப் பக்குவம் செய்யலாம். இது மதுதைலகவஸ்தி என்று கூறப்படும். [2] இவ்வௌஷதத்தை வஸ்தி செய்வதற்குமுன் துடுப்பால் நன்றாகக் கலக்கி விட்டு உபயோகிக்கவேண்டும். இவ்வித வஸ்திப் பிரயோகத்தினால் மேஹரோகம், குன்மம், கிருமிரோகம், ப்லீஹவ்ருத்தி, குடலில்

1. பிச்சிலவஸ்தி—சரீரதாதுக்களுக்குக் களிப்புத் தன்மையை யுண்டாக்கும் வஸ்தி; இதை பிச்சாவஸ்தி யென்றும் கூறுவர்.

2. மதுதைலகவஸ்தி—தேன், தைலம் இரண்டும் இவ்வஸ்தியில் பிரதானமாகையால் இது மதுதைலகவஸ்தி யெனப்படுகிறது.

மலம் மேன்மேலும் சேர்ந்துவிடுதல், உதாவர்த்தம் இவை நிவ்ருத்தியாகும்; சரீரபலம், காந்தி, இவையும் விருத்தியாகும்; வ்ருஷ்யம், தீபநம், ப்ருஹ்மணம் என்கிற குணங்களும் இதற்கு உண்டு. 27—33.

**தீபநவஸ்தியும் அதன் சரக்குகளும்:**—தேன், நெய், பால், எண்ணெய் ஒவ்வொன்றும் இரண்டு பலம்; சிவக்கரந்தையும் இந்துப்பும் தனித்தனி கால் பலமெடை; இவற்றாலான கஷாயத்தினால் பிரயோகிக்கப்படும் வஸ்தி தீபநவஸ்தி எனப்படும்.[1] 34.

**யுக்தரத வஸ்தியும் அதன் சரக்குகளும்:**—ஆமணக்கன் வேரின் கஷாயம், தேன், எண்ணெய், இந்துப்பு, வசம்பு, திப்பிலி, மருக்காரை இவற்றைக் கூட்டி வஸ்தியாகப் பிரயோகிக்கலாம்; இதற்கு யுக்தரத வஸ்தி எனப் பெயர்.[2] 35.

**ஸித்தவஸ்தியும் அதன் சரக்குகளும்:**—பஞ்சமூலக்வாதம், தைலம், திப்பிலி, தேன், இந்துப்பு, அதிமதுரம் இவற்றை ஒன்றாகக் கூட்டி வஸ்தி செய்யலாம். இது ஸித்தவஸ்தி என்று சொல்லப்படும்.[3] 36.

**நிருஹத்திற்குப் பிறகு பத்தியக் கிரமம்:**—நிருஹவஸ்தி செய்துகொண்ட பிறகு உஷ்ண ஜலத்தினாலேயே ஸ்நானம் செய்யவேண்டும். பகலில் நித்திரை செய்தலையும், அஜீர்ணமுண்டாகக்கூடிய உணவுகளையும் விலக்கவேண்டும். மற்ற பத்திய விதிகளையெல்லாம் அநுவாஸன வஸ்தியிற் கூறப்பட்ட விதமாகச் செய்யவேண்டும். 37.

---

1. தீபநவஸ்தி—அக்னிமாந்தியத்தைப் போக்கி ஜாடராக்னியை விருத்தி செய்யக் கூடிய வஸ்தி.

2. யுக்தரதவஸ்தி யென்பது ஒரு பொருளைக்கொண்டு ஏற்பட்டதல்ல.

3. ஸித்தவஸ்தி—இந்த வஸ்தியைப் பிரயோகித்து வருவதால் ரோகங்கள் நிவ்ருத்தியாவதும், தேகபலம் ஸ்திரப்படுவதும் கைகண்ட விஷயமென்றெண்ணி இப்பெயர் கொடுக்கப்பட்டது.

# ஏழாவது அத்தியாயம்.

## உத்தரவஸ்தி விதி.

**உத்தரவஸ்தியில் நேத்திர அளவு:**—இனி உத்தரவஸ்தி யென்னும் விஷயம் கூறப்படுகிறது:—இந்த வஸ்தி செய்வதற்கான கருவியில் நேத்திரம்[1] பன்னிரண்டு அங்குலம் நீளமாகவும், இடையில் ஒரு கட்டுடன் கூடியதாகவும், முல்லை மொட்டுபோன்ற முனையுடையதாகவும், ஒரு கடுகு நுழையக்கூடிய த்வாரமுள்ளதாகவும் அமைக்கப்படவேண்டும். 1½.

**உத்தரவஸ்தியில் ஔஷதம் பிரயோகிக்க போதுவிதி.**—இருபத்தைந்துக்குக் குறைந்த வயதினருக்கு ஸ்நேஹத்தை இரண்டு கர்ஷமளவாகவும், அதற்கு மேற்பட்ட வயதினருக்கு ஒரு பல மளவாகவும் உத்தரவஸ்தியில் உட்செலுத்தலாமென்பது சாஸ்திரஞ்ஞரின் கொள்கை. 2½.

**உத்தர வஸ்தியைப் பிரயோகிக்கும் முறை.**—இருபத்தைந்து வருஷத்திற்குக் குறைந்த வயதுள்ளவருக்கு இரண்டு கர்ஷப்பிரமாணம் ஸ்நேஹத்தையும், அதற்கு மேற்பட்ட வயதுள்ளவருக்கு ஒரு பலம் ஸ்நேஹத்தையும் உத்தரவஸ்தியில் பிரயோகிக்கலாமென்பது சாஸ்திரமறிந்த வைத்தியர்களின் கொள்கை. நிருஹவஸ்தியினால் குடல் முதலியவற்றைச் சுத்தம் செய்த பிறகு, ஸ்நானம் போஜனம் இவற்றால் தகுந்தவாறு திருப்தியடைந்த பிணியாளியை முழங்காலளவு உயரமுள்ள ஆஸனத்தில் உட்காரச்செய்து, ஏற்றதோர் சலாகையை யெடுத்து, அதில் எண்ணெய் முதலியவற்றைத் தடவி, ஆண்குறியினுள் மெதுவாக நுழைத்து, அந்த த்வாரத்தைச் சுத்தப்செய்து கொண்டு, அப்பால் வஸ்தியின் நேத்திரத்தில் நெய்யைத் தடவி, மூத்திரமார்க்கத்தினுள் மெள்ள மெள்ள ஆறு அங்குலமளவு பிரவேசிக்கச் செய்து, உடனே வஸ்தியை அழுத்திவிட்டு, பிறகு மெதுவாக நேத்திரத்தை வெளியில் இழுக்கலாம். பிறகு உட்செலுத்திய ஸ்நேஹம் வெளிவந்தவிட்டால், அநுவாஸனவஸ்திக்குப் பிறகு செய்ய வேண்டுமென்று விதிக்கப்பட்டுள்ள உபசாரங்களை இதற்கும் நிறைவேற்றவேண்டும். 3—5½.

1. நேத்திரம்—இதைப்பற்றி 263-வது பக்கம் பார்க்க.

**ஸ்த்ரீகளுக்கும் சிறுவர்களுக்கும் உத்தரவஸ்தியின் பிரமாணம் முதலியது:**—ஸ்த்ரீகளுடைய கர்ப்பாசயத்தைச் சுத்தி செய்வதற்காகப் பிரயோகிக்கப்படும் வஸ்தியின் நேத்திரம் கனத்தில் சுண்டுவிரல் அளவாகவும், நீளத்தில் பத்து அங்குலமாகவும், பயறு நுழையக்கூடிய த்வாரமுள்ளதாகவும் அமைக்கப்படவேண்டும்; அதை யோனியில் நான்கு அங்குலமளவு பிரவேசிக்கச் செய்யலாம்; மூத்திர மார்க்கத்தில் உபயோகிக்கவேண்டிய நேத்திரம் புருஷர்களுக்கேற்ற நேத்திரம் போலவே மெல்லிதா யிருக்கவேண்டியதுடன் இரண்டு அங்குலமளவே உட்செலுத்தப்படவேண்டும். பாலர்களுக்கு மூத்திரக்ருச்சிரம் முதலிய சில வியாதிகளில் மட்டும் உத்தரவஸ்தி செய்யவேண்டிவரும்; அவர்களுடைய மூத்திரமார்க்கத்தில் மெல்லிய நேத்திரத்தை ஒரு அங்குலம் நீளம் உட்செலுத்தலாம்; சிறுவர்களுடைய மூத்திரமார்க்கத்தில் நேத்திரத்தை ஜாக்கிரதையாய் கை நடுங்காமல் மெதுவாகப் பிரயோகிக்கவேண்டும். ஸ்த்ரீகளுடைய கர்ப்பாசய த்வாரத்தில் ஸ்நேஹங்களை இரண்டு பலம் அளவிலும், மூத்திரமார்க்கத்தில் ஒரு பலம் அளவிலும், பாலர்களுக்கானால் இரண்டு கர்ஷப் பிரமாணத்திலும் பிரயோகிக்கவேண்டும். 6—9.

**ஸ்த்ரீகளுக்கு உத்தரவஸ்திசெய்யு முறை:**—ஸ்த்ரீகளை முழங்கால்கள் மேலெழுந்து நிற்குமாறு கால்களை மடித்துக்கொண்டு மல்லாந்துப் படுக்கச்செய்து, அப்பால் அவர்களுக்கு உத்தர வஸ்தியைப் பிரயோகிக்கவேண்டும். முதலில் பிரயோகித்த ஒளஷதம் முதலியது வெளிவராமற் போனால் மறுபடியும் சோதனகுணமுள்ள[1] வஸ்துக்களால் வஸ்தியைப் பிரயோகிப்பது நலம்; அல்லது சோதனத் திரவ்யங்களை நூல்களால் சுற்றிச் செய்யப்பட்ட பலவர்த்தியையாவது ஸ்நேஹங்களில் தோய்த்து யோனிமார்க்கத்தில் திடமாய் நிற்குமாறு சிறிது நேரம் அடைத்திருக்கலாம். மூத்திரப்பை முதலியவற்றில் எரித்தலுண்டானால் அப்பொழுது பாலுள்ள விருக்ஷங்களின் பட்டைகளைக் கஷாயமிட்டு ஆறிய பிறகு அதைக்கொண்டாவது, பாலினாலாவது உடனே உத்தரவஸ்தியைக் கொடுப்பது அவசியமாம். 10—12½.

**உத்தரவஸ்திக்கு ஏற்ற ரோகிகளும் தகாதவர்களும்:**—புருடர்களுக்கு சுக்ல ஸம்பந்தமான வியாதிகளையும், ஸ்த்ரீகளுக்கு மாத

1. சோதனகுணம்—இதுவே தேகஸம்சோதனம் எனப்படும்; இதைப்பற்றி 19-வது பக்கம் பார்க்க.

விடாய் ஸம்பந்தமான ரோகங்களையும் பரிஹரிப்பதற்கு உத்தரவஸ்தி ஏற்ற சிகித்ஸையாகும்; ஆனால் பிரமேஹத்தினால் வருந்துபவருக்கு எப்பொழுதும் உத்தரவஸ்தியைப் பிரயோகிப்பது உசிதமல்ல. 13½.

**உத்தரவஸ்தி நன்கு நிறைவேறியதற்கும் நிறைவேறாததற்கும் குறிகள்:**—அநுவாஸனம் நன்கு நிறைவேறியதாலும் முறைதவறி செய்யப்படுவதாலும் ஏற்படும் குணங்களும் தீமைகளும் முறையே உத்தரவஸ்தி நன்கு நிறைவேறியதற்கும் நிறைவேறாததற்கும் ஸம்பவிக்கக்கூடிய குணாகுணங்களாகும். மேலும் உத்தரவஸ்தியினாலுண்டாகும் தீமைகளை ஸ்நேஹவஸ்தியைப் பிரயோகித்துச் சமனம் செய்ய வேண்டும். 14½.

**பலவர்த்தி:**—ரேசன குணமுள்ள ஔஷதச் சரக்குகளால் பிணியாளியின் பெருவிரலின் அளவுள்ளதாகச் செய்யப்பட்டு குதத்தினுள் வைத்து விரேசனம் செய்விப்பதற்கான நீண்ட குளிகை 'பலவர்த்தி' எனப்படும். இதை நெய்யால் ஸ்நிக்த்தமாகச் செய்து குதத்தில் பிரயோகிக்கவேண்டும். 15½.

---

# எட்டாவது அத்தியாயம்.

---

## நஸ்யவிதி.

**நஸ்யமும் அதன் இரு பிரிவுகளும்:**—நாசியின் வழியாகச் செய்யப்படும் ஔஷதப் பிரயோகம் 'நஸ்யம்' எனப்படுகிறது ; அதற்கே 'நாவநம்' என்றும் பெயர். ரேசனம் ஸ்நேஹனம் என்று நஸ்யம் இரு வகைப்படும் ; தோஷங்களை வெளிப்படுத்தி தாதுக்களை இளைக்கச் செய்வதற்கான சிகித்ஸை ரேசனம் என்றும், தாதுக்களைப் போஷிக்கச் செய்வது ஸ்நேஹனம் என்றும் கருதப்படும். இவற்றை முறையே கர்ஷண நஸ்யம், ப்ருஹ்மண நஸ்யம் என்றும் கூறுவர். 1, 2.

**நஸ்யத்திற்கேற்ற காலமும் தகாத காலமும்.**—சிலேஷ்மக் கோளாறுலுண்டாகும் வியாதிகளில் காலைவேளையிலும், பித்த வியாதிகளில் நடுப்பகலிலும், வாதரோகங்களில் மாலைப்பொழுதிலும் நஸ்யம் பிரயோகிக்கலாம் ; இவ்வாறு பகற்பொழுதிலேயே நஸ்ய முப் யோகிக்கலாம் ; ஆனால் வியாதி உக்கிரமாயிருந்தால் இரவிலும் பிர

யோகிக்கலாம். போஜனம் செய்தவுடனே நஸ்யகர்மம் செய்யக்கூடாது; மேலும் மாரிகாலத்திலும், இலங்கனம் அல்லது விரேசனம் முதலிய கர்ஷண சிகித்ஸைகள் செய்திருக்கும்போதும் நஸ்யம் பிரயோகிக்கக் கூடாது. 3, 3½.

**நஸ்யத்திற்குத் தகாதவர்கள்:**—புதிதாக பிரதிச்யாயத்தினால்[1] பீடிக்கப்படுபவர், கர்ப்பிணிகள், கிருத்ரிம விஷத்தின் ஸம்பந்தத்தினால் துன்பப்படுபவர், அஜீர்ண ரோகிகள், வஸ்தியை அப்பொழுதே பிரயோகித்துக்கொண்டவர், ஸ்நேஹங்களையாவது ஜலத்தையாவது, ஆஸவம் முதலிய மத்யவகைகளையாவது உட்கொண்டவர்கள், அதிக சினங்கொண்டவர், மனத்துயரமுள்ளவர், நாவறட்சியுள்ளவர், கிழவர்கள், குழந்தைகள், மலஜலாதிகளை வெளிவிடாமல் அடக்கிக்கொண்டிருப்பவர், ஸ்நானம் செய்தவர், ஸ்நானம் செய்யப்போகிறவர்கள் இவர் யாவரும் நஸ்ய சிகித்ஸைக்கு உற்றவராகார். 4—5½.

**நஸ்யத்திற்கு ஏற்ற வயது:**—எட்டு வயதான சிறுவர்களுக்கும், அதற்கு மேற்பட்ட வயதினருக்கும் நஸ்யம் பிரயோகிக்கலாம்; ஆனால் எண்பது அல்லது அதற்கு மேற்பட்ட வயதினருக்கு நஸ்ய சிகித்ஸை நன்மை செய்யாது. 6½.

**விரேசன நஸ்யத்திற்கான ஔஷதங்கள்:**—மிகவும் தீக்ஷ்ண வீர்யமுள்ள தைலங்களைக்கொண்டாவது, தீக்ஷ்ணவீர்யமுள்ள சரக்குகளால் பக்குவம் செய்யப்பட்ட ஸ்நேஹங்கள், க்வாதங்கள், ஸ்வரஸங்கள் இவற்றாலாவது விரேசன நஸ்யத்தைப் பிரயோகிக்கலாம். 7½.

**விரேசன நஸ்யத்தின் மாத்திரைகள்:**—நாசியின் த்வாரங்களில் விரேசன நஸ்யத்திற்கான ஔஷதத்தில் எட்டுத் துளிகளை விட்டால் உத்தம மாத்திரை யென்றும், ஆறு துளிகளை விட்டால் மத்யம மாத்திரை யென்றும், நான்கு துளிகள் விட்டால் ஹீனமாத்திரை யென்றும் கூறப்படும். 8½.

**நஸ்யௌஷதத்திற்கான சரக்குகளின் போது அளவுகள்:**—நஸ்யத்திற்காகப் பக்குவம் செய்யப்படும் ஔஷதங்களில் தீக்ஷ்ண வீர்யமுள்ள ஔஷதச்சரக்குகளை ஒரு சாணப் பிரமாணமாகவும், காயத்தை ஒரு யவப்பிரமாணமாகவும், இந்துப்பை ஒரு மாஷ அளவாக

1. பிரதிச்யாயம்—74-வது பக்கம் பார்க்க.

வும் சேர்க்கவேண்டும்; மேலும் திரவப்பொருளான பாலே எட்டு சாண மும், ஜலத்தை மூன்று கர்ஷமும், மதுர ரஸமுள்ள வஸ்துக்களை ஒரு கர்ஷ மெடையாகவும் சேர்க்கலாம். 9—10½.

**விரேசனநஸ்யம் இரண்டு விதம்:**—சிரோவிரேசன நஸ்யமானது[1] 'அவபீடம்', 'ப்ரதமநம்' என்று இரு வகைப்படும்; இந்த நஸ்யங்களை அததற்கேற்ற பிணியாளிகளையறிந்து உபயோகிக்கவேண்டும். (1) கல்கமாகச் செய்த ஔஷதச் சரக்குகளை நன்றாகப் பிழிந்து வரும் சாற்றை அவ்வாறே நாசியினுள் செலுத்துவது 'அவபீட நஸ்யம்'[2] எனப்படும்; அவ்வாறு சாறு பிழிவதற்கான ஓஷதி தீக்ஷ்ணகுணமுள்ளதாயிருக்கவேண்டும். (2) அடியில் ஆறு அங்குலம் நீளமுள்ளதாகவும், முனையில் இரண்டு கிளையாகப் பிரிந்து இரண்டு முகங்களுடையதாகவும் செய்யப்பட்ட ஒரு குழாயினுள் தீக்ஷ்ணகுணமுள்ள ஔஷதச் சரக்குகளாலான சூர்ணத்தை ஒரு கோலப்பிரமாணம் சேர்த்து,குழாயின் இரண்டு முனையுள்ள பாகங்களைப் பிணியாளியினுடைய நாசியின் இரண்டு த்வாரங்களிலும் சிறிது செலுத்தி, அதன் அடிப்புறத்தை வைத்தியன் தனது வாயினால் ஊதி, அக்குழாயினுள்ளடங்கிய சூர்ணத்தை ரோகியின் மூக்குக்குள் செலுத்தவேண்டும்; இது 'ப்ரதமந நஸ்யம்'[3] ஆகும். 11—13½.

**விரேசன நஸ்யத்திற்குரிய ரோகங்கள்:**—தோள்களுக்கு மேலுள்ள அவயவங்களைப்பற்றிய வியாதிகள், கபத்தின் கோளாறால் ஸம்பவிக்கும் ரோகங்கள், தொண்டைக்கம்மல், அரோசகம், பிரதிச்யாயம், தலைவலி, பீநஸம், சோகை, அபஸ்மாரம், குஷ்டம் இந்த வியாதிகளில் விரேசன நஸ்யம் தகுந்ததாம். 14,15.

---

1. விரேசன நஸ்யத்தினால் சிரஸ்ஸிலும் அதற்கு ஸமீபத்திலுமுள்ள தோஷங்கள் வெளிவருவதால் அது 'சிரோவிரேசனம்' என்றும் சொல்லப்படும்.

2. அவபீடம்—பச்சிலை முதலியவற்றின் சாற்றைப் பிழிந்து இந்த நஸ்யம் செய்யப்படுவதால் இது 'அவபீடம்' எனப்படுகிறது.

3. ப்ரதமநம்—வாயால் ஊதி ஔஷதத்தை உட்செலுத்துவதால் இது 'ப்ரதமநம்' என்று சொல்லப்படுகிறது.

**பாலர் முதலியவருக்கேற்ற நஸ்யம்:**—பயந்தோர், ஸ்திரீகள், சரீரமெலிவுற்றவர்கள், பாலர்கள் இவர்களுக்கு நஸ்யம் செய்யவேண்டியிருந்தால் ஔஷதத்தை ஏதேனும் ஸ்நேஹத்துடன் கலந்துபயோகிக்கவேண்டும்; என்றால் ப்ருஹ்மண நஸ்யம் செய்யவேண்டும். 15½.

**அவபீட நஸ்யத்திற்கேற்ற வியாதிகள்:**—தொண்டையைப் பற்றிய வியாதிகள், கிருமி ரோகங்கள், ஸந்நிபாதம், அதிக நித்திரை, விஷமஜ்வரம், மனோ வியாதிகள் இவற்றில் அவபீட நஸ்யம் ஏற்றதாகும். 16½.

**ப்ரதமந நஸ்யத்திற்கேற்ற பிணிகள்:**—இவ்வௌஷதம் மற்ற நஸ்யங்களைப் பார்க்கிலும் அதிக தீக்ஷ்ண வீர்யமுள்ளதாகையால் மிகவும் உக்கிரமான வியாதிகளிலும், மூர்ச்சை யடைந்திருக்கையிலும், தைர்யசாலியான வைத்தியர்களால் சூர்ணத்தைக்கொண்டு ப்ரதமந நஸ்யம் பிரயோகிக்கத் தகுந்தது. 17½.

**சில வாதரோகங்களுக்கேற்ற நஸ்யம்:**—சுக்கு, வெல்லம், திப்பிலி, இந்துப்பு, இவற்றை ஜலம் விட்டு அரைத்து, இரஸம் பிழிந்து நஸ்யமிட நேத்திர வியாதிகள், காது நோய்கள், நாசியைப்பற்றிய கோளாறுகள், சிரஸ்ஸைப் பற்றிய ரோகங்கள், முகவாய்க்கட்டைப் பிடிப்பு, மந்யாஸ்தம்பம், களக்கிரஹம்,[1] கைகளிலும் தேகத்தின் பார்சங்களிலும் ஸம்பவிக்கும் பிணிகள் இவை சாந்தமாகும். 18, 19.

**மனதைப்பற்றிய ரோகங்களுக்கேற்ற நஸ்யம்:**—இலுப்பைப் பூவின் சாறு, திப்பிலி, வசம்பு, மிளகு, இந்துப்பு இவற்றை உஷ்ண ஜலம் விட்டு அரைத்து நஸ்யம் செய்ய மூர்ச்சை முதலியவை நிவ்ருத்தியாய், புத்திக்குத் தெளிவு உண்டாகும்; அபஸ்மாரம், உன்மாதம், ஸந்நிபாதம், அபதந்திரம் இவையும் நீங்கும். 20½.

**சோம்பலைப் போக்கும் நஸ்யம்:**—இந்துப்பு, வெள்ளைமிளகு, கடுகு, கோஷ்டம் இவற்றைச் செம்மறியாட்டின் மூத்திரத்தினால் அட்ட சாறு பிழிந்து நஸ்யமிட சோம்பல் நிவ்ருத்தியாகும். 21½.

**ப்ரதமந நஸ்யௌஷதம்:**—ரோஹித மென்கிற செங்கல்மீனுடைய பித்தத்தில் பாவனைசெய்த இந்துப்பு, வசம்பு, மிளகு, திப்பிலி,

---

1. மந்யாஸ்தம்பம் முதலியவற்றைப்பற்றி பூர்வகண்டத்தில் ஏழாவது அத்தியாயத்தில் விவரம் பார்க்க.

சக்கு, தக்கோலம், வெள்ளுள்ளி, குங்குலியம், சிறு தேக்கு இவற்றைச் சூர்ணம் செய்து, ப்ரதமந நஸ்யமாக உபயோகிக்கலாம். 22, 23.

**இரண்டுவித ப்ருஹ்மண நஸ்யம்:**—பிறகு ப்ருஹ்மண நஸ்ய முறை கூறப்படுகிறது:—ப்ருஹ்மணமென்னும் ஸ்நேஹன நஸ்யமானது 'மர்சம்' 'ப்ரதிமர்சம்' என்று இருவகைப்படும். 24.

**மர்ச நஸ்யத்தின் மாத்திரைகள்:**—எட்டு சாணங்கொண்ட அளவில் நஸ்யௌஷதம் உபயோகிக்கப்படுமானால் அது மர்சநஸ்யத்தின் உத்தம மாத்திரையாகும். இதற்கே தர்ப்பண மாத்திரை யென்றும் பெயர். நான்கு சாணமளவில் நஸ்யௌஷதம் பிரயோகிக்கப்படுமானால் அது மர்சத்தின் மத்யமமாத்திரையாகும். ஒரு சாணப்பிரமாணமுபயோகிக்கப்படுமானால் அது ஹீனமாத்திரையாகும். அந்தந்த ரோகியினுடைய சரீரத்தின் தோஷக்கூறுபாடுகளையும் பலா பலங்களையும் அறிந்து இம் மூன்றுவித அளவுகளில் ஏதேனும் ஒன்றைபனுஸரித்து நாசியின் ஒவ்வொரு த்வாரத்திலும் அவ்வளவு ஔஷதத்தையும் இரண்டு மூன்று வேளை பிரயோகிப்பது நலம். 25, 26.

**மர்சம் செய்யவேண்டிய நாட்களின் முறை:**—ஒன்று விட்டு ஒரு நாளாவது, இரண்டு நாட்களுக்கு ஒரு முறையாவது, மூன்று நாட்களுக்கு ஒரு முறையாவது, நான்கு நாட்களுக்கு ஒரு தடவையாவது, ஐந்து அல்லது ஏழு தினங்களுக்கு ஒரு முறையாவது மர்ச நஸ்யத்தைப் பிரயோகிக்கலாம். 27.

**மர்ச - விரேசன நஸ்யங்களால் நேரிடும் அபாயங்கள்:**—மர்ச நஸ்யத்தைப் பிரயோகிக்கையில் மற்றொரு மனிதன் பிணியாளியைப் பிடித்துக்கொண்டிருப்பது அவசியம்; ஏனெனில் உள்ளடங்கிய தோஷங்கள் மர்ச சிகித்ஸையினால் மிகவும் கிளப்பப்படுகின்றனவாதலின் இதில் ஆபத்துக்கள் அநேக விதமாய் நேரிடுவதுண்டு. இவ்விதமாகவே சிரோவிரேகமென்கிற ரேசனநஸ்யத்திலும் அபாயங்கள் ஸம்பவிக்கும். 28.

**மர்ச - விரேகங்களாலுண்டாகும் தீங்குகளுக்கு நிவாரணம்:**—மர்சநஸ்யத்தைப் பிரயோகிப்பதால் தோஷங்கள் கிளப்பிவிடப்பட்டு நேரிடும் தீங்குகளை நிவ்ருத்தி செய்வதற்காக வமனசிகித்ஸையும், விரேசனநஸ்யமும் செய்வது நலம். அவ்விதமே ரேசனநஸ்

யத்தினால் ஸம்பவிக்கும் தோஷக்ஷயத்தைக் காரணமாகக் கொண்டு உண்டாகிற ஆபத்துக்களில் நிலைமைக்கு ஏற்றவாறு ஆலோசித்து ப்ருஹ்மண நஸ்ய சிகித்ஸையைச் செய்யவேண்டும். 29.

**ப்ருஹ்மணநஸ்யத்திற்குரிய பிணிகள்:**—சிரஸ்ஸைப் பற்றிய வியாதிகள், நாசியைப்பற்றிய வியாதிகள், நேத்திரரோகங்கள், ஸூர்யாவர்த்தம்,[1] அர்த்தாவபேதம், பல் நோய், பலக்குறைவு, மந்யாஸ்தம்பம், கைகளையும் தோள்களையும் பற்றிய வியாதிகள், நாக்கு வறண்டு போதல், காதிரைத்தல், வாதவியாதி, தந்தவியாதி, அகாலத்தில் தலை நரைத்தல், தலை மயிர்களும் மீசை முதலியவைகளும் உதிர்ந்து விடுதல் இவ்வியாதிகளில் ஸ்நேஹங்களாலாவது, மதுரமான வேறு பதார்த்தங்களைக்கொண்டாவது ப்ருஹ்மணநஸ்யம் செய்யவேண்டும். 30—31½.

**ஸூர்யாவர்த்தம் முதலியவற்றில் ப்ருஹ்மணநஸ்யம்:**—குங்குமப்பூவை நெய்யிற் பொரித்து அத்துடன் ஸம அளவு சர்க்கரையும் சேர்த்து, பாலில் குழைத்து நஸ்யமிட வாதரக்தத்தினால் புருவம், கன்னம், நேத்திரம், சிரஸ், காது இவற்றைப்பற்றியுண்டாகும் ஸூர்யாவர்த்தம், ஒற்றைத்தலைவலி முதலிய நோய்கள் நிவ்ருத்தியாகும். அல்லது அணுதைலத்தினாலாவது,[2] நாராயண தைலத்தி

1. ஸூர்யாவர்த்தம்—இது முதலான வியாதிகளின் விவரத்தைப்பற்றி பூர்வகண்டத்தில் ஏழாவது அத்தியாயத்திற் பார்க்க.

2. அணுதைலம்—அநேகம் சரக்குகளைச் சேர்த்து நஸ்யமிடுவதற்கென்று பக்குவம் செய்யப்படும் ஒருவித தைலம். [சிறுபாலை அல்லது ஜீவந்தீயென்னும் கொடி, வெட்டிவேர், தேவதாரு, கோரைக் கிழங்கு, இலவங்கப்பட்டை, விளாமிச்சை, நன்னாரி, சந்தனம், மரமஞ்சளின் பட்டை, அதிமதுரம், பெருங்கோரைக்கிழங்கு, அகிற்கட்டை, த்ரிபலை, வெள்தாமரை, பில்வம், கருநெய்தல், கண்டங்கத்திரி, பெருமல்லிகை, ஆனைவணங்கி, சிறுமல்லிகை, சிறுவழுதுணை, வாய்விடங்கம், இலவங்கப்பத்திரி, சிற்றேலம், அரேணுகம், தாமரையின் தாது இச்சரக்குகளை ஸமபாகமெடுத்து, அவற்றில் நூறு மடங்கு ஜலம் சேர்த்துக் காய்ச்சி வடிக்கட்டி, இக்கஷாயத்தில் பத்திலொரு பாகம் தைலம் சேர்த்துக் காய்ச்சவேண்டும். இவ்வாறு பத்துத்தடவை இதே கஷாயத்தினால் அத்தைலத்தைக் காய்ச்சி வந்து, பத்தாவது தடவையில் அத்தைலத்திற்கு ஸமபாகம் வெள்

ஞலாவது[1], மாஷதைலத்திஞலாவது, [2], அந்தந்த ஔஷதிகளைச் சேர்த்து பக்குவம் செய்த க்ருதங்களிஞலாவது மேற்கூறிய ரோகங்களில் நஸ்யமிடலாம். 32—34.

**வாத-பித்த-கபங்களில் தனித்தனி யுபயோகிக்கக்கூடிய நஸ்யங்கள்:**—கபஸம்பந்தமான வியாதிகளிலும் மற்றத் தோஷங்களுடன் கலந்து பிரகோபமடைந்த வாததோஷத்திஞலுண்டாகும் வியாதிகளிலும் தைலத்தையும், வாததோஷத்திஞலேயே ஸம்பவிக்கும் ரோகங்களில் கொழுப்பையும், பித்த ரோகங்களில் நெய் அல்லது மஜ்ஜையையும் நஸ்யமாயுபயோகிப்பது நலம். 35.

**பார்சவ வாயு முதலிய வாத ரோகங்களுக்கேற்ற நஸ்யம்:**—உளுந்து, காஞ்சொறி, சிற்றரத்தை, சிற்றாமுட்டி, ஆமணக்கு, காவட்டம்புல், அமுக்கிருங்கிழங்கு இவற்றை ஸமபாகம் சேர்த்து க்வாதம் செய்து, அதில் சிறிது காயமும் இந்துப்பும் சேர்த்து, அந்த க்வாதத்தை யெடுத்து, இளஞ்சூடாயிருக்கையிலேயே நஸ்யமிட்டால் நடுக்கலுடன் கூடிய பார்சவ வாயு, அர்திதவாதம், மந்யாஸ்தம்பம், அபபாஹுகம் இவ்வித வாதவியாதிகள் நிவ்ருத்தியாகும். 36, 37.

**மர்ச-ப்ரதிமர்சங்களின் பேதங்கள்:**—பெரும்பாலும் மர்சநஸ்யத்திற்கான ஔஷதங்களைக்கொண்டே ப்ரதிமர்சமும் செய்யப் படும். ஆனல் இரண்டுக்கும் ஔஷதப் பிரயோகத்தின் அளவில் தான் பேதமேற்படுகின்றது. ப்ரதிமர்சத்தில் ஸ்நேஹௌஷதங்களை ஒவ்வொரு நாசித்வாரத்திலும் இரண்டிரண்டு பிந்துக்கள் விட வேண்டும். ஸ்நேஹ வஸ்துவில் ஆள்காட்டி விரலை இரண்டு கணுக்கள் மட்டும் தோய்த்து எடுக்க அவ்விரலிலிருந்து எவ்வளவு ஸ்நேஹம் விழக்கூடுமோ அது ஒரு ‘பிந்து’ எனப்படுகிறது. இவ்விதமான பிந்துக்கள் எட்டு சேர்ந்தால் ஒரு சாணப்பிரமாணமாகும். மர்சநஸ்யத்தில் ஸ்நேஹங்களை சாணப்பிரமாணமும், ப்ரதிமர்சத்தில் இரண்டு பிந்துக்களும் உபயோகிக்க வேண்டும். 38—40.

---

ளாட்டுப்பாலையும் ஊற்றி, இறுதியில் தைலம் மாத்திரம் மிகும்படியாகக் காய்ச்சி யிறக்கிவிடவேண்டும். அது அணுதைலமுறையாம்.]

1. நாராயணதைலம்—173-வது பக்கம் பார்க்க.
2. மாஷ தைலம்—175-வது பக்கம் பார்க்க.

ப்ரதிமர்சத்திற்கேற்ற ஸமயங்கள்:—ப்ரதிமர்சம் செய்வதற்கென்று பதினன்கு காலங்கள் வைத்திய சாஸ்திர வல்லோரால் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன ; அவையாவன :—(1) விடியற்காலம், (2) பற்களைச் சுத்தி செய்த பிறகு, (3) வீட்டிலிருந்து வெளியில் வேலைக்காகப் புறப்படும் நேரம், (4) வ்யாயாமம் முடிந்த பிறகு, (5) வழி நடந்த பிறகு, (6) புணர்ச்சிக்குப் பிறகு, (7) மலவிஸர்க்கத்திற்குப் பிறகு, (8) மூத்திரவிஸர்க்கத்திற்குப் பிறகு, (9) நேத்திரங்களுக்கு அஞ்ஜனம் உபயோகித்த பிறகு, (10) கபளக்ரஹம்[1] முடிந்த பிறகு, (11) போஜனம் செய்தபிறகு, (12) பகலில் நித்திரை செய்து எழுந்த பிறகு, (13) வாந்தி செய்த பிறகு, (14) மாலைநேரம் என்பவையாம். 41—42½.

ப்ரதிமர்ச மாத்திரையறியுமுபாயம் முதலியது :— மூக்கினுள் பிரயோகித்த ஸ்நேஹ வஸ்து சிறிது உறிஞ்சும்பொழுது வாயினுள் வருமானல் அப்பொழுது அதை ப்ரதிமர்சத்தின் ஒரு மாத்திரையென்று கூறலாம். மூக்கினுல் உறிஞ்சும்போது வாயில் வரும் ஸ்னெளஷதம் முதலியதை அப்படியே துப்பிவிட வேண்டும். 43, 44.

ப்ரதிமர்சத்தின் உபயோகங்கள்:—தேகம் மெலிந்தவர்களுக்கும், நாவறட்சி யுள்ளவருக்கும், பாலருக்கும், வயது சென்றவர்களுக்கும் ப்ரதிமர்சம் பிரயோகிக்கத் தக்கது. தோளுக்கு மேலுள்ள அவயவங்களில் உண்டாகும் பெரும் பான்மையான வியாதிகளுக்கும் ப்ரதிமர்சமே ஏற்ற நஸ்யமாகும் ; இதை முறைப்படி யுபயோகித்துவந்தால் நரை திரை முதலிய விகாரங்களை யுண்டாக்கும் கிழத்தனமும் சீக்கிரத்தி லுண்டாகாது ; நேத்திரம் முதலிய இந்த்ரியங்களும் பலம் பெறும். 45½.

மயிர் நரைத்தலைப் போக்கும் நஸ்யம்:—தான்றிக்காய், வேம்பு, பெருங்குமிழன், கடுக்காய், நறுவிலி, காகோலீ இவை ஒவ்வொன்றும் தைலத்தில் சேர்த்துக் காய்ச்சப்பட்டு நஸ்யமிடப் படுமானல் மயிர்கள் நரைப்பதைப் போக்கும். 46½.

நஸ்யம் செய்யு முறை:—நஸ்யத்தை நன்கு நிறைவேற்றும்

1. கபளக்ரஹம்—இதன் விவரத்தை இதே கண்டத்தில் 10-வது அத்தியாயத்திற் பார்க்க.

முறை இங்கு கூறப்படுகின்றது:-நஸ்யம் செய்வதற்கான பிரதேசம் அதிக வாயு வீசாததாகவும், புழுதி முதலியவற்றால் அழுக்கடையாததாகவும் இருக்கவேண்டும். பிணியாளியானவன் பற்களை முன்னதாய்த் துலக்கிக்கொண்டு சோதன சிகித்ஸையைச் செய்து சரீரத்தையும் நிர்மலமாக வைத்துக்கொள்ளவும்; பிறகு வைத்தியன் தூமபானத்தினால் தொண்டையைச் சுத்திசெய்து, முகத்தையும் வியர்க்கப்பண்ணி, அப் பிணியாளியை மல்லார்ந்துப் படுக்கவைத்து, தலையைப் பின்புறமாகச் சாய்க்கச்சொல்லி, கை கால்களையும் நன்றாக நீட்டிக்கொள்ளச் செய்யவும்; பிறகு வைத்தியன் நோயாளியின் கண்களை வஸ்திரத்தினால் மறைத்துக் கட்டி, மூக்கின் முனையை உயரத் தூக்கி நஸ்யத்தைப் பிரயோகிக்க வேண்டும்; இளஞ் சூடான ஔஷதத்தைப் பொன் வெள்ளி முதலியவற்றாலான சிறிது நீண்ட சிப்பியினாலாவது, முத்துச்சிப்பியினாலாவது, பஞ்சு முதலியவற்றில் தேய்த்துக்கொண்டாவது, வேறுவித யுக்தியினாலாவது ஒரு தடவையிலேயே மூக்குக்குள் தாரையாக விடவேண்டும். நஸ்யங்கள் பிரயோகிக்கப்படுகையில் தலையை அசைத்தல், கோபித்தல், பேசுதல், மூக்கை உறிஞ்சுதல், சிரித்தல் இவைகளும் கூடா; இவற்றைச் செய்தால், மூக்கில் பிரயோகித்த ஸ்நேஹம் உட்செல்லாது; அதனால் இருமல், பிரதிச்யாயம், தலைநோய், கண்ணோய் முதலியவைகளும் ஸம்பவிக்கும். தொண்டைக்கு மேற்புறத்திலும் மூக்கின் அடித்வாரத்திலுமுள்ள ச்ருங்காடகம்[1] என்கிற பாகத்தை ஔஷதம் நன்றாகப் பரிசித்து ஈரமாக்குமளவும் அதை அவ்விதமே மூக்கில் வைத்துக்கொண்டிருக்கவேண்டும்; அதை விழுங்கக் கூடாது; அவரவர்களுடைய சக்திக்கியன்றவாறு ஐந்து மாத்திராகாலமோ, ஏழு மாத்திராகாலமோ, பத்து மாத்திரா காலமோ ஔஷதத்தை நாசியினுள் வைத்துக்கொண்டிருந்து நாசி, முகம் இவற்றுள் சேர்ந்துள்ள கபம் முதலிய திரவங்களை உட்கார்ந்துகொண்டு காறித் துப்பி விடவும்; மூக்கின் வலது புறத்தைப் பிடித்துக்கொண்டு இடது மூக்கை இடது பக்கவாட்டிலும், இடது நாசியை அழுத்திக்கொண்டு

1. ச்ருங்காடகம்:—மூக்கின் உட்புறத்து த்வாரமும், காது, கண், தொண்டை இவற்றின் த்வாரங்களும் ஒன்று கூடும் இடம்; ஆகையினாலேயே நாற்சந்தியைக் குறிப்பிடுவதான ச்ருங்காடகம் என்கிற பெயர் அவ்விடத்திற்கு ஏற்படுத்தப்பட்டதென்றறிக.

வலது நாசியை வலது பக்கவாட்டிலும் நன்றாகச் சிந்தவேண்டும்; ஆனால் தனக்கு நேர் எதிரில் சிந்தக்கூடாது. நஸ்யம் நிறைவேறிய வுடனே மன வருத்தமுண்டாவதையும், இரஜோகுணம் முதலியவற் றின் எழுச்சியால் கோபம் நேரிடுவதையும் விலக்கவேண்டும்; நூறு நிமிஷங்களளவும் நித்திரையின்றி மல்லாந்து படுத்துக்கொண்டிருக்க வும். விரேசன நஸ்யம் செய்த பிறகுகூட இவ்விதம் பண்ண வேண் டியதுடன் தூமபானமாவது, கவளக்ரஹமாவது செய்வது ஹிதமாகும். 47—56.

**நஸ்யம் நன்கு ப்ரயோகித்ததற்கு மூன்று முக்கியக் குறிகளும் பிறகு செய்யவேண்டிய உபசாரங்களும்:—**முறைப்படி நஸ்யமிடப் பட்டதற்கு மூன்று முக்கியமான குறிகளை சாஸ்திரஞர் கூறுவர்; அவை—சுத்தியோகம், ஹீநயோகம், அதியோகம் என்பவையாம். (1) மனது இலகுவாயிருப்பதாக உணர்ச்சியுண்டாதல், நாசி, செவி, நேத் திரம், தொண்டை முதலிய அவயவங்களிலுள்ள த்வாரங்கள் சுத்த மாதல், நிவ்ருத்தி செய்யவேண்டிய வியாதி சாந்தமாதல், மனதும் இந்த்ரியங்களும் தெளிவடைதல் என்னும் இவை சிரஸ்ஸு சுத்தியான தன் குறிகளாம். (2) கண்டத்திற்கு மேலுள்ள அவயவங்களில் ஒரு விதமான அரிப்பு, அவ்வவயவங்களில் ஏதேனும் கசிவுகளுண்டாதல், பாரமாயிருப்பதுபோலத் தோற்றுதல், கண், மூக்கு முதலிய இந்த்ரிய த்வாரங்களிலிருந்து கபம் அதிகமாகக் கசிதல் என்பவை சிரஸ்ஸு வேண்டியவளவு சுத்தியாகாமலிருப்பதை—என்றால் ஹீநயோகத்தை— அறிவிக்கும் குறிகளாம். (3) உருகிய மூளை போன்ற பதார்த்தம் மூக்கு முதலானதிலிருந்து வெளி வருதல், வாயு விருத்தியாதல், இந் த்ரியங்கள் ப்ராந்தியடைதல், சிரஸ்ஸு சூனியமாயிருப்பதுபோலத் தோற்றுவது என்னும் இவை சிரஸ்ஸு மிதமிஞ்சி சுத்திசெய்யப்பட்ட தன் குறிகளாம். சிரஸ்ஸு நன்கு சுத்தமாகாமலிருந்தால் கபஹர மான சிகித்ஸையும், மிதமிஞ்சி சுத்தி செய்திருந்தால் வாதஹரமான சிகித்ஸையும் அனுகூலமாயிருக்கும்; நன்கு சுத்தியாயிருந்தால் க்ருத ஸம்பந்தமான ஔஷதத்தை நஸ்யமாக உபயோகிப்பது நலம். 57—61.

**நஸ்யத்தில் அதிஸ்நிக்த்தக் குறிகளும் அதன் பரிஹாரமும்:—** மிதமிஞ்சி ஸ்நேஹ நஸ்யத்தைப் ப்ரயோகிப்பதால் கபம் அதிகமாகக்

கசியும்; சிரோபாரமுண்டாகும்; இந்த்ரியங்கள் விகாரங்கொள்ளும். இவ்வித லக்ஷணங்கள் ஸம்பவித்தால் அப்பொழுது ரூக்ஷணமான நஸ்யத்தைப் பிரயோகிக்கவேண்டும்; சரீரத்திற்கு ஸ்நிக்த்தத் தன்மையுண்டாக்காத ஆஹாரங்களையும் கொடுத்து, நஸ்யத்திற்குப் பிறகு செய்யவேண்டிய இதர உபசாரங்களையும் செய்யவேண்டும். $62\frac{1}{2}$.

**பஞ்ச கர்மங்கள்:**—இதுவரையிலும் வமனம், விரேசனம், நிருஹவஸ்தி, அநுவாஸனவஸ்தி, நஸ்யம் என்று சரீரத்தைச் சுத்தி செய்வதற்கேற்ற ஐந்துவிதமான சிகித்ஸாகிரமங்கள் கூறப்பட்டன; இவ்வைந்தையும் முனீச்வரர்கள் 'பஞ்சகர்மங்கள்' என்பார்கள். $63\frac{1}{2}$.

---

## ஒன்பதாவது அத்தியாயம்.

---

### தூமபான விதி.

**ஆறுவித தூமங்கள்:**—வியாதிகளில் பிரயோகிக்கப்படும் தூமமானது சமனம், ப்ருஹ்மணம், ரேசனம், காஸஹரம், வாமனம், வ்ரணதூபனம் என்று ஆறுவிதமாகக் கூறப்பட்டிருக்கின்றது. சமனமென்னும் தூமத்திற்கு 'மத்யமதூமம்', 'ப்ராயோகிக தூமம்' என்று வேறிரண்டு பெயர்களுண்டு. அவ்விதமே ப்ருஹ்மணத்திற்கு 'ஸ்நேஹனதூமம்,' 'ம்ருதுதூமம்' என்றும் வேறு இரண்டு பெயர்கள் வழங்கப்படும். ரேசனதூமத்திற்கும் 'சோதனதூமம்,' 'தீக்ஷ்ணதூமம்' என்று வேறு பெயர்கள் உண்டு. $1—2\frac{1}{2}$.

**தூமபானத்திற்குத் தகாதவர்கள்:**—மிகவும் சோர்ந்துபோனவன், பயந்தவன், துயரமுள்ளவன், அப்பொழுதே வஸ்தி செய்துகொண்டவன், விரேகசிகித்ஸை செய்துகொண்டவன், இரவில் கண்விழித்தவன், நாவறட்சியுள்ளவன், சரீரதாபமுள்ளவன், வாய்உலர்ந்து வருந்துபவன், மஹோதரம் முதலிய உதரரோகமுள்ளவன், சிரஸ்ஸில் தாபமதிகரித்தவன், திமிரமென்னும் நேத்திரரோகமுடையவன், வாந்தி செய்பவன், வயிற்றுப்பொருமலுள்ளவன், உரக்ஷதவியாதியினால் வருந்துபவன், பிரமேஹரோகி, பாண்டுரோகி, கர்ப்பிணி, ரூக்ஷ சரீரமுள்ளவன், தேகம் மெலிந்தவன், பால்-தேன்-நெய்-ஆஸவம் முதலிய மத்திய வகைகள், அன்னம்-தயிர்-மத்ஸியம் இவற்

றை உட்கொண்டவர்கள், சிறுவர்கள், கிழவர் ஆகிய இவர்கள் தூமபானத்திற்கு உரியவராகார். 3—6.

**முறை தவறிய தூமபானத்திற்குப் பரிஹாரங்கள்:**—காலம் தவறியும் அளவு மீறியும் தூமமுட்கொள்வதால் அநேகம் தீங்குகள் ஸம்பவிப்பதுண்டு. அவ்விதமான தீங்குகளில் க்ருதபானம் செய்தல், நஸ்யமிடுதல், அஞ்ஜனமிடுதல், தர்ப்பணசிகித்ஸை[1] இவற்றை உபயோகிக்கவேண்டும்; மேலும் க்ருதம், கருப்பஞ்சாறு, திராக்ஷை, சர்க்கரை சேர்த்து செய்த பானகம், பால் இவற்றில் ஏதேனும் ஒன்றையாவது, மதுரரஸமுள்ள வேறு பதார்த்தங்களையாவது, புளிப்பான பதார்த்தங்களையாவது அக்கோளாறுகளைத் தணிப்பதற்கு உபயோகிக்கலாம். 7, 8.

**தூமபானத்திற்கேற்ற வயது:**—தூமபானம் பன்னிரண்டாவது வயது முதற்கொண்டு உபயோகிக்கக்கூடியது; எண்பது வயதுக்குப் பிறகு அதை உபயோகிக்கக்கூடாது. $8\frac{1}{2}$.

**தூமபானத்தின் பொதுவான உபயோகங்கள்:**—தூமத்தை முறை தவறாமல் பிரயோகித்தால் காஸம், ச்வாஸம், பிரதிச்யாயம், மந்யாஸ்தம்பம், ஹநுஸ்தம்பம், தலைவலி, வாதரோகங்கள், கபரோகங்கள் இவை நிவ்ருத்தியாகுமென்று பொதுவாகக் கூறலாம். தூமத்தைத் தகுந்தவாறு பிரயோகித்துவரும் புருஷனுக்கு நேத்திரம் முதலிய இந்த்ரியங்களும் மனதும் தெளிவுறும்; வாக்கும் ஸ்பஷ்டமாகும்; தலைமயிர் மீசை பற்கள் இவை திடப்படும்; முகமும் ஸுகந்தமுள்ளதாயிருக்கும். 9—$10\frac{1}{2}$.

**தூம நாடியின் உருவம்:**— தூமபானத்திற்குபயோகிக்கக்கூடிய குழாய் 'தூமநாடி' எனப்படும். அத்தூமநாடியில் மூன்று கணுக்களை ஏற்படுத்தி மூன்று பாகங்களாக அதைச் செய்யவேண்டும். அது ஒரு சுண்டுவிரல் பருமனுடையதாகவும், அதன் த்வாரம் ஒரு கடலை நுழையக்கூடியதாகவும் அமைக்கப்படவேண்டும். சமனதூமத்திற்கான தூமநாடியை ரோகியின் விரல்களைக்கொண்டு நாற்பது அங்குலம் நீளமுடையதாகச் செய்யவேண்டும்; ம்ருதுதூமத்திற்கு முப்

1. அஞ்ஜனம், தர்ப்பணம் என்பவைகளைப் பற்றி இக்கண்டத்தின் 13-வது அத்தியாத்தில் விவரம் பார்க்க.

பத்திரண்டு அங்குலம் நீளமுடையதாகவும், தீக்ஷ்ண தூமத்திற்கு இரு பத்து நான்கு அங்குலமுடையதாகவும், காஸஹரமான தூமத்திற்குப் பதினாறு அங்குலமுள்ளதாகவும், வமனதூமத்த்திற்கும் வ்ரண தூபனத்திற்கும் பத்து அங்குலம் நீளமாகவும் செய்யப்படவேண்டும். அதன் பருமன் பெருங்கடலையின் சுற்றளவுக்கு ஸமானமாகவும், அதன் த்வாரம் ஒரு கொள் நுழையக்கூடிய அளவுள்ளதாகவும் இருக்க வேண்டும். 11—14.

**தூமவர்த்தியும் அதன் உபயோகங்களும்:**—பன்னிரண்டு அங்குலம் நீளமுடைய மிகவும் வழுவழுப்புண்டதான ஓர் நாணலை யெடுத்து, தூமம் செய்வதற்கான ஔஷதச் சரக்குகளை நன்கு கல்கமாய் அரைத்து, கால்பலயெடை கல்கத்தை அந்த நாணலின்மேல் எட்டு அங்குலமளவும் தடவி, நிழலில் அதை உலர்த்தியபிறகு, அதனுள் அடங்கியுள்ள நாணலை மெதுவாகக் கழற்றிவிட்டு, அக்குழாய்போன்ற வர்த்தியை மட்டும் எடுத்துக்கொள்ளவும். பிறகு அந்த வர்த்தியை ஏதேனும் தகுந்த ஸ்நேஹத்தினால் நனைத்து, அதன் முனையை அக்னியிற் காட்டிப் பற்ற வைத்து, அதன் மற்றொரு முனையை முற்கூறிய நாடியாகும் நேத்திரத்தில் உட்செலுத்தி, அதிலிருந்து வரும் தூமத்தை வாயால் உட்கொள்ளவேண்டும்; உட்கொண்ட தூமத்தை வாயாலேயே வெளியிடவேண்டும். பிறகு நாசிகளால் உட்கொண்டு அதையும் வாயாலேயே வெளியிடவேண்டியது. 15—17½.

**தூமமுபயோகிப்பதற்கேற்ற மற்றொருவித கருவி:**—ஓர் அகன்ற அகலில் விரணங்களுக்கு தூமம் போடுவதற்கு உபயோகமான ஔஷதச் சரக்குகளைக் கல்கமாகச் செய்து வைத்து, நெருப்புத்தழல்களையும் போட்டு, அதன் மேல் நடுவில் த்வாரத்துடன் கூடிய மற்றொரு அகலை மூடவேண்டும்; பிறகு அந்த த்வாரத்தில் தூமநாடியின் ஒரு முனையை நுழைத்து, அக்குழாயினூடே வரும் புகையைக்கொண்டே வ்ரணங்களுக்குத் தூபமிடவேண்டும். 18½.

**அந்தந்த தூமத்திற்குத் தகுந்த கல்க திரவ்யங்கள்:**—சமன தூமத்திற்கு ஸ்நேஹம் கலந்த ஏலாதிகணகல்கமும் 1, ம்ருது தூமத்திற்கு

1. ஏலாதிகணம்—ஏலம், சிற்றேலம், மட்டிப்பால், வாஸனைப் புல், சோஷ்டம், ஜடாமாம்ஸி, வெட்டி வேர், காவட்டம்புல், நாகப்பூ,

ஸர்ஜரஸமும், ரேசன தூமத்திற்கு தீக்ஷ்ணகல்கமும், காஸஹர தூமத்திற்கு மிளகு, காட்டுத்திப்பிலி இவற்றால் செய்த கல்கமும், வமன தூமத்திற்கு ஸ்நாயு வென்னும் ஒருவித வன்மையான தசை [1], சர்மம் முதலியதின் கல்கமும், வ்ரணஹரமான தூபத்திற்கு வேம்பு வசம்பு முதலிய பொருட்களால் செய்த கல்கமும் தகுந்தவையாம். 19—20½.

**கிருஹங்களில் தூபம் போடுவதற்கேற்ற வஸ்துக்கள்:—** ரோகங்களை நிவ்ருத்தி செய்வதற்காக கிருஹங்களில் தூபம் போடுவதற்கேற்ற சரக்குகளாவன:—மயிலிறகு, வேப்பிலை, கண்டங் கத்திரிக்காய், மிளகு, பெருங்காயம், ஜடாமாம்ஸீ, பருத்திக்கொட்டை, ஆட்டு மயிர், பாம்புத்தோல், பூனையின் மலம், யானையின் தந்தம் இவற்றைச் சூர்ணம் செய்து, நெய்யிற் கலந்து, வீடுகளில் தூபம்போட ஸகல பாலக்கிரஹங்களும் தீரும்; பிசாசங்களையும் இராக்ஷஸர்களையும் போக்குவதற்கும் இவ்வித தூபங்கள் ஏற்றவையாம்; இதனால் ஸகல ஜ்வரங்களும் சாந்தமாகும். 21—24.

**தூமபானத்தினலான தீங்குகளின் பரிஹாரமுறை:—** தூமபானத்தினல் நேரிடும் தீங்குகளில் ரேசன நஸ்யத்திற்குக் கூறிய பரிஹார முறைகளையே உபயோகிக்கவேண்டும். 24½.

**தூம நாடிக்கேற்ற வஸ்துக்கள்:—** தூமபானத்திற்கான நாடிகள் அல்லது நேத்திரங்களைச் செய்வதற்குப் பலவிதமான லோஹங்களையும் சவுட்டுக்கோரை அல்லது மூங்கில் முதலியவற்றையும் உபயோகிக்கலாம். 25.

---

கச்சோரம், கருவாப்பட்டை, இலவங்கப்பத்திரி, கிரந்திதகரம், சாமந்தி, சோளம், புலியுகிரென்னும் வாஸனை வஸ்து, தேவதாரு, அகில், ஸரளவிருக்ஷம், குங்குமப்பூ, கருங்கச்சோரம், குங்கிலியம், ஸர்ஜரஸம், குந்துருகம், சரக்கொன்றை, நாககேஸரம் இவற்றின் சேர்க்கை.

1. ஸ்நாயு:—இதைப்பற்றி 26-வது பக்கம் பார்க்க.

## பத்தாவது அத்தியாயம்.

### கண்டூஷாதி விதி

நான்குவித கண்டூஷ கபளக்ரஹங்கள்:—ஸ்நேஹநகண்டூஷம், சமந கண்டூஷம், சோதநகண்டூஷம், ரோபணகண்டூஷம் என்று கண்டூஷவிதி நான்கு வகைப்படும். கபளக்ரஹமும் ஸ்நேஹநம் முதலான நான்குவித பேதங்களுடையதாம். 1.

நான்குவித கண்டூஷங்களுக்கான வஸ்துக்களும் வியாதிகளும்:—வாதரோகங்களில் ஸ்நிக்த்தமும் உஷ்ணமுமான திரவியங்களால் ஸ்நேஹந கண்டூஷமும், பித்தரோகங்களில் மதுரமும் சீதளமுமான வஸ்துக்களைக்கொண்டு சமநம் அல்லது ப்ரஸாதநம் என்கிற கண்டூஷமும், கபரோகங்களில் காரம் புளிப்பு உப்பு இவ்வித சுவையுடன் கூடினவையும் உஷ்ண வீர்யமுமுள்ள பதார்த்தங்களால் சோதந கண்டூஷமும், விரணங்களில் துவர்ப்பு கசப்பு மதுரம் இச்சுவையுள்ள வஸ்துக்களால் இளஞ்சூடாக ரோபணகண்டூஷமும் செய்யவேண்டும். 2½.

கண்டூஷ கபளங்களின் பேதம்:—நான்குவித கண்டூஷங்கள் கூறப்பட்டன; கபளக்ரஹங்களும் அங்ஙனமே நான்குவிதமாம். வாய் நிரம்பவும் அசைக்கமுடியாமல் ஏதேனும் திரவவஸ்துவைச் சேர்த்து செய்யப்படும் முறை 'கண்டூஷம்' என்றும், அசைவதாயிருந்தால் அதுவே 'கபளம்' என்றும் வழங்கப்படும்; ஆனால் கண்டூஷம் திரவ வஸ்துக்களாலும், கபளக்ரஹம் கல்கத்தினாலும் செய்யவேண்டியவை. மேலும் கண்டூஷமாக உபயோகிக்கப்படும் திரவவஸ்துக்களில் கோல பிரமாணம் சூர்ணமும், கபளக்ரஹத்தில் கர்ஷபிரமாணம் கல்க வஸ்துவும் சேர்க்கவேண்டும். 3—5.

கண்டூஷம்செய்யுமுறை முதலியது:—கண்டூஷம், கபளம் முதலியவை ஐந்தாவது வயது முதற்கொண்டு செய்யத்தகுந்தவை. நெற்

---

1. கண்டூஷம்:—ரோகபரிஹாரத்திற்கான ஏதாவது திரவ வஸ்துவை வாயில் வைத்துக்கொண்டு கொப்புளிக்க உபயோகிக்கும் ஔஷதப் பிரயோக முறை.

றிக்கட்டு, தொண்டை முதலியவற்றிற்கு ஸ்வேதநம் செய்துகொண்டு, ஆஸனத்தில் நன்றாக உட்கார்ந்தவாறு கண்டூஷம் செய்துகொள்ள வேண்டும். வாத வியாதிகளில் மூன்று முறையும், பித்த வியாதிகளில் ஐந்து முறையும், கபவியாதிகளில் ஏழு முறையும் கண்டூஷம் செய்ய வேண்டும். மேலும் எப்பொழுது வாயில் கபம் நிரம்பவும் சுரந்து விடுகின்றதோ, தோஷமாவது சிதைவுற்று ஸௌக்கியமுண்டான தாகத் தோற்றுகின்றதோ, நேத்திரத்திலிருந்தும் நாசியிலிருந்தும் கபம் முதலியது கசிந்து வெளிவருகின்றதோ அதுவரையில் கண்டூஷத்திரவத்தைக் கொப்புளித்துவிடாமல் வாயில் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். கண்டூஷத்தைப் பிரயோகிப்பதற்கு இவை பொதுவான விதிகளாகும். 6—7½.

சில வியாதிகளுக்கேற்ற கண்டூஷங்கள்:—எள்ளுப் பிண்ணாக்குக் கரைத்த ஜலம், பால், ஏதேனும் ஸ்நேஹம் இவற்றுள் ஏதாவது ஒன்று ஸ்நேஹகண்டூஷம் செய்வதற்கு ஏற்றதாகும். எள், கருநெய்தல், நெய், சர்க்கரை, பால் இவற்றில் ஏதாவது ஒன்றை ஸம அளவான தேனோடு கலந்து கண்டூஷமாக உபயோகித்தால் வாயிலுண்டான எரித்தல் நிவ்ருத்தியாகும். தேனைமாத்திரம் கண்டூஷமாக உபயோகித்தால் முகம் நிர்மலமாகும். வாயிலுண்டான விரணங்களும், எரித்தலும், நாவறட்சியும் நீங்கும். விஷ ஸம்பந்தத்தினாலுண்டாகும் தோஷங்களிலும், க்ஷாரம் அக்னி இவற்றின் ஸம்பந்தத்தாலான அழற்சிகளிலும் நெய்யையாவது பாலையாவது கண்டூஷமாக உபயோகிக்கலாம். பற்கள் பலஹீனமடைந்து ஆட்டங்கொள்ளுமானால் அதில் தைலம், இந்துப்பு இவற்றைக் கலந்து கண்டூஷம் செய்வது நலம். நாவறட்சி, அரோசகம் இவற்றில் காஞ்ஜிகமென்னும் காடியை கண்டூஷம் செய்வதால். அவை சாந்தமாகும். கபம் பிரகோபித்திருந்தால் இந்துப்பு, த்ரிகடு, வெண்கடுகு, இஞ்சி இவற்றைச் சேர்த்து கண்டூஷம் செய்யலாம். கபம் பிரகோபித்திருகையிலும், இரத்தபித்த ரோகத்திலும் த்ரிபலை, தேன் இவை சேர்ந்த கண்டூஷம் சிறந்த குணந்தரும். மரமஞ்சள், சீந்தில், த்ரிபலை, திராக்ஷை, ஜாதிபத்திரி, பூனைக்காலி இவற்றை க்வாதம் செய்து ஆறியபிறகு, அதில் ஆறில் ஒரு பங்கு தேனையும் கலந்து கண்டூஷமாக உபயோகித்தால் ஸந்நிபாதத்தினாலான வாய்ப்புண் நிவ்ருத்தியாகும். 8—14.

**ப்ரதிஸாரண-கபளக்ரஹங்கள்:**--எந்த ஔஷதங்களைக்கொண்டு கண்டூஷம் செய்யப்படுகிறதோ அதே ஔஷதங்களால் 'ப்ரதிஸாரணம்'[1] செய்யலாம். கபளக்ரஹமும் அவற்றாலேயே செய்யப்படலாம். 15.

**மாதுலுங்காதி கபளக்ரஹம்:**--கொடிமாதளையின் சோறு, இந்துப்பு, மிளகு இவற்றைச் சேர்த்து கபளக்ரஹம் செய்ய, உணர்ச்சியின்மையும் கபவாதங்களாலுண்டாகும் அரோசகமும் நீங்கும். 16.

**ப்ரதிஸாரணம் மூன்று விதம்:**—கல்கம், லேஹ்யம், சூர்ணம் என்று ப்ரதிஸாரணம் மூன்று வகைப்படும். முகத்திலுண்டாகும் விரணங்களைப் போக்குவதற்கே ப்ரதிஸாரணத்திற்கான ஔஷதங்களை விரல்முனையில் எடுத்து முகத்தினுள் அந்தந்த வியாதிகளுக்கேற்றவாறு தடவவேண்டும். 17.

**குஷ்டாதி ப்ரதிஸாரணம்:**—கோஷ்டம், மரமஞ்சள், மஞ்ஜிஷ்டி, வட்டத்திருப்பி, கடுகரோகிணீ, சதகுப்பி, பெருங்குரும்பை, கோரைக்கிழங்கு, வெள்ளிலோத்தி இவற்றைச் சூர்ணம் செய்து ப்ரதிஸாரணம் செய்தால் வாயிலுண்டாகும் இரத்தப் பெருக்கு, பல்வலி, வீக்கம், எரித்தல் முதலியவை நிவ்ருத்தியாகும். 18½.

**கண்டூஷத்தின் மூன்று யோகங்கள்:**—(1)கண்டூஷத்தை வேண்டியவளவு செய்யாவிட்டால் அது ஹீநயோகம் எனப்படும்; ஹீநயோகத்தினால கபம் அதிகமாகச் சுரத்தல், சுவையறியமுடியாமற் போதல், அரோசகம இக்கோளாறுகள் உண்டாகும்.(2) அளவு மீறி செய்யப்படுமானால் அது அதியோகம் எனப்படும் ; அதனால் வாயில் புண்களும், நாவறட்சியும், தாஹமும், சோர்வும ஸம்பவிக்கும். (3)கண்டூஷத்தினால் தோஷங்கள் நன்றாக வெளிப்பட்டு ஆரோக்கியமுண்டானால் அது ஸம்யக்யோகம் எனப்படும்; அப்பொழுது வியாதி நிவ்ருத்தியாதல், மனதுக்கு திருப்தி யுண்டாதல், முகம் நிர்மலமாவதுடன் தனது காரியங்களை எளிதில் செய்வதற்கேற்ற வல்லமை

1. ப்ரதிஸாரணம்—வாயினுட்புறத்தில் முக்கியமாய் தொண்டையினுள் கபம் அதிகரித்துண்டாகும் வீக்கம் அல்லது விரணம் முதலியவற்றைப் போக்குவதற்குப் பூசப்படும் ஔஷதம்.

யைப் பெறுதல்,[1] இந்திரியங்களெல்லாம் தெளிவுறுதல் என்னும் இவை கண்டூஷம் நன்கு நிறைவேறியதன் இலக்ஷணங்களாகும். 19—20½.

---

## பதினோராவது அத்தியாயம்.

---

### லேபனாதி விதி.

**லேபநமும் மூன்றுவித முகலேபநமும்.**—லேபநத்தையே[2] லேபம் என்றும், ஆலேபநம் என்றும் கூறுவர். அதில் முகத்தில் பூசப்படுவது 'முகலேபம்' என்று சொல்லப்படும்; முகலேபமானது தோஷஹரம், விஷஹரம், வர்ண்யம் என்று மூன்று வகைப்படும். அந்த லேபநத்தை அரை அங்குலம் கனமாகவும், அதில் மூன்றிலொரு பங்கு கனமாகவும், அல்லது அதில் நான்கில் ஒரு பங்கு கனமுள்ளதாகவும் முகத்திற் பூசவேண்டும். முகலேபநம் ஈரமாக இருக்கும் வரையிலும் அது வியாதிகளை அகற்றும்; உலர்ந்துவிட்டால் முகத்தின் பொலிவைப் போக்கிவிடும். 1, 2.

**புநர்நவாதி லேபம்**—வெள்ளைச்சாறணை, மரமஞ்சள், சுக்கு, வெண் கடுகு, முருங்கப்பட்டை இவற்றைக் காடிவிட்டு அரைத்து லேபநம் செய்ய ஸகல சோதைகளும் தீரும். 3.

**விபீத பலமஜ்ஜா லேபம்.**—தான்றிக்காயின் விதையை அரைத்து லேபநம் செய்ய முகத்திலுண்டாகும் அழற்சி, வேதனை முதலியவை நிவ்ருத்தியாகும். 3½.

**தசாங்க லேபம்.**—காட்டு வாகைப்பூ, அதிமதுரம், கிரந்திதகரம், இரத்த சந்தநம், ஏலக்காய், ஜடாமாஞ்சி, மஞ்சள், மரமஞ்சள், கோஷ்டம், வெட்டிவேர் இப்பத்துச் சரக்குகளின் சேர்க்கைக்கு

---

1. வாயில் கபம் அதிகரித்து விரணங்களோ வீக்கமோ உண்டாயிருந்தால் வாயை அசைப்பதற்கும், உணவுகளை மெல்லுவதற்கும் முடியாதல்லவா? கண்டூஷத்தை நன்கு நிறைவேற்றிய பிறகு அவ்வித கஷ்டம் நிவாரணமாவதால், முகம் தனது வேலையை நன்கு நிறைவேற்ற வல்லதாகிறதென்று கூறப்பட்டதென்க.

2. லேபநம்—பூச்சு மருந்து.

தசாங்கம்' எனப் பெயர்; இவற்றை வெகு நுண்மையாகப் பொடி செய்து, ஐந்தில் ஒரு பங்கு நெய் கலந்து, ஜலமும் சேர்த்து லேபமாகச் செய்யலாம். இதனால் விஸர்ப்பங்கள், விஷ ஸம்பந்தமான கொப்புளங்கள், வீக்கங்கள், மற்றும் கெட்டுப்போன புண்கள் இவை நீங்கும். 4—6.

திலாதி லேபங்கள்.—எள், ஆட்டுப்பால் இரண்டையும் அரைத்து, அத்துடன் வெண்ணெயையும் கலந்து லேபமாக உபயோகித்தால் சேராங்கொட்டைப் பாலாலுண்டான வீக்கம் தீரும்; கருத்த மண், எள் இவற்றை அரைத்து வெண்ணெயைக் கலந்தும் இவ்வீக்கத்தின் மேலுபயோகிக்க நற்குண முண்டாகும். 7.

லாங்கல்யாதி லேபம்.—கலப்பைக் கிழங்கு[1] அதிவிடயம், சுரைவேர், புடலம்வேர், கொடிமாதளை இவற்றை நன்றாகக் காஞ்ஜிகம் சேர்த்து அரைத்து லேபமாகப் பூசினால், பூச்சிக்கடிகளாலுண்டாகும் கொப்புளங்கள் சாந்தமாகும். 8.

ரக்த்தசந்தனாதி லேபம்.—இரத்தசந்தனம், மஞ்ஜிஷ்டி, வெள்ளிலோத்தி, கோஷ்டம், ஞாழல், ஆலமரமொட்டுகள், சிறுகடலை இவற்றை லேபமாகச் செய்து உபயோகித்தால் வ்யங்கமென்னும் வங்கு குணமாவதுடன் முகத்திற்கு ஒருவித காந்தியும் உண்டாகும். 9.

மாதுலுங்கமூலாதி லேபம்.—கொம்மட்டி மாதளையின் வேர், மனச்சிலை, நெய், சாணிப்பால் இவற்றை லேபமாகச் செய்து உபயோகிக்க வ்யங்கம், கட்டிகள், காலமென்னும் கறுப்பான், மற்றும் சர்மவியாதி இவை தீருவதுடன் முககாந்தியும் உண்டாகும். 10.

லோத்ராதி லேபம்.—வெள்ளிலோத்தி, கொத்துமல்லி விதை, வசம்பு, இவற்றின் லேபத்தினால் யௌவனப் பருவத்துப்பருக்கள் போய் விடும். மிளகையும் கோரோசனையையும் சேர்த்தும் முகப்பருக்களில் லேபமாக உபயோகிக்கலாம். 11.

ஸித்தார்த்தகாதி லேபம்.—வெண்கடுகு, வசம்பு, வெள்ளிலோத்தி, இந்துப்பு, இவற்றையாவது, மருதம்பட்டையைத் தேனில் இழைத்தாவது, மஞ்ஜிஷ்டியைத் தேனில் இழைத்தாவது, வெள்ளைக்குதிரை

1. லாங்கலீ—இதை தேங்காய் என்று சிலரும், கலப்பைக் கிழங்கென்று சிலரும், நீர்த்திப்பிலியென்று சிலரும் வழங்குவர்.

யின் குளம்பை எரித்து அக் கரியை வெண்ணெயிற் கலந்தாவது வ்யங்கங்களில் உபயோகிக்கலாம். 12½.

அர்க்கக்ஷீராதி லேபம்:—மஞ்சளைப் பொடி செய்து எருக்கம் பாலோடு கலந்து லேபநம் செய்வதால், முகத்தில் வெகு நாட்களாயுண்டாயிருக்கும் கருநிறம் நிச்சயமாய் நிவ்ருத்தியாகும். 13½.

வடபத்ராதி லேபம்.—பழுத்த ஆலிலை, குருக்கத்திப்பூ, இரத்த சந்தனம், கோஷ்டம், மரமஞ்சள், வெள்ளிலோத்தி இவற்றை லேபமாகச்செய்து உபயோகிக்க யுவாநடபிகா, வ்யங்கம், நீலிகா என்னும் பருஇவை தீரும். 14, 15.

பீஜயாகாதி லேபம்:—பழைய எள்ளுப் பிண்ணாக்கு, கோழியின் மலம் இவ்விரண்டையும் பசுவின் மூத்திரத்தில் அரைத்து, லேபமாக உபயோகிக்க சிரஸ்ஸிலுண்டாகும் அருூம்ஷிகா என்கிற விரணங்கள் நீங்கும். 16.

கதிராதி லேபம்:—கருங்காலிப்பட்டை, வேப்பம்பட்டை, நாவல் பட்டை இவற்றைப் பசுமூத்திரத்திலுல் அரைத்து, அல்லது குடமல் லிகைப்பட்டை, இந்துப்பு இவ்விரண்டையும் சேர்த்து அரைத்து லேபமாக உபயோகித்தால் அரும்ஷிகா என்கிற விரணங்கள் சாந்தமாகும். 17.

ப்ரியாள பீஜாதி லேபம்:—முறளம்விதை, அதிமதுரம், கோஷ்டம், உளுந்து, இந்துப்பு, தேன் இவற்றின் லேபத்தை கபாலத்தின் மேல் சர்மம் வெடித்துப் போகும்போது உபயோகிக்கலாம். 18.

காகஸலேபமும் ஆம்ரபீஜாதி லேபமும்:—கசகசாவிதையைப் பால் சேர்த்து அரைத்து லேபமாகப் பூசினுல் கபாலசர்மத்தின் வெடிப்பு குணமாகும். அல்லது மாங்கொட்டையின் உட்பருப்பையும் கடுக்காயையும் ஸமபாகமாகச் சூர்ணம் செய்து, பாலில் கலந்து லேபமாக உபயோகித்தாலும் மிகக் குரூரமான வெடிப்பு நிவ்ருத்தியாகும். 19½.

திக்தபடோலாஸ லேபம்:—பேய்ப்புடலின் சாற்றைச் சிரஸ்ஸில் லேபமாக உபயோகித்து வந்தால் இந்த்ரலுப்தம் என்கிற தலைமயிர் உதிர்தல் மூன்று தினங்களில் நிவ்ருத்தியாய்விடும். 20½.

ப்ருஹதீரஸாதிலேபம் முதலியன:—கண்டங்கத்திரியின் சாற்றையும் தேனையும் கலந்து சிரஸ்ஸில் பூசுவதாலும், குன்றுமணியின்

வேர் அல்லது காயையாவது சேராங்கொட்டையின் சாற்றோடு கலந்து லேபநம் செய்வதாலும் மயிர் உதிர்தல் நின்றுவிடும். 21½.

கோக்ஷுராதி லேபம்:—நெரிஞ்சல், எள்ளுப்பூ, இவற்றை ஸம வெடையான தேன் நெய் இவ்விரண்டோடும் கலந்து சிரஸ்ஸில் லேபநம் செய்துவந்தால் தலைமயிர் நன்றாக வளரும். 22½.

கஜதந்தமஷீ லேபம்:—யானையின் தந்தத்தை எரித்து மையாகச் செய்து அத்துடன் இரஸாஞ்ஜனம்,[1] ஆட்டுப்பால் இவற்றையும் சேர்த்துக் குழைத்து லேபநம் செய்ய உள்ளங்கை முதலான விடங்களிலும் மயிர்கள் முளைக்கக்கூடும்[2]. 23½.

யஷ்ட்யாதி லேபம்:—அதிமதுரம், நெய்தல், திராக்ஷை, எண்ணெய், நெய், பால் இவற்றை ஒருமிக்க அரைத்தெடுத்து, சிரஸ்ஸில் தடவிவர மயிருதிர்தல் நின்றுபோய் அவை செழிப்பாகவும் திடமாகவும் வளர ஆரம்பிக்கும். 24½.

ரோமஸஞ்ஜநந லேபம்:—நாற்கால் ஜந்துக்களுடைய[3] சர்மம், ரோமம், நகம், கொம்பு, எலும்பு இவற்றை எரித்து பஸ்மம் செய்து அந்த பஸ்மத்தை எண்ணெயிற் கலந்து பூசிவந்தால் தலைமயிர் நன்றாக வளரும். 25½.

இந்த்ரவாருணீ தைல லேபம்:—பேய்த்தும்மட்டி விதையின்[4] எண்ணெயைச் சிரஸ்ஸில் தினந்தோறும் தேய்த்துக்கொண்டு வந்தால், தலைமயிர் வண்டுபோல் நன்றாக வளரும். 26½.

அயோரஜஸ்காதி லேபம்:—இரும்புத்தூள், கரிசிலாங்கண்ணி,

---

1. இரஸாஞ்ஜனம்—116-வது பக்கம் பார்க்க.

2. உதிர்ந்துபோன விடங்களில் நன்கு மயிர் வளருமென்பதைக் குறிப்பிடுவதற்கே உள்ளங்கையிலும் மயிர் முளைக்குமென்று கூறப்பட்டதென்க.

3. நாற்கால் ஜந்துக்கள் என்பதால் மஹாம்ருகங்கள் குறிக்கப்படுகின்றன; அவை பன்றி, எருமை, தலை கவிழ்ந்தோடும் ஆண் மான், கறுப்புச்சாரலுள்ள கலைமான், ரோஹிதமென்னும் மான், யானை, சவுரிமான், பெரியசவுரிமான், கட்கமிருகம், டசுபோன்ற மான் இவையாம்.

4. இதைக் காட்டு வெள்ளரி யென்று சிலர்.

த்ரிபலை, கறுத்த மண் இவற்றை ஒரு மாதகாலம் கருப்பஞ்சாற்றில் ஊறவைத்து, அதை லேபமாக சிரஸ்ஸில் தேய்த்து வந்தால் நரைத்த மயிர்கள் கறுநிறங்கொள்ளும். 27½.

தாத்ரீபலாதிலேபம்:—நெல்லிக்கனி மூன்று, கடுக்காய் இரண்டு; தான்றிக்காய் ஒன்று, மாம்பருப்பு ஐந்து, இரும்புத் தூள் ஒரு கர்ஷப் பிரமாணம் இவ்வனைத்தையும் ஒரு இரும்புப் பாத்திரத்தில் சேர்த்துப் பிசைந்து இரவில் பனியில் வைத்தெடுக்கவேண்டும். இந்த லேபனம் அகாலத்தில் உண்டாகும் அதிக நரைத்தலையும் சீக்கிரம் போக்கும். 28—29½.

த்ரிபலாதி லேபம்:—த்ரிபலை, அவுரியிலை, அயம், கரிசிலாங்கண்ணி இவற்றை ஸமபாகமாகச் சேர்த்துப் பொடி செய்து, செம்மறியாட்டின் மூத்திரத்தினால் அரைத்து லேபம் செய்து உபயோகித்தால் தலைமயிர்கள் நன்கு கறுநிறங் கொள்ளும். 30½.

மஹா த்ரிபலாதி லேபம்:—த்ரிபலை, இரும்புத்தூள், மாதளம் பட்டை, தாமரைக் கிழங்கு இவற்றைத் தனித்தனியே ஐந்து பலம் எடுத்து ஒருமிக்கச் சூர்ணம் செய்து, பதினாறு பிரஸ்த்தம் கரிசிலாங்கண்ணிச் சாற்றில் கலந்து ஓர் இரும்புப் பாத்திரத்தில் அனைத்தையும் சேர்த்து பூமிக்குள் ஒரு மாதகாலம் அடக்கம் செய்து வைத்திருக்கவேண்டும்; பிறகு அதை யெடுத்து வெள்ளாட்டுப்பால் சேர்த்துக் குழைத்து, அதை ஒரு கூர்ச்சத்தில் எடுத்து சிரஸ்ஸில் இராத்திரியில் தடவி, ஆமணக்கிலைகளால் தலைமயிர்களைச் சுற்றிக்கொண்டு படுக்கவும்; பிறகு காலையில் எழுந்து ஸ்நானம் செய்துவிடவும். இவ்வாறு மூன்று முறை லேபனம் செய்தால் நரைத்தல் நிச்சயமாக நிவ்ருத்தியாகும். 31—34½.

சங்கசூர்ணாதி லேபம்:—சங்க சூர்ணம் இரண்டு பாகம், தாளகம் ஒரு பாகம், மனச்சிலை அரை பாகம், ஸர்ஜக்ஷாரம் ஒரு பாகம் இவற்றை ஜலம் சேர்த்து அரைத்து, தலைமயிர்களை எடுத்துவிட்டுத் தடவி வந்தால் ஏழு வேளைகளில் க்ஷபணக ஸந்நியாஸியின்[1] சிரஸ்ஸைப் போல் தலையிலுள்ள மயிர்கள் யாவும் உதிர்ந்துவிடும். 35—37.

---

1. க்ஷபணக ஸந்நியாஸிகள்—ஜைன ஸந்நியாஸிகள். [அந்த ஸந்நியாஸிகள் தலைமயிரை வேருடன் பிடுங்கித் தலையை வழுக்கையாக வைத்திருப்பது வழக்கம்].

**தாளகாதி லேபம்.**—தாளகம் இரண்டு சாணமெடை, சங்கு சூர்ணம் ஆறு சாணமெடை, பலாசக்ஷாரம் இரண்டு சாணமெடை இவற்றைச் சேர்த்து, வாழைத்தண்டின் சாற்றாலாவது, எருக்கிலையின் சாற்றாலாவது ஆட்டி, சிரஸ்ஸில் மயிர்களை சிரைத்துவிட்டு ஏழு முறை லேபநம் செய்து வந்தால் மயிர்கள் முற்றிலும் உதிர்ந்துவிடும். 38, 39.

**ஸ்வர்ணபுஷ்ப்யாதி லேபம்.**—பொன்னாவிதை, அன்னபேதி, வாய்விடங்கம், மனச்சிலை, கோரோசனை, இந்துப்பு இவற்றை அரைத்து லேபம் செய்து வந்தால் வெண் குஷ்டம் தீரும். 40.

**வாயஸ்யாதி லேபம்.**—மணத்தக்காளி, தகரவிதை, கோஷ்டம், திப்பிலி இவற்றை அரைத்து ஆட்டு மூத்திரத்திற் குழைத்துத் தடவிவந்தால் வெண்குஷ்டம் நிவாரணமாகும். 41.

**இரண்டாவது தாளகாதி லேபம்.**—தாளகம் ஒரு சாணமெடை, வாலுளுவை நான்கு சாணமெடை இரண்டையும் சூர்ணம் செய்து, பசு மூத்திரத்தில் அரைத்துத் தடவ வெண்குஷ்டம் நிவ்ருத்தியாகும். 42.

**வாகுச்சியாதி லேபம்.**—கார்ப்போகரசி, நீர்வஞ்சி, அரக்கு, பேயகத்தி, திப்பிலி, இரஸாஞ்ஜநம், இரும்புத்தூள், எள் இவற்றை ஸமபாகமாயெடுத்து, சூர்ணம் செய்து, பசுக்களின் பித்த நீரைச் சேர்த்து, அரைத்து வைத்துக்கொண்டு உடம்பில் தடவி வர சீக்கிரம் வெண் குஷ்டம் போய்விடும். 43, 44.

**இரண்டாவது தாத்ரியாதி லேபம்**—நெல்லிக்கனி, மட்டிப்பால், யவக்ஷாரம் இவற்றை அரைத்துக் கலந்து, காடியைவிட்டு ஆட்டி, லேபமாக உபயோகிக்க ஸித்மமென்னும் தேமல் நீங்கும். 45.

**தார்வ்யாதி லேபம்**—மரமஞ்சள், முள்ளங்கிவிதை, தாளகம், தேவதாரு, வெற்றிலை இவை தனித்தனியே கர்ஷப்பிரமாணம், சங்குப்பொடி ஒரு சாணமெடை இவற்றை ஜலம் விட்டு அரைத்து லேபம் செய்யவும். இதனால் எவ்விதமான தேமலும் தீரும். 46, 47.

**ஹரீதக்யாதி லேபம்:**—கடுக்காய், இந்துப்பு, காவிக்கல், இரஸாஞ்ஜனம், கறுப்புப்பு இவற்றை ஜலத்தினால் அரைத்து லேபமாகச் செய்து உபயோகிக்க ஸகல நேத்திரரோகங்களும் நிவாரணமாகும். 48.

இரஸாஞ்ஜனாதி குடிகா லேபம்:—இரஸாஞ்ஜனம், த்ரிகடு இவற்றை அரைத்து குளிகையாக உருட்டி வைத்துக்கொண்டு நேத்திரங்களுக்குப் போட்டுவந்தால் எரித்தலோடும் தினவோடும் கூடிய அஞ்ஜநநாமிகா[1] என்கிற வியாதி நீங்கும். 49.

ப்ரபுந்நாடபீஜாதி லேபம்:—தகரவிதை, வாலுளுவை, கடுகு, எள், கோஷ்டம், மரமஞ்சள், கோரைக் கிழங்கு இவற்றைச் சூர்ணம் செய்து மோர்விட்டரைத்துப் பூசுவதால் தத்ரு என்னும் படர்தாமரை, சொறி, விசர்ச்சிகா[2] இவை நீங்கும். 50½.

ஹேமக்ஷீர்யாதி லேபம்:—பிரும்மதண்டு விதை, வாய்விடங்கம், விங்கம், கந்தகம், தகரவிதை, கோஷ்டம், வில்ந்தூரம் இவற்றை ஒருமிக்கச் சேர்த்து, சூர்ணம் செய்து, ஊமத்தையிலைச் சாற்றிலும், வேப்பிலைச் சாற்றிலும், வெற்றிலைச் சாற்றிலும் தனித்தனியே அதை ஆட்டி லேபனமாக உபயோகிக்கலாம். இதனால் சிரங்கு, படர்தாமரை, விசர்ச்சிகா, சொறி, ரகஸம்[3] இவை சீக்கிரம் ஸ்வஸ்தமாகும். 51—53.

தூர்வாதி லேபம்:—அறுகம்புல், கடுக்காய், இந்துப்பு, தகரவிதை, கருங்கஞ்சாங்கோரை இவற்றை மோர் சேர்த்து அரைத்து லேபனம் செய்தால் சொறியும், படர்தாமரையும் தீரும். அல்லது அறுகம்புல்லையும் மஞ்சளையும் சேர்த்தரைத்துத் தடவி வந்தால் சொறி, சிரங்கு, கிருமிரோகம், படர்தாமரை, சீதபித்தம்[4] இவை நிவ்ருத்தியாகும். 54, 55.

ஸித்தார்த்தகாதி லேபம்—வெண்கடுகு, மஞ்சள், கோஷ்டம், தகரவிதை, எள் இவற்றைக் கடுகெண்ணெயினால் ஆட்டி லேபமாக உபயோகித்து வருவதால் படர்தாமரை நீங்கும். 56.

ராஸ்நாதி லேபம்—சிற்றரத்தை, கருநெய்தல், தேவதாரு, வெண்சந்தனம்; அதிமதுரம், சிற்றுமுட்டி இவற்றைப் பொடித்து

1. அஞ்ஜநநாமிகா—76-வது பக்கம் பார்க்க.
2. விசர்ச்சிகா—61-வது பக்கம் பார்க்க.
3. ரகஸம்—62-வது பக்கம் டிப்பணியும் பார்க்க.
4. சீதபித்தம்—64-வது பக்கம் பார்க்க.

நெய்யையும் பாலையும் சேர்த்து லேபமாகச் செய்து உபயோகிக்க வாததோஷத்தினுலுண்டாகும் விஸர்ப்பம் தீரும். 57.

**ம்ருணுளாதி லேபம்**—தாமரைத்தண்டு, சந்தனம், வெள்ளிலோத்தி, வெட்டிவேர், தாமரைப்பூ, நெய்தல், நன்னரி, நெல்லிக்காய், கடுக்காய் இவற்றின் லேபம் பித்த விஸர்ப்பத்தைப் போக்கும். 58.

**மூன்றும் த்ரிபலாதி லேபம்.**—த்ரிபலை, தாமரைக் கிழங்கு, வெட்டிவேர், வறண்ச்சண்டி, அலரி, கொறுக்கைவேர், அறுகம்புல் இவற்றை அரைத்து லேபம் செய்ய கபவிஸர்ப்பம் நிவ்ருத்தியாகும். 59.

**ஜடாமாம்ஸ்யாதி லேபம்:**—ஜடாமாம்ஸி, ஸர்ஜரஸம் என்னும் பிசின், வெள்ளிலோத்தி, அதிமதுரம், அரேணுகம், பெருங்குரும்பை, கருநெய்தல், தாமரை, காட்டுவாழைப்பூ இவற்றை சததௌதக்ருதத்தினுல் [1] ஆட்டி லேபம் செய்ய இரத்தபித்தமும், வாதரக்தமும் தீரும். $60\frac{1}{2}$.

**ஆமலக லேபம்.**—நெய்யிற் பொரித்த நெல்லிக்கனிகளைக் காடிகளால் அரைத்து லேபமாகச் செய்து சிரஸ்ஸில் தேய்த்துவந்தால் நாசியிலிருந்து இரத்தங்கசிதல் நிவ்ருத்தியாகும். $61\frac{1}{2}$.

**கோஷ்டலேபமும் முசுகுந்தலேபமும்**—கோஷ்டத்தைப் பொடித்து, காடிவிட்டு அரைத்து, ஆமணக்கெண்ணெயினுல் குழைத்து, சிரஸ்ஸில் தேய்க்க தலைவலி ஸ்வஸ்தமாகும். அவ்வாறே கொக்குமந்தாரப் பூவையும் அவ்வியாதியில் லேபமாக உபயோகிக்கலாம். $62\frac{1}{2}$.

**தேவதார்வாதி லேபம்.**—தேவதாரு, கிரந்திதகரம், கோஷ்டம், விலாமிச்சைவேர், சுக்கு இவற்றைச் சிதைத்து, காடியினுல் அரைத்து, எண்ணெயைக் கலந்து லேபம் செய்ய வாததோஷத்தினுலான தலைவலி நீங்கும். $63\frac{1}{2}$.

**சந்தனுதி லேபம்.**—சந்தனம், வெட்டிவேர், அதிமதுரம், சிற்றுமுட்டி, புலியுகிரென்னும் வாஸனைத் திரவ்யம், கருநெய்தல் இவற்

1. சததௌத க்ருதம்—நூறு தடவை ஜலத்தில் அல்லது வ்ரணயமான கஷாயம் முதலியவற்றில் கடைந்து பக்குவம் செய்த நெய்.

றைப் பாலில் அரைத்து லேபனம் செய்தால் இரக்த்தபித்தம், தலைவலி இவை ஸ்வஸ்த்தமாகும். 64½.

மூன்றும் தாத்ரீயாதி லேபம்:—நெல்லிக்கனி, முத்தக்காசு, வெட்டிவேர், தாமரை, அல்லிக்கிழங்கு, சந்தனம், அறுகம்புல், விலாமிச்சை, விழல்வேர் இவற்றினலான லேபத்தை உபயோகிக்க பித்தத்தினலுண்டான தலைவலியும், இரத்தபித்த ஸம்பந்தமான நோயும் தீரும். 65, 66.

ஹரேணுகாதி லேபம்:—அரேணுகம், கிரந்தி தகரம், கல்மரப்பட்டை, கோரைக்கிழங்கு, ஏலம், அகிற்கட்டை, தேவதாரு, ஜடாமாம்ஸீ, சிற்றரத்தை, ஆமணக்கிலை இவற்றை லேபம் செய்து சிறிது இளஞ்சூடாயிருக்கையிலேயே உபயோகிக்க ச்லேஷ்மரோக நிவ்ருத்தியாகும். 67.

சுண்ட்யாதி லேபம்:—சுக்கு, கோஷ்டம், தகரவிதை, தேவதாரு, காவட்டம்புல் இவற்றைப் பசுமூத்திரத்திஞல் அரைத்துப் பூசுவதினலுண்டாகும் தலைவலி நீங்கும். 68.

சாரிபாதி லேபம்.—நன்னாரி, கோஷ்டம், அதிமதுரம், வசம்பு, கருநெய்தல் இவற்றைக் காடியினல் ஆட்டி, பிறகு எண்ணெயை விட்டுக் குழைத்துத் தடவினல் ஸூர்யாவர்த்தம், அர்த்தாவபேதம் என்னும் நோய்கள் தீரும். 69.

சதாவர்யாதி லேபம்.—தண்ணீர்விட்டான், கருநெய்தல், அறுகம்புல், எள், சாறணை இவற்றின் லேபமானது சங்ககம், அநந்தவாதம் என்கிற சிரஸ்ஸைப்பற்றிய வலிமுதலானவற்றைப் போக்கும். 70.

## ப்ரலேபமும் ப்ரதேஹமும்.

ப்ரலேப-ப்ரதேஹங்கள்—இதன் பிறகு அநிருதா கொள்கையின்படி இன்னும் சில லேபவிதிகள் வரையப்படுகின்றன. ப்ரலேபம் என்றும், ப்ரதேஹம் என்றும் லேபம் இரண்டுவிதமாகும். ஈரமான எருமைத்தோலவ்வளவு கனமாக ப்ரலேப ப்ரதேஹங்களைச் செய்ய வேண்டுமென்பது பொதுவிதியாகும். எந்த லேபம் குளிர்ச்சியாகவும், அதிக கனமல்லாமலும், உலர்ந்துவிடக் கூடியதாகவும் செய்யப்படுகிறதோ அது ப்ரலேபம் எனப்படும். எந்த லேபம் ஈரமாகவும்,

சிறிது கனமாகவும், உஷ்ணமாகவும் செய்யப்படுகிறதோ அது ப்ரதேஹம் என்று சொல்லப்படும். இவற்றுள் ப்ரதேஹம் கப-வாதங்களாலுண்டாகும் கோளாறுகளைப் போக்கக்கூடியதாம்[1]. 71—72½.

**ப்ரதேஹ-ப்ரலேபனங்களில் சில நியமங்கள்.**—ப்ரலேப-ப்ரதேஹங்களை மயிர்க்கால்களினூடே பிரவேசிக்குமாறு லேபநம் செய்தால், அவற்றின் வீர்யம் மயிர்க்கால்களாலும், ஸிரைகளென்னும் காரிரத்தக் குழாய்களின் முகங்களாலும் சரீரமெங்கும் சீக்கிரத்திற் பரவும். இரவில் லேபநம் செய்யக்கூடாது. உலர்ந்துவரும் ப்ரலேபநத்தையெடுத்துவிடவேண்டும். ஆனால் ப்ரதேஹம் பூசப்பட்டுள்ள பாகம் உலர்ந்து அவ்விடத்தில் ஒருவாறு இசிவு கண்டு அப்பூச்சு உலர்ந்து வருமளவும், அதை யெடுத்துவிடாமல் வைத்திருக்கலாம். இரவில் மயிர்க்கால் முனைகளில் தேகச்சூடு தங்கியிருந்து சூரிய வெளிச்ச மின்மையினால் தானே வெளிவந்து விடுமாகையால் இரவில் லேபநம் செய்யக்கூடாது. ஆனால் விஷயமுணர்ந்த நிபுணர்கள் அவசியமென்றறிந்தால் இரவிலும் ப்ரலேபநம் முதலியதைச் செய்யலாம். 73—76.

**விரணங்களில் லேபம் முதலிய கிரமம்.**—இரத்தம் கபம் இவற்றின் கோளாறால் ஸம்பவிக்கும் வீக்கம் பழுக்காமலும் வெகு ஆழமாக வியாபித்து மிருந்தால், அதற்கு முதலில் வீக்கத்தைக் குறைப்பதற்கான 'சோதஹரம்' என்கிற லேபமும், இரண்டாவது இரத்த மோக்ஷணமும்[1], மூன்றாவது உபநாஹஸ்வேதமும், நான்காவது சஸ்திரத்தினால் கீண்டு தோஷங்களை வெளிப்படுத்தும் முறையும், ஐந்தாவது அவ்விரணத்தைக் கழுவியோ வேறு விதமாகவோ சுத்திசெய்யும் 'சோதநம்' என்னும் முறையும், ஆறாவது ரோபணம் என்னும் விரணத்தை ஆறச்செய்வதும், ஏழாவது விரணமுண்டான விடத்திற்கு மீண்டும் பழைய நிறமுண்டாகப் பண்ணுவதும் கிரமமாக விரணங்களுக்கு அவசியம் செய்ய வேண்டிய சிகித்ஸா முறைகளாம். 77—78½.

---

1. ப்ரலேபம் அல்லது லேபம் என்றால் ஸாதாரணமான எந்தப் பூச்சு மருந்தையும் குறிக்கும்; ப்ரதேஹமென்றால் பற்றுப்போடுதல்.

பீஜபூராமூலாதி லேபம்.—கொடிமாதளையின் வேர், ஜடாமாம்ஸீ, தேவதாரு, சுக்கு, சிற்றரத்தை, முன்னைவேர் இவற்றை அரைத்து லேபமாக உபயோகிக்க வாததோஷத்தினலுண்டாகும் வீக்கம் நிவ்ருத்தியாகும். 79½.

மதுகாதி லேபம்.—அதிமதுரம், வெண்சந்தனம், பெருங்குரும்பை, நெட்டக்கோரையின் வேர், அல்லிக்கிழங்கு, வெட்டிவேர், விளாமிச்சை வேர், தாமரைப்பூ இவற்றைப் பித்தத்தினலுண்டாகும் வீக்கங்களில் லேபமாயுபயோகிக்கலாம். 80½.

கிருஷ்ணாதி ப்ரதேஹம்.—திப்பிலி, பழைய எள்ளுப்பிண்ணக்கு, முருங்கப்பட்டை, மணல், கடுக்காய் இவற்றைப் பசுமூத்திரத்தில் அரைத்து கொதிக்க வைத்து இளஞ்சூடாக ப்ரதேஹம் செய்தால் கபத்தினலுண்டாகும் வீக்கம் நிவாரணமாகும். 81½.

நிசாதி லேபம்:—மஞ்சள், மரமஞ்சள், வெண்சந்தனம், செஞ்சந்தனம், கடுக்காய், அறுகம்புல், வெள்ளைச்சாறணை, வெட்டிவேர், அல்லிக்கிழங்கு, வெள்ளிலோத்தி, காவிக்கல், இரஸாஞ்ஜனம் இவற்றை அரைத்து வெளிக்காரணங்களாலுண்டாகிற வீக்கத்திலும், இரத்ததோஷத்தினலான வீக்கத்திலும் லேபமாயுபயோகிக்கலாம். 82, 83.

சணபர்ணியாதி லேபம்.—சேப்பங்கிழங்கு, முள்ளங்கி, முருங்கக்காய், எள், கடுகு, ஸக்து என்னும் காடிச் சத்து, கிண்வமென்கிற மத்யச்சக்கை, ஆளிவிதை இவற்றின் லேபநத்தினல் வீக்கங்கள் பழுத்து வரும். 84.

தந்த்யாதி லேபம்.—நேபாளம், சித்திரமூலப்பட்டை, கள்ளிப்பால், எருக்கம்பால், வெல்லம், சேராங்கொட்டை, அன்னபேதி, இந்துப்பு இவற்றின் லேபநம் 'தாரணகுணம்'[1] உள்ளதாம். 85.

சிரிபில்வாதி லேபம்:—புங்கம்பட்டை, நேபாளம், சித்திரமூலம், அலரிவேர், மாடப்புறவினுடையவும் பருந்தினுடையவும் கழுகினுடையவும் மலங்கள் ஆகியவற்றை அரைத்து லேபமாக உபயோகித்தால் 'தாரணம்' என்னும் வேலையைச் செய்யும். 86.

ஸர்ஜக்ஷாராதி லேபம்.—ஸர்ஜக்ஷாரம், யவக்ஷாரம் இவற்றை

---

1. தாரணம்—கட்டிகளை உடையச் செய்யும் குணம்.

லேபநம் செய்ய வீக்கங்கள் சீக்கிரம் உடைந்துவிடும். அவ்விதமே பிரம்மதண்டு விதையையும் விரணம் முதலியவை உடைவதற்கு மேலே லேபமாக உபயோகிக்கலாம். 87½.

இரண்டாம் திலாதி லேபம்.—எள், இந்துப்பு, அதிமதுரம், வேப்பிலை, மஞ்சள், மரமஞ்சள், சிவதை வேர் இவற்றை இடித்து நெய் விட்டுக் கலந்து, விரணங்களின் மேல் லேபநம் செய்ய அவை சுத்தமாகும். 88.

நிம்பபத்ராதி லேபம்.—வேப்பிலை, தேன், நெய், மரமஞ்சள், அதிமதுரம், எள் இவற்றை ஒருமிக்க அரைத்து லேபநம் செய்ய விரணம் சுத்தியாவதுடன் சீக்கிரம் ஆறியும் வரும். 89.

கரஞ்ஜாதி லேபம்.—புங்கம் வேர், வேப்பிலை, நொச்சியிலை இவற்றை அரைத்து லேபநம் செய்தால் விரணத்திலுண்டாகும் கிருமிகள் அழியும். 89½.

லசுநாதி லேபம்.—வெள்ளுள்ளியின் கல்கத்தையாவது, வேப்பிலையையும் காயத்தையும் சேர்த்து அரைத்த கல்கத்தையாவது விரணக் கிருமிகளைப் போக்க லேபமாக உபயோகிக்கலாம். 90.

இரண்டாவது நிம்ப பத்ராதி லேபம்:—வேப்பிலை, எள், நேபாளம், சிவதை வேர், இந்துப்பு, கிம்ளை இவற்றைச் சேர்த்து செய்யப்படும் லேபமானது கெட்டுப்போன விரணங்களைச் சுத்தம் செய்யவும் ஆற்றவும் அடியோடு அவற்றைப் போக்கவும் உபயோகமாகும். 91.

மதநபலாதி ப்ரதேஹம்:—மருக்காரை, கடுகரோகிணி இவ்விரண்டையும் காடியிலரைத்து ஆட்டி, அதைக் கொதிக்கவைத்து நாபியின்மேல் சிறிது சூடாயிருக்கும்போதே லேபநம் செய்ய வயிற்று நோய் நிவ்ருத்தியாகும். 92.

சிக்ருத்வகாதி ப்ரதேஹம்.—முருங்கைவேரின் பட்டை, வெண்ணொச்சியிலை, ஆமணக்குவேர், வாற்கோதுமை, கோதுமை, பயறு இவற்றை அரைத்துக் கொதிக்கவைத்து இளஞ்சூடாக வாததோஷத்தினாலுண்டாகும் வித்ரதியில் லேபநம் செய்யலாம். 93½.

லாஜாதி லேபமும் பயஸ்யாதி லேபமும்:—நெற்பொரி, அதிமதுரம், சர்க்கரை இவற்றை நெய்விட்டு அரைத்து, பித்ததோஷத்தினாலுண்டாகும் வித்ரதியில் லேபநம் செய்யலாம்; அல்லது க்ஷீரக

கோலி, வெட்டிவேர், வெண்சந்தனம் இவற்றையாவது லேபநம் செய்ய லாம். 94.

இஷ்டகாதி ப்ரதேஹம்.—செங்கற்பொடி, மணல், இரும்புச் சட்டத்தின் தூள், பசுஞ்சாணம் இவற்றைக் கோமயம் சேர்த்து ஆட்டிக் கொதிக்கவைத்து கபவித்ரதியில் சிறிது சூடாயிருக்கையிலேயே ப்ரதேஹமாக உபயோகிக்கலாம். 95.

இரண்டாம் ரக்தசந்தநாதி லேபநம்.—செஞ்சந்தனம், மஞ்ஜிஷ்டி, மஞ்சள், அதிமதுரம், காவிக்கல் இவற்றைப் பொடிசெய்து பாலில் குழைத்து இரத்த வித்ரதியிலும், ஆகந்துகமென்னும் வெளிக் காரணங்களாலுண்டாகும் வித்ரதியிலும் லேபநம் செய்யலாம். 96.

நீசுளாதி ப்ரதேஹம்.—நீர்க்கடம்பு, முருங்கவிதை, தசமூலம் இவற்றைக் கல்கம்போல் அரைத்து பக்குவம்செய்து இளஞ்சூடா யிருக்கையில் வாத தோஷத்தினுலுண்டாகும் கட்டிகளின்மேல் ப்ரதேஹம் செய்யலாம். 97.

தேவதார்வாதி ப்ரதேஹம்.—தேவதாரு, பேய்த்தும்மட்டிக்காய் இவ்விரண்டையும் அரைத்து உஷ்ணமாக்கி, கபதோஷத்தினு லுண்டாகும் கட்டிகளில் ப்ரதேஹம் செய்யலாம். 97½.

ஸர்ஷபாதி லேபம்.—கடுகு, வேப்பிலை, சேராங்கொட்டை இவற்றை எரித்து, ஆட்டு மூத்திரத்தில் ஆட்டி அபசீ யென்னும் விரணத்தின்மேல் லேபநமாய் உபயோகிக்கலாம். 98½.

இரண்டாம் ஸர்ஷபாதி லேபம்.—கடுகு, முருங்கவிதை, சணல் விதை, ஆளிவிதை, யவதானியம், மோடி [1] இவற்றைப் புளித்த மோர் விட்டு அரைத்து கண்டமாலை, அர்புதம், கண்டமென்னும் கட்டி இவற்றின்மேல் லேபமாக உபயோகிக்க அவை குணமாகும். 99, 100.

குஞ்ஜாபலாதி ப்ரதேஹம்.—வாததோஷத்தினுல் மட்டும் ஓர் அவயவம் மிகவும் பீடிக்கப்படுமானுல், அவ்வவயவத்தில் கூர்மையான

1. மோடி—இங்கு மூலகபீஜம் என்பதற்கு மோடி என்று மலையாளத்திலுள்ள ஆயுர்வேதநிகண்டுவில் கூறப்பட்டதை அனுஸரித்துப் பொருள் எழுதப்பட்டது. மூலகத்தை முள்ளங்கியென்று இந்தப் பிரகரணத்தில் சொல்வதற்கில்லை.

ஒரு சத்திரியினால் இரத்தம் வருமாறு கீறி, அவ்விடத்தில் குன்றுமணிகளை அரைத்து நன்கு ப்ரதேஹம் செய்ய, அபபாஹுகம், விச்வாசீ, க்ருத்ரஸீ இக்கோளாறுகளும், மற்றும் வாததோஷ ஸம்பந்தமான வியாதிகளும் சீக்கிரம் ஸ்வஸ்த்தமாகும். 101, 102.

தத்தூராதி லேபம்.—ஊமத்தை, ஆமணக்கு, கருநொச்சி, சாறடை, முருங்கை இவற்றின் இலைகளையும் கடுகையும் சேர்த்து அரைத்து கல்கம்போல்செய்து லேபநமாக உபயோகிக்க வெகு நாட்பட்ட கடுமையான யானைக்காலையும் நிவ்ருத்தி செய்யும். 103.

அஜாஜ்யாதி லேபம்.—ஜீரகம், சிவக்கரந்தை, கோஷ்டம், ஆமணக்கிலை, இலந்தை இவற்றைக் காடிவிட்டு அரைத்து லேபநம் செய்ய சீல்வாதம் நிவாரணமாகும். 104.

கரவீரமூல லேபம்.—அலரிவேரை ஜலம்விட்டு ஆட்டி லேபநம் செய்ய, ஆண்குறியிலுண்டாகும் அஸாத்திய குணங்களைப் பெற்ற வலியும் நிவ்ருத்தியடையும். 105.

நான்காம் த்ரிபலாதிலேபம்.—த்ரிபலையை ஒரு சட்டியில் எரித்து, அக்கரியைத் தகுந்தவளவு தேன்விட்டுக் குழைத்து, உபதம்சமென்கிற வியாதியில் சர்மத்திலுண்டாகும் விரணங்களின்மேல் பூசிவர, சீக்கிரம் ஆறிவிடும். 106, 107.

துகாக்ஷீர்யாதி லேபம்.—மூங்கிலுப்பு, பூவரசம்பட்டை, சந்தனம், காவி, சீந்திற்கொடி, இவற்றை அரைத்து, நெய் விட்டுக் குழைத்து, அக்னி ஸம்பந்தத்தினாலுண்டாகும் விரணங்களின்மேல் பூசிவர, அவை ஆறிவிடும். 108.

திந்துக்யாதி லேபம்:—தும்பை, இலவங்கப்பத்திரி இரண்டையும் க்வாதம் செய்து, அக்கஷாயத்தில் நெய்யையும் கலந்து எரிப் புண்களின்மேல் லேபநம் செய்ய அவை குணமாகும். 108½.

யவாதி லேபம்.—யவதானியங்களை எரித்து மையாகச் செய்து, எண்ணெயிற் கலந்து எவ்வித எரிப்புண்களின் மேலும் லேபநம்செய்துவர அவை சீக்கிரம் ஆறும். 109½.

பலாசபலாதி லேபம்.—பலாசங்காய், அத்திக்காய் இவற்றை நன்கு கல்கம்போல் அரைத்து, தேனையும் நல்லெண்ணெயையும்

சேர்த்துக் குழைத்து யோனிமார்க்கத்திற் பூசினால் அவ்விடம் பலங்கொள்ளும். 110½.

மாகந்தாதி லேபம்:—மாம்பிஞ்சையும், கர்ப்பூரத்தையும், தேனையும் சேர்த்து ஆட்டி, கல்கமாகச் செய்து, யோனியில் தடவிவருவதால், ஸ்த்ரீகளுக்கு யௌவனப் பருவம் கழிந்திருந்தாலும் அவ்வவயவம் கெட்டியாகும். 111½.

மரிசாதி லேபம்:—மிளகு, இந்துப்பு, திப்பிலி, கிரந்திதகரம், கண்டங்கத்திரி, நாயுருவி, எள், கோஷ்டம், வாற்கோதுமை, உளுந்து, கடுகு, அமுக்கிறாங்கிழங்கு இவற்றைச் சூர்ணம் செய்து தேனுடன் கலந்து ஸ்தநம் லிங்கம் முதலியவற்றில் லேபநம் செய்ய அவை பலப்படும்; புஜம் முதலிய அவயவங்களும் நன்றாகப் பெருக்கும். 112—114.

ஸிதாதி லேபம்:—சர்க்கரை, அமுக்கிறாங்கிழங்கு, இந்துப்பு, ஆட்டுப்பால் இவற்றைச் சேர்த்து, க்ருதம் பக்குவம் செய்து, முன்போலவே உபயோகப்படுத்த அவ்வவயவங்களுக்கு நல்ல வலிமையுண்டாகும். 115.

இரண்டாம் இந்த்ர வாருண்யாதி லேபம்.—பேய்த்துமட்டிச் சாற்றையும் பாதரஸத்தையும் கலந்து, செவ்வலரியின் கட்டையினால் அடிக்கடியும் ஆட்டி, இரண்டையும் கலந்து முன்போலவே அவ்வவயவத்தில் உபயோகிக்க நற்குணமுண்டாகும். 116½.

தாம்பூலாதி லேபம்.—வெற்றிலைச் சருகையும், கோஷ்டத்தையும், கடுக்காயையும் சூர்ணம் செய்து ஜலத்தில் குழைத்து, சரீரமெங்கும் தடவிவர தேஹத்திலுண்டாகும் துர்நாற்றம் போய்விடும். 117½.

துளுந்தாதி லேபம் அல்லது தூள்.—மிக நுண்மையாகப் பொடித்த கொள்ளையும், கோஷ்டம், ஜடாமாம்ஸி வெண் சந்தனம் இவற்றின் சூர்ணத்தையும், கடலைமாவையும், இலவங்கப்பட்டையின் சூர்ணத்தையும் ஒன்றாகக் கலந்து, தேகத்தில் தூவுவதால், வியர்வையினாலுண்டாகக்கூடிய துர்நாற்றம் நிவ்ருத்தியாகும். 118, 119.

வசாதி லேபம்.—வசம்பு, ஆட்டுப்பு, கோஷ்டம், மஞ்சள், மரமஞ்சள், மிளகு இவற்றைப் பொடி செய்து ஜலத்தில் கலந்து செய்

யப்படும் லேபம் ஸ்த்ரீ புருஷர்கள் ஒருவருக்கொருவர் வசமாவதற்கு உத்தம ஔஷதமாம். 120.

## சிரோ வஸ்தி.

மூர்த்த தைலங்கள்.—அப்யங்கம், பரிஷேகம், பிசு, வஸ்தி என்று மூர்த்த தைலமென்னும் சிரஸ்ஸில் இடப்படும் தைலமுறை நான்கு வகைப்படும்; இந்த அப்யங்காதி நான்கு முறைகளுள் ஒவ்வொன்றும் மேன்மேலும் வீர்யத்தில் முறையே சிறந்தவையாம். இவற்றுள் அப்யங்கம், பரிஷேகம், பிசு என்னும் மூன்றுவித தைலப் பிரயோகங்களும் பிரஸித்தமானவை; [1] இங்கு அறிவிற்சிறந்த வைத்தியர்களின் கொள்கைப்படி சிரோவஸ்தி யென்னும் மூர்த்ததைல முறைமட்டும் விவரிக்கப்படுகின்றது. 121, 122.

சிரோவஸ்தி முறை.—பன்னிரண்டு அங்குலம் நிகளமுள்ள அல்லது சிரஸ்ஸுக்கு ஸம அளவுள்ள சர்மத்தைத் தலையைச் சுற்றிக் கட்டவும்; அதற்குமுன் அந்த சர்மத்தில் இரண்டு த்வாரங்களை யேற்படுத்தி யிருக்கவேண்டும்; உளுந்தை நன்றாகப் பொடி செய்து ஜலம் விட்டுப் பிசைந்து, தோல் கட்டியிருக்கும் பாகத்தில் நெற்றியைச் சேர்ந்தாற்போல் அதைத் தடவிவிடவேண்டும்; அதற்கு மேலேயும், சர்மம் வியாபித்துள்ள பாகம் வரையிலும் அதைப் பூசிவிடலாம். இவ்வாறு சிரஸ்ஸைச் சுற்றிலும் பாத்திபைப்போல் ஓர் சுவரெடுத்து சிரஸ்ஸில் பாத்தி நிரம்பவும் இளஞ்சூடான ஸ்நேஹத்தை ஊற்ற வேண்டும். பிறகு நாசி, செவி இவற்றிலிருந்து ஜலம் ஊறும் வரையிலுமாவது, எந்த வியாதியை நிவ்ருத்தி செய்வதற்காக இவ்விதப் பிரயோகம் செய்யப்படுகிறதோ அவ்வியாதியினாலுண்டான துன்பங்கள் தீரும் வரையிலுமாவது, ஆயிரம் மாத்திராகாலமாவது [2] தலையில்

---

1. அப்யங்கம்—தைலம் முதலியதை சிரஸ்ஸு முதலிய அவயவங்களில் தேய்த்துக்கொள்ளுதல்; பரிஷேகம்—எண்ணெய் முதலியவற்றைச் சிரஸ்ஸின்மேல் தாரைபோல் ஊற்றுதல்; பிசு—சூடான எண்ணெய் முதலியவற்றில் துணி முதலியதை நனைத்து ஒற்றடம் செய்தல்.

2. மாத்திராகாலம்.—266—வது பக்கம் பார்க்க.

அத்தைலத்தை ஊறவைக்கவேண்டும், ஆஹாரமுண்பதற்கு முன்பாகவே சிரோவஸ்திடைச் செய்வது உத்தமம். இதை ஐந்து அல்லது ஏழு நாட்கள் தொடர்ந்து செய்யவேண்டும். சிரஸ்ஸிலுள்ள ஸ்நேஹத்தை வடித்து, வஸ்தியையும் அவிழ்த்துவிட்டு, தோள் முதல் தலைவரையிலும் நாற்புறமும் நன்றாகப் பிடித்து விடவேண்டும்; அப்பால் சிறிது சூடான ஜலத்தினால் ஸ்நானம் செய்விக்கவும். எளிதில் சிகித்ஸைக்கு வசப்படாத தலை நடுக்கம் முதலிய அநேகம் வாதரோகங்கள் இம்முறையினால் நிவாரணமாகும்; இதை எல்லாக் காலங்களிலும் பிரயோகிக்கலாம். 123—127½.

## கர்ண பூரணம்.

கர்ணபூரண முறை:—நோயாளியை ஒருச்சாய்ந்து படுக்கச் செய்து, சிறிது சூடான பசுமூத்திரம் அல்லது இதர மிருகங்களின் மூத்திரங்களாலாவது, ஸ்நேஹவஸ்துக்களாலாவது, ஏதேனும் ஸ்வரஸங்களாலாவது நோய்கொண்ட செவிக்கு முதலில் ஸ்வேத சிகித்ஸை செய்து, பிறகு தகுந்த ஸ்நேஹம் முதலியவற்றால் கர்ண பூரணம்[1] செய்யலாம். செவியினுள் இவ்வாறு நிரப்பிய ஔஷதத்தை நூறு மாத்திராகாலமாவது ஐந்நூறு மாத்திராகாலமாவது ஆயிரம் மாத்திராகாலமாவது அப்படியே வைத்திருக்கவும். காது, தொண்டை, சிரஸ்ஸு இவற்றிலுண்டாகும் வியாதிகளில் இவ்விதம் கர்ணபூரணம் செய்வது நலம்[2]. ஏதேனும் ஸ்வரஸம் முதலானவைகளால் கர்ணபூரணம் செய்வதானால், அதை ஆஹாரமுண்பதற்கு முன்பாகவே உபயோகிப்பது நலம்; தைலம் முதலானவற்றைக் கொண்டு செய்வதானால் ஸூர்யாஸ்தமனத்திற்குப் பிறகு உபயோகிக்கவேண்டும். 128—131½.

அர்க்கபத்ர ஸ்வரஸம்:—பழுப்பான எருக்கிலையை நெய் தடவி, சிறிது அக்னியில் வதக்கிப் பிழிந்து ஸ்வரஸமெடுத்து, அதைக் கர்ணத்தில் விட்டால் காதுவலி நிவ்ருத்தியாகும். 132½.

1. கர்ணபூரணம்.—காதில் ஏதாவது ஔஷதத்தை ஊற்றுதல்.

2. இங்கு மாத்திரா காலத்தைப்பற்றிய ஒரு ச்லோகம் விலக்கப்பட்டது; அவ்விஷயம் முன்பே விவரிக்கப்பட்டது.

**பஸ்தமூத்ராதி கர்ணபிந்து**:—செம்மறியாட்டின் மூத்திரத்தில் சிறிதளவு இந்துப்பைச் சேர்த்துக் கலக்கி, செவியில் ஊற்றிவர உக்கிரமான காதுவலியும், காதினுள் உண்டாகும் விரணம் முதலியவைகளும் நிவாரணமாகும். 133½.

**சிருங்கபேராஸாதி கர்ணபூரணம்**:—இஞ்சி ஸ்வரஸம், அதிமதுர ரஸக்ரியை, தேன், இந்துப்பு, நெல்லிக்காய், செஞ்சந்தனக்குழம்பு இவற்றின் ஸ்வரஸம், நல்லெண்ணெய், வெண்காரம், புளிநாரத்தையின் ஸ்வரஸம் இவற்றை ஒன்றாகக் கலக்கி, சிறிது சூடாக்கி, கர்ணபூரணமாக உபயோகிக்கக் காது வேதனை தீரும். 134, 135.

**கபித்தஸ்வரஸாதி கர்ணபூரணம்**:—விளாம்பழம், கொடிமாதளம்பழம், புளி, இஞ்சி இவற்றின் ஸ்வரஸத்தைப் பிழிந்து சுத்தமாக வடிக்கட்டி, சிறிது காய்ச்சி, இளஞ்சூடாகவே காதுகளில் விட்டு வந்தால் கர்ணசூலை சாந்தமாகும். 136.

**அர்க்காங்குராதி புடபாகம்**:—எருக்கந்தளிர்களைக் காடியைச் சேர்த்து அரைத்து, உப்பையும் எண்ணெயையும் சேர்த்துக் குழைத்து, கள்ளித்தண்டைப் பிளந்து அதனுள் அக்கல்கத்தை அடக்கி வைத்து, பிறகு எருக்கிலைகளால் மூடி முறைப்படி புடபாகம்[1] செய்யவும்; பிறகு அதை வெளியிலெடுத்து ஸ்வரஸம் பிழிந்து, இளஞ்சூடாயிருக்கையிலேயே கர்ணபூரணமாய் உபயோகிக்க தாங்கமுடியாத காதுவலிகள் யாவும் நிவ்ருத்தியாகும். 137, 138.

**மஹாபஞ்சமூல தீபிகா தைலம்**:—மஹாபஞ்சமூலங்களின்[2] எவ்வெட்டு அங்குலம் நிகளமுள்ள தண்டுகளைப் பட்டுத் துணியில் சுற்றி, தைலத்தில் நனைத்து, அக்னியிற் காட்ட அதிலிருந்து வடியும் தைலத்தை ஒரு பாத்திரத்தில் ஏந்திக்கொள்ளவும்; இது "தீபிகா தைலம்" எனப்படும். இதை இளஞ்சூடாயிருக்கையில் காதினுள் ஊற்ற காதுவலி உடனே தீரும். 139, 140.

**கோஷ்டாதி தீபிகா தைலம்**,—மஹா பஞ்சமூல தீபிகாதைலம் பக்குவம் செய்யும் விதமாகவே கோஷ்டம், தேவதாரு, பெருவாகை

1. புடபாகம்—97-வது பக்கம் பார்க்க.

2. மஹாபஞ்சமூலம்—பில்வம், குமிழன், பெருவாகை, பாதிரி, சிறுவழுதுணை இவ்வைந்தின் வேர்களாம்.

வேர் இவற்றையும் சிறு தீயில் எரித்து தீபிகா தைலம் இறக்கலாம். இத்தைலத்தை கர்ணபூரணமாயுபயோகிக்க ஸந்நிபாதஸம்பந்தமான கோளாறும் சீக்கிரம் நிவ்ருத்தியாகும். 141½.

ஸௌகரவஸாதி கர்ணபூரணம்.—அதிமதுரம், காகோலீ, உளுந்து, கொத்தமல்லிவிதை இவற்றை அரைத்து, க்வாதமாகக் காய்ச்சி, அக்கஷாயத்தில் பன்றிக் கொழுப்பைப் பக்குவம்செய்து, கர்ணபூரணம் செய்ய காதிரைத்தலும், காதுவலியும் தீரும். 142½.

ஸ்வர்ஜிகாதி தைலம்:—சவட்டுப்பு, உலர்ந்த முள்ளங்கி, பெருங்காயம், திப்பிலி, சதகுப்பி இவற்றையும், தைலத்தையும், தைலத்திற்கு நான்கு மடங்கு ஏதேனும் ஸூக்தத்தையும்[1] சேர்த்து பக்குவம் செய்து, தைலத்திற்கு நாலில் ஒரு பங்கு பாதரஸம் கலந்து, கர்ணபூரணம் செய்ய, கர்ணநாதம், கர்ணசூலை, செவிட்டுத்தன்மை, காதிலிருந்து சீழ் வடிதல் இவை தீரும். 143, 144.

அபாமார்க்கக்ஷார தைலம்:—நாயுருவியின் க்ஷாரத்தை ஜலத்தில் கரைத்து, வடிக்கட்டி, மீண்டும் அந்த க்ஷாரத்தையே சிறிது கல்கமாகச் சேர்த்து, எண்ணெயையும் ஊற்றி, பக்குவம் செய்யவும். இத்தைலம் செவிட்டுத் தன்மையையும், காதிரைத்தலையும் போக்கும். 145.

சம்பூக தைலம்:—நத்தைகளின் மாம்ஸத்தைக் கடுகெண்ணெயுடன் கலந்து பக்குவம் செய்யவும். இத்தைலத்தைக் காதிலுண்டாகும் குழிப் புண்களை ஆற்றுவதற்கு உபயோகிக்கலாம். 146.

பஞ்சகஷாயாதி கர்ணபூரணம்:—பஞ்சகஷாயமென்னும் ஐந்து வித சரக்குகளைச் சூர்ணம்செய்து, விளாம்பழரஸத்தில் கலக்கி, தேன் கலந்து நன்றாகக் குழைத்து, கர்ணபூரணமாக உபயோகிக்க, காதிலிருந்து சீழ்வடிதல் நின்றுவிடும். [துப்பை, கடுக்காய், வெள்ளி லோத்தி, மஞ்ஜிஷ்டி, நெல்லி இவ்வைந்தும் இங்கு 'பஞ்சகஷாயங்கள்' என்று[2] கூறப்படுகின்றன.] 147, 148.

ஸ்வர்ஜிகாதி கர்ணபூரணம்:—சவட்டுப்புப் பொடியைக் கொடிமாதளையின் சாற்றில் சிறிது கலந்து, கர்ணத்தில் உபயோகிக்க, காதிலிருந்து சீழ் முதலியது வடிதல், காதுநோய், காதெரித்தல் முதலியவை எளிதில் நிவ்ருத்தியாகின்றன. 149.

---

1. ஸூக்தம்—184-ம் பக்கம் காண்க.
2. ஐந்து துவர்ப்பான சரக்குகள் எனப் பொருள்.

**ஆம்ர பிரவாளாதி கர்ணபூரணம்:**—மாந்தளிர், நாவல்தளிர், இலுப்பைத்தளிர், ஆலந்தளிர் இவற்றை இடித்துச் சேர்த்து எண்ணெய் ஊற்றி பக்குவம் செய்து வடிக்கட்டி உபயோகித்துவர, சீழ்வடிதலுடன் கூடிய காதுநோய் தீரும். 150.

**ஹரிதாளாதி கர்ணபூரணம்:**—நன்கு சுத்திசெய்த தாளகத்தைப் பொடித்து, கோமூத்திரத்தில் சிறிதளவு கலக்கி, கர்ணபூரணமாய் உபயோகித்தாலும், கடுகெண்ணெயைச் சிறிது ஊற்றினாலும் காதுக்குள்ளிருக்கும் கிருமி முதலியது அழிந்துவிடும். 151.

**சிந்துமூலஸ்வரஸாதி கர்ணபூரணம்:**—முருங்கைவேரின் ஸ்வரஸம், தொழுகண்ணியென்னும் அரவாட்டிப்பச்சையின் ஸ்வரஸம், காஞ்சொறிவேரின் ஸ்வரஸம் இம்மூன்றையும் சேர்த்து, த்ரிகடுவையும் சூர்ணம்செய்து கலக்கி, காதிலுண்டான அல்லது காதில் பிரவேசித்துள்ள கிருமி முதலான ஜந்துக்களை அழிப்பதற்காக உபயோகிக்கலாம். 152½.

---

## பன்னிரண்டாவது அத்தியாயம்.

---

### இரக்தமோக்ஷணவிதி.

**இரக்த மோக்ஷணத்தின் அளவு முதலியது.**—பிராணியினுடைய வியாதியின் கூறுபாடுகளையும் தேக நிலைமைகளையும் உற்றுநோக்கியதிலிருந்து இரத்தத்தை ஒரு பிரஸ்த்தம் அளவாவது, அரை பிரஸ்த்தமாவது, கால் பிரஸ்த்தமாவது வடியச் செய்யலாம். ஸாதாரணமாய் சரத்ருதுவில் இரக்தமோக்ஷணம்[1] செய்வது உசிதம். இரக்த மோக்ஷணம் செய்வதால் சர்ம வியாதிகளும், கிரந்திகளும், வீக்கம் முதலானவைகளும் உண்டாகமாட்டா. 1, 2.

**இரக்தத்தின் இயற்கை லக்ஷணங்கள்**—இரத்தமானது சுவையில் மதுரமாகவும், நிறத்தில் சிவப்பாகவும், நடுத்தர உஷ்ண நிலைமை

---

1 இரக்த மோக்ஷணம்—விரைகளென்னும் காரிரத்தக்குழாய்களிலிருந்து இரத்தத்தை வெளிப்படுத்தும் முறை.

யைப் பெற்றதாகவும், குருகுணமுடையதாகவும், பசையுள்ளதாகவும், அருவருப்பான ஒருவித நாற்றமுடையதாகவும் இருக்கின்றது. இரத்தம் ஏதாவது காரணத்தால் முறிவடைந்தால் பித்தப் பிரகோபத்தினுலுண்டாகும் கோளாறுகள் ஸம்பவிக்கும்[1]. சவர்நாற்றம், திரவத்தன்மை, சிவப்பு, அசைந்தோடும் ஸ்வபாவம், ஆவியாகக் கரைதல் என்னும் இவ்வைந்து குணங்களும் இரத்தத்திலிருப்பதால், அது முறையே ப்ருதிவீ, அப், தேஜஸ், வாயு, ஆகாயம் இவற்றின் குணங்களுள்ளதாகக் கருதப்படுகிறது. 3, 4.

**இரத்த தோஷக் குறிகள்:**—இரத்தம் தூஷிக்கப்பட்டால் சரீரத்தில் வேதனையுண்டாகும்; அழற்சியும், எரித்தலும் ஸம்பவிக்கும்; இரத்தவர்ணமான தடிப்புகளும், அரிப்பும், வீக்கமும், கொப்புளங்களும் உண்டாகும். 5.

**இரத்தம் அதிகரித்தால் காணக்கூடிய குறிகள்:**—இரத்தம் மிதமிஞ்சி விருத்தியானல் சரீரம் முழுமையும் விசேஷமாக நேத்திரமும் மிகச் சிவந்துவிடும்; ஸிரைகள் என்னும் இரத்தக் குழாய்கள் எப்பொழுதும் பூர்ணமாய் நிரம்பியிருக்கும்; தேகம் பாரமாயிருப்பதாகத் தோற்றும்; நித்திரை அதிகமாய் உண்டாகும்; மேதஸ் என்னும் கொழுப்பு அதிகரிக்கும்; உடலில் அழற்சியும் உண்டாகும். 6.

**இரத்தம் க்ஷீணித்தால் காணக்கூடிய குறிகள்:**—இரத்தம் க்ஷயமடைந்தால் புளிப்பு இனிப்பு என்னும் சுவைகளில் விருப்பமும், மூர்ச்சையும், சர்மத்தில் வறட்சியும், ஸிரைகளென்னும் இரத்தக் குழாய்களின் தளர்ச்சியும், வாதம் பிரகோபமடைந்து அது தன் ஸ்தானத்தை விட்டு வேறு மார்க்கங்களிற் பிரவேசிப்பதும், இன்னும் இத்தகைய விகாரங்களும் ஸம்பவிக்கும். 7.

**கோளாறடைந்த தோஷங்களால் இரத்தத்திற்குண்டாகும் குறிகள்:**— கருஞ்சிவப்பு, நுரைத்தல், வறட்சி, வன்மை, அளவிலும் குணத்திலும் மெலிவுறுதல், வேகம் அதிகரித்தல், உறையுந்தன்மை குறைந்துபோதல், ஊசியால் குத்தப்படுவதுபோல் வேதனையுண்டா

1. பித்த வியாதிகளைப்பற்றி 68-வது பக்கம் பார்க்க.

தல் என்னும் இவை வாத தோஷத்தினால் சோளாறடைந்த இரத்தத்தின் குறிகளாகும். பித்தத்தினால் இரத்தம் தூஷிக்கப்பட்டால் அது நிறத்தில் மஞ்சளாகவும், அல்லது இலேப்பசுமையுள்ளதாகவும், சில ஸமயம் கறுப்பு அல்லது நீல நிறமாகவும் காணப்படும்; சுவர் நாற்றமும், உறையக்கூடாத நிலைமையும், இயற்கையினும் அதிக உஷ்ணமும் அதற்குண்டாகும்; ஈ, எறும்பு முதலான ஜந்துக்கள் அவ்வித இரத்தத்தை விரும்பமாட்டா. கபத்தினால் கோளாறடைந்த இரத்தமானது குளிர்ந்தும், அளவில் அதிகரித்தும், பசையுள்ளதாகவும், காவிக்கல் கரைத்த ஜலத்திற்கு ஒப்பாகவும், சிதைவுண்ட தசைநார்களுக்கேற்ற நிறமுடையதாகவும், எளிதில் உறையுந் தன்மையதாகவும், வெகு மந்தமான ஓட்டமுள்ளதாகவும் இருக்கும். இரண்டிரண்டு தோஷங்களால் தூஷிக்கப்பெற்ற இரத்தம் அந்தந்த தோஷங்களின் கலப்பான குறிகளுடன் கூடியதாயிருக்கும். மூன்று தோஷங்களாலும் தூஷிக்கப்பெற்றிருந்தால், அந்த இரத்தம் துர்நாற்றமுள்ளதாகவும், காஞ்ஜிகமென்னும் காடிக்கு ஒப்பாகவும், மற்றும் மூன்று தோஷங்களுக்குள்ள எல்லாக் குறிகளைப் பெற்றதாகவும் இருக்கும். 8—11.

**விஷதுஷ்டமான இரத்தத்தின் குறிகள்:**—ஏதேனும் விஷ ஸம்பந்தத்தினால் கோளாறடைந்த இரத்தம் கறுநிறமாகவும், நாசி முதலியவற்றின் மூலமாக அடிக்கடி வடியுந்தன்மையதாகவும், சவர்நாற்றமுள்ளதாகவும், காடியைப் போன்றதாகவும், அளவில் அதிகரித்ததாகவும், ஸர்வ குஷ்டங்களையுமுண்டாக்குவதற்குக் காரணமாகவும் இருக்கும். 12.

**இரத்தத்தின் இயற்கை நிலைமை:**—எவ்விகாரமுமின்றி இயற்கைத் தன்மையிலிருக்கும் இரத்தம் இந்த்ரகோபமென்னும் தம்பலப்பூச்சிக்கு நிகரான நிறமுடையதாகவும், தோய்ந்துவிடாத அல்லது மிகத் தடித்துவிடாத நிலைமையுள்ளதாகவும் காணப்படும். 12½.

**இரக்த மோக்ஷணத்திற்கேற்ற வியாதிகள்:**—ஏதாவது வீக்கம், எரித்தல், தேகம் அழன்று விடுதல், சரீரத்தில் இரத்த வர்ணம் அதிகரித்தல், இரத்தக் கசிவு ஸம்பவித்தல், வாதரக்தம், குஷ்டம், மிகத் துன்பமளிப்பதும் கஷ்ட ஸாத்தியமுமான வாதரோகம், கையிலுண்

டாகக் கூடிய சொறி சிரங்கு முதலிய வியாதிகள், யானைக்கால், விஷங்களால் இரத்தம் தூஷிக்கப்படுதல், கிரந்தி, அர்புதம், அபசீ, க்ஷுத்ர ரோகங்கள், இரத்தத்தின் கோளாறுல் ஸம்பவிக்கும் அதிமந்தம், விதாரிகா, ஸ்தன ரோகங்கள், சரீரம் இளைத்துப் போதல், சரீரம் மிகவும் பருத்துப்போதல், இரத்த தோஷத்தினு லுண்டாகும் அபீஷ்யந்தம், திமிர், நாசி, வாய் முதலிய அவயவங்கள் துர்நாற்ற முறுதல், கல்லீரலைப் பற்றிய வியாதிகள், மண்ணீரலைப் பற்றிய வியாதிகள், விஸர்ப்பமென்னும் அக்கிவிரணம், வித்ரதி, இரத்தக் கட்டிகள், காதில் புண்ணுண்டாதல், உதடுகளில் புண் உண்டாதல், நாசி அழுன்று போதல், வாய்ப் புண், தலை நோய், உபதம்சம், இரக்த பித்தம் இந்த ரோகங்களில் வைத்தியர் ச்ருங்கங்களாலாவது 1 அட்டைகளைப் பிரயோகித்தாவது சுரைக்குடுக்கைகளாலாவது அல்லது விரைகள் என்னும் காரிரத்தக் குழாய்களைக் கீறியாவது இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும். 13—18.

**இரத்த மோக்ஷணத்திற்குத் தகாதவர்கள்.**—மிகவும் மெலிவுற்ற தேகமுடையவன், அதிகமாய் அடிக்கடியும் புணருபவன், பேடி, பயப்படுந்தன்மையன், கர்ப்பிணீ, பிரஸவித்தவள், பாண்டுரோகி, பஞ்ச கர்மங்களால் விரித்தி யடைந்தவன் 2, ஸ்நேஹபானம் செய்தவன், அர்சஸ்ஸால் பீடிக்கப்படுபவன், சரீரமெங்கும் வீக்கங் கொண்டவன், உதரரோகமுள்ளவன், ச்வாஸ-காஸ ரோகிகள், வாந்தியினுலும் அதிஸாரத்தினுலும் துன்பப்படுபவன், ஸ்வேத சிகித்ஸையினுல் மிகவும் வியர்த்தவன், பதினறு வயதுக்கு உட்பட்டவன், எழுபது முதல் அதற்கு மேற்பட்ட வயதுடையவன், காயம் முதலிய அபிகாதத்தினுல் இரத்தப் பெருக்குள்ளவன் இவர்களுக்கு இரக்த மோக்ஷணம் செய்யக் கூடாது. ஆனல் மேற்கூறியவர்களுக்கு அபாயகரமான நிலைமை நேரிட்டால் அட்டைகளைப் பிரயோகித்து இரத்தத்தை வெளிப்படுத்தலாம் ; சரீரத்தில் விஷம் ஸம்பந்தப்பட்டவர்களுக்கு விரை யென்னும் காரிரத்தக் குழாயைக் கீறி இரத்தத்தைப் பெருக்கி விடுவது நலம். 19—22½.

1. ச்ருங்கம்—பீச்சாங்குழல், [ச்ருங்கமே ஸிரிஞ்ஜ் (Syringe) என்று வழங்கப்படுகிறது.]

2. பஞ்சகர்மங்கள்—89, 290-வது பக்கங்களைப் பார்க்க.

**வாத-பித்த-கபங்களால் துஷ்டமான இரத்தத்தை வெளிப் படுத்தல்.**—வாததோஷத்தினுல் தூஷிக்கப்பெற்ற இரத்தத்தைப் பசுவின் கொம்பினுலான ச்ருங்கத்தினுலும், பித்ததுஷ்டமான இரத்தத்தை அட்டைகளாலும், கபதுஷ்டமானதை சுரைக் குடுக்கைகளைக் கொண்டும் கற்றறிந்த வைத்தியன் வெளிப்படுத்தவேண்டும். த்வந்த்வ தோஷங்களாலும் ஸந்நிபாதத்தினுலும் கோளாறடைந்த இரத்தத்தை மதியூகத்துடன் விராமோக்ஷணம் செய்தும், [1] பதங்களாலும் [2] வெளிப் படுத்தி விடலாம். 23—24½.

**ச்ருங்கம் முதலியவற்றின் பிரயோகத்தால் இரத்தம் சுத்தியாவதில் தாரதம்யம்.**—ச்ருங்கம் என்னும் கருவியினுல் இரக்த மோக்ஷணம் செய்தால், அவ்விதம் செய்யப்படும் பிரதேசத்திலிருந்து பத்து அங்குல தூரம் வரையிலுள்ள இரக்தத்தை அது வலிவுடன் உறிஞ்சும்; அட்டையாலுல் ஒரு முழம் தூரத்திலுள்ள இரத்தத்தை இழுக்கும்; சுரைக் குடுக்கையைப் பிரயோகித்தால் பன்னிரண்டு அங்குலம் தூரம் வரையிலுள்ள இரத்தத்தை ஆகர்ஷணம் செய்யலாம்; பதங்களைக் கொண்டு ஒரு அங்குலம் தூரத்திலுள்ள இரத்தத்தை மட்டும் வெளிப் படுத்தலாம்; விராமோக்ஷணம் செய்தால் சரீரத்தில் எங்கும் வியாபித்துள்ள இரத்தத்திலிருக்கிற தோஷங்களை வெளிப் படுத்தி தேகத்தைச் சுத்தமாக்கி விடலாம். 25, 26.

**இரத்தம் வெளிவர முடியாத நிலைமை:**—குளிர் அதிகரித்த காலங்களிலும், ஆஹாரமுட்கொள்ளாமலிருக்கையிலும், மூர்ச்சையிலும், அதிக நித்திரையிலும், பயந்திருக்கையிலும், ஆயாஸமுண்டான நிலைமையிலும், மல மூத்திரங்கள் வெளிப்படாமலிருக்கும்போதும் இரக்தமோக்ஷணம் செய்ய முயன்ருல் இரத்தம் நன்கு வெளிப் படாது. 27.

**இரத்தம் வெளிவராவிடில் செய்யவேண்டிய உபாயம்.**—இரத்தம் நகுந்தவாறு வெளிவராமற் போகையில் கோஷ்டம் த்ரி

1. விரா — காரிரத்தக் குழாய்; மோக்ஷணம் — அதைக் கீறி இரத்தத்தை வெளிப்படுத்தல்.

2. பதம்—ஏதேனும் கூர்மையான கருவியினுல் இரத்தம் வடியும்படி ஆங்காங்கு கொத்துதல் அல்லது கீறுதல்.

கடு, இந்துப்பு இவற்றைப் பொடி செய்து, இரக்தமோக்ஷணம் செய்வதற்காகக் கீறி விரணமுண்டாக்கிய இடத்தில் தேய்க்க இரத்தம் நன்ருகக் கசியத் தொடங்கும். 28.

இரக்த மோக்ஷணத்திற்கு ஏற்ற அல்லது ஏற்காத காலம்:—ஆகையினால் குளிர் காலங்களிலும், அதிக உஷ்ண காலத்திலும், ஸ்வேத சிகித்ஸையைச் செய்யாமலிருக்கையிலும், அதிகமாய் ஸ்வேதனம் முதலியவற்ருல் வேக்காடு அடைந்திருக்கையிலும் இரக்த மோக்ஷணம் செய்யக்கூடாது. விஷயமுணர்ந்த வைத்தியர் பிணியாளியை யவாகூ என்னும் ஆஹாரத்தை உட்கொள்ளச் செய்து அவன் திருப்தி யடைந்திருக்கையில் இரத்தத்தை வெளிப்படுத்த வேண்டும். 29.

இரத்தம் அதிகமாகப் பெருகுவதற்குக் காரணமும் பரிஹாரமும்:—ஸ்வேத சிகித்ஸையை மிதமின்றி உபயோகிப்பதாலும், காலம் மிக உஷ்ணமாயிருந்தாலும், ஸிரைகளை அளவுமீறி கீறிக் கொத்துவதாலும் இரத்தம் மிகுதியாக வெளிப்படும். அந்த நிலைமையில் அதைத் தடுப்பதற்கு முயலவேண்டும். அவ்வாறு இரத்தம் அதிகமாகப் பெருகிவிடுகையில் செய்யவேண்டியதென்னவென்ருல், வெள்ளிலோத்தி, ஸர்ஜரஸம் என்னும் பிசின், ரீலாஞ்ஜநம் இவற்றை விரணத்தின் முகத்தில் பூசலாம். யவதானியம், கோதுமை இவற்றின் சூர்ணத்தையாவது, மூங்கிலுப்பு, தங்வநம், காவி இவற்றின் சூர்ணத்தையாவது பாம்புத் தோலின் சூர்ணத்தையாவது, பட்டு அல்லது வஸ்திரத்தை எரித்து அதன் பஸ்மத்தையாவது இரத்தப் பெருக்குடன் கூடிய விரணத்தின் முகத்தில் தூவிவிடலாம்; அல்லது விரணத்தின் முகத்தை நன்ருகக் கட்டி சீதளமான வஸ்துக்களை அதன் மேல் தடவி வருவதுடன், அப்பிணியாளிக்கு வேறுவித சீதோபசாரங்களையும் செய்யலாம்; அல்லது எந்த ஸிரை கீறப்பட்டதோ அதே ஸிரையை முதலிற் கீறப்பெற்ற இடத்திற்கு மேலே மறுபடியும் கீறிவிடலாம்; அன்றேல் அந்த இடத்தை க்ஷாரத்தினலாவது அக்னியினலாவது சுட்டு விடுவது நலம். துவர்ப்பான வஸ்துக்கள் விரணத்தின் முகத்தை மூடி இரத்தத்தை நிறுத்தும்; சீதளமான பதார்த்தங்கள் இரத்தத்தை உறையச் செய்து அதைப் பெருகவிடா

மல் தடுக்கும்; க்ஷாரங்கள் என்னும் காரவகைகள் விரண முகத்தைப் பக்குவப்படுத்தி இரத்தத்தைத் தடுக்கும்; ஸிரையிலுண்டான விரண முகத்தைச் சுட்டால் அந்த இரத்தக் குழாய் சுருங்கி இரத்தப் பெருக்கு நின்றுவிடும். 30—33½.

**அண்டவீக்கத்தில் ஸிராதாஹம்:**—இடது பீஜம் வீங்கியிருந்தால் வலது கையின் பெருவிரலுக்கு அடியிலுள்ள ஸிரையைச் சுடுவதும், வலது அண்டம் வீங்கினால் இடது கரத்தின் பெரு விரலின் ஸிரையைச் சுடுவதும் முறை; இவ்வாறு அவ்வவயவங்களிலுள்ள ஸிரைகளைச் சுடுவதிலுள்ள பிரபாவத்தினால் பீஜங்களின் வீக்கம் நிவாரணமாகும். 34, 35.

**விஷூசியில் ஸிராதாஹம்:**—விஷூசிரோகத்தில் குதிகால்களைச் சுடுவதால் ஜாடராக்னி அதிகரிக்கும்; இவ்விதம் சுடுவதால் இரஸதாதுவும், கபமும் நெகிழ்ந்தோடுவதற்கான குழாய்கள் சுருக்கங் கொள்வதால் அவ்வாறு தீபன சக்தி யேற்படுகின்றது. 36

**கல்லீரல் - மண்ணீரல்களின் வீக்கத்தில் ஸிராதாஹம்:**—சிறுவர்களுடைய வயிற்றில் கல்லீரலும் மண்ணீரலும் இரத்ததோஷ அதிகரிப்பதால் வீங்கிவிடும்போது, அவ்வவயவங்களுக்கு நேரா வயிற்றின் மேல் சுடுவதால், அங்குள்ள ரத்தக் குழாய்கள் சுருக்க கொண்டு அவ்வவயவங்களின் வீக்கமும் நிவ்ருத்தியாகும். 37.

**இரத்தத்தை அதிகமாக வெளிப்படுத்தலாகாது.**—இரத்தத்தி தோஷம் சிறிது தங்கியிருந்தாலும், அதனால் வியாதி மறுபடியும் ஸம் வித்து விடாது; ஆகவே தோஷத்துடன் கூடிய இரத்தம் சிறி மிகுந்திருக்குமாறு விட்டுவிடுவது நலமேயன்றி, அதை அளவுமீ வடியச் செய்வது சரீரத்திற்கு ஹிதமல்ல. 38.

**அளவு மீறிய இரக்தமோக்ஷணத்தினாலுண்டாகும் கெடு கள்:**—இரத்தம் அளவுமீறி வடியுமானால் நேத்திரம் கெட்டுப்போத ஆக்ஷேபகமென்னும் இசிவு, நாவறட்சி, திமிரமென்னும் கண்ணோ தலைவலி, பார்ச்வவாயு, ச்வாஸகாஸம், விக்கல், தேக அழற்சி, பாண் ரோகம் இவை ஸம்பவிக்கும்; அல்லது மரணாந்தமான ஆபத்து நேரிடும். 39½.

**இரத்தத்தின் அருமை:**—இரத்தத்தினாலேயே தேகம் உற்பத்தியாகின்றது; தேகம் அதினாலேயே போஷிக்கப்பட்டு ஜீவித்து வருகின்றது; இரத்தமில்லையேல் சரீரத்தினின்றும் ஜீவன் போய்விடும்; ஆகவே கற்றறிந்த வைத்தியர்கள் இரத்தத்தைக் காப்பதிலேயே கருத்தாயிருக்கவேண்டும். 40½.

**இரத்த மோக்ஷணத்தில் சீதோபசாரத்தினாலான வீக்கத்திற்குப் பரிஹாரம்**—இரத்தமோக்ஷணம் செய்த பிறகு சீதோபசாரம் செய்து அதனால் வாயு பிரகோபமடைந்து வலியுடன் அவ்விடம் வீக்கங் கொள்ளுமாயின், இளஞ்சூடான நெய்யினால் அப்பிரதேசத்தில் ஒற்றடம் கொடுக்கவேண்டும். 41½.

**இரத்த மோக்ஷணத்தினால் பலஹீனமானவனுக்கு உசிதமான உணவு.**—இரத்தமோக்ஷணத்தினால் இளைத்துப் போனவனுக்குக் கலைமான், முயல், செம்மறியாடு, கறுத்த மான், வெள்ளாடு இவற்றின் மாம்ஸரஸமாவது, பாலாவது பானம் செய்வதற்கு ஏற்றவையாகும்; காரரிசியினாலான அன்னத்தையும் உபயோகிப்பது நலம். 42½.

**இரத்தமோக்ஷணம் நன்கு நிறைவேறியதன் குறிகள்.**—சரீரத்திலிருந்த துன்பங்கள் நிவிருத்தியாதல், வியாதி குறைதல், தோஷப்பிரகோபங்கள் அல்லது உபத்திரவங்கள் சாந்தமாதல், மனது லாகமடைதல் என்னும் இக்குறிகள் இரக்தமோக்ஷணம் என்கிற இச்சிகித்ஸை நன்கு நிறைவேற்றப்பட்டதன் குறிகளாம். 43½.

**இரக்த மோக்ஷணத்திற்குப் பிறகு பத்தியக்கிரமம்.**—வ்யாயாமம், புணர்ச்சி, சினம், குளிர்ந்த ஜலஸ்நானம், அதிக காற்றில் வஸித்தல் அல்லது உலாவுதல், ஒரு வேளையே உணவுண்பது, பகலில் நித்திரைபோதல், க்ஷாரவகைகள் ஸம்பந்தப்பட்டதும் புளிப்புள்ளதும் காரமுமான உணவுகளை யுண்பது, மனத்துயரம், வாதாடுதல், அஜீர்ணமுண்டாக்கும் உணவு இவை தேகத்திற்கு வேண்டிய வன்மை யுண்டாகும் வரையில் தகாதவைகளாம். 44, 45.

# பதின்மூன்றும் அத்தியாயம்.

---

## நேத்திர சிகித்ஸை.

**பலவித நேத்திரௌஷதங்கள்:—** ஸேகம், ஆச்சியோதநம், பிண்டிகா, பிடாலகம், தர்ப்பணம், புடபாகம், அஞ்ஜநம் இவை முதலிய கல்கங்களைக்கொண்டு நேத்திரவியாதிகளுக்கு சிகித்ஸை செய்யவேண்டும். 1.

### ஸேகம்.

**ஸேகம் செய்யு முறை:—** ஸேகம் செய்துகொள்ளவேண்டிய மனிதனை நேத்திரங்களை மூடச் செய்து, அவற்றின்மேல் நான்கு அங்குலம் உயரத்திலிருந்து தாரைபோல் ஔஷத குணமுள்ள திரவங்களைப் பிரயோகிப்பது "ஸேகம்" அல்லது "பரிஷேகம்" எனப்படும். 2.

**மூன்றுவித ஸேகங்களும் அவற்றின் காலநியமங்களும்:—** அந்த ஸேகம் மூன்று வகைப்படும்: அவற்றுள் "ஸ்நேஹம்" என்கிற ஸேகம் வாத வியாதியிலும், "ரோபணம்" என்பது இரத்தஸம்பந்தமான அல்லது பித்த ஸம்பந்தமான வியாதிகளிலும், "லேகநம்" என்பது கபவியாதியிலும் பிரயோகிக்கக்கூடியனவாம்[1]. இம்மூன்றையும் பிரயோகிக்கும் கால அளவு பின்வருமாறு: சற்றேறக் குறைய அறுநூறு மாத்திராகாலம் ஸ்நேஹ ஸேகத்தையும், நானூறு மாத்திராகாலம் ரோபண ஸேகத்தையும், முன்னூறு மாத்திராகாலம் லேகந ஸேகத்தையும் பிரயோகிப்பது முறையாம். ஸேகமென்னும் இச்சிகித்ஸை செய்வதற்கு ஏற்றது பகல் வேளையே; ஆபத்தான அல்லது அதிசீக்கிரத்தில் சிகித்ஸை செய்யவேண்டியதான வியாதியில் இரவிலும் ஸேகம் செய்யலாம். 3—4½.

---

1. ஸ்நேஹந ஸேகம்—நெய், பால் முதலிய பதார்த்தங்களால் செய்யப்படும் ஸேகம்; ரோபணஸேகம்—அழற்சி அல்லது விரண முதலியவற்றை ஆற்றுவது; லேகந ஸேகம்—தோஷங்களைக் கரைத்து வெளிப்படுத்தும் ஸேகம்.

பலவித ஸேசநௌஷதங்கள்—(1) வெள்ளாட்டுப்பாலே ஆமணக்கின் வேர்-இலை-பட்டை இவற்றைச் சேர்த்துக் காய்ச்சி நேத்திரத்தில் வாதாபிஷ்யந்தம்¹ என்னும் நோயைப் போக்குவதற்கு இளஞ்சூடாக ஸேகம் செய்வது நலம். (2) இந்துப்பைச் சேர்த்துக்காய்ச்சிய பாலேயாவது, மஞ்சள், மரமஞ்சள், இந்துப்பு இவற்றைச் சேர்த்து பக்குவம் செய்த பாலேயாவது அவ்விதமே வாதாபிஷ்யந்தம், வாதவிபர்யயம் என்னும் நேத்திர ரோகங்களில் பரிஷேகம் செய்வது ஹிதமாயிருக்கும்; இந்த ஸேகமே சுஷ்காக்ஷிபாகம் என்கிற நேத்திரவியாதியிலும் எப்பொழுதும் உபயோகமுள்ளதாம். (3) வெள்ளிலோத்தியின் பட்டை, அதிமதுரம், இவ்விரண்டையும் ஸமபாகம் சேர்த்து, நெய்யிற் பொரித்து, நுண்மையாகப் பொடிசெய்து, அப்பொடியை வெள்ளாட்டுப் பாலில் சேர்த்துக் காய்ச்சி² அதைக் கண்களின்மேல் தாரைபோல் ஊற்றிவந்தால் பித்தத்தினுலும் இரத்தத்தினுலும் உண்டாகும் அபிஷ்யந்தம் நிவாரணமாகும். (4) த்ரிபலை, வெள்ளிலோத்தி, அதிமதுரம், சர்க்கரை, சிறுகோரைக்கிழங்கு, இவற்றைக் கல்கமாகச் செய்து குளிர்ந்த ஜலத்தில் கலக்கி ஸேகம் செய்தாலும் இரத்தஸம்பந்தமான அபிஷ்யந்தம் தீரும். (5) செவ்வரக்கு, அதிமதுரம், மஞ்ஜிஷ்டி, வெள்ளிலோத்தி, கருஞ்சந்தனம், வெண்தாமரை இவற்றின் கல்கம் கலந்த குளிர்ந்த ஜலத்தை ஸேகம்

---

1. அபிஷ்யந்தம்—இதைப்பற்றி 80-வது பக்கம் பார்க்க. [இவ்வத்தியாயத்தில் மேலே வரும் நேத்திர ரோகங்களைப் பற்றிய விவரங்களை 76-முதல் 81-வது பக்கம் வரையிலும் மூலத்திலும், டிப்பணியிலும் பார்த்துக்கொள்க.]

2. ஸம்ஸ்கிருதத்திலுள்ள சார்ங்கதரஸம்ஹிதையில் (நிர்ணய ஸாகர) சாகக்ஷீரே ச்ருதம் என்பதற்குப் பதிலாக சாகக்ஷீரே க்ருதம் என்று பிழைபட அச்சிடப்பட்டிருக்கிறது; ச்ருதம் என்பதற்கு ஏற்றவாறு பாலில் காய்ச்சி என்று மொழிபெயர்த்துப் பொருள் இங்கு வரையப்பட்டதென்று அறிக.

3. காலாநுஸார்யகம் என்பதற்குப் பதிலாக காலாநுஸாரிப: என்று ஸம்ஸ்கிருதத்தில் (நிர்ணய ஸாகர) அச்சிடப்பட்டிருக்கிறது; காலாநுஸார்யகம் என்பது கருஞ்சந்தனம் எனப்படும்; கல்மரம் என்றும் கூறுவர்.

செய்தாலும் இரக்தாபிஷ்யந்தம் சாந்தமாகும். (6) வெள்ளிலோத்திப் பட்டையை நெய்யிற் பொரித்து சூர்ணம் செய்து வஸ்திரகாளிதம் பண்ணி, உஷ்ணஜலத்தில் கரைத்து ஸேகம் செய்ய நேத்திரத்தி லுண்டான சூலம் அல்லது வலி நிவ்ருத்தியாகும். 5—11½.

## ஆச்சியோதநம்.

**ஆச்சியோதந முறைகள்:**—கண்களைத் திறந்து திருஷ்டியின் மத்தியில் திரவமான ஔஷதத்தை இரண்டு அங்குலம் உயரத்திலி ருந்து துளித் துளியாக விடுவதற்கான முறையே 'ஆச்சியோதநம்' எனப்படும்; இச்சிகித்ஸையை இராக்காலத்தில் செய்யக்கூடாது. ஆச்சியோதநம் என்னும் முறையும் லேகநம், ஸ்நேஹநம், ரோபணம்,[1] என்று மூவகைப்படும். ஆச்சியோதநத்திற்கான ஔஷதத்தை லேகந சிகித்ஸையில் எட்டுத் துளிகளாகவும், ஸ்நேஹந சிகித்ஸையில் பத்துத் துளிகளாகவும், ரோபணத்தில் பன்னிரண்டு துளிகளாகவும் பிரயோ கிக்கவேண்டும். அவ்வௌஷதத்தை சில காலங்களில் சிறிது உஷ்ண மாகவும், கோடை காலங்களில் குளிர்ச்சி பொருந்தியதாகவும் உபயோ கிக்கவேண்டும்; இம்முறை எல்லாவிடத்திலும் பெரும்பாலும் பொதுவானதென்றே கருதப்படும். 12—14.

**வாதாதிதோஷங்களுக்கேற்ற ஆச்சியோதந ஔஷதங்கள்:**—வாத ஸம்பந்தமான நேத்திர ரோகத்தில் கசப்பும் ஸ்நிக்த்தமு மான ஔஷதத்தை ஸேசநத்திற்கு உபயோகிப்பது நலம்; பித்த ஸம் பந்தமான வியாதிகளில் மதுரமும் குளிர்ச்சியும் பொருந்திய ஔஷ தங்களையும், கபரோகங்களில் கசப்பும் உஷ்ணவீர்யமும் வறட்சியு முள்ள ஔஷதங்களையும் உபயோகிக்கவேண்டும். எல்லா ஆச்சியோ தந ஔஷதங்களையுமே நூறு மாத்திராகாலம் நேத்திரத்தில் வைத் துக்கொண்டிருக்கவேண்டும்.[2] 15—16½.

---

1. ஆச்சியோதனத்தில் லேகநம், ஸ்நேஹநம், ரோபணம் என் கிற முறைகள் ஸேக விதியில் கூறப்பட்ட விதமேயாம்.

2. இமை கொட்டுதல், விரல்களால் சுடிக்கைப் போடுதல், நெடிலெழுத்தை உச்சரித்தல் இவற்றிற்கு எவ்வளவு காலமோ அது ஒரு மாத்திரை அல்லது வாங்மாத்திரை எனப்படும்.

**பலவித ஆச்சியோதநௌஷதங்கள்.**—(1) *பில்வாதி பஞ்ச மூலங்களையும், கண்டங்கத்திரி, ஆமணக்கு இவற்றின் வேரையும், முருங்கப்பட்டையையும் க்வாதமாகக் காய்ச்சி வடிகட்டி, இளஞ் சூடாயிருக்கையிலே ஆச்சியோதநம் செய்ய வாததோஷஸம்பந்தமான அபிஷ்யந்தம் தீரும். (2) வேப்பிலைகளைச் சிறிது ஜலம் விட்டு அரைத்து, வெள்ளிலோத்தியின் பட்டையின்மேல் அக்கல்கத்தைப் பூசி, நெருப்பிலிட்டு அதை நன்றாக வதக்கி, அப்பட்டையையும் கல்கம் போல் நசுக்கி இரஸம் பிழியவும்; இச்சாற்றை நேத்திரத்தினுள் ஊற்ற வாததோஷத்தினாலும் இரக்தபித்தத்தினாலும் உண்டான அபிஷ்யந்தம் நிவாரணமாகும். (3) த்ரிபலையை க்வாதம் செய்து ஆச்சியோதநம் செய்தாலும் எல்லா அபிஷ்யந்தங்களும் போய்விடும். (4) முலைப்பாலை நேத்திரங்களில் விட்டுவந்தால் இரக்தபித்த ஸம்பந்தமான வியாதிகளையும், வாத ஸம்பந்தமான வியாதிகளையும் போக்கலாம். (5) பாலில் சேர்த்துக் காய்ச்சிய 'க்ஷீரஸர்ப்பிஸ்' என்னும் க்ருதத்தை நேத்திரத்தில் ஆச்சியோதநம் செய்து, அதைச் சிறிது நேரம் துடைக்காமல் வைத்துக்கொண்டிருந்தாலும் வாத-ரக்த ஸம்பந்தமான வியாதி நிவ்ருத்தியாகும். 17—20½.*

## பிண்டிகா.

**பிண்டிகையின் முறை.**—*நேத்திரரோகங்களில் உபயோகிக்கக் கூடிய ஔஷதச் சரக்குகளைக் கல்கம்போல் செய்து, பட்டு முதலிய வஸ்திரங்களால் அக்கல்கத்தை நேத்திரங்களின்மேல் வைத்துக் கட்டும் முறையே பிண்டீ அல்லது கவலிகை என்று வழங்கப்படும்; இதை நேத்திரத்திலுண்டாகும் அபிஷ்யந்தம் என்கிற வியாதியிலும், விரணங்களிலும் கட்டுவதற்கு உபயோகிக்கலாம். 21½.*

**அபிஷ்யந்தத்தில் பிண்டிகை உபயோகிக்கும் கிரமம்.**—*கபம் கோளாறடைந்து அதனால் அபிஷ்யந்தமும் அதிமந்தமும் உண்டானால், முதலில் அப்பிணியாளியின் சிரஸ்ஸுக்கு ஸ்நேஹ சிகித்சையையும், ஸ்வேத சிகித்சையையும் செய்து முடித்து,*[1] *தீக்ஷணவீர்ய*

1. *சிரஸ்ஸுக்கு ஸ்நேஹ சிகித்சை செய்யு முறையைப் பற்றி இதே கண்டத்தில் 11-வது அத்தியாயத்தில் 'சிரோவஸ்தி' விதியைப் பார்க்க.*

முள்ள ஔஷதங்களைக் கொண்டு சிரோவிரேகம் [1] செய்விக்க வேண்டும். பிறகு எல்லாவித அதிமந்தங்களிலும் நெற்றியிலுள்ள ஸிரையைக் கீறி இரக்த மோக்ஷணம் செய்வது முறை ; அதனால் அதிமந்தம் சிறிதும் நீங்காவிட்டால், புருவங்களுக்குமேல் தாஹசிகித்ஸை செய்ய வேண்டும். அவ்வாறே கற்றறிந்த வைத்தியர் எவ்வித அபிஷ்யந்த ரோகத்திலும் கண்களின்மேல் பிண்டிகையைக் கட்டுவது முறையாம். 22—24.

**பலவித பிண்டிகைகள்.**—வாதஸம்பந்தமான அபிஷ்யந்தத்தைப் போக்குவதற்காக ஸ்நிக்த்தமானதும், உஷ்ணமுமான பிண்டிகை உபயோகமானதாம். (1) ஆமணக்கின் வேரையும் இலையையும் பட்டையையும் பிண்டிகையாகச் செய்து வாதாபிஷ்யந்தத்தில் பிரயோகிக்கலாம். (2) நெல்லிக் கனியின் பிண்டிகை பித்தாபிஷ்யந்தத்தைப் போக்கி ஸுகமுண்டுபண்ணும் ; வெகு நாட்பட்ட வேப்பமரத்தின் காய்களையாவது பித்தாபிஷ்யந்தநோயைப் போக்க பிண்டிகையாக உபயோகிக்கலாம். (3) முருங்கயிலைகளால் செய்த பிண்டிகையானது கப ஸம்பந்தமான அபிஷ்யந்தத்தைப் போக்கும். (4) வேப்பிலைகளால் செய்த பிண்டிகை கப-பித்தங்களாலுண்டாகும் அபிஷ்யந்தங்களை அகற்றும் ; த்ரிபலையின் பிண்டிகையும் கப பித்தங்களாலுண்டாகும் அபிஷ்யந்தங்களைத் தீர்க்கும். (5) வெள்ளிலோத்தியின் பட்டையைக் காடியில் அரைத்து, நெய்யிற் கிளறி நேத்திரங்களில் கட்ட இரத்தஸம்பந்தமான அபிஷ்யந்தம் தீரும். (6) சுக்கையும், வேப்பிலையையும், சிறிது இந்துப்பையும் சேர்த்து அவற்றைக் கல்கமாய் அரைத்து வதக்கி இளஞ்சூடாக நேத்திரங்களிற் கட்டினால் அவற்றின் வீக்கம், அரிப்பு, வலி இவை நீங்கும். 25—29½.

## பிடாலகம்.

**பிடாலகம் செய்யு முறை.**—கண்களைச் சுற்றிலும் வெளியில் இமைகளிற் படாமல் பூசப்படும் லேபம் 'பிடாலகம்' எனப்படுகின்றது ; அந்த லேபத்தை முகலேபநவிதிப்படி அவ்வளவு கனமாக உப

---

1. சிரோவிரேகம்—நஸ்யவிதி அத்தியாயத்தையும் தூமபாநவிதி அத்தியாயத்தையும் கவனிக்க.

போகிக்கவேண்டும்.[1] பிடாலகப் பிரயோகத்திற்கேற்ற முறைகள் சில அடியிற் கூறப்படுகின்றன. 30½.

**பலவித பிடாலகங்கள்:**—(1) அதிமதுரம், காவி, இந்துப்பு, மரமஞ்சள், இரஸாஞ்ஜனம் இவற்றை ஸம அளவாக எடுத்து, ஜலஞ் சேர்த்து ஆட்டி, கண்களுக்கு வெளியில் அவற்றைச் சுற்றிலும் லேபநம் செய்ய ஸகல நேத்திர ரோகங்களும் தீரும். (2) இரஸாஞ்ஜனத்தையும் கடுக்காயையும் சுக்கையும் பச்சிலையையும் கல்கம்போல் அரைத்தாவது பிடாலகமாக உபயோகிக்கலாம். (3) சோற்றுக் கற்றாழை, சித்திரமூலம், பச்சிலை, மாதளந்தளிர் இவற்றின் கல்கத்தையும் அவ்வாறு லேபநம் செய்யலாம். (4) வசம்பு, மஞ்சள், வேப்பம் பட்டை இவற்றையும் பிடாலகமாக உபயோகிக்கலாம். (5) சுக்கையும் காவியையும் அரைத்தும் அவ்விதம் செய்யலாம். (6) வெள்ளிலோத்திப் பட்டையையும் இந்துப்பையும் எரித்து, தேன் மெழுகைச் சேர்த்து நெய்யில் அவற்றை நுண்மையாகப் பொடித்துக் கலந்து அஞ்ஜநமாகவாவது பிடாலகமாகவாவது உபயோகிக்க நேத்திரத்திலுண்டாகும் வலி உடனே தீரும். (7) வேப்பங்காயை இடித்து இரஸம் பிழிந்து, ஒரு சுத்தமான இரும்புப் பாத்திரத்தில் ஊற்றி நன்றாகக் குழப்பவும்; அது சிறிது குழம்புபோல் ஆனபிறகு அதைக் கண்களைச் சுற்றிலும் லேபநம் செய்ய, கண்வலி சாந்தமாகும். (8) மிளகைப் பொடி செய்து, அதைக் கரிசலாங்கண்ணிச் சாற்றில் அரைத்து நேத்திரத்தைச் சுற்றிலும் லேபநம் செய்ய அர்மங்கள் என்னும் வியாதிகள் அடியோடு தொலையும். (9) அஞ்ஜநநாமிகா என்னும் ரோகத்தில் முதலில் ஸ்வேதசிகித்சையினால் அதைக் கரைத்து, அப்பால் மனச்சிலை, ஏலம், நதம் என்கிற வாஸனைத் திரவ்வியம், இந்துப்பு இவற்றைப் பொடி செய்து தேன் விட்டுக் கூட்டி லேபநமாக உபயோகிக்கலாம். 31—37.

## தர்ப்பணம்.

**தர்ப்பணமும் அதற்கேற்ற கண்ணோய்களும்.**—அப்பால் 'தர்ப்பணம்' என்னும் மற்றொரு நேத்திர சிகித்சை கூறப்படுகிறது; கண்

1. முகலேபந முறையைப்பற்றி 297-வது பக்கம் பார்க்க.

களுக் குண்டாகும் சில கோளாறுகளைப் போக்கி அவற்றிற்கு வேண்டிய வன்மையைக் கொடுத்து த்ருப்தி யுண்டாக்கும் முறையே 'தர்ப்பணம்' எனப்படுகின்றது. எவருடைய நேத்திரம் ரூக்ஷமாகவும்,[1] வறட்சி யுடையதாகவும், வக்கிரமாகவும், கலங்கியதாகவும், இமை மயிர்களுதிர்ந்ததாகவும், ஸிரோத்பாதம், க்ருச்சிரோந்மீலனம், திமிரம், அர்ஜுனம், சுக்லம், அபிஷ்யந்தம், அதிமந்தம், சுஷ்காக்ஷிபாகம், வாத விபர்யயம் என்னும் ரோகங்களுடையதாகவும், வீக்கங்கொண்டதாகவும் இருக்கின்றதோ அவர்களுடைய கண்களுக்கு 'தர்ப்பணம்' என்னும் இச்சிகித்ஸை ஏற்றதாகும்; நேத்திர ரோகங்களை யறிவதில் நிபுணராயிருப்பவர் அவ்வித நோய்களில் இம்முறையைப் பிரயோகிக்க வேண்டும். 38—40.

**தர்ப்பணத்திற்குத் தகாத காலம் முதலியது.**—மாரிகாலத்திலும், அல்லது மேகத்தினுல் சூரியன் மறைக்கப்பட்ட நாட்களிலும், கோடைகாலத்திலும், அல்லது மிகச் சூடான ஸமயங்களிலும், குளிர் காலத்திலும், பிணியாளிக்கு மனக்கவலை, தேகத்தில் அசைதி, தலைச் சுற்றல் இவை உண்டாயிருக்கும்போதும், உபத்திரவங்கள்[2] அடங்காமலிருக்கையிலும் தர்ப்பண சிகித்ஸையைச் செய்வது உசிதமல்ல. 41.

**நேத்திரதர்ப்பண முறை:**—அதிக காற்றோட்டமில்லாததும், வெயில் தும்பு தூசி முதலியவை யற்றதுமான ஒரு பிரதேசத்தில் பிணியாளியை மல்லாந்து சயனிக்கச் செய்து, ஜலம் விட்டுப் பிசைந்த உளுத்தமாவைக் கொண்டு இரண்டு கண்களைச் சுற்றிலும் தனித் தனியே இரண்டு வரம்புகளைச் சிறிது உயரமாகவும், கெட்டியாகவும், ஒன்றுக்கொன்று ஸம்பந்தப் படாதவையாகவும், மேடுபள்ளமில்லாமல் ஸம உயரமுடையனவாகவும், வட்டமாகவும் கட்டவேண்டும். ஆடையில்லாத நெய்யை இளஞ்சூடான ஜலத்தில் வைத்து உருக்கி, அதை அவ்வரம்புகளுக்குள் ஊற்றலாம்; அல்லது சததௌத க்ருதத்தை

---

1. வறட்சி-என்பது ஜலப்பசையற்றது; ரூக்ஷம்-என்பது எண்ணெய் அல்லது கொழுப்புப் பசையற்றிருப்பது

2. உபத்திரவம்—47-வது பக்கம் பார்க்க.

யாவது,[1] பாலைச் சிலுப்பியெடுத்த வெண்ணெயாலாகிய நெய்யை யாவது அக்கண்களின் மேல் ஊற்றலாம்; முதலில் கண்களை மூடிக் கொள்ளச் செய்து, இவற்றின் மேல் இரெப்பைகள் அமிழும் வரையில் அவ்வாறு நெய்யை ஊற்றுவது முறை; பிறகு மெல்ல மெல்ல கண்களைத் திறக்கவேண்டும். 42—44½.

**தர்ப்பணௌஷதம் ஊறவேண்டிய கால அளவு:**—வர்த்ம ரோகங்களில் நூறு மாத்திராகாலமும், கபதோஷம் கலந்து அது சுத்தமான நிலைமையிலும், நேத்திரஸந்திகளைப்பற்றிய வியாதிகளிலும் ஐந்நூறு மாத்திரகாலமும், த்ருஷ்டியைப்பற்றிய ரோகங்களில் எண்ணூறு மாத்திராகாலமும், அதிமந்தத்தில் ஆயிரமாத்திராகாலமும் க்ருதம் முதலிய தர்ப்பணௌஷதங்களை நேத்திரங்களில் அவ்வாறே ஊறி நிற்கும்படி வைத்திருக்கவேண்டும். இவ்வாறு செய்ய தர்ப்பணம் என்னும் க்ரியை நிறைவேற்றப்பட்டதாகும். 45—47.

**தர்ப்பணத்தினால் பிரகோபித்த கபத்தைக் கழித்தல்:**—ஸ்நேஹத்தின் வீர்யத்தால் கிளப்பிவிடப்பெற்ற கபத்தை அப்பிணியாளியின் அவ்வவயவத்திலிருந்து பிறகு வெளிப்படுத்த முயலவேண்டும்; அதற்காக யவதானியத்தைச் சமைத்து, அவ்வன்னத்தினால் சுடச்சுடக் கண்களைச் சுற்றிலும் ஸ்வேத சிகித்ஸையைச் செய்யலாம்;[2] அல்லது தூமபானம் செய்வித்தாவது அக்கபத்தைக் கழிக்கலாம். 48.

**எத்தனை நாட்கள் தர்ப்பணம் செய்யவேண்டும்? :**—நேத்திரங்கள் ஆரோக்கியநிலைமையைப் பெறுமளவும் இச்சிகித்ஸையைச் செய்யவேண்டும்; அவை ஒரே தினத்தில் ஸுகமடைந்தாலும் இச்சிகித்ஸையை அத்துடன் நிறுத்திவிடலாம்; இல்லாவிடில் மூன்று நாட்களாவது ஐந்து நாட்களாவது தர்ப்பண சிகித்ஸையைச் செய்து வரவேண்டும்; அதற்குமேல் செய்யக்கூடாது. 48½.

**தர்ப்பணம் நிறைவேறியதன் குறிகள்:**—நேத்திரங்கள் தர்ப்பண சிகித்ஸையினால் திருப்தியடைந்தனவென்பதற்கு அடியிற்

---

1. சததௌத க்ருதம்—இதைப்பற்றி 304-வது பக்கம் பார்க்க.
2. ஸ்வேத சிகித்ஸை—இங்கு உபநாஹஸ்வேதம் செய்யவேண்டும்; இதைப்பற்றி 247-வது பக்கம் பார்க்க.

கூறப்படுபவை குறிகளாகும்:—ஏற்ற காலங்களில் ஸுகமாக நித்திரையுண்டாய், தகுந்த நேரத்தில் விழிப்புமுண்டாகும்; கண்கள் நிர்மலமாய் இயற்கை நிறங் கொள்ளும்; தொந்தரவுகள் நிவ்ருத்தியாய் கண்கள் ஸுகம் பெற்றிருக்கும். 49, 50.

**முறை தவறிய தர்ப்பணக் குறிகளும் பரிஹாரமும்:**—அப்பால் முறை தவறிய தர்ப்பண சிகித்ஸையினாலுண்டாகும் குறிகள் கூறப்படுகின்றன:—அளவு மீறி தர்ப்பணசிகித்ஸை செய்யப்படுமானால் கண்களில் நீர் கசியும்; அவை கனத்துத் தோற்றும்; மிகவும் ஸ்நிக்த்தமாயிருக்கும். வேண்டியயளவு[1] தர்ப்பணசிகித்ஸை செய்யப்படாவிடின் கண் ரூக்ஷமாயிருக்கும்; கண்ணீர் அடிக்கடிக் கசிந்து நேத்திரம் கலக்கங் கொள்ளும்; வியாதி நிவ்ருத்தியாகாமல் வலியுடன் கூடியதாகவுமிருக்கும். அளவு மீறிய தர்ப்பணத்தினாலான கோளாறுகளுக்கு உடனே ரூக்ஷகுணமுண்டாகும் சிகித்ஸையையும், வேண்டியவளவு செய்யப்படாத 'ஹீனதர்ப்பணத்திற்கு' அதற்கு மாறாக ஸ்நிக்த்த குணந்தரும் சிகித்ஸையையும் செய்வது அக்கோளாறுகளைப் போக்கும் பரிஹாரமுறையாம். 51½.

## புடபாகம்.

**புடபாக ஔஷத முறை:**—இனி புடபாகம் செய்யும் கிரமத்தைக் கூறுவோம்:—2 இரண்டு பலம் மாம்ஸத்தை யெடுத்து, நெய் முதலிய ஸ்நேஹவஸ்துக்களையும் சிறிது சேர்த்து, நன்றாக அரைத்து இரண்டு ஸம அளவான பிண்டங்களாக உருட்டவும். இப்புடபாக கல்பனையில் கடின பதார்த்தங்கள் ஒரு பலமளவு சேர்க்கப்படுமானால், அவற்றை இடித்து ஆட்டுவதற்கான திரவ பதார்த்தங்களை நான்கு பலம் சேர்க்கவேண்டுமென்பது பொது விதியாம். அவ்வாறு ஆட்டியெடுத்த வஸ்துக்களை ஒன்றாகச் சேர்த்து உருட்டி, ஏதேனும் இலை

1. வேண்டியவளவு என்றால்—முற்கூறியவாறு அந்தந்த நேத்திரரோகத்திற்குத் தகுந்த வண்ணம் அந்தந்த மாத்திராகாலங்களுக்கும் குறைவான நேரத்தில் செய்யப்படும் சிகித்ஸையெனக் கருத்து.

2. மத்யமகண்டம் முதல் அத்தியாயத்தில் பலவித புடபாக முறைகள் கூறப்பட்டிருக்கின்றன. அவ்விதமேதான் இங்கு கூறப்படுபவையுமாம்.

களால் அவற்றைச் சுற்றி மூடி, புடபாக முறைப்படி அக்னியிற் பக்குவம் செய்து, அதை யெடுத்துப் பிழிந்து, அதன் ஸ்வரஸத்தைக் கிரஹிக்க வேண்டும். 52—54.

**புடபாக ஸ்வரஸத்தை நேத்திரத்தில் ஊற்றவேண்டிய முறை:**— மேற்கூறியபடி கிரஹித்த அப்புடபாக ஸ்வரஸத்தைக்கொண்டு தர்ப்பண சிகித்ஸையில் கூறியவிதமாக முறை தவறாமல் நேத்திரங்களுக்குச் சிகித்ஸை செய்யவேண்டும்; என்றால் பிணியாளியை மல்லாந்துப் படுக்கச்செய்து, த்ருஷ்டியின் 1 நடுவில் அந்த ஸ்வரஸத்தை விடவேண்டும். இச் சிகித்ஸையை அவசியமான வரையில் தினந்தோறும் செய்துவருவது நலம். 55.

**மூவகைப் புடபாகௌஷதங்கள்.**— இப்புடபாகௌஷதம் ஸ்நேஹநம், லேகநம், ரோபணம் என்று மூவகைப்படும். அவற்றுள் மிக்க ரூக்ஷத்தன்மை யடைந்த நேத்திரத்திற்கு ஸ்நேஹநமும், மிகவும் ஸ்நிக்த்தத் தன்மையைப் பெற்ற நேத்திரத்திற்கு லேகநமும் ஏற்றதாகும்; வேறொரு ரோபணபுடபாகௌஷதமானது பித்த தோஷத்தினாலுண்டான கோளாறுகளையும், இரத்தவிகாரங்களையும், விரணங்களையும், வாத தோஷத்தையும் போக்குவதுடன், த்ருஷ்டியின் சக்தியையும் அதிகரிக்கச் செய்ய வல்லது. நெய், மாம்ஸம், கிணநீர், மஜ்ஜை, கொழுப்பு, இனிய சுவையுள்ள வேறுவித ஔஷதங்கள் இவற்றைக்கொண்டு பக்குவம் செய்யப்பட்ட புடபாகௌஷதம் 'ஸ்நேஹந புடபாகம்' ஆகும். இவ்வித ஔஷதத்தை நேத்திரங்களில் இருநூறு மாத்திராகாலம் ஊறும்படி வைத்துக்கொண்டிருக்க வேண்டும். ஜாங்கல பூமியில் வஸிக்கும் மிருகங்களுடைய கல்லீரல், மாம்ஸம் இவற்றை லேகநகுணமுள்ள பதார்த்தங்களுடன்2 சேர்த்துக் கலக்கவும்; பிறகு உருக்கிரும்பின் பொடி, செம்புப் பொடி, நாகத்தின் பொடி, பவளப்பொடி, இந்துப்பு, கடல்நுரை, அன்னபேதி,

1. த்ருஷ்டி—கண்களில் கருவிழிகளின் நடுவிலுள்ள பாபா (pupil) எனப்படும் பாகம்.

2. லேகநகுணம்—இதைப்பற்றி 19-வது பக்கம் பார்க்க.

ஸ்ரோதோஞ்ஜனம் [1] இவற்றையும் பொடித்து, தயிரின்மேலுள்ள ஆடையினால் அவ்வனைத்தையும் கல்வத்தில் ஆட்டி, முன்போல் பிண்டம் செய்து, புடபாகம் பண்ணி யெடுத்தபிறகு அதன் ரஸத்தை லேகநமாக நேத்திரங்களில் இடலாம். லேகநௌஷததத்தை நேத்திரங்களில் நூறு மாத்திராகாலம் வைத்துக்கொண்டிருக்கவேண்டும். முலைப்பால், ஜாங்கல தேசமிருகங்களின் மாம்ஸம், தேன், நெய், கசப்பான ஓஷதிகள் இவற்றைக்கொண்டு புடபாக முறைப்படி பக்குவம் செய்த ஔஷதமானது ரோபணமாக உபயோகிக்கப்படலாம். இதில் லேகநத்தைவிட மூன்று மடங்கு காலம் ஔஷதத்தை நேத்திரங்களில் ஊறும்படி வைத்துக்கொண்டிருக்கவேண்டும். 56—60½.

**முறை தவறிய புடபாகௌஷத சிகித்ஸைக்குப் பரிஹாரம்.—** புடபாகௌஷதங்களைக் கொண்டு செய்யப்படும் சிகித்ஸையானது தர்ப்பணத்திற்கு ஏற்ற முறையாகவே இருப்பதால், இதில் முறை தவறிய சிகித்ஸைகளால் கோளாறுகள் நேர்ந்தால், அவற்றிற்கும் தர்ப்பணத்திற்குக் கூறிய பரிஹார முறைகளே தகுந்த சிகித்ஸைகளாம். 61.

## அஞ்ஜநம்.

**அஞ்ஜநப் பிரயோகத்திற்கேற்ற காலம்:—** முற்கூறிய சிகித்ஸா கிரமங்களால் நேத்திரதோஷங்கள் ஒருவாறு பக்குவநிலைமைக்கு வந்த பிறகு, முறைப்படி தகுந்த வேளையில் அஞ்ஜநவிதியை நிறைவேற்றவேண்டும். ஹேமந்த ருதுவிலும், சிசிரருதுவிலும் பகல் நேரத்தில் அஞ்ஜநம் பிரயோகிக்கவேண்டும்; க்ரீஷ்மருதுவிலும், சரத் ருதுவிலும் காலையிலாவது மாலையிலாவது அஞ்ஜந கர்மம் செய்யலாம்; வர்ஷருதுவில் ஆகாயம் மேகத்தினால் மூடப்பட்டிருக்கையிலும், அதிக வெயில் காயும்போதும் அஞ்ஜநமிடுவது பிசகு; வஸந்த ருதுவில் இதை எந்த நேரத்திலும் செய்யலாம். 62, 63.

---

1. ஸ்ரோதோஞ்ஜனம்—இதை ஹிந்தி முதலான பாஷைகளில் 'ஸுர்மா' என்று வழங்குகின்றனர்; சிலர் தமிழில் இதை நீலாஞ்ஜனம் என்பார்கள்; ஆங்கிலத்தில் Sulphurate of antimony என்பர்.

**த்ரவத்தில் மூவகைப்பட்ட அஞ்ஜநங்கள்:**—அஞ்ஜநமானது லேகநம், ரோபணம், ஸ்நேஹநம் என்று மூன்று விதமாம். அவற்றுள் லேகநமென்னும் அஞ்ஜநம் க்ஷாரங்களாலும், தீக்ஷணவீர்யமுள்ள வேறு பதார்த்தங்களாலும், அம்லரஸமுள்ள வஸ்துக்களாலும் செய்யப்படும். ரோபணாஞ்ஜநமென்பது துவர்ப்பும், கசப்புமான இரஸமுள்ள வஸ்துக்களால் செய்யப்படுவதாம்.[1] ஸ்நேஹநமென்கிற அஞ்ஜநம் மதுரரஸமுடையதாகவும், விசேஷ ஸ்நேஹஸம்பந்தமுடையதாகவும் இருக்கவேண்டும்; அதுவே ப்ரஸாதநாஞ்ஜநமாகவும்[2] கருதப்படும். 64, 65.

**உருவத்தில் மூவகைப்பட்ட அஞ்ஜநங்கள்:**—குளிகை, ரஸக்ரியை, சூர்ணம் என்று அஞ்ஜநம் மீண்டும் உருவத்தில் மூன்று வகைப்படும். இவற்றை முறைப்படியே இழைத்து சலாகையினாலாவது, விரல்களாலாவது நேத்திரங்களில் இடவேண்டும். இவற்றுள் குளிகையை விட ரஸக்ரியையும், அதைவிட சூர்ணமும் முறையே வீர்யத்தில் குன்றியவைகளாம். 66.

**அஞ்ஜநத்திற்கு ஆகாத நிலைமைகள்:**—ஏதேனும் அபாயகரமான வேலைகளைச் செய்து அயர்ந்திருக்கையிலும், புலம்புகையிலும், பயந்திருக்கையிலும், மத்யபானம் செய்திருக்கும்பொழுதும், நவஜ்வர நிலைமையிலும், அஜீர்ணமாயிருக்கையிலும், வேகங்களை அடக்கியிருக்கும் போதும் அஞ்ஜநத்தைப் பிரயோகிப்பது உசிதமல்ல. 67.

**மூன்றுவித அஞ்ஜநகுளிகைகள்:**—குளிகையாகச் செய்யப்படும் அஞ்ஜநமானது தீக்ஷ்ணாஞ்ஜநம், மித்யமாஞ்ஜநம், மிருத்வஞ்ஜநம் என

---

1. இங்கு ஸம்ஸ்க்ருதமூலத்தில் நிர்ணயஸாகர முத்ராக்ஷர சாலையின் புஸ்தகப்படி "கஷாயதிக்தரஸயுக் ஸ்நேஹநம் ரோபணம் மதம், மதுரம் ஸ்நேஹஸம்பந்நமஞ்ஜநம்" என்று இருப்பது பிசகு. அதை "கஷாயதிக்தரஸயுக்ரோபணம் ஸ்நேஹநம் மதம், மதுரம் ஸ்நேஹஸம்பந்நம்..." என்று மாற்றிப் படிக்கவேண்டும். துவர்ப்பும் கசப்புமான வஸ்துக்கள் ரோபணத்திற்கு உபயோகமானவை யென்பதும், அவ்விதமே மதுரமும் எண்ணெய்ப் பசையுள்ளதுமான பதார்த்தங்கள் ஸ்நேஹநங்களாக இருப்பவையென்பதும் பிரஸித்தம்.

2. ஸ்நேஹநாஞ்ஜநத்தினால் கண்களுக்குத் தெளிவுண்டாவது இயல்பாதலால் அது **ப்ரஸாதநாஞ்ஜநம்** என்று கூறப்பட்டதென்க.

மூன்று வகைப்படும். அவற்றுள் தீக்ஷ்ணாஞ்ஜநத்திற்கான குளிகையைப் பிரமாணத்தில் ஓர் அரேணுகம் அல்லது வாய்விடங்கத்தின் அளவாகச் செய்யவேண்டும்; மத்யமாஞ்ஜநத்திற்கான குளிகையை ஒன்றரை அரேணுகத்தின் அளவாகவும், மிருத்வஞ்ஜநகுளிகையை இரண்டு அரேணுகங்களின் அளவாகவும் செய்துகொள்ள வேண்டும். 68.

**மூன்றுவித ரஸக்ரியாஞ்ஜநம்:**—மூன்று விடங்கங்களின் அளவான ரஸக்ரியை யென்னும் அஞ்ஜநௌஷதம் உத்தமப்பிரமாணம் என்றும், இரண்டு விடங்கங்களின் அளவுகொண்டது மத்யமப்பிரமாணமென்றும், ஒரு விடங்கத்தின் அளவுகொண்டது ஹீநமாத்திரை யென்றும் கருதப்படும்.[1] 69.

**மூன்றுவித சூர்ணாஞ்ஜநம்:**—அஞ்ஜநத்தில் சூர்ணமென்னும் பாகமும் விரேசந சூர்ணமென்றும், மிருது சூர்ணமென்றும், ஸ்நேஹ சூர்ணமென்றும் மூன்றுவிதமாம். அவற்றுள் விரேசந கர்மத்தில் உபயோகிக்கப்படும் சூர்ணத்தை இரண்டு சலாகை அளவு கொண்டதாய்[2] உபயோகிக்கவேண்டும்; மிருத்வஞ்ஜநமாயின் அதை மூன்று சலாகைகள் பிரயோகிப்பது உசிதம்; ஸ்நேஹகர்மத்திற்கு ஏற்றவாறு டக்குவம் செய்த சூர்ணாஞ்ஜநத்தை நான்கு சலாகைகள் பிரயோகிக்கவேண்டும். 70.

**அஞ்ஜநசலாகைகளைச் செய்யுமுறை:**—அஞ்ஜனமிடுவதற்கு உபயோகமான சலாகையானது எட்டு அங்குலம் நீளமாகவும், வெகு வழுக்கையாகவும், கூர்மையில்லாமல் மழுக்கங்கொண்ட இரு முனைகளையுடையதாகவும் அமைக்கப்பட்டிருக்கவேண்டும். அது ஏதேனும் தகுந்த சிலையினாலாவது, லோஹங்களாலாவது ஆக்கப்படலாம். அஞ்ஜநங்களை லேகநகர்மத்தின் பொருட்டு உபயோகிக்க தாம்ரத்

1. இங்கு கூறப்பட்டுள்ள உத்தம—மத்யம—ஹீநமாத்திரைகள் முறையே தீக்ஷ்ணாஞ்ஜநம், மத்யமாஞ்ஜநம், மிருத்வஞ்ஜநம் என்றும் கூறப்படும்.

2. சூர்ணத்தை ஏதேனும் திரவவஸ்துவிற் கலந்து இழைத்து அஞ்ஜநமாக உபயோகிக்கவேண்டும்; அதில் ஒரு சலாகையினால் எவ்வளவு ஔஷதம் எடுக்கக்கூடுமோ அந்த அளவு ஒரு சலாகை கொண்ட அளவெனப்படும்.

தினுலாவது, அயத்தினுலாவது, சிலையினுலாவது ஆக்கப்பட்ட சலா கையை உபயோகிக்கவேண்டும். ஸ்நேஹநாஞ்ஜநத்தை இடுவதற்கு பொன் அல்லது வெள்ளியினுல் செய்யப்பட்ட சலாகை உபயோகிக் கத் தகுந்ததாம். ரோபணகர்மத்தில் சலாகை அங்குலியைப்போல் மிகவும் மிருதுவாயிருக்கவேண்டும்.[1] 71—72½.

**அஞ்ஜநமிடும் முறை:**—மாலை நேரத்திலாவது, விடியற்காலத்தி லாவது அஞ்ஜநம் பிரயோகிக்கக்கூடியதாம்; அதை எந்த நேரத்தி லும் தோன்றியவாறு உபயோகிக்கவே கூடாது. அதிக குளிரில்லா மலும், அதிக சூடில்லாமலும், அமிதமாகக் காற்று வீசாமலும், ஆகாயம் அதிகமாக மேகங்களால் மூடப்படாமலுமிருக்கிற ஸமயங்களில் அஞ்ஜ நத்தைப் பிரயோகிப்பதால் நலமுண்டாகும். அஞ்ஜநத்தை சலாகை முதலியதைக் கொண்டு நேத்திரத்தினுள் கருவிழிக்குக் கீழே வர்த்ம மென்னும் மாம்ஸபாகத்தில் நேத்திரத்தில் நெடுகவும் கடைக்கண் வரையில் தீட்டவேண்டும். 73, 74.

## அஞ்ஜந வர்த்திகள்.

**சந்திரோதயவர்த்தி:**—சங்கின் நாபியெனப்படும் சுழியுள்ள அதன் அடிப்பாகம், தான்றிக்காயின் கொட்டை அல்லது பருப்பு, கடுக்காய், மனச்சிலை, திப்பிலி, மிளகு, கோஷ்டம், வசம்பு இவற்றில் ஒவ்வொன்றையும் ஸமபாகமா யெடுத்து, அனைத்தையும் நன்ருகப் பொடித்து, வெள்ளாட்டுப் பால் விட்டு ஆட்டி, யவ தானியத்திற்கு ஸம அளவாக வர்த்திகள் செய்துகொள்ளவும். இந்தக் குளிகையை ஓர் அரேணுகம் அளவு ஜலம் சேர்த்து இழைத்து நேத்திரங்களில் அஞ் ஜநமிடலாம். இதனுல் திமிரரோகம், மாம்ஸவ்ருத்தி, காசம், படல ரோகம், அர்புதம், ராத்ர்யாந்த்யம் என்னும் இராக்கண், வர்த்ம ரோகம், புஷ்பமென்னும் பூவிழுதல் என்கிற இந்நேத்திரரோகங்கள் நிவ்ருத்தியாகும். இது 'சந்த்ரோதய வர்த்தி' எனப்படும். 75—77

1. அஞ்ஜநமென்னும் ஔஷதத்தில் லேகநாதி கர்மங்களுக்குத் தகுந்தவாறு சரக்குகள் வித்தியாஸப்படுவது அவசியமாயிருப்பதுபோ லவே, சலாகைகளும் அதற்குத் தகுந்தவாறு வெவ்வேறு லோஹாதி களால் அமைக்கப்படவேண்டுமென்பதும் ஆயுர்வேத முறைகளைக் கற் றறிந்தவரின் கருத்தாம்.

**கரஞ்ஜபீஜ வர்த்தி:**—புங்கம் விதையை அநேகமுறை பலாசம் பூவின் ஸ்வரஸத்தில் பாவனைசெய்து, அந்த ஸ்வரஸத்தைக்கொண்டே அதை ஆட்டி வர்த்திசெய்து, முன்போலவே கண்களில் இட, கண்களிலுண்டாகும் பூவைப் போக்கிவிடும். 78.

**லேகந வர்த்தி:**—கடல்நுரை, இந்துப்பு, சங்கு, கோழிமுட்டையின் மேலோடு, முருங்கவிதை இவற்றை நன்றாகப் பொடித்து, ஜலம் விட்டு அரைத்து வர்த்திசெய்யவும்; இது சுக்லம் முதலிய நேத்திர ரோகங்களைச்[1] சஸ்திரத்தினால் கீண்டுவிடுவதுபோல் அறுத்து விடும். 79.

**தந்த வர்த்தி:**—யானையின் தந்தத்தையும், பன்றி, ஒட்டகம், பசு, குதிரை, வெள்ளாடு இவற்றின் குளம்புகளையும், சங்கையும், நல்முத்துக்களையும், கடல்நுரையையும் ஸமபாகமெடுத்து சூர்ணம் செய்து, ஜலம்விட்டு கல்வத்தில் நன்கு அரைத்து, வர்த்தி செய்யவும். இதற்கு "தந்த வர்த்தி" என்று பெயர். கண்களிலுண்டாகும் சுக்ல ரோகத்தைப் போக்க இது சிறந்த ஔஷதம். 80½.

**நீலோத்பலாதிவர்த்தி:**—கருநெய்தல், முருங்கவிதை, நாக கேஸரம் இம்மூன்றையும் நன்றாகக் கல்வத்திலிட்டு ஆட்டி வர்த்தி செய்து நேத்திரங்களில் அஞ்ஜநமிட அதிநித்ரை நிவ்ருத்தியாகும். 81½.

**குஸுமவர்த்தி:**—எண்பது எள்ளுப்பூ, அறுபது திப்பிலி, அறுபது காட்டு ஜீரகம், ஐம்பது ஜாதிப்பூ, பதினாறு மிளகு இவற்றைச் சேர்த்துப் பொடித்து, நன்கு ஜலத்தினால் அரைத்து வர்த்திசெய்யவும். 'குஸுமவர்த்தி' எனப்படும் இதை ஒன்றரை அரேணுகம் அளவில் ஜலத்தில் உரைத்து நேத்திரங்களில் இட திமிரம், அர்ஜுநம், சுக்லம் இவை நீங்கும்; மாம்ஸ வளர்ச்சியும் அறுபடும். 82—84.

**இரஸாஞ்ஜநாதி வர்த்தி:**—இரஸாஞ்ஜநம், மஞ்சள், மரமஞ்சள், குருக்கத்திப்பூ, பில்வத்தளிர் இவற்றை, பசுஞ்சாணம் கரைத்து வடிகட்டிய ஜலத்தில் ஆட்டி வர்த்திசெய்து, நேத்திரங்களில் இட, நக்தாந்த்யம் என்னும் இராக்கண்ணோய் தீரும். 85½.

---

1. இதனால் வர்த்மரோகம் முதலியவைகளும் போக்கப்படுமென்பது கருத்து.

**தாத்ரீபீஜாதி வர்த்தி:**—நெல்லிப் பருப்பு ஒரு பங்கு, தான்றிக் கொட்டை இரு மடங்கு, கடுக்காயின் பருப்பு மூன்று பங்கு இவற்றைப் பொடி செய்து, ஜலம் விட்டு ஆட்டி, வர்த்திசெய்து, இரண்டு அரேணுகமளவு உரைத்து நேத்திரங்களில் இட நேத்ரஸ்ராவம் என்னும் கண்ணீர்ப் பெருக்கும், வாதரக்தத்தினுலுண்டாகும் வலியும் போகும். $86\frac{1}{2}$.

## இரஸக்ரியை

**துத்தாதி ரஸக்ரியை:**—துரிசு, பொன்னிமிளை, இந்துப்பு, சர்க்கரை, சங்கு, மனச்சிலே, காவியென்னும் கைரிகம், கடல்நுரை, மிளகு இவற்றைப் பொடித்து, தேன் சேர்த்து, இரஸக்ரியையாகப் பக்குவம் செய்து, வர்த்மரோகம், அர்மம், திமிரம், காசம், சுக்லம் என்கிற ரோகங்களில் உபயோகிக்க அவ்வியாதிகள் தீரும். 87—$88\frac{1}{2}$.

**கர்ப்பூராதி ரஸக்ரியை:**—பச்சைக் கர்ப்பூரப் பொடியை ஆலம் பாலில் குழைத்து ரஸக்ரியையாக நேத்திரங்களில் இட, குஸுமமென்னும் பூ சீக்கிரம் நிவ்ருத்தியாகும். $89\frac{1}{2}$.

**மரீசாதி ரஸக்ரியை:**—மிளகைத் தேனிலாவது குதிரையின் வாயிலிருந்து ஊறும் உமிழ் நீரிலாவது இழைத்து நேத்திரங்களில் அஞ்ஜனமிட சூர்யனைக் கண்ட இருள்போல அதிநித்ரை ஒழிந்து விடும். $90\frac{1}{2}$.

**ஜாதீபுஷ்பாதி ரஸக்ரியை:**—ஜாதிபுஷ்பம், பவளம், மிளகு, கடுகரோகிணி, வசம்பு, இந்துப்பு இவற்றை ஸமபாகம் எடுத்து, செம்மறியாட்டின் மூத்திரத்தில் குழைத்து அஞ்ஜனமாக உபயோகிக்க, தேகத்திலுண்டாகும் சோம்பல் அல்லது திமிர் உடனே தீரும். $91\frac{1}{2}$.

**சிரீஷபீஜாதி ரஸக்ரியை:**—காட்டுவாகையின் விதை, திப்பிலி, மிளகு, இந்துப்பு, வெள்ளுள்ளி, மனச்சிலே, வசம்பு இவற்றைப் பசு மூத்திரத்தில் இழைத்து, ரஸக்ரியை செய்து அஞ்ஜனமிட, மூர்ச்சை முதலியவற்றால் உணர்ச்சியற்றிருப்பவர் மீண்டும் உணர்ச்சியைப் பெற்று எழுந்துவிடுவார். $92\frac{1}{2}$.

---

1. இரஸக்ரியை—இளகிய பாகுபோன்ற ஔஷத பாகம்.

**தார்வ்யாதி ரஸக்ரியை:**—மரமஞ்சள், பேய்ப்புடல், அதிமதுரம், வேப்பங்கொட்டை, அல்லிக்கிழங்கு, கருநெய்தல், வறள்தாமரை இவற்றை ஸமபாகம் எடுத்து, இவ்வளைத்துக்கும் நாலு மடங்கு ஜலம் சேர்த்துக் காய்ச்சி, நாலில் ஒரு பங்காகச் சுண்டச்செய்து வடிக்கட்டி, அக்கஷாயத்தை மீண்டும் பாகுபோல் வருமளவும் காய்ச்ச வேண்டும்; அது தானே குளிர்ந்து வந்ததும், அக்கஷாயத்திற்கு நாலில் ஒரு பங்கு தேனும் சர்க்கரையும் சேர்த்துக் கலக்கிவிடவும். இந்த இரஸக்ரியை நேத்திரத்தில் உபயோகிக்கப்படுமானால் கண்ணெரித்தல், கண்களில் நீர்வடிதல், கண்களில் இரத்தம் வடிதல், கண்சிவப்பு, கண்வலி இவை போகும். 93—95.

**இரஸாஞ்ஜநாதி ரஸக்ரியை:**—இரஸாஞ்ஜநம், ஸர்ஜமென்னும் பிசின், ஜாதிப்பூ, மணச்சிலை, கடல்நுரை, இந்துப்பு, காவிக்கல், மிளகு இவற்றை ஸமபாகமெடுத்து, நன்றாகத் தேனில் இழைத்து நேத்திரங்களில் இட, பலவித துர்நீர்களுடன் கூடிய வர்த்மரோகமும், கண்களிலுண்டாகும் தினவு முதலியதும் தீரும்; இமைமயிர்களும் இதனால் நன்கு வளரும். 96, 97.

**துடுச்சியாதி ரஸக்ரியை:**—சீந்திற்கொடியின் ஸ்வரஸம் கால் பலமெடை, தேன் ஒரு மாஷமெடை, இந்துப்பு அதே அளவு, இவற்றையெல்லாம் ஒன்றாகக் கல்வத்திலிட்டு ஆட்டி யெடுத்து, நேத்திரங்களில் இடுவதால் பில்லம், அர்மம், திமிரம், காசம், கண்டூ, லிங்கநாசம் என்னும் நேத்திரரோகங்களும், கண்களின் கருவிழிகளிலும் வெண்மண்டலங்களிலுமுண்டாகும் வியாதிகளும் தீரும். 98, 99.

**புநர்நவாதி ரஸக்ரியை:**—சூர்யன் அந்தகாரத்தை அடியோடு அகற்றிவிடுவது போல வெள்ளைச் சாறணையானது அந்தந்த வஸ்துக்களின் சேர்க்கையினால் அநேகம் நேத்திரரோகங்களைப் போக்கவல்லது: அதாவது—இவ்வௌஷதச் சரக்கைப் பசுவின்பாலில் இழைத்துப்போட்டால் நேத்ரகண்டூ என்னும் கண்தினவையும், தேனிற் கலந்துபயோகித்தால் ஜலம் வடிதலையும், நெய்யிற் குழைத்துப்போட்டால் கண்பூவையும், தைலத்தில் இழைத்துப் போட்டால் திமிர ரோகத்தையும், காடியிற் கலந்துபயோகித்தால் இராக்கண்ணையும் போக்கும். 100½.

**பப்பூலதள ரஸக்ரியை:**—கருவேலங் கொழுந்தை க்வாதம் செய்து, வடிக்கட்டி, மீண்டும் லேஹ்யம்போல் காய்ச்சி யெடுக்கவும். இதைத் தேனில் கலந்து நேத்திரங்களில் அஞ்ஜனமிட கண்களி லிருந்து நீர் வடிதல் நிவ்ருத்தியாகு மென்பது நிச்சயம். 101½.

**ஹிஜ்ஜல பல ரஸக்ரியை.**—நீர்க்கடம்பின் காயை ஜலத்தில் தேய்த்து, தினந்தோறும் கண்களில் அஞ்ஜனமாக உபயோகித்து வருவது நலம். கண்களில் நீர்வடிதலைப் போக்குவதற்கு இது மிகச் சிறந்த ஔஷதமெனக் கருதப்படுகிறது. 102½.

**கதகாதி ரஸக்ரியை.**—தேற்றாங் கொட்டையைத் தேனில் இழைத்து, சிறிது பச்சைக் கர்ப்பூரத்தையும் அத்துடன் தேய்த்து நேத்திரங்களில் அஞ்ஜனமிட, கண்களி லுண்டான கலக்கம் முதலியவை விலகி அவை நன்றாகத் தெளிவடையும். 103½.

**க்ஷௌத்ராதிரஸக்ரியை.**—நெய்யையும் தேனையும் கலந்து நன்றாகக் குழைத்துக் கண்களில் அஞ்ஜனமாக உபயோகித்தால் விரோதபாதம் என்கிற நேத்திர வியாதி நிவ்ருத்தியாகும். 104.

**க்ருஷ்ண ஸர்ப்பவஸாதி ரஸக்ரியை.**—கருநாகத்தின் நிணநீர் அல்லது கொழுப்பு, சங்கு, தேற்றாங்கொட்டை இவற்றை ரஸக்ரியை செய்து அஞ்ஜனமாக உபயோகிக்க, சீக்கிரத்தில் அந்தகர்களுக்கும் பார்வை உண்டாகும். 105.

**லேகந ரஸக்ரியை.**—கோழி முட்டையின் ஓடு, மனச்சிலை, காருப்பு, 1 சங்கு, சந்தனம், இந்துப்பு இவற்றை நுண்மையாகப் பொடித்து, ஜலம் சேர்த்து, ரஸக்ரியையாகச் செய்து அஞ்ஜனமிட கண்ணில் விழுந்துள்ள பூ, அர்மம் முதலிய ரோகங்கள் அறுபட்டு நேத்திரம் ஸ்வஸ்த்தமாகும். 106.

**பிப்பல்யாதி ரஸக்ரியை.**—திப்பிலியை செம்மறி யாட்டின் கல்லீரலின் இடையில் மறைத்துவைத்து, அக்னியிற் பக்குவம்செய்து எடுத்து, அத்திப்பிலியை இழைத்துக் கண்களில் அஞ்ஜனமிட்டால் நக்தாந்த்ய மென்னும் இராக்கண் ஸ்வஸ்த்தமாகும். இவ்விதமே மிளகையும்

1. காசலவணம் என்பது தமிழில் அட்டுப்பு அல்லது காருப்பு எனப்படுகிறது.

பக்குவப்செய்து தேனில் உரைத்துஅஞ்ஜனமிட்டாலும் இராக்கண் நிவ்ருத்தியாகும். 107.

## சூர்ணாஞ்ஜநம்.

**மரிசாதி சூர்ணாஞ்ஜநம்**—மிளகு அரை சாணவெடை, திப்பிலியும் கடல்நுரையும் தனித்தனியே இரண்டு சாணவெடை, இந்துப்பு அரை சாணவெடை, புதிய ஸௌவீராஞ்ஜநம்[1] ஒரு சாணவெடை, ஆக இவற்றைச் சித்திரா நக்ஷத்திரத்தன்று வெகு நுண்மையாகச் சூர்ணம் செய்து அஞ்ஜநமாக உபயோகிக்கவும்.[2] இதனால் கண்டூ, காசம், கபதோஷத்தினலான கோளாறுகள், மற்றும் பலவிதமான மலங்கள் முதலியவை நீங்கி நேத்திரம் சுத்தமாகும். 108, 109.

**ஸர்வரோகஹர சூர்ணாஞ்ஜநம்**, இரஸகமென்னும் தாதுப்பொருளை[3] ஒரு சிலையில் வைத்து நுண்மையாகப் பொடித்து, அச்சூர்ணத்தை ஜலத்தில் நன்றாகக் கரைத்து விடவும்; சற்று நேரம் சென்றபின் மெதுவாக ஜலத்தை மற்றொரு பாத்திரத்தில் வடித்துக்கொண்டு, அடியில் தங்கி நிற்கும் சூர்ணத்தை விலக்கிவிட வேண்டும்; பிறகு அந்த ஜலத்தை அப் பாத்திரத்திலேயே வெயிலில் வைத்திருக்க, அதிலுள்ள ஜலமெல்லாம் வற்றிப்போய் அடியில் ஒருவித வண்டல் தங்கி அது பர்ப்படம்போல்[4] ஆய்விடும்; அதை யெடுத்

1. ஸௌவீராஞ்ஜநம்—வெண்மையான அல்லது சிறிது மங்கல் நிறமான ஓர் அஞ்ஜநக்கல். இதை சிலர் வெண்ஸுர்மா என்பார்கள். ஆங்கிலத்தில் White antimony என்று வழங்கப்படுமாம்.

2. சூர்ணாஞ்ஜநங்களை நேத்திரங்களில் ஏதாவது தேன், முலைப்பால் முதலிய திரவ பதார்த்தங்களில் குழைத்துத்தான் இடவேண்டும். ரஸக்ரியைகளிலும் சில சூர்ணங்களை அவ்வித முபயோகித்த போதிலும் ரஸக்ரியாஞ்ஜநத்தை எப்பொழுதுமே திரவரூபமாகச் செய்து வைத்துக் கொள்ளலாம்; சூர்ணாஞ்ஜநத்தை வேண்டியபோது அவசியமான திரவத்தில் உபயோகிப்பது வழக்கம்.

3. இரஸகம்.—203-வது பக்கத்தில் விவரம் பார்க்க.

4. பர்ப்படம்—மெல்லிய பலகைத்துண்டுகளைப் போன்ற பாளங்கள்.

துப் பொடி செய்து த்ரிபலாஸ்வரஸத்தில் மூன்று முறை பாவனை செய்யவும்; அப்பால் அதில் பத்திலொருபங்கு பச்சைக் கர்ப்பூரத்தையும் பொடித்துச் சேர்க்கவேண்டும். இதை நேத்திரங்களில் அஞ்ஜநமாயுபயோகிக்க ஸகல தோஷங்களும் தீரும்; கண்களுக்கு மிக்க ஸௌக்கியத்தை யுண்டுபண்ணும். இது 'ஸர்வரோகஹர சூர்ணாஞ்ஜநம்' எனப்படும். 110—112½.

**ஸௌவீராதி சூர்ணாஞ்ஜநம்:**—ஸௌவீராஞ்ஜநத்தை அக்னியில் எரித்து, த்ரிபலாஸ்வரஸத்தில் அதன் சூர்ணத்தைக் கலக்கி ஏழு வேளை நேத்திரங்களில் அஞ்ஜநமாக உபயோகிக்கலாம். அவ்விதமே அதன் சூர்ணத்தை முலைப்பாலில் கலக்கி தினந்தோறும் கண்களில் அஞ்ஜநமிடலாம். இவ்வௌஷதம் பெரும்பான்மையான நேத்திர ரோகங்களையும் போக்கக்கூடியது. 113—114½.

**அஞ்ஜநமிடும் நாக சலாகை:**—நாகமென்கிற லோஹத்தை த்ரிபலாகஷாயம், கரிசிலாங்கண்ணிச் சாறு, சுக்குக் கஷாயம், நெய், பசுமூத்திரம், தேன், வெள்ளாட்டுப்பால் இவற்றில் தனித் தனியே காய்ச்சிக் காய்ச்சித் தோய்க்கவும்; பிறகு அந்த நாகத்தினால் ஒரு சலாகை செய்து, அதனால் நேத்திரங்களில் மைதீட்டுவதுபோல் தீட்டினால் ஸகல நேத்திரரோகங்களும் தீரும். 115, 116.

## ப்ரத்யஞ்ஜநம் முதலியன.

**நேத்திர சோதநம்:**—கண்களில் ஸம்பவித்த தோஷங்களெல்லாம் நீங்கி, நீர்வடிதலும் முற்றிலும் நின்ற பிறகு, சுத்தமான தண்ணீரில் முகத்தை அமர்த்தி, நேத்திரங்களை நன்றாகத் திறந்து கழுவவேண்டும். அப்பால் அதற்கு முன்னிருந்த நேத்திர தோஷங்களுக்குத் தகுந்தவாறு ஏதேனும் ப்ரத்யஞ்ஜநத்தை யுபயோகிப்பதும் உசிதம். ஆனால் தோஷங்கள் முற்றிலும் கண்களிலிருந்து விலகாமல் இன்னும் சிறிது மிகுந்திருப்பதாகத் தெரியவந்தால், அந்நேத்திரங்களைக் கழுவக்கூடாது. 117½.

**ப்ரத்யஞ்ஜநம்:**—நேத்திரம் தீக்ஷ்ணமான ஔஷதப் பிரயோகங்களால் அழற்சிகொண்டவிடுமானால், அப்பொழுது அவ்வழற்சி முதலியதைப் போக்கி அதற்குத் தெளிவை யுண்டுபண்ணும் ப்ரஸாதநமென்

னும் குணமுடைய சூர்ணாஞ்ஜநத்தை யுபயோகிப்பது 'ப்ரத்யஞ்ஜநம் எனப்படும். 118.

**நயநாம்ருதமென்னும் ப்ரத்யஞ்ஜநம்:**—முறைப்படி சுத்திசெய்த நாகத்தை[1] உருக்கி, அதில் சுத்திசெய்த பாதரஸத்தை[2] ஸமஎடையாகச் சேர்க்கவும்; அவ்விரண்டுக்கும் ஸமமாக நீலாஞ்ஜநத்தையும் பொடித்துச் சேர்த்து, அனைத்தையும் ஒன்றாகக் கலந்து பிறகு கல்வத்திலிட்டு ஆட்டி, அச்சூர்ணத்தில் பத்திலொருபங்கு பச்சைக்கர்ப்பூரமும் சேர்த்துக்கொள்ளவும். இது ப்ரத்யஞ்ஜநம் என்னும் ஔஷதமாம். இது கண்ணோய்களைப் போக்கக்கூடியது; கண்களுக்கு அமுதம் போன்றது. 119, 120.

**ஜயபாள வர்த்தி:**—நேபாளவிதைகளை மூளை நீக்கிக் கொடியெலுமிச்சம்பழச் சாற்றில் இருபத்தோரு முறை பாவனைசெய்து, கல்வத்தில் ஆட்டி வர்த்தி செய்யவும். இதை ஸர்ப்பம் தீண்டியவனுடைய கண்களில் அஞ்ஜநமாக இட இவ் வௌஷதம் அவனுடைய தேகத்திலுள்ள விஷத்தைப் போக்கி அவனைப் பிழைப்பிக்க வல்லது. 121, 122.

**நேத்திர ரோகங்களைப் போக்கும் ஒரு ஸாதாரண முறை:**—போஜநமுண்ட பிறகு உடனே தனது இரண்டு கைகளையும் சூடுண்டாகுமாறு நன்றாகத் தேய்த்து, நேத்திரங்களின்மேல் நன்கு அமர்த்திவைத்தால், திமிரம் முதலிய நேத்திர வியாதிகள் சாந்தமாகக்கூடும். 123.

**நேத்திர ரோகங்களைத் தடுக்க ஸுலபமான உபாயம்:**—எந்த மனிதன், தினந்தோறும் மூன்று வேளையும் வாயில் குளிர்ந்த ஜலத்தை நிரப்பிக்கொண்டு, இரண்டு கண்களையும் தண்ணீரால் நனைத்துக் கழுவி வருகின்றானோ, அவன் எப்பொழுதும் நேத்திர வியாதிகளாலான துன்பங்களை அநுபவிக்க நேரிடாதென்பது நிச்சயம். 124.

---

1. நாகசுத்தியைப்பற்றி 193-வது பக்கம் பார்க்க.

2. பாதரஸசுத்தி.—அல்லது பாரதசுத்தி, இதைப்பற்றி 208-வது பக்கம் பார்க்க.

## கிரந்தத்தின் முடிவுரை.

**இந்நூல் ஆயுர்வேத ஸாரம்:**—ஆயுர்வேதமென்னும் அகண்ட ஸமுத்திரத்தில் மறைந்து கிடக்கும் அநேகம் அரும் பொருட்களாகும் மாணிக்கத்திரள்களைக் கண்டறிந்து முன்னால் சில மேதாவிகளால் பற்பல ஸம்ஹிதைகள் [1] விரிவாக வரையப்பட்டன. அந்நூல்களிலிருந்து மிகவும் ஸாரமான சில விஷயங்களைப் பெயர்த்தெடுத்து இந்த ஸம்ஹிதையை நான் [2] இயற்றலானேன். ஸத்புருடர்களான கல்விமான்கள் இந்நூலின்கண் தமது கடாக்ஷத்தைக் கருத்துடன் செலுத்துவாராக. 125, 126.

**ஸம்ஹிதையின் மஹிமை:**—சார்ங்கதரனுடைய [3] இந்த ஸம்ஹிதையானது, பலவகையான பிணிகளாகும் வறுமையை ஒளஷத முறைகளெனப்படும் அருமையான இரத்தினங்களால் அகற்றக்கூடியதாயிருப்பதால், தாமரை மலர்களைப்போல் குளிர்ந்து மனோஹரமாக நிர்மலமாயிருக்கும் கவிகளின் இருதயங்களில் இக்கிரந்தம் ஸ்ரீதேவியைப்போல் சீருடன் விளங்குமாக [4]. 127.

---

1. சரகஸம்ஹிதை, ஸுச்ருத ஸம்ஹிதை, காச்யப ஸம்ஹிதை, ஹாரீதஸம்ஹிதை முதலியவை இதனால் குறிக்கப்படுபவை.

2. நான் என்று ஸம்ஸ்கிருத நூலுக்கு ஆசிரியரான சார்ங்கதரன் குறிக்கப்படுகிறார்.

3. சார்ங்கதரன்.—என்றால் ஸ்ரீமஹாவிஷ்ணு என்று இங்கு மற்றொரு பொருளுண்டு.

4. கமலமலர்களில் வஸிப்பவளும், சார்ங்கதரனை ஸ்ரீமஹாவிஷ்ணுவின் பத்னியுமான ஸ்ரீதேவியானவள், வேண்டிய தனங்களைக் கொடுத்து ஜனங்களைச் செல்வவான்களாகச் செய்ய வல்லவளாயிருப்பதுபோல், சார்ங்கதரனுடைய இந்த ஸம்ஹிதையும் ஒளஷத முறைகளைக்கொண்டு வியாதிகளாகிற வறுமையைப் போக்கி, ஆரோக்கியமாகும் செல்வத்தை விருத்தி செய்யவல்லது; மேலும் அவள் தாமரை மலர்களில் வஸிப்பதுபோல, இதுவும் கவிகளுடைய இருதய கமலங்களில் இருக்கத்தகுந்தது என்றும் கருத்தாம்.

**இந்நூலின் உபயோகம்:**—அளவற்ற நூல்களை ஆராய்ந்தறிவதற்கான திறமையிற் குன்றியவர்கள், அல்லது அதற்குத் தகுந்த நீண்ட காலத்தைப் பெறுதவர்கள் இதுகாறும் அகில நூல்களையும் படிப்பதில் தமது சக்தியையும் மீறி முயன்றது போதும்; வைத்திய சாஸ்திரத்தின் ஸாராம்சமனைத்தையும் இதிற் சுருக்கிக் கூறியிருப்பதால், விவேகிகள், சுருக்கமான இந்நூலைப் படித்தறிய முயல்வது முற்றிலும் யுக்தமாகும்.

முற்றிற்று.



# அனுபந்தம்

## ரோகங்களும் சிகித்ஸைகளும்

இந்த அனுபந்தத்தில் முக்கியமான ரோகங்கள் அகராதி கிரமத்தில் குறிக்கப்பட்டு, அவற்றிற்கு இந்த ஸம்ஹிதையில் மொழியப்பட்டுள்ள ஔஷதங்களும் சிகித்ஸாமுறைகளும் கிரமமாகக் குறிப்பிடப் படுகின்றன. இவ்விஷயம் முற்பதிப்பிலிருந்ததைவிட விஸ்தாரமாகவும் அதிக ஒழுங்காகவும் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இங்கு குறிக்கப் படுகிற வியாதிகள், அவற்றிற்கான ஔஷத-சிகித்ஸைகள் ஆகியவற்றின் மற்ற விவரங்களையெல்லாம் இப்புஸ்தகத்தின் இறுதியிற் சேர்த்துள்ள விஷய அகராதியைப் பார்த்து புஸ்தகத்தின் அந்தந்தப் பக்கத்தில் பார்த்துக்கொள்க.

### அக்னிதாஹம்.

(தக்த்த விரணம், எரிப்புண்கள்.)

ஜாத்யாதி க்ருதம் (லேபநம்).
காஸீஸாதி க்ருதம் ,,
சததௌத க்ருதம் ,,
காஸீஸாதி தைலம் ,,
க்ஷாரக்ஷீர்யாதி லேபம் ,,
திந்துகாதி லேபம் ,,
யவாதி லேபம் ,,

### அக்னி மாந்த்யம்.

(பசியின்மை)

அரளுத்வக் புடபாகம்-குடேச்சியாதி கணக்வாதம்- த்ரிபலாதி சூர்ணம்-ஹரீதக்யாதி சூர்ணம்-மரிசாதி சூர்ணம்-தாடிமாஷ்டக சூர்ணங்கள்-நாராயண சூர்ணம்-லவணத்ரயாதி சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-யவாநீகாண்டவ சூர்ணம்- படபாநல சூர்ணம்-ஹிங்குவாதி சூர்ணம்-பாஸ்கர லவண சூர்ணம்-பிப்பல்யாதி குளிகை-ஸௌரணாதி வடகம்-சந்திரப்ரபா குளிகை-யோகராஜ குக்குலு-கைசோரிக குக்குலு-குஷ்மாண்ட லேஹ்யம்-ஸூரண லேஹ்யம்-பிப்பில்யாதிக்ருதம் த்ரிபலாதி க்ருதம்-தசமூலாரிஷ்டம்- குமார்யாஸவம்- லோஹாஸவம்-மாக்ஷிக பஸ்மம்-லோகநாத ரஸம்-ஹேமகர்ப்பபோடலீ ரஸம்-ஸூதாதிவடி-லோஹ ரஸாயனம்- அபயாமோதகம்- வமநம்-லங்கநம்-நிரூஹவஸ்தி.

## அங்கசோஷம்.

(கார்ச்யம்-இளைப்பு)

அச்வகந்தாதி சூர்ணம்-அகஸ்திய ஹரீதகீ லேஹ்யம்-குடஜாவலேஹம் (முதல்) ச்யவனப்ராச லேஹ்யம்-கூஷ்மாண்ட லேஹ்யம்-காமதேவக்ருதம்-நாராயண தைலம்-லாக்ஷா சந்த-நாதி தைலம்-தச மூலாரிஷ்டம்-திராக்ஷாரிஷ்டம் - பிப்பல்யாஸவம் - லோகநாத ரஸம்-மிருகாங்கபோடலீ ரஸம்-(பல ஹீனத்திற்கான மற்றவைகளும்.)

## அச்மரீ

(மூத்திர மார்க்கத்தில் கல் அடைப்பு)

வீரதராதிகணக்வாதம்-ஏலாதி க்வாதம்-க்ஷாரத்வய சூர்ணம்-சந்திரப்ரபா குளிகை-கோக்ஷுராதி குக்குலு-அபயாமோதகம்-குமார்யாஸவம் - விடங்காரிஷ்டம்-தசமூலாரிஷ்டம்- சிலாஜது பஸ்மம்-த்ரிவிக்ரம ரஸம்-நிருஹ வஸ்தி-உத்தர வஸ்தி-ஸ்வேத விதி- (மூத்திரக்ருச்சிரத்திற்கான மற்றவைகளும்.)

## அண்டவிருத்தி

(பீஜ வீக்கம், வ்ருத்தி, விதை வாதம், அந்த்ர விருத்தி, குடலிறக்கம் முதலியன.)

ஆர்த்ரகஸ்வரஸம்-மஹாராஸ்நாதி க்வாதம்-த்ரிபலாதி க்வாதம் (மூன்றுவது)-சந்திரப்ரபா குளிகை-யோகராஜ குக்குலு-த்ரிபலாதி குக்குலு-அபயாமோதகம்-நாராயண தைலம்-மாஷ தைலம்- லோஹரஸாயனம்- வமனம்-விரேசனம்-இரக்த மோக்ஷணம்-விராதாஹம் (மற்ற வாத ஹர சிகித்ஸைகளும்.)

## அதிநித்ரை

பிப்பல்யாதி க்வாதம்-தசமூலாரிஷ்டம்- திராக்ஷாரிஷ்டம்- லோகநாத ரஸம் (முதல்)-நாராயண தைலம்-சதவரீ தைலம்-நஸ்ய விதி.

## அதிமூத்திரம்

(பிரமேஹம் பார்க்க.)

## அதிஸாரம்

(பொது)

(பேதி, வயிற்றுப்போக்கு)

பப்பூல ஸ்வரஸம்-குடஜ புடபாகம்-அரளுத்வக் புடபாகம்-ந்யக்ரோதாதி புடபாகம்-தாடிம புடபாகம்-குடேச்சியாதி க்வாதம் (ஐந்தாவது)-குடஜாஷ்டக க்வாதம்-ஹ்ரீபேராதி க்வாதம்-தாதக்யாதி க்வாதம்-பில்வாதி க்வாதம்-ஆம்ரகிஸலயாதி பாண்டம்-அங்கோல மூல கல்கம்-ஆம்ரத்வகாதி யவாகூ-சுண்ட்யாதி சூர்ணம்-சங்காதர சூர்ணங்கள்-கபித்தாஷ்டக சூர்ணம்-யவாநீகாண்டவ சூர்ணம்-தாடிமாஷ்டக சூர்ணம்-இலவங்காதி சூர்ணம்-தாளீஸாதி சூர்ணம் - குடஜாவலேஹங்கள்-பாஹுசால குடம்-மஸூராதி

(அதிஸாரம் தொடர்ச்சி)

க்ருதம்-சாங்கேரீ க்ருதம்-தசமூலாரிஷ்டம்-ரோஹித காரிஷ்டம் பிப்பல்யாஸவம்-லோகநாத ரஸம்-ஆனந்த பைரவரஸம்-கிரஹணீகபாடரஸம்-லோஹ ரஸாயனம்.

## அந்தர் வித்ரதி

(குடல் முதலியவற்றுள் உண்டாகும் விப்புருதி)

புநர்நவாதி க்வாதம் (நான்காவது)-சிக்ரு க்வாதம்-வருணாதிகண க்வாதம்-தாடிமாஷ்டக சூர்ணம்-காஞ்சநார குக்குலு-லோகநாதரஸம்-விடங்காரிஷ்டம்-நிரூஹவஸ்தி-ஸ்வேதவிதி-ஸ்நேஹவிதி.

## அந்த்ர விருத்தி

(அண்ட விருத்தியைப் பார்க்க)

## அபதந்த்ரகம்

(வேதனையுண்டாக்கும் ஒரு விதவாதம். அபதாநகம், தண்டாபதாநகம் முதலியன.)

இரஸோன கல்கம்-பிப்பல்யாதி க்வாதம்-மஹாராஸ்நாதி க்வாதம்-மாஷ தைலம்-நாராயண தைலம்-ஸ்வச்சந்த பைரவரஸம்-மாஷாதி தைல நஸ்யம்-ரேசன நஸ்யம்-சிரோவஸ்தி.

(வேறு வாதஹர சிகித்ஸைகளும்)

## அபபாஹுகம்

(கைகளிலுண்டாகும் வாத ரோகம்)

மஹாராஸ்நாதி க்வாதம்-நாராயண சூர்ணம்-ஜீவநீயகண சூர்ணம்-அஜமோதாதி சூர்ணம்-வாருணீ தைலம்-மாஷ தைலம்-ப்ருஹ்மண நஸ்யம் - மாஷாதி க்வாத நஸ்யம்-குஞ்ஜாபலாதி ப்ரதேஹம்-(வேறு வாதஹர சிகித்ஸைகளும்)

## அபஸ்மாரம்

(கொறுக்குவலி அல்லது காக்கை வலி)

கூஷ்மாண்ட ஸ்வரஸம்-ப்ராஹ்மீஸ்வரஸம்-இரஸோநாதி கல்கம்-யோகராஜகுக்குலு-த்ரிபலாதி க்ருதம்-லாக்ஷா தைலம்-லாக்ஷாசந்தநாதி தைலம்-குமார்யாஸவம்-சிலாஜது பஸ்மம்-ஸ்நேஹபானம் (உத்தம மாத்திரை)-ரேசன நஸ்யங்கள்.

## அபிஷ்யந்தம்

(நேத்திர ரோகம் பார்க்க)

## அம்ல-பித்தம்

குடூச்யாதி க்வாதம் (முதல்) த்ரிபலாதி க்வாதம் (மூன்றாவது) திராக்ஷாதி க்வாதம்-மஹாகாண்டவ சூர்ணம்-லவங்காதி சூர்ணம் - தாடிமாஷ்டக சூர்ணம்-குடஜாவ லேஹம்-வஸந்தகுஸுமாகர ரஸம்-நிரூஹவஸ்தி.

## அரும்ஷிகா.

(தலையிலுண்டாகும் சிரங்கு, மண்டைக்கறுப்பான் முதலியது)

மஞ்ஜிஷ்டாதி க்வாதம்-காஸீஸாதி க்ருதம்-லாக்ஷா தைலம்-மாதுலுங்கமூலாதி லேபம்-பிண்யாகாதி லேபம்-கதிராதி லேபம்-ப்ரியாள பீஜாதி லேபம்-லோஹ ரஸாயனம்-விரேசனம்.

## அரோசகம்.

அபாமார்கபீஜ கல்கம் - ஆர்த்ரக ஸ்வரஸம் - குடூச்யாதிகண க்வாதம்-அம்ருதாஷ்டக க்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம் - பிப்பல்யாதி க்வாதம் - நிதிக்த்திகாதி க்வாதம் - ஹ்ரீபேராதி க்வாதம்-பிப்பலீ வர்த்தமானகம்-ஆமலகாதி சூர்ணம் - த்ரியூஷண சூர்ணம்-த்ரிஜாதக-சதுர்ஜாதக சூர்ணங்கள்-கட்பலாதி சூர்ணங்கள்-லவங்காதி சூர்ணம் - தாடிமாஷ்டக சூர்ணம்-மஹாகாண்டவசூர்ணம்-சித்திரகாதி சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம் - தாளீஸாதி சூர்ணம்-விதோபலாதி சூர்ணம்-வ்யோஷாதி குளிகை-சந்திரப்ரபா குளிகை - யோகராஜ குக்குலு-அகஸ்திய ஹரீதகீ லேஹ்யம்-குடஜாவ லேஹம் (முதல்)-பிப்பல்யாதி க்ருதம் - குமாரியாஸவம்-லோஹாஸவம்-ரோஹிதகாரிஷ்டம்-தசமூலாரிஷ்டம்- லோகநாதரஸம்-மிருகாங்கபோடலீ ரஸம்-ஹேமகர்ப்பபோடலீ ரஸம்-வமனம்- விரேசனம்- ரேசநகஸ்யம்- கண்டூஷங்கள்- மாதுலுங்காதி கபளக்ரஹம்.

## அர்சோ ரோகம்.

(மூலரோகம்)

ஸூரண புடபாகம்-பிப்பலீ வர்த்தமானகம்-க்ஷாரத்வய சூர்ணம்-மரிசாதி சூர்ணம்-மஹாகாண்டவ சூர்ணம்-நாராயண சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-பஞ்சஸம சூர்ணம்-லவணத்ரயாதி சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்-மஹாகாண்டவசூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-சித்திரகாதி சூர்ணம் (இரண்டாவது) - பாஹுசால குடம்-வ்ருத்ததார்வாதி குளிகை-ஸூரணாதி குளிகைகள்-த்ரிபலாதி குளிகை-சந்திரப்ரபா குளிகை-காங்காயந குளிகை-யோகராஜ குக்குலு-த்ரிபலாதி குக்குலு-ஸூரண லேஹ்யம்-அகஸ்திய ஹரீதகீ லேஹ்யம்-குடஜாவலேஹங்கள் - கூஷ்மாண்ட லேஹ்யம்-சாங்கேரீ க்ருதம்-வ்ருஷாதி க்ருதம்-காஸீஸாதி தைலம்-உசீராஸவம்-பிப்பல்யாத்யாஸவம்-லோஹாஸவம்-த்ராக்ஷாரிஷ்டம் - தேவதார்வாத்யரிஷ்டம்-கதிராரிஷ்டம்-ரோஹிதகாரிஷ்டம் - தசமூலாரிஷ்டம்-அபயா மோதகம்-தாம்ர பஸ்மம்-அய பஸ்மம்-மாக்ஷிக பஸ்மம்-சிலாஜது பஸ்மம்-லோகநாத ரஸம்-லோஹரஸாயனம்.

## அர்தித வாயு

(முகத்தைக்கோணச் செய்யும் வாத ரோகம்)

நிதிக்த்தி காதி க்வாதம்-மஹாராஸ்நாதி க்வாதம்-மஞ்ஜிஷ்டாதி கண க்வாதம்-இரஸோனாதி கல்கம்-பலாதி க்ருதம்-பிரஸாரிணீ தைலம்-சதாவரீ தைலம்-விடங்காரிஷ்டம்-மாஷாதிக்வாத நஸ்யம்-ஸ்நேஹந நஸ்யம்-(வாதஹரமான மற்ற சிகித்ஸைகளும்.)

## அர்த்தாவபேதம்

(ஒற்றைத் தலைவலி)

சசமூண்ட ஸ்வரஸம்-பஞ்சமூலி க்ஷீரம்-சதாவரீ தைலம்-ப்ருஹ்மண நஸ்யம்-அணுதைல நஸ்யம்-நாராயண தைல நஸ்யம்-சாரிபாதி லேபம் (தலைவலிக்குக் கூறியுள்ள மற்றவைகளும்.)

## அர்புதம்

(புரையோடும் கிரந்தி)

ஹிங்க்வாதி சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-சந்திரப்ரபா குளிகை-காஞ்சநார குக்குலு-விடங்காரிஷ்டம்-கதிராரிஷ்டம்-ஸர்ஷபாதி லேபம் (இரண்டாவது)-வமனம்-இரக்த மோக்ஷணம்.

## அஜீர்ணம்

ஹ்ரீபேராதிக்வாதம்-நிதிக்த்திகாதி க்வாதம்-பக்வ க்ஷீரம்-மண்டம்-பேயா-நாராயண சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-பாஸ்கர லவண சூர்ணம்-தாடிமாஷ்டக சூர்ணம்-ஸஞ்ஜீவனீ குளிகை-சுண்டீ குளிகை-த்ரிபலாதி குளிகை-குமார்யா ஸவம்-லோஹாஸவம் - விடங்காரிஷ்டம்-லோகநாத ரஸம்-அஜீர்ணகண்டக ரஸம்-ரோகஹர ரஸம்-வமனம்-லங்கனம்- (அக்னிமாந்த்யத்திற்கான மற்றவைகளும்.)

## ஆகந்துக விரணம்

(ஸத்யோ விரணம், காயம், சிதைவு முதலியன)

அச்வத்தாதி க்வாதம் (கழுவுதல்)-ந்யக்ரோதாதி க்வாதம்(கழுவுதல், நிம்ப கல்கம்-ஜாத்தியாதி க்ருதம்- காஸீஸாதி க்ருதம்-த்ரிபலா க்ருதம்-ஜாதீபல்லவாதி தைலம்-சோதந- ரோபண குணமுள்ள வேறு லேபனங்கள்.

## ஆநாஹம்

(ஆத்மானம், வயிற்றுப் பொருமல், வயிறுப்பஸம்)

பீஜபூர ஸ்வரஸம்-மஹா ராஸ்நாதி க்வாதம்-மரிசாதி சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-பஞ்சகோல சூர்ணம் - மஹா காண்டவ சூர்ணம்-நாராயண சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-பஞ்சஸம சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-பிப்பல்யாதி சூர்ணம்-லவணத்ரயாதி சூர்ணம்-தும்புர்வாதி சூர்

(ஆஹாரம் தொடர்ச்சி)

ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்-யவாநீ காண்டவ சூர்ணம்-தாளீஸாதி சூர்ணம்-பாஹுசால குடம்-சந்திரப்ரபா குளிகை-சாங்கேரீ க்ருதம்-பிந்து க்ருதம்-சதாவர்யாதி தைலம்-நாராச ரஸம்-ரேசநரஸம்-அபயா மோதகம்-ஸ்வேத சிகித்ஸை.

## ஆமதோஷம்

சண்டபுடபாகம்-அஜமோதாதி சூர்ணம்-பாஸ்கரலவணம்-சித்ரகாதி சூர்ணம்-வ்யோஷாதி குடிகா-அபயாமோதகம்-வமனம் லங்கனம்-ஸ்வேத சிகித்ஸை.-

## ஆமவாதம்

(கீல் வாயு-முடக்குவாதம் முதலியது.)

சண்ட்யாதி கல்கம்-சண்டபுடபாகம்-தான்யகாதி க்வாதம்-ராஸ்னாதி க்வாதங்கள்-ஸப்தமுஷ்டிக யூஷம்-குலுத்தாதி யூஷம்-உஷ்ணோதகம்-த்ரியூஷண சூர்ணம்-பஞ்சஸம சூர்ணம்-சித்திரகாதி சூர்ணம்-அஜமோதாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-பாஹுசால குடம்-ஸூரண லேஹ்யம்-யோகராஜ குக்குலு-நாராயண தைலம்-மண்டூரம்-மஹாவஹ்நிரஸம்-அஜாஜ்யாதி லேபம்-ஸ்வேத சிகித்ஸை, விரேசனம்.

## ஆமாதிஸாரம்

(அஜீர்ண பேதி)

சண்டபுட பாகம்-வத்ஸகாதி க்வாதம்-ஹரீதக்யாதி சூர்ணம்-ஹிங்க்வஷ்டக சூர்ணம்-கபித்தாஷ்டக சூர்ணம்-ஜாதீபலாதி சூர்ணம்-பஞ்சஸம சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-பப்பூலாரிஷ்டம்-லங்கனம்.

## ஆர்த்தவரோகங்கள்.

(ஸ்த்ரீகளுக் குண்டாகும் ருது ஸம்பந்தமான கோளாறுகள்)

தசமூல க்வாதம்-தேவதார்வாதி க்வாதம்-ரஸோனாதிகல்கம்-சந்திர ப்ரபா குளிகை-யோகராஜ குக்குலு-தசமூலாரிஷ்டம்-சதாவரீ தைலம்-பலா தைலம்-நாராயண தைலம்-லாக்ஷா தைலம்-பலக்ருதம்-காமதேவ க்ருதம்-தசமூலா ரிஷ்டம்-உத்தரவஸ்தி-

## ஆஸ்ய பாகம்.

(வாய்ப்புண்.)

குடூச்யாதி க்வாதம்(முதல்)-த்ராக்ஷாதி க்வாதம்-உசீராதி பேயா-யவானீ காண்டவசூர்ணம்-விதோபலாதி சூர்ணம்-பலாதிக்ருதம்-இரிமேதாதி தைலம்-(த்ரிபலாதி குளிகை)-மௌக்திகபஸ்மம்-விரேசனம்-கண்டூஷங்கள்-குஷ்டாதி பிரதிஸாரணம் விபீதபல மஜ்ஜாலேபம்-விரேசனம்.

## ஆக்ஷேபகவாதம்.

சுண்டீ புடபாகம் - இரஸோநாதி கல்கம்-ஜாதீபலாதிசூர்ணம்-அஜமோதாதி சூர்ணம் - பலாதிக்ருதம்-திராக்ஷாரிஷ்டம்தசமூலாரிஷ்டம்-மாஷ தைலம்-வாதநாசநரஸம்.நஸ்யவிதி-விரேசனம்.

## இந்திர லுப்தம்.

(கலதி, தலைமயிருதிர்தல்)

சதாவரீ தைலம்-கரஞ்ஜாதி தைலம்-நீலிங்யாதி தைலம்-ப்ருங்கராஜ தைலம் - திக்தபடோலரஸலேபம்- ப்ருஹதீரஸாதி லேபம்-கோக்ஷுராதி லேபம்-கஜதந்தமஷீ லேபம்-யஷ்ட்யாதி லேபம்-ரோம ஸஞ்ஜநந லேபம்-இந்திரவாருணீ தைல லேபம்.

## இரக்த-பித்தம்

(நாசி, வாய் முதலியதிலிருந்து இரத்தம் கசிதல்)

வாஸாஸ்வரஸம் - வ்ருஷபத்திர புடபாகம்-திராக்ஷாதி க்வாதம்-குடூச்யாதி க்வாதம் (ஐந்தாவது) - வாஸாதி க்வாதங்கள்-மதூகபுஷ்பாதி பாண்டம்-யவமந்தம்-ஆம்ராதி ஹிமம்-வாஸா ஹிமம்- தாங்யகாதி ஹிமம்-ஜீவநீய கணசூர்ணம்-விதோபலாதி சூர்ணம்-கூஷ்மாண்ட லேஹ்யம் - குடஜாவலேஹம்(முதல்) - காமதேவக் ருதம் - மஹாதிக்தக க்ருதம்-சதாவரீ தைலம்-லாக்ஷா சந்தநாதி தைலம்-உசீராஸவம்-குமார்யாஸவம - பிரவாள பஸ்மம்-லோகநாத ரஸம - ஜடாமாம்ஸ்யாதி லேபம்-சந்தநாதி லேபம்-தாத்ரியாதி லேபம் (மூன்றாவது)-இரக்த மோக்ஷணம்-நஸ்யவிதி.

## இரக்தாதிஸாரம்

(இரத்தபேதி)

ஜம்பூபல்லவாதிஸ்வரஸம்-வத்ஸகாதி க்வாதம்-குடஜாஷ்டக க்வாதம்-ஹ்ரீபேராதி க்வாதம்-மூஸ்தாதிப்ரமத்யா(உணவு)- பதரீமூலாதி கல்கம்-வ்ருத்த கங்காதர சூர்ணம் - இலகுகங்காதர சூர்ணம-இலவங்காதி சூர்ணம்-குடஜாவலேஹம் - பப்பூலாரிஷ்டம்- விடங்காரிஷ்டம் - ஆனந்தபைரவ ரஸம்-ஹேமகர்ப்ப போடலீ ரஸம்.

## இரக்தார்சஸ்

(இரத்தமூலம்)

அபாமார்கபீஜ கல்கம்-நவநீதாதி கல்கம்-ஸூரண புடபாகம்-மஹா காண்டவ சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-பாஹுசால குடம்-வ்ருத்ததார்வாதி குளிகை ---குடஜாரிஷ்டங்கள்— கூஷ்மாண்டலேஹ்யம்-ஸூரண லேஹ்யம்-மஹாதிக்தக க்ருதம்.

## இருதய ரோகம்

(ஹ்ருத்ரோகம் பார்க்க.)

## இருமல்

(காஸம் பார்க்க.)

## இளைப்பு

(அங்கசோஷம் பார்க்க.)

## ஈரல் கட்டி

(யக்ருதுதரம் பார்க்க.)

## உதர ரோகங்கள்

(குடலையும் வயிற்றில் மற்ற அவயவங்களையும் பற்றிய வியாதிகள்)

(பொது)

புநர்நவாதி க்வாதம்-சவ்யாதி க்வாதம்-வர்த்தமாநபிப்பலீ-பஞ்ச கோல சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-யோகராஜ குக்குலு - கைசோரிக குக்குலு-த்ரிபலாமோதகம்-பிந்து க்ருதம்-குமார்யாஸவம் - பிப்பல்யாஸவம்-ரோஹிதகாரிஷ்டம் - தசமூலாரிஷ்டம்-லோஹாஸவம்-லோஹரஸாயனம் -மஹாவஹ்நிரஸம்-அபயாமோதகம் - விரேசனம்-நிரூஹவஸ்தி.

## உதாவர்த்தம்

ஹரீதக்யாதி க்வாதம்-வீரதர்வாதிகண க்வாதம்-வருணாதிகண க்வாதம்- பாஸ்கரலவண சூர்ணம் யோகராஜ குக்குலு-கைசோரிக குக்குலு-பிந்து க்ருதம்-குமார்யாஸவம்- த்ராக்ஷாரிஷ்டம் - நாராசரஸம் - அபயாமோதகம் - விரேசனம்- நிரூஹவஸ்தி - மதுதைலகவஸ்தி.

## உபதம்சம்

(கொறுக்கு வியாதி)

படோலாதி க்வாதம் (ஐந்தாவது)- மஞ்ஜிஷ்டாதி கண க்வாதம்-அச்வத்தாதி க்வாதம்-அச்வகந்தாதி சூர்ணம்-காஞ்சநாரகுக்குலு - விடங்காரிஷ்டம்- திக்தக க்ருதம்-த்ரிபலாதி க்ருதம்-காஸீஸாதி க்ருதம்-கரவீர மூலலேபம் த்ரிபலாதி லேபம் (நான்காவது) இரஸாஞ்ஜநாதி லேபம்-தாம்ர பஸ்மம் - வங்க பஸ்மம் - இரக்த மோக்ஷணம்.

## உபஜிஹ்வா.

(உள்நாக்கு வளர்ச்சி.)

க்ஷுத்ரா புடபாகம்-விபீதக புடபாகம் - கட்பலாதி க்வாதம்-த்ரியூஷண சூர்ணம்-யவாநீ காண்டவ சூர்ணம்-வ்யோஷாதி சூர்ணம்-மரிசாதி குளிகை-வ்யோஷாதி குளிகை-நீலிகாதி தைலம்-ஹரேணுகாதி லேபம்-தோஷஹர தூமபானம் - கண்டூஷ விதி.

## உரக்ஷதம்.

(இரக்தகாஸம் முதலியது.)

வாஸாதி க்வாதங்கள்-குடஜாஷ்டக க்வாதம்-லாக்ஷா கல்கம்-வ்யோஷாதி சூர்ணம்-இலவங்காதி சூர்ணம்-தாளீஸாதி சூர்ணம்-ச்யவன ப்ராச லேஹ்யம்-கூஷ்மாண்ட லேஹ்யம்-கண்டகார்யாத்யவலேஹம் - காமதேவ க்ருதம்- த்ராக்ஷா ரிஷ்டம்-உசீராஸவம்-தசமூலாரிஷ்டம்.

## உரோகாதம்.

(மார்பு தாக்கப்படுவதாலான கோளாறு.)

க்ஷௌத்ராதி க்வாதம்-அம்ருதாஷ்டக க்வாதம்-தசமூல க்வாதம்-கட்பலாதி க்வாதம்-லாக்ஷாதி கல்கம் - கூஷ்மாண்ட லேஹ்யம்-ச்யவனப்ராச லேஹ்யம்-(உரக்ஷதத்திற்கான மற்றவைகளும்.)

## உரோ க்ரஹம்.

(மார்புப் பிடிப்பு அல்லது மாரடைப்பு-ஹ்ருத் க்ரஹம் முதலியன.)

கிராதாதி க்வாதம் - கட்பலாதி க்வாதம்-தசமூல க்வாதங்கள் - அம்ருதாஷ்டக க்வாதம்-ஏரண்ட மூலாதி க்வாதம்-வர்த்தமாந பிப்பலீ - ஹிங்க்வஷ்டக சூர்ணம்-தாளிஸாதி சூர்ணம்-ஸிதோபலாதி சூர்ணம்-காங்காயன குடிகா-யோகராஜ குக்குலு-ச்யவனப்ராச லேஹ்யம்-லோஹாஸவம்-ஸ்வேத சிகித்ஸைகள்.

## உன்மாதம்.

(பித்து, சித்தப்ரமை)

ப்ராஹ்மீ ஸ்வரஸம்-கூஷ்மாண்ட ஸ்வரஸம்-சசமுண்ட ஸ்வரஸம்-மதூக புஷ்பாதி பாண்டம்-இரஸோனாதி கல்கம்-த்ரிபலாதி க்ருதம்-லாக்ஷா தைலம்-லாக்ஷா சந்தநாதி தைலம்-தசமூலாரிஷ்டம்-குமார்யாஸவம்-தீக்ஷ்ண ஸ்நேஹந நஸ்யங்கள்-அஞ்ஜநங்கள்-சிரோ வஸ்தி-வமன-விரேசனங்கள்.

## ஊருஸ்தம்பம்.

ராஸ்நாதி க்வாதம்- இரஸோனாதி கல்கம்-பிப்பல்யாதி கல்கம்-சந்திரப்ரபா குளிகை-த்ரிபலாதி குளிகை- அகஸ்திய ஹரீதகீ லேஹ்யம்-விடங்காரிஷ்டம்- லோஹாஸவம்-மஹா வஹ்நி ரஸம்-கிருஷ்ணாதி ப்ரதேஹம்-ஸ்வேத விதி.

## கடிக்கிரஹம்

(இடுப்புப் பிடிப்பு-இடுப்புவலி)

மஹா ராஸ்நாதி க்வாதம்-ஏரண்ட மூலாதி க்வாதம்-அஜமோதாதி சூர்ணம்-ஸௌதர்ன சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்-மாஷ தைலம்-சதாவரீ தைலம்-லாக்ஷா தைலம்-அபயா மோதகம்-விரேசனம்-ஸ்நேஹ சிகித்ஸை-ஸ்வேத விதி.

## கண்டக்கிரஹம்.

(மந்யாஸ்தம்பம், கழுத்துப் பிடிப்பு)

கட்பலாதி க்வாதம் (இரண்டாவது)-நாராயண சூர்ணம்-பலாதிக்ருதம்-லாக்ஷா தைலம்-நாராயண தைலம்-வாருணீ தைலம்-பிரஸாரிணீ தைலம்-மாஷ தைலம்-நஸ்ய விதி-ப்ருஹ்மண நஸ்யம்-மாஷக்வாத நஸ்யம்-தூமபானம் - (வாதஹரமான மற்றவைகளும்.)

### கண்டமாலை

(களகண்டம், அபசீ முதலியன)

அலம்புஷா ஸ்வரஸம்-கர்யா ஸ்வரஸம்-காஞ்சநார க்வாதம்-ராஸ்நாதி க்வாதம்-பஞ்ச நிம்பசூர்ணம்-யோகராஜகுக்குலு-காஞ்சநாரகுக்குலு-த்ரிபலா குளிகை-மஹாதிக்தக க்ருதம்-வசாதிதைலம்-நிர்குண்ட்யாதி தைலம்-விடங்காரிஷ்டம்-அபயா மோதகம்-தசாங்கலேபம்-நிசுளாதி லேபம்-தேவதார்வாதிலேபம்-ஸர்ஷபாதி லேபம்-இரக்தமோக்ஷணம்.

### கண்டு

(சொறி - அரிப்பு)

மஞ்ஜிஷ்டாதி க்வாதம்-பஞ்சநிம்ப சூர்ணம் - சந்திரப்ரபா குளிகை-த்ரிபலாதிக்ருதம்-காஸீஸாதிக்ருதம் - லாக்ஷா தைலம்-அர்க்கதைலம்-மரிசாதி தைலம் ப்ருங்கராஜ தைலம்-ஜாதீபல்லவாதி தைலம் - தேவதார்வாத்யரிஷ்டம் - லோஹாஸவம் - பிரபுந்நாடபீஜாதி லேபம்-ஹேமக்ஷீர்யாதி லேபம்-தூர்வாதி லேபம்-விரேசனம்-ஸ்நேஹனம்.

### கபரோகங்கள்

(ஜலதோஷம்-மார்ச்சளி முதலியன)

வாஸாஸ்வரஸம்-க்ஷுத்ரா புடபாகம் - வ்ருஷாதி கணக்வாதம்-கட்பலாதி க்வாதம் (இரண்டாவது) - குளூத்தாதி யூஷம்-உஷ்ணோதகபானம் - லாஜ மண்டம்-வர்த்தமான பிப்பலீ-நிம்ப கல்கம்-பஞ்சகோல சூர்ணம்-த்ரிஜாதக சதுர்ஜாதக சூர்ணங்கள் - கட்பலாதி சூர்ணம்-ஜாதீபலாதி சூர்ணம் - மஹாகாண்டவ சூர்ணம்-பிப்பல்யாதி சூர்ணம்-சித்ரகாதி-சூர்ணம்-அஜமோதாதி சூர்ணம்-தாளீஸாதி சூர்ணம்-வ்யோஷாதி சூர்ணம்-த்ரிபலாதி குளிகை-யோக ராஜகுக்குலு-பிரஸாரிணீ தைலம்-சாங்கேரீ க்ருதம்-லோகநாத ரஸங்கள்-மிருகாங்கபோடலீ ரஸம் - மந்தாநபைரவ ரஸம்-பிரவாள பஸ்மம்-வமனம் (அதிமதுரக்வாத வமனம்)-நஸ்யவிதி நிரூஹவஸ்தி- கண்டூஷவிதி - ஹரேணுகாதி லேபம்.

### கபாலரோகங்கள்.

(மண்டைவெடிப்பு முதலியது.)

சதாவரீ தைலம் - த்ரிபலாதி தைலம்-மரிசாதி தைலம்-நீலிந்யாதிதைலம்-ப்ருங்கராஜதைலம்-ஜாதீ பல்லவாதி தைலம் - ஜாத்யாதி க்ருதம் - பிண்யாகாதி லேபம்-கதிராதி லேபம்-மாதுலுங்க மூலாதி லேபம்-ப்ரியாள பீஜாதி லேபம் - காகஸ லேபம் - ஆம்ரபீஜாதி லேபம் - திக்தபடோலரஸ லேபம் - த்ரிபலாதி லேபம்-சததௌத க்ருதம்-சிரோவஸ்தி.

### கம்பரோகம்.

(கை-கால்-தலை முதலிய அவயவங்களின் நடுக்கம்)

மஹாராஸ்நாதி க்வாதம்-மஞ்ஜிஷ்டாதிகண க்வாதம் - இர

(கம்பரோகம் தொடர்ச்சி)

ஸோந கல்கம்-ஸூதர்சன சூர்ணம் - அஜமோதாதி சூர்ணம்-யோகராஜ குக்குலு-லாக்ஷா தைலம்-நாராயண தைலம்-வாருணீ தைலம் - ப்ரஸாரிணீ தைலம்-மாஷ தைலம்.குஞ்ஜாபலாதி ப்ரதேஹம்.

## கர்ணரோகங்கள்.

(காதைப்பற்றிய நோய்கள்.)

(பொதுவான சிகித்ஸை)

ஷடங்க க்வாதம்-பலாதி ருக்தம்-பாலமூலகாதி தைலம்-ஹிங்க்வாதி தைலம்-க்ஷாரஷ்டாதி தீபிகா தைலம்-விரேசனம்.

**கர்ண சூலை.** (காதில் குத்தல்.) அர்க்கபத்ர ஸ்வரஸம்-பாலமூலகாதி தைலம்-ச்ருங்கபேரரஸாதி கர்ணபூரணம்-கபித்தஸ்வரஸாதி கர்ணபூரணம் - அர்க்காங்குராதி புடபாகம்-மஹாபஞ்சமூல தீபிகா தைலம்- ஸூகரவஸாதி கர்ண பூரணம் - ஸ்வர்ஜிகாதி தைலம்-ஆம்ரப்ரவாளாதி கர்ணபூரணம்.

**கர்ண நாதம்.** (காதிரைத்தல்):-பாலமூலகாதி தைலம்-ஸூகரவஸாதி கர்ணபூரணம்- ஸ்வர்ஜிகாதி தைலம்- அபாமார்க்கக்ஷார தைலம்-ப்ருஹ்மண நஸ்யம்.

**கர்ண விரணம்.** (காதில் புண்):—பஸ்த மூத்ராதி கர்ணபிந்து - ஆம்ரப்ரவாளாதி கர்ணபூரணம்-சம்பக தைலம்.

**கிருமி கர்ணம்.** (கிருமி முதலியவை காதில் சேருதல்):—ஹரிதாளாதிகர்ணபூரணம்-சிக்ருமூல ஸ்வரஸாதி கர்ண பூரணம்- பால மூலகாதி தைலம்.

**பாதிர்யம்.** (செவிடு):—நாராயண தைலம்- பாலபில்வதைலம்-பாலமூலாதிதைலம்-ஸ்வர்ஜிகாதி தைலம்-அபாமார்கக்ஷாரதைலம்.

**பூதிகர்ணம்.** (காதில் சீழ் வடிதல்):- ஸ்வர்ஜிகாதி தைலம்-பஞ்சகஷாயாதி கர்ண பூரணம்-ஸ்வர்ஜிகாதிகர்ணபூரணம்-ஆம்ரப்ரவாளாதி கர்ணபூரணம்-பாலமூலாதி தைலம்.

## கர்ப்பாசய வியாதிகள்

(ஸூதிகா ரோகம் பார்க்க)

## களரோகங்கள்

(தொண்டை வியாதிகள்: களசுண்டீ, தொண்டைக் கம்மல் முதலியவை.)

விபீதக புடபாகம்-நிதிக்திகாதி க்வாதம்-வாஸாதி க்வாதம் (ஐந்தாவது)- த்ரியூஷண சூர்ணம்-இலவங்காதி சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்- வ்யோஷாதி சூர்ணம்-யவானீ காண்டவ சூர்ணம்-வ்யோஷாதி குளிகை-த்ரிபலாதி குளிகை (இரண்டாவது)-ச்யவன ப்ராசாவ லேஹம்-காமதேவ க்ருதம்-பலாதி க்ருதம்-நீலிந்யாதி தைலம்-திராக்ஷாரிஷ்டங்கள்-லோகநாத ரஸங்கள்-வமனம்-விரேசன நஸ்யம்-அவபீட நஸ்யம்-கண்டூஷங்கள்- (மற்றும் கபஹரமான சிகித்ஸைகள்)

## காமலா

(காமாலை)

வாஸா ஸ்வரஸம்-த்ரிபலா ஸ்வரஸம் - அலம்புஷாஸ்வரஸம்-தார்வீஸ்வரஸம்-த்ரிபலாதி க்வாதம் (இரண்டாவது)-ஸுதர்சன சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்- த்ரிபலாதி குளிகை-சந்திரப்ரபா குளிகை-குடஜாவலேஹம்-காமதேவ க்ருதம்-சதாவரீ தைலம்-தசமூலாரிஷ்டம்-அபயா மோதகம்.

## காய்ச்சல்

(ஜ்வரம் பார்க்க)

## காஸம்

(இருமல்)

வாஸாஸ்வ ரஸம்-ஆர்த்ரக ஸ்வரஸம்-வ்ருக்ஷ பத்திர புடபாகம்-க்ஷுத்ரா புடபாகம்-விபீதக புடபாகம்-தசமூல க்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம்-கிராதாதி க்வாதம்-கட்பலாதி க்வாதம்- நிதிக்த்திகாதி க்வாதம்- புநர்நவாதி க்வாதம் - வாஸாதி க்வாதங்கள்-க்ஷுத்ராதி க்வாதம் - உஷ்ணோதகம்-பஞ்சமூலீ க்ஷீரம் - வாஸா ஹிமம் - பிப்பலீவர்த்தமானகம்-பிப்பலீ சூர்ணம் - ஸுதர்சன சூர்ணம் - கட்பலாதி சூர்ணங்கள்-தாடிமாஷ்டக சூர்ணம்-இலவங்காதி சூர்ணம் - ஜாதீபலாதி சூர்ணம்-மஹாகாண்டவசூர்ணம் -நாராயண சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம் -தாளீஸாதி சூர்ணம்-விதோபலாதி சூர்ணம் - மரிசாதி குளிகை - சுண்ட்யாதி குளிகை - கைசோரிக குக்குலு-ஸௌரணாதி வடகம் - பிப்பலீ மோதகம்-சந்திரப்ரபா குளிகை யோகராஜ குக்குலு-ச்யவனப்ராசாவலேஹம் - கண்டகார்யவலேஹம் - அகஸ்தியஹரீதகீலேஹ்யம்-த்ரிபலாதிக்ருதம் - லாக்ஷாதிதைலம்-லோஹாஸவம்- கதிராரிஷ்டம்- தசமூலாரிஷ்டம்-லோகநாதரஸம் - ம்ருகாங்க போடலீரஸம்- ஹேமகர்ப்பபோடலீரஸம்-அம்ருதார்ணவரஸம் - பிரவாளபஸ்மம்- அபயாமோதகம்- வமனம்-தூமபானம்.

## கிரந்தி

அலம்புஷா ஸ்வரஸம்-கர்யாஸ்வரஸம்-காஞ்சநார க்வாதம்-சாகோடக்வாதம் - மஞ்ஜிஷ்டாதிகணக்வாதம்.சந்திரப்ரபாகுளிகை-யோகராஜ குக்குலு - காஞ்சநாரகுக்குலு- த்ரிபலாகுக்குலு - த்ரிபலாதிக்ருதம்-ஜாதீபல்லவாதி தைலம்-வசாதி தைலம் - கதிராரிஷ்டம் - ஸர்ஷபாதிலேபம் - இரக்தமோக்ஷணம்-விரேசனம்.

## கிரஹணீ

சாலிபர்ண்யாதி க்வாதம்-குடூச்யாதி க்வாதம்-ஆம்ரத்வகாதி யவாகூ (உணவு)-சுண்டீசலாடுகல்கம்-க்ஷாரத்வய சூர்ணம்-கங்காதர சூர்ணங்கள்-மரிசாதி சூர்ணம் - கபித்தாஷ்டக சூர்ணம்-பிப்பல்யாதி சூர்ணம் (இரண்டாவது)-இலவங்காதி சூர்ணம்-ஜாதீபலாதி சூர்ணம்-நாராயண

(கிரஹணி தொடர்ச்சி)

சூர்ணம்-சித்திரகாதி சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்-தாளீஸாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-பாஹுசால குடம்-ஸூரணாதி குளிகை (இரண்டாவது) - காங்காயந குளிகை-யோகராஜகுக்குலு-அகஸ்திய ஹரீதகீலேஹ்யம் - குடஜாவலேஹ (முதல்)-சாங்கேரீ க்ருதம்-மஸூராதி க்ருதம் - பிப்பல்யாத்யாஸவம் - லோஹாஸவம்-திராக்ஷாரிஷ்டம்-தேவதார் வாத்யரிஷ்டம்-ரோஹிதகாரிஷ்டம் - தசமூலாரிஷ்டம்-அப்ரகபஸ்மம்-வைக்ராந்தபஸ்மம் லோகநாத ரஸம்-மிருகாங்கபோடலீ ரஸம்-ஹேமகர்ப்பபோடலீ ரஸம்-ஹம்ஸபோடலீ ரஸம்-கிரஹணீகபாடரஸம்-வஜ்ரகபாடரஸம் லோஹரஸாயனம்.

## கிருமிரோகம்

(குடலிலுண்டாகும் பூச்சிகள்)

த்ரிபலாதி க்வாதம்-நிம்பபத்திர கல்கம்-த்ரிவ்ருதாதி கல்கம்-ராஸ்நாதி கல்கம்-க்ஷாரத்வய சூர்ணம்-மஹா காண்டவ சூர்ணம்-சித்திரகாதி சூர்ணம் (இரண்டாவது) - மரிசாதி சூர்ணம்-முஸலீகந்தாதி சூர்ணம்- காங்காயந குளிகை- வ்ருஷாதி க்ருதம் கௌராதி க்ருதம்-உசீராஸவம்-குமார்யாஸவம்- திராக்ஷாரிஷ்டம்-கதிராரிஷ்டம்- மண்டூரம்-அபயா மோதகம்-விரேசனம்-மதுதைலக வஸ்தி-அவபீட நஸ்யம்.

## கீல்வாயு

(ஆமவாதம் பார்க்க)

## குதப்ரம்சம்

(குதம்-ஆஸனம்-நழுவுதல்)

ராஸ்நாதி க்வாதம்-மஹா ராஸ்நாதி க்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம்-ஹிங்க்வாதி சூர்ணம் - நாராயண சூர்ணம் - யவாநீகாண்டவ சூர்ணம்-காங்காயந குளிகை-யோகராஜ குக்குலு - குமார்யாஸவம்-லோஹாஸவம்-குடஜாவலேஹம் சாங்கேரீ க்ருதம்-சதௌத க்ருதம்.

## குல்மரோகம

தசமூல க்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம்-வருணாதிகண க்வாதம்-த்ரியூஷண சூர்ணம்-பஞ்சகோல சூர்ணம்-க்ஷாரத்வய சூர்ணம்-மரிசாதி சூர்ணம்-கபித்தாஷ்டக சூர்ணம்-இலவங்காதி சூர்ணம்-மஹாகாண்டவ சூர்ணம்-நாராயண சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-இலவணத்ரயாதி சூர்ணம்-தும்புர்வாதி சூர்ணம் - சித்ரகாதி சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-பாஹுசால குடம்-ஸஞ்ஜீவநீ குளிகை-காங்காயந குளிகை-யோகராஜ குக்குலு-கைசோரிக குக்குலு-த்ரிபலா குக்குலு-காஞ்சநார குக்குலு-மஹாதிக்தக க்ருதம் - பிந்துக்ருதம்-பிப்பில்யாஸவம்-லோஹாஸவம்-திராக்ஷாரிஷ்டம் - ரோஹிதகாரிஷ்டம்-தசமூலாரிஷ்டம்-தாம்ர பஸ்மம்-மண்

(குல்மரோகம் தொடர்ச்சி)

ரேம்-வித்யாதர ரஸம்-லோகநாத ரஸம் - அபயா மோதகம்-விரேசனம்- நிருஹவஸ்தி- மதுதைலக வஸ்தி.

## குஷ்டம்

மஞ்ஜிஷ்டாதி கணக்வாதம்-நிம்பாதி கல்கம்-த்ரிபலா சூர்ணம்-த்ரியூஷண சூர்ணம்-நாராயண சூர்ணம்-ஹபுஷாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-பஞ்சநிம்ப சூர்ணம்-சித்திரகாதி சூர்ணம் (இரண்டாவது)-த்ரிபலாதி குளிகைகள்-சந்திரப்ரபா குளிகை-யோகராஜ குக்குலு-கைசோரிக குக்குலு-காஞ்சநார குக்குலு-அம்ருதாதி க்ருதம்-காஸீஸாதி க்ருதம்-பிந்து க்ருதம்-வ்ருஷாதி க்ருதம்-மஹாதிக்தக க்ருதம்-மரிசாதி தைலம்-வஜ்ர தைலம்-உதிராஸவம்-லோஹாஸவம்-திராக்ஷாரிஷ்டம்-தேவதார்வாத்யரிஷ்டம் பப்பூலாரிஷ்டம்- ரோஹிதகாரிஷ்டம்-தசமூலாரிஷ்டம்-கதிராரிஷ்டம்-தாம்ர பஸ்மம்-அயபஸ்மம் குஷ்ட குடார ரஸம்-மஹாதாளேச்வர ரஸம்-ஸ்வர்ண க்ஷீரீ ரஸம்-கனக ஸுந்தர ரஸம்-வமனம்-விரேசனம்-இரக்த மோக்ஷணம்.

## க்ருத்ரஸீ வாதம்

தசமூல க்வாதம்-சேபாலிகா க்வாதம்-ராஸ்நாதி க்வாதம்-மஹா ராஸ்நாதி க்வாதம் - மஹாநிம்ப ஜடாகல்கம்-இரஸோநாதிகல்கம்-அஜமோதாதி சூர்ணம் - ஸுதர்சன சூர்ணம்-நாராயண தைலம்-பிரஸாரிணீ தைலம் - சதாவரீ தைலம் - குஞ்ஜாபலாதி ப்ரதேஹம்-ஸ்வேத சிகித்ஸை-ஸ்நேஹ விதி.

## சங்ககம்

(கன்னத்தில் உண்டாகும்வலி.)

வருணாதிகண க்வாதம்-அஷ்டங்க க்வாதம்-சதாவரீ தைலம்-அணுதைல நஸ்யம் - நாராயண தைல நஸ்யம்-கோஷ்ட லேபம்-சுண்ட்யாதி லேபம்-ஸ்வேதவிதி.

## சர்தி

(வாந்தி)

பீஜபூராதி புடபாகம்-குடூச்யாதி க்வாதம் - அம்ருதாஷ்டக க்வாதம்-பில்வக்வாதாதிகள்- ஆம்ர கிஸலயாதி பாண்டம்-மஸூராதி மந்தம் - மரிசாதி ஹிமம்-நீலோத்பலாதி ஹிமம்-நிம்பபத்திர கல்கம்-கட்பலாதி சூர்ணங்கள்-மஹா காண்டவ சூர்ணம்-யவாநீ காண்டவ சூர்ணம்- தாளீஸாதி சூர்ணம்-ஏலாதி சூர்ணம்-கூஷ்மாண்டலேஹ்யம்- தசமூலாரிஷ்டம்-லோகநாத ரஸம்-விரேசன விதி.

## சர்ம வியாதிகள்.

(தோலைப்பற்றிய ஸாதாரண ரோகங்கள்.)

(பொது)

த்ரிபலாதி க்ருதம்-காஸீஸாதி க்ருதம்-மஹாதிக்தக க்ருதம்-மரி

(சர்ம வியாதிகள் தொடர்ச்சி)

சாதி தைலம்-பிண்ட தைலம்-மாதுலுங்க மூலாதி லேபம்-தசாங்க லேபம்-ப்ரபுந்நாடபீஜாதி லேபம்-ஹேமக்ஷீர்யாதி லேபம்-தார்வ்யாதி லேபம் - நிம்பபத்ராதி லேபம்-ஸ்நேஹவிதி.

## சிரங்கு.

(பாமாவைப் பார்க்க.)

## சிரோ ரோகங்கள்.

(சிரஸ்ஸைப்பற்றிய ஸாமான்ய வியாதிகள்)

(பொது)

சசமூண்ட ஸ்வரஸம் - த்ரிபலாதி தைலம்-நீலிந்யாதி தைலம்-திராக்ஷாரிஷ்டம்-சந்தநாதி லேபம்-விரேசனம் - நஸ்யவிதி-ப்ரதிமர்ச நஸ்யம்-சிரோவஸ்தி.

## சீதபேதி.

(பிரவாஹிகாவைப்பார்க்க.)

## சுக்ர ரோகங்கள்.

(வீர்யம் அல்லது ஆண் தன்மையைப்பற்றிய வியாதிகள், ரேதஸ் ஸ்கலநம் முதலியன.)

ராஸ்நாதி க்வாதம்-ஆகார கரபாதி சூர்ணம்-சந்திரப்ரபா குளிகை-மாஷாதி குளிகை - யோகராஜ குக்குலு-கோக்ஷுராதி குக்குலு - ச்யவனப்ராசாவலேஹம் - கூஷ்மாண்ட லேஹ்யம்-அகஸ்தியஹரீதகீ லேஹ்யம்-காமதேவ க்ருதம் - பலக்ருதம் (இரண்டாவது)-நாராயண தைலம்-சதாவரீ தைலம்-பலா தைலம்-குமார்யாஸவம் - தசமூலாரிஷ்டம் - தாராதி ரஸம்-வஸந்த குஸுமாகர ரஸம்-ஸித்தயோக ரஸம்-மஹாமேஹ பத்த ரஸம்-கந்தர்ப்ப ஸுந்தர ரஸம்.

## சூக தோஷம்.

படோலாதி க்வாதம் (இரண்டாவது, ஐந்தாவது)-மஹாராஸ்நாதி க்வாதம்-ஏரண்ட மூலாதி க்வாதம்-ந்யக்ரோதாதிகண க்வாதம்-மஞ்ஜிஷ்டாதிகண க்வாதம்-நாராயண சூர்ணம் - பஞ்சநிம்ப சூர்ணம் - மஹாதிக்தக க்ருதம்-யோகராஜ குக்குலு-சந்திரப்ரபா குளிகை - குமார்யாஸவம் - கதிராரிஷ்டம் - தசமூலா ரிஷ்டம் - லோஹாஸவம்-த்ரிபலாதி க்ருதம்-அம்ருதாதிக்ருதம்- மஹாதிக்தக க்ருதம்-காஸீஸாதி க்ருதம்-கௌராதிக்ருதம் - மரிசாதிதைலம் - தாம்ர பஸ்மம்-லோஹரஸாயனம் -இரத்த மோக்ஷணம்.

## சூலரோகம்

(வயிற்று வலி—ஆமசூலை, பரிணாமசூலை முதலியன)

நிதிக்திகாதி க்வாதம்-தாந்யகாதி க்வாதம்-வத்ஸகாதி க்வாதம் - ஹ்ரீபேராதி க்வாதம் - புநர்நவாதி க்வாதம்-சுண்ட்யாதி க்வாதம்- த்ரிபலாதி க்வாதம்(மூன்றாவது)-தசமூல க்வாதம் (மூன்றாவது)-ஏரண்டமூல க்வாதம்-பீஜபூரஸ்வரஸம் - விஷ்ணு க்ராந்த

(சூலரோகம் தொடர்ச்சி)

ஜடாகல்கம்-சுண்ட்யாதி கல்கம்-பஞ்சகோல சூர்ணம்-கட்பலாதி சூர்ணங்கள்-பஞ்சஸம சூர்ணம்-பிப்பல்யாதி சூர்ணம்-லவணத்ரயாதி சூர்ணம்-தும்புர்வாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-யவாநீகாண்டவ சூர்ணம்-ஹிங்க்வாதி சூர்ணம்-சித்ரகாதி சூர்ணம்-சந்திரப்ரபா குளிகை-காங்காயந குளிகை-யோகராஜ குக்குலு-தசமூலாரிஷ்டம்-குமார்யாஸவம்-பிந்துக்ருதம்-லாக்ஷா தைலம்-லோகநாத ரஸம்-த்ரிநேத்ர ரஸம்-கஜகேஸரிரஸம்-நாராச ரஸம்-ஸ்வச்சந்தபைரவரஸம்-மதநபலாதிப்ரதேஹம்-வங்கபஸ்மம்-நிரூஹவஸ்தி-விரேசன விதி.

## சோஷி.

(கண்டுவைப்பார்க்க)

## சோதை

(சோபம், சோகை, ஊதல்).

புநர்நவாதிக்வாதங்கள்-வீரதராதிகணக்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம்-ஹபுஷாதி சூர்ணம்-அஜமோதாதி சூர்ணம்-பாஸ்கரலவண சூர்ணம்-சித்திரகாதி சூர்ணம்-பஞ்சஸம சூர்ணம்-ஸௌரணாதி குளிகை (இரண்டாவது)-த்ரிபலாதி குளிகைகள்-யோகராஜ குக்குலு-கைசோரிக குக்குலு-கோக்ஷுராதி குக்குலு-குடாஜாவலேஹம்-பிந்து க்ருதம்-உசீராஸவம்-ரோஹிதகாரிஷ்டம்-லோஹாஸவம்-தாம்ர பஸ்மம்-அயபஸ்மம்-மண்டூரம்-விரேசன விதி-தசாங்க லேபம்.

## ச்லீபதம்.

(யானைக்கால்)

மஹாராஸ்நாதிக்வாதம்-சாகோடக்வாதம்-மஞ்ஜிஷ்டாதி கணக்வாதம்-பஞ்சநிம்ப சூர்ணம்-ஸுதர்சன சூர்ணம்-ஸௌரணாதிகுளிகை (இரண்டாவது)-காஞ்சநாரகுக்குலு-காஸீஸாதி க்ருதம்-ஜாத்யாதி க்ருதம்-பிந்து க்ருதம்-வ்ருக்ஷாதி க்ருதம்-அங்காரக தைலம்-நாராச ரஸம்-அபயாமோதகம்-தத்தூராதி லேபம்-இரக்த மோக்ஷணம்.

## ச்வாஸரோகம்

(ச்வாஸகாஸம், ஊர்த்வ ச்வாஸம், தமகச்வாஸம் முதலியன)

ஆர்த்ரக ஸ்வரஸம்-க்ஷுத்ரா புடபாகம்-விபீதக புடபாகம்-தசமூல க்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம்-கிராதாதி க்வாதம்-கட்பலாதி க்வாதம்-நிதிக்திகாதி க்வாதம்-புநர்நவாதி க்வாதம்-வாஸாதிக்வாதங்கள்-தசமூல க்வாதம்-(மூன்றுவது)-உஷ்ணோதகம்-பஞ்சமூலீ க்ஷீரம்-பிப்பலீ வர்த்தமாநகம்-பிப்பலீ சூர்ணம்-ஸுதர்சன சூர்ணம்-கட்பலாதி சூர்ணங்கள்-ஜாதீபலாதி சூர்ணம்-மஹாகாண்டவ சூர்ணம்-நாராயண சூர்ணம்-வியாக்ரியாதி சூர்ணம்-லவணத்ரயாதி சூர்ணம்-சுண்ட்யாதி

(ச்வாஸரோகம் தொடர்ச்சி)

சூர்ணம் (இரண்டாவது)-ஹிங்க்வாதி சூர்ணம்-தாளீஸாதி சூர்ணம்-வ்ரிதோபலாதி சூர்ணம்-மரிசாதி சூர்ணம்-இலவங்காதி சூர்ணம்-வ்யோஷாதிகுளிகை-ஸூரணாதி குளிகை- பிப்பல்யாதி குளிகை-சந்திரப்ரபா குளிகை-யோகராஜ குக்குலு - கண்டகார்யாதி அவலேஹம்-ச்யவனப்ராசாவலேஹம்-கூஷ்மாண்ட லேஹ்யம்-அகஸ்திய ஹரீதகீ லேஹ்யம்-லாக்ஷாதி தைலம்-லோஹாஸவம்- கதிராரிஷ்டம்- பப்பூலாரிஷ்டம்-திராக்ஷாரிஷ்டம்- தசமூலாரிஷ்டம்-அப்ரகபஸ்மம்- லோகநாத ரஸம்-மிருகாங்க போடலீ ரஸம்- ஹேமகர்ப்பபோடலீ ரஸம்-ஸூர்யாவர்த்தரஸம் - லோஹரஸாயனம்-வமனம்- தூமபானம்.

## ச்வித்ரம்

(கிலாஸம்—வெண்குஷ்டம்)

மஞ்ஜிஷ்டாதி க்வாதம்-படோலாதி-க்வாதம்- மரிசாதி தைலம் துத்தபஸ்மம்-உதயாதித்ய ரஸம்-ரோகஹரரஸம் - ச்வித்ரஹர லேபம்-ஸ்வர்ணபுஷ்ப்யாதிலேபம் வாயஸ்யாதி லேபம்- தாளகாதி லேபம் (இரண்டாவது)- வாகுச்சியாதிலேபம்- தார்வ்யாதிலேபம்.

## தகோதரம்

(மஹோதரம் பார்க்க)

## தக்த்த விரணம்

(அக்னிதாஹம் பார்க்க)

## தத்ரு

(படை, தழுதணை, எச்சிற்றழும்பு.)

காஸீஸாதி க்ருதம்-மஹாதிக்தக க்ருதம்-அர்க்க தைலம்-மரிசாதிதைலம் - தேவதார்வாத்யரிஷ்டம்-கதிராரிஷ்டம்-உதயாதித்யரஸம்- ஸர்வேச்வர ரஸம்-லோஹரஸாயனம்-ப்ரபுந்நாட பீஜாதி லேபம்-ஹேமக்ஷீர்யாதி லேபம்-தூர்வாதி லேபம்-வித்தார்த்தகாதிலேபம்.

## தந்தரோகங்கள்

(பற்களைப்பற்றிய வியாதிகள்)

ஹ்ரீபேராதி க்வாதம்-ஷடங்க க்வாதம்-பத்யாதிக்வாதம்-அச்வத்தாதி க்வாதம்,சந்திரப்ரபா குளிகை-நாராயணதைலம்- இரிமேதாதிதைலம்-ப்ருஹ்மணநஸ்யம்-ப்ரதிஸாரண சூர்ணம்-குஷ்டாதிப்ரதிஸாரணம்-(வேறுவித ப்ரதிஸாரணங்களும் கண்டூஷங்களும்.)

## தந்த்ரா

(திமிர்-சோம்பல்- உத்ஸாஹக்குறைவு - அலஸதா.)

தசமூல க்வாதம்-ஹரீதக்யாதி க்வாதம்-பிப்பல்யாதி க்வாதம்-கிராதாதி க்வாதம்-ஸூதர்சன சூர்ணம்-ச்யவனப்ராச லேஹ்யம்-தசமூலாரிஷ்டம்- திராக்ஷாரிஷ்டம்- நாராயண தைலம்-ப்ருஹ்மண நஸ்யம்-ரேசன நஸ்யம்-நீலோத்பலாதி வர்த்தி-அஞ்ஜனம்.

## தலைச்சுற்றல்

(சிரோப்ரமணம்- கிறுகிறுப்பு)

தசமூல க்வாதம்-மதூக புஷ்பாதி பாண்டம்-நீலோத்பலாதி ஹிமம்-ஸுதர்சன சூர்ணம்- கூஷ்மாண்ட லேஹ்யம்- ச்யவன ப்ராசலேஹ்யம்- தசமூலாரிஷ்டம்-நாராயண தைலம்-சதாவரீ தைலம்-ஸ்நேஹபானம் (மத்யமமாத்திரை)-வமனம்-அபயாமோதகம்-நஸ்ய விதி.

## தலைவலி

(சிரச்சூலை,சிரோவேதனை)

வருணாதிகண க்வாதம்-தசமூல க்வாதம்-ஷடங்க க்வாதம்-பஞ்சமூலீ க்ஷீரம-பலாதி க்ருதம-சதாவரீ தைலம்-திராக்ஷாரிஷ்டம்-விரேசன நஸ்யம்-அணு தைல நஸ்யம்-நாராயண தைல நஸ்யம்-தூமபானம்-கோஷ்ட லேபம்-முசுகுந்த லேபம்-தேவதாரு வாதி லேபம-சந்தநாதி லேபம்-தாத்ரியாதி லேபம் (மூன்றாவது) சுண்ட்யாதி லேபம்-சதாவர்யாதி லேபம்-இரக்த மோக்ஷணம்- சிரோவஸ்தி.

## தாஹம்-தாபம்

(உடலின் அழற்சி)

குடேச்சியாதி கணக்வாதம்-த்ரிபலாதி க்வாதம்- ந்யக்ரோதாதி கண க்வாதம்-திராக்ஷாதி க்வாதம்-மதூகபுஷ்பாதி பாண்டங்கள்-தான்யகாதி ஹிமம்-ஜீவநீய கண சூர்ணம்-சதாவரீ தைலம்-அப்யங்கம்.

## தும்மல்

(க்ஷவதுவைப் பார்க்க)

## துர்நாற்றம்

(தேகத்தில்)

பஞ்சநிம்ப சூர்ணம்-லோஹாஸவம்-லோஹரஸாயனம்-லாக்ஷா தைலம்-தாம்பூலாதி லேபம்-தசாங்க லேபம்-குளுத்தாதி லேபம்- விரேசனம் -ஸ்வேதவிதி-ஸ்நேஹவிதி.

## தேமல்

(ஶ்வித்மம் பார்க்க)

## தொண்டைவியாதிகள்

(கள ரோகங்கள் பார்க்க)

## த்ருஷ்ணை

(நாவறட்சி)

குடேச்சியாதி க்வாதம்-திராக்ஷாதிக்வாதம்-அம்ருதாஷ்டக க்வாதம்-உசீராதிபேயா (உணவு)-லாஜமண்டம்-மதூகபுஷ்பாதி பாண்டம்-ஆம்ரகிஸலயாதி பாண்டம்-யவமந்தம்-மரிசாதி ஹிமம்-நீலோத்பலாதி ஹிமம்-தான்யக ஹிமம்-ஜீவநீயகண சூர்ணம்-ஆமலகாதி குளிகை-ச்யவனப்ராச லேஹ்யம்-கூஷ்மாண்ட லேஹ்யம்- நிரூஹவஸ்தி- ப்ரதிமர்ச வஸ்தி.

## நாக்குப்புண்

(ஆஸ்யபாகம் பார்க்க)

### நாடீவிரணம்

(நரம்புச்சிலந்தி, புரை யோடும் புண் முதலியன)

நயக்ரோதாதி க்வாதம் (கழுவுதல்) - காஸீஸாதி க்ருதம்-ஜாத்யாதி க்ருதம்-ஜாதீ பல்லவாதி தைலம்-தசாங்க லேபம்-லாங்கல்யாதி லேபம்-திலாதி லேபம்-நிம்பபத்திராதி லேபங்கள்-லசுநாதி லேபம்-ஸர்ஷபாதி லேபம்-ஸ்வேதவிதி - ச்ருங்கத்தினால் சுத்தி செய்தல்.

### நாஸா ரோகங்கள்.

(நாசியைப் பற்றிய வியாதிகள்)

(பொது)

ஆர்த்ரகஸ்வரஸம்-விபீதக புடபாகம் -பஞ்சமூலீக்ஷீரம் - த்ரியூஷண சூர்ணம் - இலவங்காதி சூர்ணம்-ஜாதிபலாதி சூர்ணம்-வ்யோஷாதி சூர்ணம் - தாளீஸாதி சூர்ணம் - வ்யோஷாதி குளிகை - யோகராஜ குக்குலு-ச்யவனப்ராச லேஹ்யம்-பலாதி க்ருதம்-க்ருஹதூமாதி தைலம்-பாடாதி தைலம் - குஷ்டாதி தைலம் - வ்யாக்ரியாதி தைலம்-க்ருஹதூமாதி தைலம்-லோகநாத ரஸம் - தூமபானம் - நஸ்ய விதிகள்.

### நித்ராபங்கம்

(நித்திரையின்மை)

தசமூல க்வாதம் - வருணாதிகண க்வாதம்-மதூக புஷ்பாதி பாண்டம் - ஆகாரகராதி சூர்ணம் - லாக்ஷா தைலம்-நாராயண தைலம்-பலா தைலம் - த்ராக்ஷாரிஷ்டம்-லோகநாத ரஸம்-ஆனந்தபைரவரஸம்-சிரோவஸ்தி.

### நீர்க்கோவை

(மஹோதரம் பார்க்க)

### நீர்சுருக்கு.

(மூத்திர க்ருச்சிரம் பார்க்க)

### நேத்திர ரோகங்கள்.

**பொது:**—மஞ்ஜிஷ்டாதிக்வாதம்-ஷடங்க க்வாதம் - வாஸாதி க்வாதம் - (ஐந்தாவது - குடூச்யாதி க்வாதம்- (எட்டாவது) த்ரிபலா சூர்ணம்-சந்திரப்ரபா குளிகை-யோகராஜ குக்குலு-கைசோரிக குக்குலு-த்ரிபலாக்ருதம்(இரண்டாவது)-பலாதி க்ருதம்-த்ராக்ஷாரிஷ்டம்-காம்ஸ்யபஸ்மம்- துத்தபஸ்மம்-நீலாஞ்ஜந-மௌக்திக பஸ்மம்-ப்ருஹண நஸ்யம் - பிரதிமர்ச நஸ்யம் - ஹரீதக்யாதி லேபம் - இரஸாஞ்ஜநாதி குடிகாலேபம்-இரக்தமோக்ஷணம்.

**அதிமந்தம்:**—சந்திரோதயவர்த்தி - லேபனௌஷதங்கள் - ரேசன நஸ்யம் - பிடாலகப் பிரயோகங்கள்.

**அபிஷ்யந்தம்:**—சீலோத்பலாதிவர்த்தி - மரிசாதி ரஸக்ரியை-க்ருதாதி ரஸக்ரியை - ஹிஜ்ஜல பல ரஸக்ரியை-மரீசாதி சூர்ணாஞ்ஜநம்-ஸர்வரோக ஹரசூர்ணாஞ்ஜநம்-ஸௌவீராதி சூர்ணாஞ்ஜநம் - நயநாம்ருதம் - நாகசலாகை

